# ஸ்ரீராமாயணம்.

## சுந்தரகாண்டம்.

### தமிழ் வசனம்.

இஃது

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்திற்கிணங்க

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

மொழிபெயர்க்கப்பெற்று





சென்னை:

ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆனந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு,

வெளியிடப்பட்டது.

1941

ஸ்ரீ:.

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:.

# அவதாரிகை.

ஸ்ரீ ராமாயணத்தின் மற்றைக் காண்டங்களெல்லா வற்றிலும் அந்தந்த கதா ஸந்தர்ப்பங்களை அநுஸரித்து யதார்த்த நாமம் வந்திருக்க, இந்த ஸுந்தர காண்டத் திற்கு மாத்ரம் இப்பெயர் வருவதற்குக் காரணமென் னென்று சங்கை யுண்டாகிறது. இவ்விஷயத்தில் சிலர்— ஸுந்தர ஸப்தம் கபியைச் சொல்லுகிறதென்றும், இக் காண்டத்தில் கபிஸ்ரேஷ்டனாகிய ஹநுமானுடைய சரித் ரமே ப்ரதானமாயிருப்பதுபற்றி இதற்கு ஸுந்தரகாண்ட மென்னும் பெயர் வந்ததென்றுஞ் சொல்லுவர். மற்றுஞ் சிலர்—இக்காண்டத்தில் ஆங்காங்கு ஹநுமான் 'ராம கமலபத்ராக்ஷ:' 'த்ரிஸ்திரஸ் த்ரிப்ரலம்பஸ்ச' இத்யாதி வாக்யங்களால் ஸ்ரீராம ஸௌந்தர்யத்தையும், 'துஷ் கரங் குருதே ராமோ ஹீநோ யதநயா ப்ரபு:' இத்யாதி வாக்யங்களால் ஸீதா ஸௌந்தர்யத்தையும், விசேஷமாக வர்ணிக்கையால ஸௌந்தர்ய வர்ணனத்தை முக்யமாக வுடைய இக்காண்டத்திற்கு ஸுந்தரகாண்டமென்னும் பெயர் வந்ததெனக் கூறுவர். இதுவரையில் விரஹ தாபத்தில் அகப்பட்ட ஸீதாராமர்களிருவரும் ஒருவர்க் கொருவர் க்ஷேமலாபங்களை அறிந்து ஸந்தோஷிக்கையால்

இதற்கு இந்தப்பெயர் வந்ததென்று வேறே சிலர் சொல்லுவர். இன்னுஞ் சிலர்—ஸப்தார்த்த ரசனைகளும் வர்ணு பாகங்களும் கதா ஸந்தர்ப்பங்களும் லோக ரஞ்சகமாகி நித்யபாராயணத்திற்குத் தகுந்ததும் விரும்பினவற்றை யெல்லாங் கொடுப்பதுமாயிருக்கையால் இதற்கு ஸுந்தர காண்டமென்னும் பெயர் யதார்த்தமாக எங்கும் வழங்கி வருகிறதென்பர்.

## இக்காண்டத்தின் ஸாராம்ஸமென்னென்னில்-

இதுவரையில் ஸ்ரீராமன் பரத்வத்திற்கு உரியவையான கல்யாண குணங்களுக்கு விளைநிலமாயிருத்தல் பெரும்பாலும் கூறப்பட்டது. இந்த ஸுந்தரகாண்டத்தில் 'ஸீரஹ்மாஸ்வயம்ஹ்யேஷ ப்ராக்ருதோவா' இத்யாதி ஸ்லோகார்த்தங்களால் ஸர்வ ஸம்ஹாரகத்வம் சொல்லப் பட்டது. அன்றியும் இதில் சரணாகதனை அவஸ்யம் காக்க வேண்டுமென்னும் நீதியும் அறிவிக்கப்பட்டது. இக்காண்டத்தில் தூத லக்ஷணமும் பதிவ்ரதையின் நடத்தையும் இத்தகையதென்று நன்கு வெளியாகின்றன. ஸுக்ரீவன் ஸீதையைத் தேடுவதற்காகப் பலகோடி வானரர்களைப் பல திசைகளுக்கும் அனுப்ப முயன்று 'தஸியமா லஸியதே ஸீதா தத்த்வமேவோபபாதய' என்று ஸீதையைக் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய கார்யபாரங்களையெல்லாம் ஹநுமானிடத்திலேயே வைத்து 'த்வய்யேவ ஹநுமந்நஸ்தி பலம் புத்தி: பராக்ரம:। தேஸகாலாநுவ்ருத்திஸ்ச நயஸ்ச நயபண்டித' என்று அவனிடத்தில் கார்யத்தை நிறைவேற்றுவதற்கு வேண்டிய புத்திஸாஹ

ஸம் முதலிய குணங்களை எடுத்துரைக்கையால், ஸ்ரீராம
னும் அவன் கையிலேயே தன் மோதிரத்தைக் கொடுத்
தனுப்பினன்.

ஹனுமானும் ஸுரஸையை நிக்ரஹிப்பது லங்கா
தேவியை அபாதிப்பது இவை முதலிய ஸாஹஸங்க
ளால் தனது அஸாதாரண பலத்தையும், லங்கையில் தான்
தனியனாகி அங்குள்ள அநேக ராக்ஷஸரைக் கொன்ற
தனால் தன் வீர்யத்தையும் வெளியிட்டனன். மற்றும்
இந்த்ரஜித்து ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்ரத்தினின்று
தான் விடுபட்டமை தெரிந்தும் கட்டுண்டவன்போல்
நடனஞ்செய்து அந்த ராக்ஷஸர்களின் ஸஹாயத்தாலேயே
ராவணனது ஸபாஸ்தானத்தில புகுந்தும், அவனோடு ஸம்பா
ஷணஞ்செய்ததும், ராக்ஷஸர் தன் வாலில் நெருப்பை
இட்டுக் கொளுத்த, லங்கையின் துர்க்க ரஹஸ்யாதிகளைப்
பார்த்து வரவேண்டுமென்னும் விருப்பத்தினால் மானாவ
மானங்களைப் பொருட்படுத்தாமல் தனது வாலில் நெருப்
புடனே லங்கையில் வீதிகள்தோறும் ஸஞ்சாரம் வந்த
தும், தன் வாலைக் கொளுத்துவதற்காக வைத்த நெருப்பி
னால் இலங்கையைக் கொளுத்தினதும் ஆகிய இவையெல்
லாம் அவனுக்குள்ள ஸமயோசிதமான ப்ரதிபையையும்
தீக்ஷ்ண புத்தியையும், அவனுடைய தேச காலானுவர்த்
தன ஸாமர்த்யத்தையும் வெளியிடுகின்றன. மற்றும்
இவன் 'ஸாதாம்ஶ்சார்யா விபத்யந்தே தேஶகாலவிரோ
திதா:| விக்லவம் தூதமாஸாத்ய தம: ஸூர்யோதயே
யதா' என்று ஹீனதூதர்க்குள்ள தோஷங்களையும்,
'கார்யே கர்மணி நிர்திஷ்டே யோ பஹூந்யபி ஸாதயேத்|

பூர்வ கார்யாவிரோதேந ஸகார்யம் கர்த்துமர்ஹதி' என்று உத்தம தூதனுக்கு வேண்டிய குணங்களையும் தாரதம்யந் தெரியும்படி பிரித்துக் காட்டுகையால் அவனுக்கு யந்த்ராலோசனையிலுள்ள ஸாமர்த்யமும் விளங்கியது. ஸீதையை ஸமாதானப்படுத்தி வந்ததற்பின் ராவணனைப் பார்க்க வேண்டிய கார்ய சேஷத்தை (மிகுந்த கார்யத்தை)க் குறித்து விசாரிக்க முயன்று 'த்ரீ நுபாயாநதிக்ரம்ய சதுர்த இஹ த்ருச்யதே' 'நஸாம ரக்ஷஸ்ஸு குணாய கல்பதே' இத்யாதியான வாக்யங்களால் சத்ரு ஸாதனோபாயத்தைச் சிந்திப்பதனால் அவனுடைய ராஜ்ய நீதியில் வல்லமை விசதமாகின்றது. பயங்கரரான பல ராக்ஷஸர் நடுவில் 'ஜயத்யதிபலோ ராமோ லக்ஷ்மணச்ச மஹாபலః' என்று தொடங்கி 'தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய ராமஸ்யாக்லிஷ்டகர்மண:। ஹநுமான் சத்ருஸைந்யாநாம் நிஹந்தா மாருதாத்மஜ:' என்று சத்ரு திரஸ்கார பூர்வமாகத் தனது நாம விக்ரமாதிகளை உத்கோஷித்தமையால் அவன் தன்னுடைய தைர்யகுணத்தையும் ப்ரகாசிப்பித்தனன். இவைகளால் தூதர்க்கு வேண்டிய புத்திஸாஹஸாதி குணங்கள் தெரிவிக்கப்பட்டன.

இதுவுமன்றி இதில்—ஸீதையின் சில ஸ்வபாவாதிகளும் ஸாமான்யமாய் ஸ்த்ரீகளுக்கு வேண்டிய பாதிவ்ரத்யாதிகளும் அறிவிக்கப்படுகின்றன. ராக்ஷஸ சக்ரவர்த்தியான ராவணனே தன்னெதிரில் வந்து தலைவணங்கி நமஸ்கரித்துத் தனது ஸர்வ ஐச்வர்யத்தையும் கொடுப்பதாகச் சொல்லி ஆசைமூட்டியும் ஸீதை அவனைக் கண்ணெடுத்தும் பாராமல் 'த்ருணமந்தரத: க்ருத்வா' என்கிறபடியே

நடுவே புல்லை இட்டு அந்த ராவணனை த்ருணத்திலும் கடையாக நினைத்துத் திரஸ்கரித்தமையால் பாதிவ்ரத்யத்தை வெளியிட்டனள். தன்னிடத்தில் மஹாபராதியான அந்த ராவணனிடத்திலும் கருணை கூர்ந்து அவனைக் கரையேற்ற விரும்பி, 'தேந மைத்ரீ ஹவது தேயதி ஜீவிதுமிச்ஸஸி' இத்யாதி வாக்யங்களால் ஹிதோபதேசம் பண்ணித் தனது தயா ஸ்வபாவத்தை வெளியிட்டனள். அந்த ராக்ஷஸன் க்ரூர வாக்யங்களால் விரட்டுகையில், அவனை 'ராக்ஷஸாயம' என்று தாழ்மையான வார்த்தைகளால் திரஸ்கரித்து தைர்ய குணத்தை அறிவித்தனள். தன் கஷ்ட தசையைப் பார்த்து ஹநுமான் தன்னை ராமலக்ஷ்மணரிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பிப்பதாக ப்ரார்த்திக்கையில், தான் பரபுருஷனைத் தொட விரும்பாமையாலும், 'தத்தஸ்ய ஸத்ருசம் பவேத்' என்று ராமனே வந்து தன்னை அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று விரும்புகையாலும் பரபுருஷ விரக்தியும் வீரபத்நீத்வமும் தோற்றுவிக்கப்பட்டன. மற்றும், ராவணன் தன்னை ப்ரார்த்திக்கையில் 'பாம்ஹரியர்மாத்மந: பத்நீம்' இத்யாதி வாக்யங்களால் தனக்குப் பதியிடத்திலுள்ள நிகரில்லாத பக்தி கௌரவங்களும் ஸூசிப்பிக்கப்பட்டன. இவையெல்லாம் உலகத்தில் ஸ்த்ரீகளுக்கு வேண்டிய பாதிவ்ரத்யத்திற்கு ப்ரதான நிதர்சனங்கள்.

## இக்காண்டத்தின் உட்கருத்து.

இதுவும் தவிர இதற்குக் கீழ் கிஷ்கிந்தா காண்டத்தில் ஸமஸ்த லோகங்களையும் ரக்ஷிக்க முயன்ற விஷ்ணுவுக்கு ஆசார்யரூபமான புருஷகாரலாபம் சொல்லப்

பட்டது. இந்தக் காண்டத்தில் ஆசார்யன் செய்ய வேண்டிய காரியம் சொல்லப்படுகிறது. இவ்வர்த்தம் இக்காண்டத்தின் முதல் ஶ்லோகமாகிய

'ததோராவண நீதாயா: ஸீதாயா: ஶத்ருகர்ஶந:।
இயேஷ பதமந்வேஷ்டும் சாரணாசரிதே பதி'॥

என்கிற இதில் தோற்றுகிறது. இதை (2184) ஆவது பக்கத்தில் தெளிவாக எழுதியிருக்கிறோம். அங்குக் காண்க.

இக்காண்டத்தையும் முன் காண்டங்களைப்போலவே வால்மீகி வெளியிட்ட ரஸபாவங்கள் குறையாதபடி தமிழில் மொழிபெயர்த்து, தனிஶ்லோகியிற் சொன்ன அர்த்தங்களோடும் விசேஷ விவரணத்தோடும் அச்சிட்டு ப்ரகடனஞ் செய்திருக்கின்றனர். மற்றும் இந்த ஸுந்தர காண்டம் மற்றைக் காண்டங்களைவிட மிகுதியும் சிறந்து நித்யபாராயணத்திற்கு உரியதாயிருப்பது யாவர்க்கும் வெளிச்சம். ஆகையால் இதை எல்லோரும் வாங்கி வாசித்து ஆநந்தஸாகரத்தில் மூழ்குவது மாத்ரமேயன்றி, தமது இஷ்டமித்ர பந்துக்களையும் உத்ஸாஹப்படுத்தி இதை வாங்கி வாசித்து ஸந்தோஷிக்கும்படி செய்வீர்களென்று மிகுதியும் ப்ரார்த்திக்கின்றனம்.

இங்ஙனம்,

அ. வீ. நரஸிம்ஹாசாரியர்.

# சுந்தரகாண்டம்.

# விஷயங்கள்

ஸர்க்கம். பக்கம்.

# படங்களின் விவரம்.



ஸ்ரீ:

# ஸ்ரீராமாயணம்.

## ஸுந்தரகாண்டம்.

—:o:—



ஜாம்பவான் ஹனுமானது பல பராக்ரமங்களைப் புகழ்ந்து, ஸமுத்ரத்தைத் தாண்டும்படி அவனைத் தூண்டுகையில், அவ்வாயு குமாரன் எப்படிப்பட்ட பகைவரையும் அவலீலையாக முடித்துக் கார்யங்களை நிறைவேற்ற வல்லவனாகையால் ராவணனென்று நினையாமல் த்ருணீகாரஞ் செய்து சாரணர் ஸஞ்சரிக்கும் ஆகாசமார்க்கத்திற் சென்று அவன் ஸீதையைக் கொண்டுபோய் வைத்திருக்குமிடத்தைத் தேட விரும்பினன். ஆயினும் வெகு யோஜனை விஸ்தாரமுடைய ஜலராசியைத் தாண்டுவது மிகவும் துஷ்கரமான கார்யம். அதற்கு எவ்வளவோ இடையூறுகள் நேரக்கூடும். ஆகையால் அம்மஹா கார்யத்தை யாதொரு தடையுமின்றிச் செய்து முடிக்க நினைத்து அதற்கு வேண்டியபடி அவ்வானர வீரன் சரீரத்தை வளரச்செய்து அந்தப் பரபரப்பில் சிரஸ்ஸையும் கழுத்தையும் உயர நெறித்துக்கொண்டு நிற்கும்பொழுது ஓர் மதித்த காளைபோல் ப்ரகாசித்தனன். அனந்தரம்

மரகத வர்ணம்போன்ற வர்ணம் அமைந்து ஜலம்போல் தெளிந்து மெலிந்து குளிர்ந்திருக்கின்ற பசும்புற்கள் நிறைந்த மஹேந்த்ர சிகரங்களில் மனக்களிப்புடன் ஸஞ்சாரஞ் செய்தனன். பர்வதங்களிற் சிறந்த அம் மஹேந்த்ர பர்வதத்தில் ரமணீயமாகிய ஓர் ப்ரதேசமுண்டு. அது நீலம் சிவப்பு மஞ்சள் பச்சை முதலிய நானா வர்ணங்களால் அற்புதங்களும் இயற்கையாகவே உண்டானவைகளுமாகிய மனச்சிலை முதலிய கைரிக தாதுக்களால் மிகவும் விளக்கமுற்றிருக்கும். மேலும் அதில் யக்ஷ கிந்நர கந்தர்வர்களும் தேவதைகளைப் போன்ற பன்னகர்களும் இஷ்டப்படி வடிவங்களைக் கொண்டு பரிஜனங்களுடன் விளையாடிக்கொண்டிருப்பர். சிறந்த மத்தகஜங்களும் அங்குத் தாழ்வரைகளைக் குத்திக்கிளரி விளையாடிக்கொண்டிருக்கும். அப்படிப்பட்ட அம்மஹேந்த்ர சிகரத்தில் அவ்வானர வீரன் நின்று ஓர் மடுவிலிருக்கும் யானைபோல் ப்ரகாசித்தனன். பிறகு அவன் ப்ரயாணமாய்ப் புறப்பட முயன்று இஷ்ட தேவதா நமஸ்காரஞ் செய்யத் தொடங்கி, ஸூர்யனுக்கும் இந்த்ரனுக்கும் வாயுதேவனுக்கும் ப்ரஹ்மாவுக்கும் தேவயோனியிற் பிறந்த மற்ற பூதங்களுக்கும் பக்தியுடன் அஞ்சலி செய்து கிழக்கு முகமாகித் தன் தோற்றத்திற்குக் காரணமாகையால் தனக்கு மிகவும் முக்யனாகிய வாயுதேவனுக்கு மீளவும் கைகூப்பி மிகவும் வல்லவனாகையால் அதற்குத் தகுந்தபடி வடிவத்தை வளரச் செய்துகொண்டனன். இங்ஙனம் கபிமுக்யர்கள் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கையில் தாண்ட நிச்சயித்து ராமனது க்ஷேமத்தை உத்தேசித்துப் பர்வகாலங்களில் பொங்கும் ஸமுத்ரம்போல் வளர்ந்து அளவிடக்கூடாமல் சரீரத்தைப் பெருகச் செய்துகொண்டு ஸமுத்ரத்தைத் தாண்ட விரும்பி புஜங்களாலும் சரணங்களாலும் அந்தப் பர்வதத்தைப் பிடித்து அமுக்குகையில், அங்ஙனம் பிடிக்கப்பட்ட அந்தப் பர்வதமும் ஒரு முஹூர்த்த காலம் கிடுகிடுவென்று

நடுக்கமுற்றது. அது அங்ஙனம் நடுங்குகையில் நுனி முழுமையும் புஷ்பித்திருக்கின்ற வ்ருக்ஷங்களின் புஷ்பங்களெல்லாம் உதிர்ந்தன. வ்ருக்ஷங்களினின்று உதிர்ந்து ஸுகமென்று நன்மணங் கமழ்ந்துகொண்டிருக்கிற அந்தப் புஷ்பஸமூஹத்தினால் மஹேந்த்ர பர்வதம் நாற்புறத்திலும் நிறைந்து புஷ்பமலைபோல் ப்ரகாசித்தது. சிறந்த வீர்யமுடைய அவ்வானர முக்யனால் இங்ஙனம் ஆட்டப்பட்ட அப்பர்வதம், மதித்த யானை மதநீரைப் பெருக்குவதுபோல் ஜல ப்ரவாஹத்தைப் பெருக்கியது. இவ்வண்ணம் மஹா பலிஷ்டனாகிய அவ்வானர வீரன் அம்மஹேந்த்ர பர்வதத்தை அமுக்குகையில், பொன்னும் வெள்ளியும் உள்ளடங்கின கற்களும் மைக்காவிக் கற்களும் உடைந்து சுக்கல் சுக்கலாகையால் அதிலுள்ள பொன்களும் வெள்ளிகளும் மைக்காவிகளும் அம்மலையைச் சுற்றி ரேகை ரேகைகளாகப் புலப்பட்டன. மேலும், அக்னி, (காளி கராளி விஸ்புலிங்கினி தூம்ரவர்ணை விஸ்வருசி லோஹிதை மநோஜவை என்னும்) ஸப்த ஜ்வாலைகளில் நடுவிலுள்ள தூம்ரவர்ணை யென்னும் ஜ்வாலையுடன் கூடிப் புகையின் வரிசைகளை விடுவதுபோல், அப்பர்வதம் மனச்சிலைகளோடு கூடின பெருங்கற்களை உதிர்த்தது. அங்ஙனம் அந்தப் பர்வதத்தை ஹநுமான் அமுக்கிப் பிடிக்கையில் நாற்புறமும் குஹைகளில் மறைந்திருந்த ஜந்துக்கள் தாமும் வருத்தமுற்று தைன்யத்தை வெளியிடும்படியான விகார சப்தங்களைச் செய்கையில் பயங்கரமான அவைகளின் ஆர்த்தநாதம் பூமியிலும் திசைகளிலும் அருகிலுள்ள தோட்டங்களிலும் நிரம்பியது. அர்த்த சந்த்ரன்போன்ற உருவமுடைய ஸ்வஸ்திக மென்னும் அடையாளமுடைய பெரிய படங்கள் பொருந்தி விளங்குகிற அப்பர்வதத்திலுள்ள மஹா ஸர்ப்பங்கள் நெருப்புப்போன்ற கொடிய விஷங்களை கக்கிக்கொண்டு பெருங் கோபாவேசத்துடன் அதிலுள்ள பெருங் கற்களைப் பற்களால்

கடிக்கையில் அம்மஹா சிலைகள் விஷஜ்வாலைகள் பட்டு எரிந்துகொண்டு ஆயிரஞ் சுக்கலாக வெடித்தன. அம் மேலான மலையில் விஷத்தைப் போக்கவல்ல ஓஷதிகள் மூளைத்திருந்தும் அவை அந்த க்ரூர விஷத்தின் வேகத்தை அடக்கமுடியாமற் போயின. அம்மலையி லுள்ள தாபஸர்கள் அது அங்ஙனம் அசைவதைக் கண்டு மிகவும் பயந்து 'இம்மலை பூதங்களால் பிளக்கப் படுகிறது' என்று நினைத்து அதில் கால்பாவப் பெறாமல் மேற்கிளம்பினர். அதில் தந்தமது ஸுந்தரிகளுடன் மத்யபானஞ் செய்வதும் அழகிய அன்னங்களைப் புசிப்பதும் பானகங்களைப் பருகுவதுமாகிய பலவித விநோதங்களால் பொழுதுபோக்கிக்கொண்டிருக்கும் வித்யாதரர்கள் சிலர் அந்தப் பர்வதம் அசைவதைக் கண்டு பயந்து பானஞ் செய்யுமிடத்திலேயே பொன் மயமான மத்யபாத்ரத்தைப் போகட்டு, மேலும் மிகுந்த விலையுடைய போஜனபாத்ரங்களையும் பொன்மயமான பானபாத்ரங்களையும் துவையல்களையும் நானாவித பண்யாரங்களையும் பலவகை மாம்ஸங்களையும் எருதுக ளின் தோல்களால் கட்டப்பட்ட கேடயங்களையும் பொற்பிடியுடைய கத்திகளையும் துறந்து தமது காதலிக ளுடன் ஆகாயத்திற் கிளம்பினர். இயற்கையாகவே தாமரையிதழ்போன்று மத்யபானத்தினால் சிவந் திருக்கும் கண்களுடன் விளங்குகின்ற வித்யாதரர்கள் சிலர் கண்டத்தில் ஹாரங்களைத் தரித்துச் சிவந்த புஷ்பமாலைகளை அணிந்து சிவந்த கலவைச் சாந்தைப் பூசி மதித்து அம்மலையின் தாழ்வரைகளில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில், அப்பர்வதம் திடீ லென்று அதிரக் கண்டு பயந்து ஆகாயஞ் சென்றனர். கழுத்தில் முத்துமாலைகளையும் பாதங்களில் சிலம்புத் தண்டைகளையும் தோள்களில் தோள்வளைகளையும் கைகளில் வளைகளையும் தரித்து விளங்குகின்ற வித்யாதரப் பெண்கள் அம்மலை அசைவதைக் கண்டு வியப்புற்றுப் புன்னகை விளங்கத் தமது காதலருடன் ஆகாயத்தில் நின்றிருந்தனர். மஹர்ஷிகளைப்போல்

மஹனீயர்களாகிய சில வித்யாதரஸ்ரேஷ்டர் அணிமாதி அஷ்ட ஸித்திகளாகிற தம் மஹா வித்யையை உபயோகப்படுத்திக்கொண்டு காதலிகளுடன் ஆகாயத்தில் நின்று அம்மலையைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அங்ஙனம் அவர் பார்த்துக் கொண்டிருக்கையில் நிர்மலமான அந்த ஆகாயத்தில் நின்றிருந்த ஆத்மஞானிகளாகிய ரிஷிகளும் சாரணர்களும் ஸித்தர்களும் ஹனுமானுடைய வ்ருத்தாந்தத்தையெல்லாம் தமது மாஹாத்ம்யத்தினால் அறிந்து ஸந்தோஷித்து அவனைப் பார்த்து 'இந்த ஹனுமான் பர்வதம்போன்றவன்; மேலும் வாயுகுமாரன்; ஆகையால் இவனுடைய தைர்யமும் சீக்ரகதியும் சொல்ல வேண்டுமோ? ஸமுத்ரம் க்ரூரமான முதலைகளுக்கு இருப்பிடமாயினும் இப்படிப்பட்ட மஹாவீரனுக்கு அது எவ்வளவு? ஆகையால் இவன் மஹாவேகத்துடன் ஸமுத்ரத்தைத் தாண்ட விரும்புகின்றனன்; ராமனைப் பற்றியும் ராமனது அபிவ்ருத்தியை விரும்புகின்ற வானரர்களைப்பற்றியும் பிறர்க்குச் செய்யமுடியாத இந்தக் கார்யத்தைச் செய்ய விரும்பிப் புகமுடியாத ஸமுத்ரத்தின் அக்கரையைச் சேர விரும்புகின்றான்' என்று பேசிக்கொண்டனர். அம்மஹானுபாவர் மொழிந்த அவ்வுரைகளைக் கேட்டு அவ்வித்யாதர ஸ்ரேஷ்டர்கள் ராமனுக்காக ஸமுத்ரத்தைத் தாண்டும் மஹானுபாவன் எவனென்று தெரிந்துகொள்ள விரும்பி அந்த மஹா பர்வதத்தில் வர்ணிக்கமுடியாத வைபவமுடைய வானர திலகனாகிய அந்த ஹனுமானைக் கண்டனர். அனந்தரம் பர்வதம்போன்ற அவ்வானரன் மேனியின் மயிர்களை உதறிக்கொண்டு ப்ரயாணமாய்ச் செல்ல முயன்று உடம்பை ஒருவாறு அசைத்து ஓர் பெரிய மேகம்போல் கம்பீர கர்ஜனஞ் செய்து உயரக் கிளம்பத் தொடங்கி அடிமுதல் நுனிவரையில் க்ரமமாக உருண்டு மயிர்கள் நிறைந்துள்ள நீண்ட தன் வாலை, கருடன் ஸர்ப்பத்தைப்போல் அம்மலைமேல் சுழற்றி அடித்தனன். மஹாவேகமுடைய அவ்வானர

வீரனுடைய பின்புறத்தில் தொங்கி அங்ஙனம்
உதறப்பட்ட அவ்வாலானது கருடன் கொண்டுபோகிற
மஹா ஸர்ப்பம்போல் புலப்பட்டது. பிறகு மஹா
பலனாகிய அக்கபி குஞ்ஜரன் ஸமுத்ரத்தைத் தாண்டத்
தொடங்கிப் பெரிய இருப்புத்தடிபோன்ற தன்
புஜங்களிரண்டையும் கெட்டியாக ஸ்தம்பித்து இடை
யில் சரீரத்தை நுணுக்கிப் பாதங்களையும் புஜங்களையும்
மடக்கி அவ்வண்ணமே கழுத்தையும் குறுக்கித்
தனக்குள்ள பிறரை அடக்கும் ஸாமர்த்யத்தையும்
தேஹபலத்தையும் ஆகாசாதிகளில் திரியும் வீர்யத்தை
யும் மேன்மேலும் ஏற்றுக்கொண்டு வெகுதூரம்
கண்களைவிட்டு மார்க்கத்தை நோக்கிக் கிளம்புவதற்
காக மார்பில் மூச்சை அடக்கி ஆகாயத்தைப்
பார்த்துக்கொண்டு பாதங்களைத் தரையில் உறுதியாக
ஊன்றிக் காதுகளை மடக்கிக்கொண்டு மேற்கிளம்பிப்
போக முயன்று பக்கத்திலிருக்கின்ற வானரர்களைப்
பார்த்து இங்ஙனம்மொழிந்தனன்:—'வானரோத்தமர்
களே! ஸ்ரீராகவனால் விடப்பட்ட பாணம் எப்படி வாயு
வேகத்தை நிகர்த்த வேகத்துடன் போகுமோ,
அப்படியே நானும் ராவணன் பரிபாலனஞ் செய்து
வருகிற லங்காபுரிக்குப் போகின்றேன். லங்கையில்
ஜானகியைக் காணேனாயின், இந்த வேகத்துடன் தேவ
லோகம் போகின்றேன். தேவலோகத்திலும் ராம
பத்னியாகிய ஸீதையைக் காணேனாயின். ஆயிரஞ்
சொல்லியென்ன? சிறிதும் ஶ்ரமமின்றி அவலீலை
யாகவே ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனைக் கட்டிக்
கொண்டு வருகின்றேன். ஸர்வப்ரகாரத்தாலும்
கார்யத்தை நிறைவேற்றிக்கொண்டு ஸீதையுடன்கூடி
வருகின்றேன். இல்லையாயின், ராவணனோடுகூட லங்கை
யைப் பிடுங்கிக்கொண்டு வருகின்றேன்' என்றனன்.
இங்ஙனம் அக்கபிவரன் அவ்வானரர்களைப் பார்த்து
மொழிந்து மஹாவேகமுடையவனாகையால் தூர
மென்றாவது ஸமுத்ரமென்றாவது விசாரஞ்செய்யாமல்
தன்னைக் கருடனைப்போல் நினைத்துக்கொண்டிருக்க



1991. ஹநுமான் ஸமுத்ரந்தாண்டுதல்.

வேகத்துடன் மேற்கிளம்பினான். அங்ஙனம் மேற்கிளம்புகையில், அம்மலையில் முளைத்திருக்கிற மரக்கூட்டங்கள் அந்தக் கொடிய வேகத்தினால் தத்தம் கிளைகளுடன் நாற்புறத்திலும் மேற்கிளம்பின. அவ்வானரன், குருட்டு நாரைகள் மதித்துக் கலகலவென்று கூவப்பெற்றவைகளும் புஷ்பங்கள் நிறைந்திருப்பவைகளுமாகிய வ்ருக்ஷங்களைத் துடைகளின் வேகத்தினால் கூடவே இழுத்துக்கொண்டு நிர்மலமான ஆகாயத்தில் போயினான். இங்ஙனம் அவ்வானர வீரனுடைய துடை வேகத்தினால் மேற்கிளம்பின வ்ருக்ஷங்கள் ஒரு முஹூர்த்த காலம் அந்தக் கபிவரனுடன் போவதைக் கண்டால், தூரதேசத்திற்கு ப்ரயாணமாய்ப் போகிற பந்துவைப் பந்துக்கள் பின்தொடர்வதுபோல் இருந்தது. அந்த ஹநுமானுடைய துடைவேகத்தினால் மேற்கிளம்பின ஸாலவ்ருக்ஷங்களும் மற்றும் பெரிய வ்ருக்ஷங்களும் ஸேனையிற் சேர்ந்த போர்வீரர்கள் ராஜனைப் பின்தொடர்வதுபோல் அவனைப் பின்தொடர்ந்தன. நுனிகளில் நன்கு புஷ்பித்திருக்கிற வ்ருக்ஷங்கள் பலவும் தன்னைச் சுற்றிச் சூழ்ந்திருக்கப்பெற்ற அவ்வானரன் ஓர் பர்வதம்போல் அற்புதமான காட்சியுடையவனாகப் புலப்பட்டான். அங்ஙனம் மேற்கிளம்பின வ்ருக்ஷங்களில் நல்ல வைரம் பெற்றுப் பளுவாயிருக்கிற வ்ருக்ஷங்கள் கூடப்போக நேராமல், இந்த்ரனிடம் பயத்தினால் விழும் பர்வதங்கள்போல் ஸமுத்ரத்தில் முழுகின. முளைகளோடும் மொக்குகளோடும் கூடின பல புஷ்பங்கள் மேகம்போன்ற அந்தக் கபிஸ்ரேஷ்டன்மேல் சிதறி ப்ரகாசிக்கையில், அவன் இரவில் மின்மினிப் பூச்சிகளால் சூழப்பட்ட பர்வதம் போல் ப்ரகாசித்தனன். அந்த வ்ருக்ஷங்கள் அந்த ஹநுமானோடுகூட மேற்கிளம்பி அப்பால் அவனது பெரு வேகத்தைத் தொடர்ந்து மேன்மேலும் கூடப் போகமுடியாமல்பின்னே நின்று தந்தமது புஷ்பங்களை உதிர்த்துச் சிதறி ஜலத்தில் வீழ்ந்தன. இங்ஙனம் அவை கொஞ்சதூரம் சென்று பிறகு அவனை விட்டுத்

திரும்பிப் புஷ்பங்களை உதிர்த்து ஜலத்தில் வீழ்வது கண்டால் ப்ரயாணமாய்ப் போகிற இஷ்ட ஜனத்துடன் கூடக் கொஞ்சதூரம் (அதாவது ஊருக்கு வெளியி லிருக்கிற குளம் கால்வாய் முதலிய ஜல வஸதியைக் காணும்வரையில்) சென்று பிறகு அவரிடம் விடை பெற்றுத் திரும்பும்பொழுது பிரியப்பொறாமல் கண்ணீர் பெருக்கிக்கொண்டு துக்கஸாகரத்தில் வீழ்ந்து வருந்துகிற மித்ரர்கள்போல் புலப்பட்டன. அனேக வர்ணமுடைய பல புஷ்பங்கள் மிகவும் லேசாயிருக்கை யால் அந்தக் கபிவீரனுடைய சரீரவேகத்தினுலுண்டா கும் காற்றால் மேற்கிளம்பிப் பிறகு ஸமுத்ரத்தில் வீழ்கையில், அந்த ஸமுத்ரம் அனேகமாயிரம் நக்ஷத்ரங்களோடு கூடிய ஆகாயம்போல் ப்ரகாசித் தது. நானுவர்ணமுடைய புஷ்ப ஸமூஹங்கள் அந்த வானரோத்தமனது சரீரத்தில் நிறைந்திருக்கையில், அவன் மின்னற்கொடியலோடு கூடின மேகம்போல் ப்ரகா சித்தனன். அவ்வீரனது வேகத்தால் புஷ்பங்கள் நாற் புறத்திலும் கிளம்பி ஜலத்தில் வீழ்கையில் அது அழகிய நக்ஷத்ரங்கள் உதயமாகப் பெற்ற ஆகாயம் போல் புலப்பட்டது. இங்ஙனம் போகும்பொழுது ஆகாயத்தில் நீட்டப்பட்ட புஜங்களிரண்டும் ஓர் மலையின் நுனியினின்று வெளிக்கிளம்பின ஐந்து தலை யுள்ள இரண்டு ஸர்ப்பங்கள்போல் தோற்றின. மேலும், அந்தக் கபிகுலசிகாமணி மிக்க வேகத்துடன் ஸமுத்ரத்தில் போய்க்கொண்டிருக்கையில் வரிசை வரிசையாக அலைகள் கிளம்பின அந்த ஜலராசியைப் பானஞ்செய்பவன் போலவும், அதற்குமேல் கிளம்பிப் போகும்பொழுது ஆகாயத்தைப் பருக நினைத்தவன் போலவும் புலப்பட்டனன். அந்த ஹனுமான் வாயு மார்க்கத்தில் (ஆகாயத்தில்) போகும்பொழுது மின்னலின் ஒளிபோன்ற ஒளியுடன் விளங்குகின்ற அவ்வானர வீரனது கண்களிரண்டும் மலையின்மேல் இருக்கிற இரண்டு அக்னிகள்போல் ப்ரகாசித்தன. மேலும் பொன்வர்ண முடையவைகளும் மிகவும்

பெருத்து உருண்டிருப்பவைகளுமாகிய அவன் கண்கள் இரண்டும் உதித்த சந்த்ர ஸூர்யர்கள்போல் விளங்கின. சிவந்த மூக்கின் காந்தியால் சிவந்திருக்கின்ற அவனது முகம் ஸந்த்யையின் காந்தி ஸம்பந்திக்கப்பெற்றுச் சிவந்த ஸூர்ய மண்டலம்போல் ப்ரகாசித்தது. ஆகாயத்தில் பறந்துபோகும்பொழுது கோணலாக மேல் தூக்கப்பட்ட அவனது வால் உயர்த்தப்பட்ட இந்த்ரத்வஜம்போல் புலப்பட்டது. வெளுத்த கோரைப் பற்களுடையவனும் மஹாப்ராஜ்ஞனுமாகிய அவ்வானர வீரன் வளையம்போல் தன்னைச் சுற்றிலும் வாலைச் சுழற்றிக்கொண்டு, அதனால் பரிவேஷத்துடன் கூடின ஸூர்யன்போல் ப்ரகாசித்தனன். சுற்றிலும் சிவந்து விளங்குகின்ற வாலின் அடிபாகத்தோடுகூடின அந்த ஹநுமான் பிளக்கப்பட்டுச் சிவந்த பெரிய காவிக்கல்லுடன் கூடின பர்வதம்போல் ப்ரகாசித்தனன். அந்த வானர ஸிம்ஹன் தாண்டும்பொழுது அவனது கக்ஷத்தினிடையில் புகுந்த வாயுவானது மேகம்போல் கர்ஜித்தது. வட திசையின் துனியினின்று வெளிப்பட்டு வாலோடுகூடி ஆகாயத்தில் செல்லும் கொள்ளிக்கட்டைபோல், வாலுடன் கூடின அந்த வானரன் (ராவணனுக்கு அனர்த்தத்தை ஸூசனை செய்துகொண்டு புலப்பட்டான். ஆகாயத்தில் செல்பவனும் ஸூர்யன்போல் ப்ரகாசிப்பவனும் நீண்ட உருவத்துடன் விளங்குகின்றவனுமாகிய அக்கபிவீரன் கயிற்றால் கட்டுண்ட நீண்ட மத்தகஜம்போல் ப்ரகாசித்தனன். மேலும் அவன் ஸமுத்ரத்தின்மேல் புலப்படுகிற சரீரத்துடனும் கீழ் அதன் ஜலத்தில் ப்ரதிபலிக்கிற ப்ரதிபிம்பத்துடனும் கூடி, இருவாறாகப் போகும்பொழுது ஜலத்தில் ஆழ்ந்த அடிபாகத்தோடும் வெளியில் தெரிகின்ற மேல்பாகத்தோடும் கூடிக் காற்று வேகத்தினால் போகின்ற ஓடம்போல் ப்ரகாசித்தனன். அவன் ஸமுத்ரத்தில் எந்த எந்த இடங்களுக்குப் போயினனோ, அந்தந்த இடங்களெல்லாம் வியப்பை விளைக்கின்ற அவ்வானரவீரனது வேகத்

தினால் கிறுகிறுவென்று சுழலமிடுவது, நுரைகளைக் கிளப்புவது, நீரைப் பெருக்குவது, இறைச்சலிடுவது முதலிய சேஷ்டைகளைச் செய்கையால் ஓர் அபஸ்மார ரோகிபோல் புலப்பட்டது. அக்கபிவீரன் மலைபோன்ற பேரலைகளின் வரிசைகளைத் தன் மார்பு வேகத்தினால் உண்டாகிற பெருங்காற்றினால் சிதறும்படி செய்து கொண்டு மிக்க வேகத்துடன் தாண்டும்பொழுது அவனது வேகத்தினாலுண்டான மிக்க வலியுடைய வாயுவும் மேகங்களினின்று வீசுகிற வாயுவும் இரண்டுங் கூடி ஸமுத்ரத்தை மிகவும் பயங்கரமாகக் கோஷமிடும்படி நடுங்கச் செய்தன. மிகவும் பெரியனவாகி மேற் கிளம்புகின்ற அலைக் கூட்டங்களை மென்மேலும் கிளம்ப வொட்டாமல் மேல் உறைகின்ற தன் சரீர ஸ்பர்சத்தினால் மீளவும் ஸமுத்ரத்தில் வீழ்ந்தடங்கும்படி அடக்கிக்கொண்டு அவ்வானரவீரன் தாண்டிப்போவது கண்டால் அந்த அலைகளும் ஆகாயமும் ஒன்றாகுமாயின், ஆகாயமும் பூமியும் முன்பின் தெரியாமல் போமானதையால் அவ்விரண்டையும் வேறாகப் பிரிப்பதற்கோ? இவன் இவைகளினிடையில் சென்று இங்ஙனஞ் செய்கின்றான் என்னும்படி தோற்றியது. அவன் அம்மஹா ஸமுத்ரத்தில் மேருமலைபோலவும் மந்தரமலைபோலவும் மேற்கிளம்புகிற பேரலைகளை எண்ணுபவன்போல் மஹாவேகத்துடன் அவ்வாறு சென்றனன். அவ்வானரவீரனுடைய வேகத்தினால் மேற்கிளம்பியதும் மேகங்கள் அடர்ந்திருக்கப் பெற்றதுமாகிய ஸமுத்ரஜலம் ஆகாயத்தில் நிலையுற்று முழுவதும் நிரம்பிய சரத்கால மேகம்போல் வெளுத்து ப்ரகாசித்தது. ஆடையை அப்புறம் வாங்குகையில் ஜனங்களின் அவயவங்கள் ஸ்பஷ்டமாகத் தெரிவது போல் ஜலம் மேல்கிளம்புகையால் ஜலராசியிலுள்ள பெருமீன்களும் பெருமுதலைகளும் சிறுமுதலைகளும் சிறுமீன்களும் ஆமைகளும் தெளிவாகத் தோற்றின. அந்த ஸமுத்ரத்திலுள்ள ஸர்ப்பங்கள், மிக்க வேகத்துடன் மேல் பறக்கின்ற அக்கபிவீரனைக் கண்டு மிகவும்

பயத்துடன் கருடனென்று ப்ரமித்தன. [1] பத்து யோஜனை விஸ்தாரமும் முப்பதுயோஜனை நீளமுமுடைய அக்கபிவீரனது நிழல் ஸமுத்ர ஜலத்தில் மிகவும் அழகாக வெகுதூரம் பரந்து அவனைப் பின்றொடர்ந்து நெருங்கி நிர்மலமாயிருக்கும் மேகஸமூஹம்போல் ப்ரகாசித்தது. மிக்க ஒளி அமைந்த பெருஞ் சரீரத்துடன் கூடின அக்கபிவீரன் நிராதாரமான ஆகாயத்தில் பறந்து செல்லும்பொழுது இறகுகளையுடைய பர்வதம்போல் புலப்பட்டனன். மஹாபலிஷ்டனான அவ்வானரன் எந்த வழியால் சென்றனனோ அவ்வழியிலெல்லாம் அவனது வேகத்தினால் ஸமுத்ர ஜலம் அடிகாணக் கலங்குகையில், அவ்விடத்தில் நடுவில் பள்ளமாயிருக்கிற அந்த ஸமுத்ரம் தொன்னைபோல் புலப்பட்டது. மேலும், அவன் பக்ஷிஸமூஹங்கள் பறக்கும்படியான ஆகாசமார்க்கத்தில் பக்ஷிராஜனாகிய கருடன்போல் பறந்து வாயுவைப்போல் மேகஸமூஹங்களை இழுத்துக்கொண்டு

---

1. இங்கு 'தசயோஜநவிஸ்தீர்ணா த்ரிம்சத்யோஜநமாயதா। சாயா வாநரஸிம்ஹஸ்ய ஜலே சாருதராபவத்' என்பது மூலம். இங்கு சாயையாவது நிழல், ப்ரதிபிம்பமன்று. ப்ரதிபிம்பத்தைச் சொல்லுமாயின், அது பிம்பத்தைக்காட்டிலும் அதிக பரிமாணமுடையதாயிருக்கமாட்டாதாகையால் பிம்பமாகிய அந்தக் கபிசரீரம் அதைப்போலவே முப்பது யோஜனை தூரம் நீண்டிருக்க வேண்டிவரும். அப்பொழுது அவ்வளவு சரீரமுடைய ஹநுமான் நான்காவது அடிவைப்பிலேயே நூறுயோஜனை தூரமுள்ள ஸமுத்ரத்தைத் தாண்டியிருப்பான். அப்படியாயின் இடையில் சேர்ந்த மைநாகஸுரஸாஸம்வாதாதிகள் எப்படி ஸித்திக்கும்? ஆகையால் இங்குச் சாயையென்றால் நிழலையே கொள்ளவேண்டும். ஆஞ்ஜநேயன் ஸமுத்ரந்தாண்டினது உதயமாய் ஜாமத்திற்கேயாகையால் அவ்வேளையில் நிழல் மிகுதியும் பெரிதாக நீண்டிருப்பது அநுபவஸித்தமாகையாலும் அந்தக் கபிவானுடைய நிழல் அப்பொழுது அவ்வளவு பெரிதாகப் புலப்பட்டதென்பது மிகுதியும் பொருந்துகின்றது.

போயினன். அப்பொழுது வெளுப்பு சிவப்பு நீலம் மஞ்சள் ஆகிய இவ்வர்ணங்களையுடையமஹாமேகங்கள் அவ்வானர வீரனால் இழுக்கப்பட்டு ப்ரகாசித்தன. அக்கபிகுஞ்ஜரன் போகிற வேகத்தினால் மேக ஸமூஹங்களில் நுழைந்து நுழைந்து மறைந்தும் அடிக்கடி வெளிப்பட்டுத் தோற்றியும் சந்த்ரன்போல் புலப்பட்டனன். அவன் அங்ஙனம் தாண்டிக்கொண்டிருக்கையில், தேவ தானவ கந்தர்வர்கள் அப்பொழுது அவ்வானர வீரன்மேல் கலகலவென்று புஷ்பவர்ஷங்களைப் பெய்தனர். ஸூர்யன் அவனைத் தன் கிரணங்களால் கொளுத்தாமல் ஸுகமாயிருந்தனன். வாயுவும் ராம கார்யத்தை நிறைவேற்ற விரும்பி அதற்காக முயன்ற அந்தக் கபிகுஞ்ஜரன்மேல் குளிர்ந்து வீசினன். ரிஷிகளும் ஆகாயத்தில் பறந்து செல்கின்ற இவனைத் துதித்தனர். தேவதைகளும் கந்தர்வர்களும் அம்மஹா தேஜஸ்வியைப் புகழ்ந்து கானஞ்செய்தனர். நாக யக்ஷ ராக்ஷஸர்களும் தேவதைகளும் பக்ஷிகளும் மற்றுமுள்ள அனைவரும், அந்த ஹனுமான் அப்படிப்பட்ட மிகவும் கஷ்டமான கார்யத்தைச் செய்துகொண்டிருப்பினும் எள்ளளவும் இளைப்பின்றி விளக்கமுற்றிருப்பதைக்கண்டு ஆச்சர்யம் அடைந்து அவனைப் புகழ்ந்தனர். இங்ஙனம் வானரஸ்ரேஷ்டனாகிய அந்த ஹனுமான் இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்த ஸ்ரீராமசந்த்ரனது கார்யத்தைக் குறித்து ஜலராசியைத் தாண்டும்பொழுது இக்ஷ்வாகு வம்சத்தரசர்களாகிய ஸகரபுத்ரர்களால் ஸமுத்ரராஜன் வளர்ந்தவனாகையால் அக்குலத்தை வெகுமதிக்க விரும்பித் தனக்குள் இங்ஙனம் ஆலோசித்தனன். 'இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ராமனது கார்யத்திற்காக முயன்ற வானரர் தலைவனாகிய ஹனுமானுக்கு நான் ஸஹாயஞ்செய்யாது போவேனாயின், உலகத்தில் வாயுள்ள ஒவ்வொருவனாலும் எல்லா விதத்திலும் நிந்திக்கத் தகுந்தவனாவேன். நான் இக்ஷ்வாகு வம்சத்திற்கு நாதனாகிய ஸகரனால் இங்ஙனம் வளர்க்கப்பட்டேன்; அந்த

இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த ஸ்ரீராகவனுக்கு இந்த ஹனுமான் நண்பன். ஆகையால் என்னெதிரில் இவன் கஷ்டப்படலாகாது. ஆனதுபற்றி இவன் இளைப்பாறத் தக்க உபாயத்தைநான் அவசியம் செய்யவேண்டும். அப்பொழுது என்மேல் நின்றிருந்து இளைப்பாறலுற்று மற்றமார்க்கத்தை ஸுகமாகத் தாண்டிப்போவான்' என்று இங்ஙனம் ஸமுத்ரராஜன் நல்ல ஆலோசனை செய்து, தன் ஜலத்தில் மறைந்திருப்பவனும் ஸ்வர்ண மயமான சிகரங்கள் விளங்கப்பெற்றவனுமாகிய மைநாக மென்னும் பர்வதராஜனைப் பார்த்து மொழிந்தனன்:—

'ஓ! பர்வதஸ்ரேஷ்டனே! தேவேந்த்ரன், பாதாள வாஸிகளான அஸுரர்கள் மேற்கிளம்பி வாராதிருக்கும்படி தடுப்பதற்காக உன்னை ஓர் உழல்தடியைப் போல் இங்கு வைத்திருக்கின்றனன். மிகுந்த வீர்ய முடையவர்களாகையால் மீளவும் மீளவும் மேற்கிளம்பி வரப்பார்க்கின்ற அந்த ராக்ஷஸர்களின் வாஸஸ்தானமும் மிகப்பெரிதாகையால் அளக்கும் அளவிடக் கூடாததுமாகிய பாதாளலோகத்தின் வாசலை மறைத்துக்கொண்டிருக்கின்றனை. சைலேந்த்ரனே! நீ மேலும் குறுக்காகவும் வளரும்படியான சக்தி உனக்கு உளது. ஆகையால் உன்னை நான் ஒரு கார்யத்தில் தூண்டுகின்றனன். பர்வதஸ்ரேஷ்டனே! எழுந்திருப்பாயாக. கபிஸ்ரேஷ்டனாகிய இந்த ஹனுமான் ராமகார்யத்தின்பொருட்டு ஸமுத்ரந்தாண்டுகையாகிற பயங்கரமான பெரிய கார்யத்தில் முயன்று ஆகாயத்திற் கிளம்பி இதோ என்மேல் வருகின்றனன். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ராமனது கார்யத்தின்பொருட்டுப் போகிறவனாகையால் அந்த இக்ஷ்வாகு வம்சத்திற்கே சுஶ்ரூஷை செய்கின்ற இக்கபிவீரனுக்கு நான் ஸஹாயஞ்செய்யவேண்டும். ஏனென்றால்—நான் இக்ஷ்வாகு வம்சத்தரசனாகிய ஸகர சக்ரவர்த்தியால் வ்ருத்தியடைந்தவனாகையால் அந்த இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்தவர் அனைவரும் எனக்குப் பூஜிக்கத்தகுந்தவரல்லவா? என்னைப்பற்றி உனக்கு மேன்மேலும் பூஜிக்கத்தகுந்

தவரல்லவா? எமக்கு ஸஹாயஞ் செய்வாயாக. எமது கார்யம் விஞ்சிப்போகாதிருக்கப் பார். செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யாத பக்ஷத்தில் ஸத்புருஷர்களுக்குக் கோபத்தை உண்டாக்கும். ஆகையால் ஜலத்தினின்று மேலுக்கெழுந்திரு. உன்மேல் இக்கபிவரன் உட்காருவானாக. இக்கபி குஞ்ஜரன் நமக்கு அதிதியும் பூஜிக்கத் தகுந்தவனுமாயிருப்பவன். பொற்சிகரங்கள் பொருந்தித் தேவதைகளும் கந்தர்வர்களும் உலாவப் பெற்று விளங்குகிற மைநாக பர்வதனே! நீ இங்ஙனஞ் செய்வாயாயின், இவ்வானரோத்தமன் உன்மேல் நின்று இளைப்பைத் தீர்த்துக்கொண்டு மற்ற மார்க்கத்தையும் ஸுகமாகக் கடந்து செல்வான். ககுத்ஸ்த குல திலகனாகிய ராமனுக்கு ஸீதையிடத்துள்ள தயையின் மிகுதியையும் லோகமாதாவாகிய ஸீதையின் பரதேச வாஸத்தையும், ராம கைங்கர்யத்தில் மனவூக்கமுடைய இக்கபிவரனது "ப்ராயாஸத்தையும் நன்கு பார்த்தாயினும் நீ மேலெழுந்து வரவேண்டுமல்லவா?" என்றான். இங்ஙனம் ஸமுத்ரன் சொல்லுகிற வார்த்தைகளைப் பொற்சிகரங்களமைந்த மைநாகன் கேட்டுப் பெரிய வ்ருக்ஷங்களோடும் கொடிகளோடும் கூடி மிக்க வேகத்துடன் ஜலத்தினின்று மேற்கிளம்பினான். அப்பர்வதன் அங்ஙனம் ஸமுத்ர ஜலத்தைப் பிளந்து கொண்டு கிளம்பி மேகத்தினின்று வெளிக்கிளம்புகிற ஸூர்யன்போல் புலப்பட்டான். ஜலத்தில் மூழ்கி மறைந்திருந்த அம்மஹா பர்வதம் ஆகாயத்தை அளாவி உயர்ந்து கின்னர உரகர்களால் சூழப்பட்டு ஸ்வர்ணமயங்களாகி உதித்த ஸூர்யன்போல் விளங்குகின்ற தன் சிகரங்களை ஸமுத்ர ராஜனது கட்டளையின் படி வெளிப்படுத்திக்கொண்டு மேற்கிளம்பினன். உருக்கின பொன்போல் விளங்குகின்ற அப்பர்வத சிகரங்கள் அங்ஙனம் மேற்கிளம்புகையில், அவற்றின் காந்திகள் முழுவதும் பரந்து ஶஸ்த்ரம்போல் கறுத்திருக்கிற ஆகாசத்தையெல்லாம் பொன் வர்ணமுடையதாகி விளங்கச்செய்தது. இங்ஙனம் இயற்கையாகவே



1999. ஹனுமான் மைனாகத்தைக் காணுதல்.

ஏற்பட்டிருக்கிற ஒளிப்பெருக்குடன் விளங்கின்ற
ஸ்வர்ண சிகரங்கள் அமைந்த அப்பர்வதராஜன் நூறு
ஸூர்யர்கள் ஒன்றாக உதித்தாற்போல் ப்ரகாசித்த
னன். இங்ஙனம் தடையின்றி மேற்கிளம்பிப் புலப்
படுகின்ற அப்பர்வதத்தைக் கபிகுஞ்ஜரன் கண்டு 'ஓ ஓ!
ஸமுத்ரத்தினிடையில் இது ஓர் விக்னம் உண்டா
யிற்றே' என்று நிச்சயித்து மிகவும் உயர்ந்திருக்கின்ற
அம்மஹா கிரியைப் பெருவேகத்துடன் மார்பினால்
அமுக்கி மேகத்தைத் தாக்குகிற வாயுவைப்போல்
அநாயாஸமாக விழத்தள்ளினன். அப்பர்வதராஜன்
அங்ஙனம் அவ்வானரனால் தள்ளுண்டு தான் வீழ்ந்த
விசையைக் கண்டு அதனால் அவனது வேகத்தின்
மிகுதியை அறிந்தமையால் அவனுக்கு ஸ்ரமமில்லா
மையை ஊஹித்து மயிர்க்கூச்சலடைந்து
ஸந்தோஷித்து மீளவும் ஆகாயத்தில் கிளம்பி ப்ரீதி
யால் தெளிந்த முகமுடையவனாகி மனுஷ்ய ரூபத்
துடன் தனது சிகரத்தில் நின்று ஆகாயத்தில் பறந்து
போகின்ற அவ்வானரவீரனை நோக்கி 'ஓ வான
ரோத்தம! நீ செயற்கரிதான இக்கார்யத்தைச் செய்
தனை. என் சிகரங்களில் சிறிதுநேரம் நின்று ஸுக
மாக இளைப்பாறுவாயாக. ஸ்ரீராகவனது வம்சத்திற்
பிறந்த பெரியோர்களால் இந்த ஸமுத்ரராஜன் வ்ருத்தி
யடைந்தனன். ஆகையால் இவன் அப்படிப்பட்ட
ராமனுக்கு ஹிதஞ்செய்ய விரும்பிச் செல்கிற உன்னைப்
பூஜிக்க உத்தேசமுற்றிருக்கின்றனன். ஒருவன் ஒரு
உபகாரஞ் செய்தானாயின் அவனுக்குப் பதிலுபகாரஞ்
செய்யவேண்டும். இது நெடுநாளாய் வழங்கிவருகிற
தர்மம். இந்த ஸமுத்ரராஜனும் தான் அவ்வரசர்க
ளால் பெற்ற உபகாரத்தை நினைந்து அவ்வம்சத்திற்
பிறந்த ஸ்ரீராகவனுக்குத் தூதனாகிய உனக்கு அதிதி
ஸத்காரஞ் செய்கையாகிற பதிலுபகாரத்தை அவர்க்
குச்செய்ய விரும்புகின்றனன். ஆகையால் அந்த அதிதி
ஸத்காரத்தை அங்கீகரித்து அவனை வெகுமானிக்க
வேண்டும். இந்த ஸமுத்ரன் உனக்காக என்னைப்

பார்த்து 'ஓ மைநாகனே! இக்கபிகுஞ்ஜரன் நூறு யோஜனைகள் தாண்ட முயன்றனன். ஆகையால் உன் தாழ்வரைகளில் கொஞ்சநேரம் இளைப்பாறி மற்ற வழியைக் கடந்து போவானாக' என்று வேண்டித் தூண்டினன். ஆகையால், 'ஓ கபி ஶ்ரேஷ்டனே! என்மேல் சிறிதுநேரம் இளைப்பாறிப் பின்பு உன் வழியைப் பிடித்து நடப்பாயாக. மிகுந்த வாஸனையும் ருசியும் பொருந்திப் புகழ்பெற்ற பலவகைப்பட்ட இந்தக் காய் பழம் கிழங்கு முதலியவற்றைப் புசித்து இளைப்பையும் ஆற்றிக்கொண்டு போவாயாக. மேலும் நாங்கள் அதிதி ஸத்காரஞ்செய்பவர். நீ அதைப் பெற்றுக்கொள்ள வேண்டியவன். ஆகையால் அதிதி ஸத்காரஞ் செய்வதும் பெற்றுக்கொள்வதுமாகிற ஸம்பந்தத்தைப் பற்றியாவது நாங்கள் செய்யும் அதிதி பூஜையை அங்கீகரிப்பாயாக. இந்த ஸம்பந்தம் மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தமாயிருப்பது. மேலும், மஹா குணமுடைய ஸஜ்ஜனங்கள் அனைவரும் அங்கீகரித்து வருவதேயன்றி நமக்கும் உனக்கு மாத்ரம் உளதன்று. ஆகையால் இப்படிப்பட்ட ஸம்பந்தத்தைப்பற்றியாயினும் நாங்கள் செய்கிற அதிதி ஸத்காரத்தை அங்கீகரிப்பாயாக. வாயுகுமாரனே! வானரர் தலைவனே! தாண்டுகிற சக்தியும் மிகுந்த வேகமுமுடைய வானரர்களெல்லோரிலும் நீ மிகவும் ப்ரமுகனென்று நினைக்கின்றனன். தர்மத்தை அறிந்தவனுக்கும் அதைத் தெரிந்துகொள்ள விரும்புபவனுக்கும், தன் வீட்டிற்குவந்த அதிதி அற்பனாயினும் பூஜிக்கத் தகுந்தவன்; இனி உன்னைப் போன்ற மஹானுபாவன் பூஜிக்கத் தகுந்தவனென்று சொல்ல வேண்டுமோ? அதிதியாகிய உன்னைப் பூஜிப்பதனால் விருப்பம் கைகூடுவதுமாத்ரமேயன்றி மற்றொரு கார்ய ஸித்தியும் உண்டு. நீ 'தேவதைகளில் மேன்மையுற்று மஹனீயனாகிய வாயுதேவனுடைய குமாரனல்லவா? வேகத்தில் அவனுக்கு நிகரானவனல்லவா? அப்படிப்பட்ட உன்னைப் பூஜிப்பேனாயின், அதன் மூலமாய் உன்

தந்தையாகிய வாயுதேவனும் பூஜிக்கப்பட்டவனே ஆகின்றனன். இங்ஙனம் உன்னைப் பூஜிப்பதின்மூலமாக உன் தந்தையும் பூஜிக்கப்பட்டு பரமஸந்தோஷம் பெறுவானாகையால் அவன் எனக்குச் செய்த மேன்மைக்கு ப்ரத்யுபகாரமும் எனக்குக் கைகூடும். ஸமஸ்த தர்மங்களையும் அறிந்தவனாகையால் உனக்குத் தெரியாததில்லை. ஆகையால் உன்னை நான் அவஶ்யம் பூஜிக்கவேண்டும். இங்ஙனம் வாயுதேவனுக்காக உன்னைப் பூஜிக்கும் விஷயத்தில் உள்ள ஓர் காரணத்தையுஞ் சொல்லுகிறேன்; கேட்பாயாக. அப்பனே! முன்பு க்ருதயுகத்தில் பர்வதங்கள் சிறகுகள் உண்டாகப் பெற்றிருந்தன. ஆகையால் அவை கருடனையும் வாயுதேவனையும் நிகர்த்த வேகத்துடன் உயரக் கிளம்பி எல்லாத் திசைகளிலும் போய்க்கொண்டிருந்தன. அங்ஙனம் போய்க்கொண்டிருக்கையில் தம்மேல் அவை விழுமோ என்னவோ வென்று சங்கித்துத் தேவக்கூட்டங்களும் ரிஷிகளும் மற்றுமுள்ள ப்ராணிஜாலங்களும் பயப்பட ஆரம்பித்தன. அப்பொழுது நூறு யாகங்களைச்செய்து மேன்மையுற்ற தேவேந்த்ரன் கோபம் மேலெழப்பெற்று அந்தப் பர்வதங்களின் இறகுகளை அவ்வவ்விடங்களில் ஆயிரஞ் சுக்கலாகத் தன் வஜ்ராயுதத்தினால் துண்டித்துக்கொண்டு வந்தனன். அங்ஙனம் சினந்திருக்கிற தேவராஜன் வஜ்ராயுதத்தை ஏந்திக்கொண்டு என் இறகுகளை அறுக்க என்னிடம் வந்தனன். அப்பொழுது மஹாநுபாவனாகிய வாயுதேவன் மிக்க வேகத்துடன் என்னைக் கிளப்பி ஸமுத்ரத்தில் விழத்தள்ளினன். வானரர் தலைவனே! இந்த ஸமுத்ரத்தில் வீசியெறியப்பட்டு இறகுகள் பத்ரமாயிருக்கப்பெற்று அவற்றால் நிறைந்திருக்கும்படி உன் தந்தையால் காக்கப்பட்டேன். இங்ஙனம் மாருதன் (காற்று) எனக்குப் பூஜிக்கத் தகுந்தவனாகையால் அவனது புதல்வனாகிய உன்னை நான் கௌரவிக்கின்றனன். கபீந்த்ரனே! எனக்கு உன் தந்தைமூலமாக உன்னுடன் நேரிட்டிருக்கிற

இந்த ஸம்பந்தம் மிகவும் குணமுடையது. மஹா கபி! (நான் உன் தந்தைக்கு ப்ரத்யுபகாரமாக உன்னைப் பூஜிக்கிறேன்.) இந்தப் பூஜை நேரிடும்பொழுது நீ மனங்களிக்கப்பெற்று அதை அங்கீகரித்து ஸமுத்ர னுக்கும் எனக்கும் ஸந்தோஷத்தை விளைவிப்பது யுக்தமாயிருக்கின்றது. ஆகையால் என்மேல் நின் றிருந்து உன் மார்க்க ஆயாஸத்தைப் போக்கிக்கொள் வாயாக. நான் செய்யும் பூஜையையும் அங்கீகரிப்பா யாக. நான் செய்யும் ப்ரீதியையும் வெகுமானிப்பாயாக. உன்னைக் கண்டது முதல் எனக்கு உன்னிடத்தில் ப்ரீதி உண்டாயிருக்கின்றது' என்றனன். இங்ஙனம் மைநாகன் மொழிகையில் அதைக் கேட்ட அக் கபி குஞ்ஜரன் இவ்வண்ணம் மறுமொழி கூறினன்: 'உன் வாக்யங்களைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்தனன். உன் தர்சனம் முதலியவற்றால் நீ கொடுக்கிற அதிதி ஸத்காரத்தை அங்கீகரித்ததாகவே நினைப்பாயாக. உன் பூஜையை நான் கைப்பற்றவில்லையென்று என் மேல் கோபம் வேண்டாம். லங்கையில் புகவேண்டிய கார்யத்தைப்பற்றி வேகமாகப் போகும்படி காலம் என்னை த்வரைப்படுத்துகிறது. பகல் கடந்து போகின்றது. பொழுது போவதற்கு முன்னமே லங்கை யில் ப்ரவேசிக்கவேண்டும். இதுவேயன்றி இதனிடை யில் நிற்கிறதில்லையென்று நான் முன்னமே வானரர்களுக்கெதிரில் ப்ரதிஜ்ஞையுஞ் செய்திருக்கின் றேன்' என்று மொழிந்து அவ்வானர வீரன் தெளிந்த முகமுடையவனாகிப் புன்சிரிப்புடன் அம்மைநாக பர்வதத்தைக் கையால் ஸ்பர்சித்து வீர்யம் விளங்க ஆகாயத்தில் போகத் தொடங்கினன். மைநாகனும் ஸமுத்ரராஜனும் மிக்க வெகுமதியுடன் தன்னைப் பார்த்துக்கொண்டிருக்கையில் ராமகார்ய ஸித்திக்குத் தகுந்த ஆசீர்வாதங்களைக்கூறி அவர்களால் பூஜிக்கப் பட்டு வெகுதூரம் மேற்கிளம்பிச் சரீரத்துடன் புலப்படு கின்ற அந்த ஸமுத்ர பர்வதங்களை விடைகொடுத் தனுப்பி வாயு மார்க்கத்திற் சென்று மீளவும் மேற்

கிளம்பி அம்மைனாக பர்வதத்தைப் பார்த்துக்கொண்டு எவ்விதப் பிடிப்புமில்லாமல் நிர்மலமாயிருக்கின்ற ஆகாய மார்க்கத்தில் போய்க்கொண்டிருந்தனன். ஹநுமானுடைய அந்த இரண்டாவதான [1] துஷ்கர கார்யத்தைக் கண்டு தேவதைகளும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் மற்றுமுள்ளவர்களும் எல்லோரும் ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு புகழ்ந்தனர். ஸ்வர்ணமயமான சிகரங்களால் விளங்குகிற அம்மைனாகன் செய்த அம்மஹாகார்யத்தினால் அங்குள்ள தேவதைகளனைவரும் ஸந்தோஷித்தனர். ஆயிரக் கண்ணனாகிய தேவேந்த்ரனும் அதைக் கண்டு களிப்புற்றனன். அனந்தரம் சசீபதியாகிய அத்தேவாதிராஜன் மிகுந்த மதியுடையோனாகையால் அம்மைனாகன்மேல் மிகவும் களித்து ஸந்தோஷத்தினால் வார்த்தைகள் தழுதழுக்கப்பெற்று அப்பர்வத ராஜனை நோக்கி இங்ஙனம் தானே மொழிந்தனன். 'பொற்சிகரங்களால் விளங்கும் பர்வத ராஜனே! நல்லியற்கையுடையவனே! உன்மீது நான் மிகவும் ஸந்தோஷமுற்றனன். உனக்கு அபயங் கொடுக்கிறேன். இனி ஸுகித்திருப்பாயாக. அதி விஸ்தாரமுடைய ஸமுத்ரத்தின்மேல் மிக்க வேகத்துடன் போகும்பொழுது விழுவோமென்னும் பயம் உண்டாகக்கூடுமாயினும், எந்தப் பயமுமின்றி நூறு யோஜனைகள் பராக்ரமித்துத் தாண்டுகின்ற இந்த ஹநுமானுக்கு நீ என்னாலுண்டாகும் பயத்தையும் பாராட்டாமல் மேற்கிளம்பி மஹா ஸஹாயஞ் செய்தனை. இந்தக் கபிவரன் தசரத குமாரனாகிய ராமனுக்குத் தூதகார்யத்தை ஏற்றுக்கொண்டு போகின்றனன். அப்படிப்பட்டவனை ஸத்கரித்த உன்னைப் பார்த்து நான் மிகவும் ஸந்தோஷித்தேன்' என்றனன். அனந்தரம் நூறு யாகங்களைச் செய்து மேன்மையடைந்த அத்தேவாதிபதி தன்னிடம் ஸந்தோஷித்திருப்பது கண்டு

---

1. செய்யமுடியாத கார்யத்தை.

அப்பர்வதோத்தமன் பரம ஸந்தோஷம் அடைந்து இந்த்ரன் கொடுத்த வரங்களால் பயந் தொலைந்து ஜலத்தில் மூழ்காமல் அங்ஙனமே ஸுகமாக நின்றிருந்தனன். ஹனுமான் அம்மைநாகன் இருக்கிற ஸமுத்ர ப்ரதேசத்தை ஒரு முஹூர்த்த காலத்தில் தாண்டிப்போயினன். பின்பு தேவதைகளும் ஸித்தர்களும் கந்தர்வர்களும் மஹர்ஷிகளும் ஸூர்யன்போல் ப்ரகாசிப்பவளும் நாகங்களுக்குத் தாயுமாகிய ஸுரஸையென்பவளைப் பார்த்து 'ஸுரஸே! ஹனுமானென்னும் பெயருடைய இவ்வாயு குமாரன் எவ்வளவு தூரம் போயினும் அவ்வளவுக்கவ்வளவு பலம் வளர்ந்து வருகையால் காந்தியும் மேன்மேலும் விளங்கப்பெற்று ஜலராசியின் (ஸமுத்ரத்தின்) மேல் தாண்டிப்போகின்றனன். நீ பர்வதம்போல் மிகப் பெரியதும் மஹாகோரமுமாகிய ராக்ஷஸ உருவந் தரித்துப் பொன் வர்ணமான கண்கள் ப்ரகாசிக்கவும் பயமுறுத்தும்படியான பெருங் கோரைப்பற்கள் தோற்றவும் பெற்ற முகத்தை ஆகாயம்போல் விசாலமாகச் செய்துகொண்டு குறுக்கே நின்று இந்த ஹனுமானுக்கு ஒரு முஹூர்த்த காலம் விக்னஞ் செய்வாயாக. இவன் உன்னை உபாயஞ்செய்து ஜயிப்பானோ அல்லது வருந்துவானோ என்று இவனுடைய பலமும் ப்ராக்ரமும் முன்பே தெரிந்திருப்பினும் மீளவும் ஸந்தேஹம் தீரும்பொருட்டு அவைகளை அறிய விரும்புகின்றோம்' என்றனர். இங்ஙனம் அவர்கள் மொழிகையில் அந்த ஸுரஸாதேவியும் தேவதைகளால் பூஜிக்கப்பட்டு ஸமுத்ர மத்யத்தில் விகாரமும் பார்க்க வழங்காததும் ஸர்வர்க்கும் பயத்தை விளைவிப்பதுமாகிய ராக்ஷஸ ரூபத்தைத் தரித்துத் தாண்டுகின்ற அவ்வீரனை மறைத்துக் கொண்டு நின்று இங்ஙனம் மொழிந்தனள் :—'ஓ வானரோத்தமா! தேவதைகள் உன்னை எனக்கு ஆஹாரமாகக் காட்டியிருக்கின்றனர். உன்னை நான் பக்ஷிக்கப்போகிறேன். இதோ என்வாயில் புகுவாயாக'

என்றனள். ஸுரஸை இங்ஙனம் சொல்லுகையில், அக்கபிவரன் கைகளைக்கூப்பி முகத்தில் ஸந்தோஷம் விளங்கவும் சரீர காந்தி வளரவும்பெற்று ஸுரஸையைப் பார்த்துத் 'தசரத குமாரனுகிய ராமனென்பவன் தம்பி லக்ஷ்மணனேடும் பார்யை ஸீதையோடும் வந்து தண்டகாரண்யத்தில் வஸித்திருந்தனன். அங்குச் சில காலஞ் சென்றபின்பு ராக்ஷஸர்களோடு அழியாத வைரத்தை ஏறிட்டுக்கொண்ட அவ்வீரன் மாயா ம்ருகரூபந் தரித்த மாரீசனைப் பிடிக்கவேண்டுங் கார்யார்த்தத்தில் அகப்பட்டு மறைகையில், அவனது பத்னியும் பதிவ்ரதா சிரோமணியும் பெரும்புகழுடையவளுமாகிய ஸீதாதேவியை ராவணன் எடுத்துக் கொண்டு போயினன். ராமனது ஆஜ்ஞையால் நான் அந்த ஸீதையிடம் தூதனுகப் போகின்றனன். த்ரிலோக நாதனுகிய ராமனது ராஜ்யத்தில் வஸிப்பவளாகையால் நீ ராமனுக்கு ஸஹாயஞ்செய்யவேண்டும். அப்படி இல்லையாயின் நான் மிதிலாதிபதியின் குமாரத்தியாகிய ஸீதாதேவியையும் ஸமஸ்த லோகங்களுக்கும் க்ஷேமஞ்செய்யுந் தன்மையுற்ற ராமனையும் பார்த்து வந்த பின்பு உன் வாயில் விழுகிறேனென்று ப்ரமாணஞ் செய்கிறேன்' என்றனன். இங்ஙனம் ஹநுமான் மொழிகையில், நினைத்தபடி வடிவங் கொள்ளவல்ல ஸுரஸாதேவி செவியுற்று 'அப்பா! எவனுயினும் என்னிடம் வந்த பின்பு என்னைத் தாண்டிப் போகலாகாது. இது எனக்கு வரம்' என்றனள். அனந்தரம் அவ்வாயு குமாரன் அங்ஙனம் திறக்கப்பட்ட அவளது வாயைக்கண்டு மிகுந்த மதியுடையவனுகையால், ஸூக்ஷ்ம ரூபத்துடன் புகுந்து சுருக்கென வெளிக்கிளம்பவேண்டுமென்று ஊஹித்துத் தன் சரீரத்தை மிகவும் சுருக்கி அங்குஷ்ட மாத்ரனுகி அவளது வாயில்புகுந்து மீளவும் அதி வேகத்துடன் வெளிவந்து ஆகாயத்தில் நின்று பராக்ரமலக்ஷ்மியுடன்ப்ரகாசித்துக்கொண்டு ஸுரஸையைப் பார்த்து, 'தக்ஷப்ரஜாபதியின் புதல்வியே!

ஸுரஸே! இதோ உன் வாயிற் புகுந்து வந்தனன். உனக்கு நமஸ்காரம். வைதேஹி இருக்குமிடத்திற்குப் போகின்றனன். உனக்கு ப்ரஹ்மதேவன் கொடுத்த வரமும் விபலமாகாமல் நிறைவேறிற்று' என்று மொழிந்தனன். இங்ஙனம் ராஹுவின் வாயினின்று விடுபட்ட சந்த்ரன்போல் தன் வாயினின்று வெளி வந்த அவ்வானரோத்தமனைக் கண்டு, ஸுரஸை நிஜரூபத்துடன் தோன்றி, 'நல்லியற்கையுடைய வானரர் தலைவனே! உன் கார்யத்தை நிறைவேற்றும் பொருட்டு ஸுகமாகப் போகலாம். ஸீதா தேவியை மஹானுபாவனாகிய ராமனுடன் சேர்ப்பாயாக' என்றனள். அப்பொழுது பிறர்க்குச் செய்யமுடியாத அந்த ஹனுமானது மூன்றுஞ் செயலைக் கண்டு ஸமஸ்த பூதங்களும் 'நல்லது நல்லது' என்று அவனைக் கொண்டாடின. அனந்தரம் அவன் வருணனுக் கிருப்பிடமும் எப்படிப்பட்டவர்க்கும் தாண்ட முடியாததுமாகிய ஜல ராசியைப் பற்றிக் கருடன் போல் மிகுந்த வேகத்துடன் ஆகாயத்தில் போகத் தொடங்கினன். மேலும், மேகங்களினின்று வெளி வருகின்ற நீர்த்தாரைகள் ஆங்காங்கு நிரம்பவும், பக்ஷி ஸமூஹங்கள் நாற்புறங்களிலும் திரியவும், கைசிகம் முதலிய ராகங்களைப் பாடுகிற தும்புரு நாரதாதிகள் ஸஞ்சரிக்கவும்,[1] இந்த்ரனுடைய யானையாகிய ஐராவத மென்னும் மஹாகஜம் ஸஞ்சரிக்கவும் பெற்று, ஸிம்ஹ கஜ சார்த்தூல பக்ஷி பன்னக வாஹனங்களில் ஏறித்

1. இங்கு 'ஐராவத நிஷேவிதே' என்று மூலம். மஹேஶ்வர தீர்தர் ஐராவத மென்றால் நேராய் நீண்ட இந்த்ர தனுஸ்ஸென்று கூறுகிறார். மேல் 'தேவராஜகஜாக்ராந்தே' என்று இந்த்ர னுடைய யானையாகிய ஐராவதத்தைச் சொல்லுகையால் இங்கு அவர் இங்ஙனம் வ்யாக்யானஞ் செய்கிறார். அதற்கு ப்ரமாணம் ஒன்றும் எழுதவில்லை. மேல் தேவராஜகஜ சப்தம் ஐராவதம் தவிர இந்த்ரனுடைய மற்ற யானைகளைச் சொல்லுகிறதென்று கோவிந்தராஜர்.

திரிபவர்களாலும் இங்கும் அங்கும் பறக்கின்ற நிர்மல விமானங்களாலும் வஜ்ராயுதமும் இடிகளும் உறைவதாலுண்டாகிற நெருப்புக்களாலும் மேற்கிளம்பும்பொழுது வஜ்ரம்போலும் இடிகள்போலும் கர்ஜனை செய்கின்ற நாற்பத்தொன்பது அக்னிகளாலும், புண்யஞ் செய்தவர்களும் அதனால் ஸ்வர்க்கத்தை வென்றவர்களுமாகிய மஹா பாக்யசாலிகளாலும் அலங்கரிக்கப்பட்டு, ஹவிர்ப்பாகங்களைத் தேவதைகளுக்குச் சேர்ப்பிக்கிற அக்னிகளில் ப்ரதானனாகிய சித்ரபானுவும் அங்காரகன் முதலிய க்ரஹங்களும் அஶ்விநி முதலிய நக்ஷத்ரங்களும் ஸூர்ய சந்த்ரர்களும் மற்ற நக்ஷத்ர ஸமூஹங்களும் நிறைந்து விளங்கமுற்று, மஹர்ஷி கணங்களும் கந்தர்வர்களும் நாக யக்ஷர்களும் சூழப்பெற்று ஏகாந்தமும் நிர்மலமும் எங்கும் வ்யாபித்திருப்பதும் விஶ்வாவஸுவென்னும் கந்தர்வராஜன் உலாவப்பெற்றதும் இந்த்ரனது யானைகளால் விளக்கமுற்றதும் சந்த்ர ஸூர்யர்கள் திரியும் மார்க்கமும் மங்களகரமாயிருப்பதும் ஜீவலோகத்திற்கு ப்ரஹ்மதேவன் நிர்மித்த அகன்ற மேற்கட்டு போன்றதும் வீரர்களாகிய வித்யாதர ஶ்ரேஷ்டர்கள் குவியல் குவியலாகப் பலவாறு ஸஞ்சரிப்பதும் வாயு தேவன் திரியும் மார்க்கமுமாகிய ஆகாயத்தில் அவ்வாயு குமாரன் கருடன்போல் பறந்து சென்றனன். இங்ஙனம் நாற்புறங்களிலும் புலப்பட்டுக்கொண்டு சிறகுகள் தொங்கப்பெற்ற மஹாபர்வதம்போல் பிடிப்பில்லாத ஆகாயத்தில் பறந்து சென்றனன். அங்ஙனம் பறந்து செல்கின்ற அவ்வீரனைப்பார்த்து ஸிம்ஹிகையென்னும் ராக்ஷஸி நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவளாகையால் மிகவும் வளர்ந்து தன் புத்தியில் 'நெடுங்காலங் கழித்த பின்பு இப்பொழுது எனக்குப் பக்ஷிக்க நேர்ந்தது. இப்பெருஞ் ஜந்து வெகுகாலங் கழித்து எனக்கு அகப்பட்டது' என்று சிந்தித்தனள். இங்ஙனம் சிந்தித்து ஸமுத்ரத்தின்மேல் பரந்திருக்கின்ற அவ்வானர வீரனது நிழலைப் பிடித்துக்கொண்டனள்.

இங்ஙனம் அவள் அம்மஹா வீரனுடைய நிழலைப் பிடித்துக்கொள்கையில், அவன் 'எதிர்க்காற்றினால் ஸமுத்ரத்தில் சுழலமிடுகின்ற ஓர் பெரிய ஓடம்போல் நானும் பராக்ரமம் தடைபடப்பெற்றுத் திடலென்று பிடியுண்டேனே' என்று தனக்குள் சிந்தித்தனன். அனந்தரம் அவ்வானரன் கீழும் மேலும் குறுக்காகவும் நாற்புறத்திலும் உற்றுப்பார்த்து ஸமுத்ரத்தினின்று மேற்கிளம்பி யிருக்கிற மிகவும் பெரிதான ஓர் ஜந்துவைக் கண்டனன். இங்ஙனம் மிகவும் விகாரமான முகத்துடன் புலப்படுகின்ற அப்பூதத்தைக் கண்டு, தனக்குள் மாருதி 'அற்புதமான உருவமுடையதும் மஹாசக்தியால் தேஹ நிழலைப் பிடித்துக் கொள்வதுமாகிய இந்த ஜந்துவையே முன்பு எனக்கு ஸுக்ரீவன் சொல்லினன். இவ்விஷயத்தில் ஸந்தேஹம் இல்லை' என்று சிந்தித்தனன். இங்ஙனம் அக்கபிகுஞ்ஜரன் மதியிற் சிறந்தவனாகையால் அவளை நிஜமாக ஸிம்ஹிகை யென்றறிந்து, வர்ஷாகாலத்தில் மேகம்போல் தனது பெருஞ் சரீரத்தை மேன்மேலும் பெருக்கச்செய்தனன். இங்ஙனம் வளர்கின்ற அவ்வீரனது சரீரத்தைக் கண்டு, அவள் பாதாள விவரம்போல் தன் வாயை அகலத் திறந்து மேக ஸமூஹம்போல் கர்ஜனை செய்து அவ்வானர வீரன்மேல் எதிர்த்தனள். இங்ஙனம் எதிர்க்கையில் அவன் மிகுந்த மதியுடையவனாகையால் மிகப்பெரியதும் தன் சரீரத்தளவு அகன்றிருப்பதும் திறந்ததுமாகிய அவளது வாயையும் அதன் மூலமாக அவளது மர்மஸ்தானங்களையுங் கண்டு வஜ்ரம் போன்ற சரீரமுடைய அவ்வானரவீரன் தன் சரீரத்தை மிகவும் குறுக்கிக்கொண்டு மஹாபலனாகையால் திறந்திருக்கிற அவளது வாயில் திடீரென்று குதித்தனன். இங்ஙனம் ஹநுமான் ஸிம்ஹிகையின் வாயில் புகுந்து உள்ளே போகையில் பூர்ணிமையினன்று ராஹுவால் விழுங்கப்பட்ட பூர்ணசந்த்ரன்போல் ஸித்த சாரணர்களுக்குப் புலப்பட்டனன். அவன் மனோவேகத்தை நிகர்த்த கமன சக்தியுடையவனாகையால் அவள் வாயை

மூடிக்கொள்வதற்கு முன்னமே தன் கூரிய நகங்களால் அவளது மர்மங்களைப் பிளந்து மிக்க வேகத்துடன் வெளிக்கிளம்பினான். இங்ஙனம் சிறந்த மதியுடைய அவ்வானரன் தூரத்திலின்றே மர்மாதிகளைத் தெரிந்துகொள்ளும் ஸூக்ஷ்ம த்ருஷ்டியாலும் எதிர்த் தடக்குந் தைர்யத்தினாலும் முயன்ற கார்யத்தை அதிவேகத்துடன் நிறைவேற்றும் ஸாமர்த்யத்தினாலும் அவளை விழத்தள்ளி மீளவும் முன்போன்ற வேகத்துடன் வானரத்தொடங்கினான். அவளும் ஹனுமானால் ஹ்ருதயம் பிளக்கப்பெற்றுத் தழதழப்புற்று ஸமுத்ர ஜலத்தில் விழுந்தனள். அங்ஙனம் அவ்வானரோத்தம னால் ப்ராணன்களை இழந்து விழுந்த அந்த ஸிம்ஹிகை யைக் கண்டு ஆகாயத்தில் திரியும் பூதங்கள் அவ்வானர வீரனைக் குறித்து [1] 'வானரர் தலைவனே! நீ செய்த கார்யம் மிகவும் பயங்கரமாயிருக்கின்றது. இந்தப் பெரிய ஜந்துவைக் கொன்றுவிட்டனை. இனி ஸீதையைக் காண்கையாகிற அபீஷ்ட கார்யத்தைச் சுபமாக நிறைவேற்றுவாயாக. நமது கார்யகாலங்களில் அழியாத தைர்யமும் எவ்வளவு தூரமாயினும் கண்டு பிடிக்கவல்ல ஸூக்ஷ்ம த்ருஷ்டியும் வஸ்துக்களின் உண்மையை நிச்சயிக்கவல்ல புத்தியும் கார்யத்தை

---

1. இங்கு 'பீமமத்ய க்ருதம் கர்ம மஹத்ஸத்த்வம் த்வயா ஹதம்। ஸாதயார்த்தமபிப்ரேதமரிஷ்டம் ப்லவதாம் வர। யஸ்ய த்வேதாநி சத்வாரி வாநரேந்த்ர யதா தவ। த்ருதிர் த்ருஷ்டிர் மதிர் தாக்ஷ்யம் ஸ்வகர்மஸு ந ஸீததி' என்பது மூலம். இங்கு யோஜனாந் தரத்தால் மற்றொரு பொருளுங் கூறலாகும். 'கபீந்த்ரனே! நீ செய்த கார்யம் மிகுதியும் பயங்கரமானது. ஸர்வ கார்யங்களிலும் அழியாத தைர்யமும் ஸூக்ஷ்ம த்ருஷ்டியும் தத்த்வநிச்சய புத்தியும் கார்யத்திற்கு உபயோகமான சக்தியும் ஆகிய இந்நான்கும் உனக்கிருக்கிறாப்போல் மற்றெதுக்கும் உளவோ அப்படிப்பட்ட இந்த ஸிம்ஹிகை யென்னும் பெருஞ் ஜந்து உன்னால் கொல்லப்பட்டது. இனி மற்றவர் உனக்கெவ்வளவர்?' என்று அர்த்தாந்தரம்.

வேகமாக நிறைவேற்றுந் திறமையும் ஆகிய இந்த நான்கும் உனக்குப்போல் மற்றெவனுக்கு நேருமோ, அவன் தன் கார்யத்தைக் கெடுத்துக்கொள்ள மாட்டான்' என்றனர். இங்ஙனம் பூஜிக்கத்தகுந்த அவ்வானரன் அவர்களால் வெகுமானிக்கப்பட்டுத் தன் கார்யத்தில் முயன்று கருடன்போல் ஆகாயத்தில் வேகமாகச் சென்றனன். அவன் நூறு யோஜனைகளையுங் கடந்து ஏறக்குறைய அக்கரை அடைந்தவனே யென்னும்படி அனேகமாய்த் தாண்டி நாற்புறத்திலும் உற்றுப் பார்த்து அக்கரையிலுள்ள வனராஜியை (வரிசை வரிசையான அரண்யங்களைக்) கண்டனன். இங்ஙனம் போய்க்கொண்டு அக்கரை சேருவதற்கு முன்னமே பலவகை வ்ருக்ஷங்களால் அலங்காரமுற்ற லங்கா த்வீபத்தையும் அதிலுள்ள மலயபர்வதத்தின் ஸமீபத்திலுள்ள உத்யானங்களையும் ஸமுத்ரத்தையும் அதன் கரையிலுள்ள ஜலப்ரதேசங்களையும் அதில் முளைத்திருக்கின்ற வ்ருக்ஷங்களையும் ஸமுத்ரத்தின் பார்யைகளாகிய நதிகளின் முகபாகங்களையும் பார்த்துக்கொண்டே மஹாமேகம் போன்று ஆகாயத்தைத் தடுப்பதுபோலிருக்கின்ற தன் சரீரத்தையுங் கண்டு மதியிற் சிறந்தவனாகையால் தனக்குள் 'இதுவென்? என் தேஹம் இங்ஙனம் வளர்ந்திருப்பதையும் மஹாவேகத்தையும் ராக்ஷஸர் காண்பார்களாயின் வியப்புற்று இவனெவனோ தெரிந்துகொள்ள வேண்டுமென்று விருப்பமுற்றிருப்பார்களா?' என்று நினைத்துப் பர்வதம்போன்ற தன் பெருஞ்சரீரத்தைக் குறுக்கிக்கொண்டு மோஹத்தைவிட்ட ஆத்மஜ்ஞானிபோல் மீளவும் தனக்கு ஸ்வபாவஸித்தமான வடிவத்தைப் பெற்றனன். இங்ஙனம் பர்வதம் போன்ற அந்த முன்னுருவத்தை மிகவும் குறுக்கிக் கொண்டு த்ரிவிக்ரமாவதாரத்தில் மூன்றடிகளை அளந்து பலியின் பராக்ரமத்தை அடக்கி மீளவும் வாமன ரூபம் பெற்ற விஷ்ணுதேவன்போல் தனக்கு எப்பொழுதுமுள்ள உருவத்தைத் தரித்தனன்.

இங்ஙனம் அவன் அந்தந்த கார்யங்களுக்குத் தகுந்த படி ஸாந்தரங்களான நானாரூபங்களைத் தரிப்பவனும் ஸிம்ஹிகாதி சத்ருக்களுக்கு வெல்லமுடியாதவனுமாகி அக்கரை சேர்ந்து, தான் பின்பு தரித்திருந்த மிகவும் பெரிதான சரீரத்தைப் பார்த்தும் மேல்வரும் கார்யத்தை ஆலோசித்தும் அவற்றிற்குத் தகுந்த நிஜரூபத்தைத் தரித்தனன். பிறகு பெரிய பர்வத சிகரம் போன்ற அம்மஹாநுபாவன் ஆகாயத்தி னின்று தொங்குவதுபோல் நுனி தோற்றப் பெரு கிருக்கின்ற லம்பமென்னும் பேருடைய ஓர் பர்வதத்தில் எல்லாவிடத்திலும் ஸம்ருத்தமாயிருப்பதும் விசித்ர சிகரங்களையுடையதும் (பல ஆச்சர்யங்கள் ஒன்று கூடினாற்போல் விளங்குவதும்) ஆகித் தாழைகளும் கறு விலிகளும் தென்னைமரங்களும் நிறைந்த ஓர் சிகரத்தில் இறங்கினன். அனந்தரம் [1] ஸமுத்ரதீரஞ் சென்று பர்வத ஸ்ரேஷ்டமாகிய த்ரிகூடத்தின் சிகரத்தி லிருக்கிற லங்காபுரத்தைக் கண்டு, தன் தேஹத்தை உதறி, ம்ருகங்களையும் பக்ஷிகளையும் விரட்டிக்கொண்டு அப்பர்வதத்தில் இறங்கினன். தானவர்களும் பன்னகர்களும் நிறைந்து பெருப்பெரிய அலைகள் விளங்கப்பெற்ற ஸமுத்ரத்தை வலிமையினால் தாண்டி அதன் அக்கரையில் இறங்கி, அப்பொழுது அமராவதி போல் விளங்குகிற லங்காபுரத்தைக் கண்டனன்.

ஒன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

1. ஸமுத்ரதீரம்—ஸமுத்திரக்கரை.

### ஹனுமான் ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கையைக் காணுதலும், சந்த்ரோதயமும்.

அந்தரம் மஹாபலனாகிய அந்த ஹனுமான் எப்படிப்பட்டவர்க்கும் தாண்டமுடியாத ஸமுத்ரத்தைத் தாண்டி மனங்குதிரப்பெற்று த்ரிகூட பர்வதத்தின் நுனியில் விளங்குகின்ற லங்காபுரத்தைக் கண்டனன். பிறகு வ்ருக்ஷங்களினின்று கலகலவென்று மேல் உதிர்கின்ற புஷ்பஸமூஹங்களால் சுற்றிலும் சூழப்பட்ட அவ்வீரன் புஷ்பங்களால் செய்யப்பட்ட ஓர் வானரன்போல் புலப்பட்டனன். மேலும் அவ்வீரன் அளவிறந்த பராக்ரமமும் காந்தியும் விளங்கப்பெற்றவனாகையால் நூறுயோஜனைகளை ஒரு மூச்சில் தாண்டியும் பெருமூச்சும் ஆயாஸமும் அற்றிருந்தனன். அவன் தன் மனத்தில் 'பற்பல நூறுயோஜனைகளையும் நான் ஒரு மூச்சில் தாண்டுவேன்; இனி நூறுயோஜனையென்று கணக்கிடக்கூடிய தூரமுள்ள இந்த ஜலராசியைத் தாண்டி இதன் கரைசேருவது எனக்கு எவ்வளவு?' என்று நினைத்தனன். தாண்டத் தகுந்த பராக்ரமசாலிகள் எத்தனைபேர் இருப்பினும் ஸாஹஸப்படாதிருக்கையில், அவர்களெல்லோரிலும் அவனொருவனே மேன்மையுற்றவனாகையால் உத்ஸாஹமுற்று அம்மஹா ஸமுத்ரத்தை அதிவேகமாகத் தாண்டி லங்காபுரியைச் சேர்ந்தனன். இங்ஙனம் அக்கபிகுஞ்ஜரன் கறுத்த பசும்புல் தரைகளையும் கமகமவென்று மணங் கமழ்கின்ற அடவிகளையும் பெருங்கற்கள் நிறைந்தவைகளும் சிறந்த வ்ருக்ஷங்களுடையவைகளுமாகிய பல வனங்களையும் பார்த்துக்கொண்டே அவற்றினிடை வழியாகச் சென்றனன். மேலும் தேஜஸ்வியாகிய ஹனுமான் வ்ருக்ஷங்களால் மறைக்கப்பட்டிருக்கிற பர்வதங்களையும் புஷ்பித்திருக்கிற [1] வனராசிகளையும் கடந்து சென்று அந்த லம்ப

---

1 வனராசி—வனங்களின் வரிசை.

பர்வதத்தில் நின்று அதிலுள்ள வனங்களையும் உத்யானங்களையும் பார்த்துக்கொண்டே த்ரிகூட பர்வத சிகரத்தில் விளங்குகிற லங்காபுரத்தைக் கண்டனன். மேலும், அக்கபிகுஞ்ஜரன் அதில் நிரம்பவும் புஷ்பித்திருக்கின்ற ஸரள வ்ருக்ஷங்களும் கோங்கு மரங்களும் பேரீச்சைகளும் முறளஞ் செடிகளும் எலுமிச்சைகளும் குடமல்லிகைகளும் தாழைகளும் நன் மணமுள்ள ஞாழல்களும் நீர்க்கடம்புகளும் ஏழிலைப்பாலைகளும் வேங்கை மரங்களும் மலையத்திகளும், புஷ்பித்த அலரிகளும், புஷ்பபாரங்கள் உண்டாகப்பெற்றுத் தழைத்திருப்பவைகளும் அங்ஙனம் மொட்டுகள் நிறைந்தவைகளும் கிளி குயில் முதலிய பக்ஷிகள் சூழப்பெற்றவைகளும் காற்றினால் அசைக்கப்பட்ட நுனியுடையவைகளுமான மற்றும் பல வ்ருக்ஷங்களும் ஹம்ஸங்களும் நீர்க்காகங்களும் நிறைந்து தாமரைகளும் நெய்தல்களும் அடர்ந்த நடைவாவிகளும் அழகான பலவகை உத்யானங்களும் எல்லா ருதுக்களிலும் புஷ்பித்துப் பலித்திருக்கிற பலவகை வ்ருக்ஷங்கள் அடர்ந்திருக்கிற நானாவித ஜலாதாரங்களும் (ஏரி மடு முதலியவைகளும்) ராஜபோக்யங்களான ரமணீய உத்யானங்களும் விளங்கக் கண்டனன். மேலும் ஜயத்தை அறிவிக்கிற தேஹகாந்தி வளரப் பெற்ற அவ்வானரவீரன் ராவணன் பரிபாலித்துவருகிற லங்காபுரத்தைக் கிட்டித் தாமரைகளும் நெய்தல்களும் புஷ்பித்து அழகான அகழிகளால் அலங்காரமுற்றதும் ஸீதையைத் திருடிக்கொண்டு வந்தமையால் ராமன் எதிர்த்து வருவானென்னும் பயத்தினால் ராவணனாலும் நாற்புறத்திலும் திரியும் கொடிய வில்லாளிகளாகிய பல ராக்ஷஸர்களாலும் மிகவும் பத்ரமாகப் பாதுகாக்கப்பட்டதும் ஸ்வர்ணமயமான மதிளால் சூழப்பட்டு ரமணீயமாயிருப்பதும் பூமியிலுள்ள நகரங்களில் பெருமையுற்றதும், பளபளவென்று விளக்கமுற்று ரமணீயங்களாயிருக்கையால் சந்த்ரன் ஸூர்யன் முதலிய நவக்ரஹங்கள்போன்று சரத்கால மேகங்களை

நிகர்த்த மாடமாளிகைகளால் விளங்குவதும் இரண்டு பக்கத்திலும் சுண்ணும்படிக்கப்பெற்ற சுவர்களின் காந்தியால் வெளுத்து மின்னுகிற மேடைகள்போல் உயர்ந்து •புலப்படுகிற வீதிகள் சூழப்பெற்றதும் உயர்ந்த பல மெத்தைக் கட்டடங்களடர்ந்ததும் மதிளின் திண்ணைமேல் யுத்தத்தின்பொருட்டான ஓர் வகை மஞ்சங்கள் புல்வுடையதும் பதாகைகளும் த்வஜங்களும் வரிசை வரிசையாக விளங்கப்பெற்றதும் கொடிகள்போன்ற ரேகைகளால் சித்ரஞ் செய்யப் பெற்ற ஸ்வர்ணமயமான அழகிய வெளிவாசற் படிகளுடையதுமாகி ஸ்வர்க்கத்தில் அமராவதியைப் போல் விளங்குகிற அம்மஹா நகரத்தைக் கண்டனன். வெளுத்து ரமணீயங்களான மாளிகைகளோடுகூடி த்ரிகூடபர்வதத்தின் சிகரத்தில் மிகவும் உயர்வுற்றுப் புலப்படுகிற லங்காபுரம் ஆகாயத்தில் பறக்கின்ற ஓர் நகரம்போல் அவ்வானர வீரனுக்குப் புலப்பட்டது. மேலும் ராக்ஷஸர் தலைவன் பரிபாலித்து வருவதும் விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டதும் பர்வதத்தின் நுனியில் இருக்கையால் ஆகாயத்தில் பறக்கிறாப்போ லிருப்பதுமாகிய அந்நகரத்தை ஹனுமான் கண்டனன். கோட்டைச் சுவர்க்காதாரமாக ஏற்படுத்தப்பட்ட திண்ணைகளே இடையின் முன் புறமாகவும் அகன்ற அகழியின் ஜலமே புதிய வஸ்த்ர மாகவும் இருப்புத்தடிகளும் சூலங்களுமே தலை மயிர்களாகவும் உயர்ந்த மாடமாளிகைகளே கர்ண பூஷணங்களாகவும் விளங்கப்பெற்ற ஓர் அழகிய மடந்தைபோல் ப்ரகாசிப்பதும் விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டதாயினும் தனது அழகின் மிகுதியைப் பற்றிப் பார்க்கையில் ஹஸ்தாதிகளால் நிர்மிக்கப் படாமல் ஓர் மஹானுபாவனால் மனத்தினாலேயே நினைத்து நிர்மிக்கப்பட்டதுபோல் தோற்றுவதுமாகிய அந்த லங்காபுரத்தைக் கண்டனன். அவ்வானரன் அப்பட்டணத்து வடக்கு வாசற்படிக்குச் சென்று ‘ஸீதா தேவியை எவ்வண்ணங் காணலாம்? லங்கையில்

எவ்விதம் புகலாம்?' என்று தனக்குள் சிந்திக்கத் தொடங்கினன். இங்ஙனம் வெருத்து மிகவும் உயர்ந் திருக்கையால் கைலாஸ சிகரம்போல் விளங்குவதும் ஆகாயத்தில் உறைகின்ற உயர்ந்த மாளிகைகளால் ஆகாயத்தைப் பிறிக்கொண்டு போவதுபோலிருப்ப தும் ஆகாயத்தில் கிளம்புவதுபோல் புலப்படுவதும் பன்னகர் நிறைந்த போகவதிபோல் பயங்கரமான ராக்ஷஸர்களால் நிரம்பியதும் இப்படி அப்படியென்று எண்ணமுடியாத மஹிமையுடையதும் நன்கு நிர்மிக்கப் பட்டதும் நாற்புறத்திலும் ஸ்பஷ்டமாகப் புலப் படுவதும் முன்பு குபேரனுக்கு இருப்பிடமாயிருந்ததும் சூலம் பட்டிசம் முதலிய ஆயுதங்களைக் கையிலேந்திக் கோபைப்பற்கள் பொருந்திப் பயங்கரர்களான பல ராக்ஷஸ வீரர்களால் பாதுகாக்கப்பட்டுக் கொடிய ஸர்ப்பங்களால் காக்கப்பட்ட குஹைபோல் பயங்கரமா யிருப்பதுமாகிய அந்த லங்காபுரத்தைக் கண்டு, அதை ராக்ஷஸர் பாதுகாக்கும் நிலையைப் பரிசீலித்தும் அதைச் சுற்றித் தாண்டமுடியாமல் ஆழ்ந்த அகழியாயிருக் கின்ற மஹா ஸமுத்ரத்தை ஆலோசித்தும், அதிலிருக் கின்ற ராவணன் மஹா பயங்கரனான சத்ருவாயிருப் பதை விவேகித்துப் பார்த்தும் ஹநுமான் தனக்குள் சிந்தித்தனன் :—' வானரர்கள் ஸமுத்ரம் முதலிய வற்றைக் கடந்து இவ்விடம் வருவதே மஹாகஷ்டம். அப்படி இவ்விடம் வருவார்களாயினும் பயனற்றவர் களே யாவார்கள் இவ்விலங்கை தேவதைகளுக்குங் கூடப் போராடி க்கமுடியாததாகையால் அவர்க்கு இங்கு விளையும் ப்ரயோஜனம் யாது? மேலும் இவ்விலங்கை ம் மேடுள்ளமாயிருக்கையால் எப்படிப்பட்ட க்கும் புகக்கூடாதது. இதைப் பாதுகாப்பவனோ மூன்று லோகங்களையும் அழப் படுத்துந் தன்மையனாகிய ராவணன். இப்படிப்பட்ட இவ்விலங்கையில் புகுந்து எதுவுஞ் செய்ய முடியார்க ளென்பது அப்படி யிருக்கட்டும்; முன்பு ஸப்த ஸாலங்களையும் (மராமரங்களேழையும்) பர்வதத்தையும்

பூமியையும் பிளந்து ப்ரசண்ட புஜ பராக்ரமனென்று பேர்பெற்றிருக்கிற அந்த ரகுவீரனும் இவ்விடம் வந்து என்ன செய்ய முடியும்? ராக்ஷஸர்கள் அஸுரஸ்வபாவர்களாகையால் நல்வார்த்தை சொல்லி வசப்படுத்த முடியாது. மிகுந்த ஸம்பத்துடையவ ராகையால் தானத்தினால் வசப்படுத்த அவகாசமில்லை. மஹா பலங்கொண்டு கர்விஷ்டராகையால் மித்ர பேதத்தினாலும் இவர்களைக் கைவசஞ் செய்யலாகாது. புத்தியும் பராக்ரமும் மிகுந்திருக்கப் பெற்றவராகை யால் யுத்தத்திற்கு இங்கு ப்ரஸக்தியே இல்லை. வானரர்களெல்லோரிலும் மஹனீயர்களாகிய வாலி குமாரன் அங்கதன் நீலன் சிறந்த மதியுடையவனும் வானரர் தலைவனுமாகிய ஸுக்ரீவன் நான் ஆகிய இந்நால்வர்க்கு மாத்ரமே ஸமுத்ரத்தைத் தாண்டி லங்காபுரத்தில் புகமுடியுமேயன்றி மற்றவர்க்கு முடியாது. நல்லது, இப்பொழுது இவ்விசாரங்களால் பயன் யாது? 1 ஸீதாதேவி பிழைத்திருப்பதும் இல்லாததும் எனக்குத் தெரியவில்லை. அவள் பிழைத்திருப்பது எனக்கு எப்பொழுது தெரியுமோ, அப்பொழுது அவளைக் கண்ணாரக் கண்டு அனந்தரம் செய்யவேண்டிய கார்யங்களைப்பற்றி ஆலோசித்துக் கொள்ளலாம்' என்று சிந்தித்தனன். இங்ஙனம்

---

1. இங்கு 'யாவஜ்ஜாநாமி வைதேஹீம் யதி ஜீவதி வா நவா| தத்ரைவ சிந்தயிஷ்யாமி த்ருஷ்ட்வா தாம் ஜநகாத்மஜாம்' என்று மூலம். ஸீதை பிழைத்திருக்கிறாளென்று நிஜமாக நான் அறிவேன். பிழைத்திருப்பாளாயின் அவளைப் பார்த்து அப்பொழுது செய்யவேண்டிய கார்யத்தை ஆலோசித்துக் கொள்ளுகிறேன். அல்லது ஸீதை பிழைத்திருக்கிறாளா இல்லையா என்று எப்படியாயினும் தெரிந்துகொள்ளப் போகிறேன். ஜீவித்திருப்பாளாயின், அவளைப் பார்த்து அப்பொழுது மேல் கார்யத்தை ஆலோசித்துக்கொள்ளுகிறேன். இப்பொழுது 'அங்ஙனம் சிந்திப்பானேன்? என்றும் பொருள் கூறுவர்.

சிந்தித்துப்பின்பு அக்கபிசேகரன் அந்தப்பர்வத சிகரத்தில் நின்று ராமனது நன்மையை இடைவிடாமல் விரும்பிக்கொண்டு ஸீதையைக் கண்டுபிடிக்குமுபாயத்தைப்பற்றி 'பலிஷ்டர்களான கொடிய ராக்ஷஸர்களால் பத்ரமாக ரக்ஷிக்கப்பட்டிருக்கின்ற இவ்விலங்காபுரத்தில் இந்த உருவத்துடன் புகுவது எனக்கு ஸாத்யமன்று. மேலும் இவ்வரக்கர்கள் உக்ர தேஜஸ்விகளும் மஹா பலபராக்ரமர்களுமா யிருக்கின்றனர். நான் ஸீதையைத் தேடவேண்டுமாயின், இவர்களை வஞ்சியாமல் முடியாது. பெரிய உருவத்துடன் புகுவேனாயின், அதிவிஸ்தார முடைய லங்கை முழுமையும் நனகு திரிந்து பார்க்க முடியாது. ஆகையால் என்னுடைய இந்தப் பெருங் கார்யத்தை நிறைவேற்றும் பொருட்டு உற்றுப் பார்க்கில் புலப்படுவதும் உதாஸீனமாகப் பார்க்கில் புலப்படாததுமான ரீதி அமைந்த உருவத்துடன் ராத்ரி ஸமயத்தில் இவ்விலங்கையில் புகவேண்டும்' என்று ஆலோசித்தனன். இங்ஙனம் அந்த ஹனுமான் தேவாஸுரர்களுக்கும் எதிரிடமுடியாத அந்தச் சிறந்த நகரமாகிய லங்கையைக் கண்டு அடிக்கடி பெருமூச்செறிந்து கொண்டு ஸீதையைத் தேடும் ப்ரகாரத்தைப்பற்றி மேல் வருமாறு சிந்தித்தனன். 'நான், பெருந்துர்ப்புத்தியும் ராக்ஷஸர்கள் அனைவர்க்கும் ப்ரபுவுமாகிய ராவணனுக்குத் தெரியாதிருக்கும்படி எந்த உபாயஞ் செய்து ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைக் காண்பேன்? எல்லாவற்றையும் அறிந்த மதியின் திறமையுடைய ஸ்ரீராமபிரானது கார்யம் எவ்வாறு செய்யில் கெடுதி அடையாதிருக்கும்? ஸீதை யொருத்தியை மாத்ரம் ஏகாந்தத்தில் நானொருவனேயாயிருந்து பார்க்கவேண்டும். இது எப்படி நேரப்போகின்றது? எதையும் பலவாறு ஆலோசித்துச் செய்வது மிகவும் நல்லது. மேலும் நல்ல உபாயங்களை உபயோகப்படுத்துவதால் ஏறக்குறைய நிறைவேறின கார்யங்களும் விவேக சூன்யர்களான தூதர்களிடம் சேருமாயின்,

அவை தேசகால விரோதம் உண்டாகப்பெற்று ஸூர்யோதயத்தில் அந்தகாரம்போல் உடனே நசித்துப்போம். கார்யாகார்யங்களை விவேகித்து அரசனும் மந்த்ரிகளுங்கூடி நிர்ணயித்த உபாயங்களுங் கூட அப்படிப்பட்ட தூதர்கள் வசம் சேருமாயின் நிறைவேறுமல் அனர்த்தத்தை விளைவிப்பதோடு அரசனையுங் கூடப் புத்தி ஹீனனென்று தெரிவிக்கும். ஏனென்றால்—தம்மைப் பண்டிதர்களாக நினைத்துக் கொண்டிருக்கிற மூர்க்கர்களாகிய தூதர்கள் கார்யங்களெல்லாவற்றையும் கெடுப்பது வெளிச்சமேயல்லவா? இப்பொழுது இந்த லங்கையில் ப்ரவேசிப்பது இந்தப் பகல் வேளையிலா? அல்லது ராத்ரிவேளையிலா? புகுவது எப்படி? இந்தப் பெரிய உருவத்துடனா? அல்லது சிறிய உருவத்துடனா? எவ்வாறு செய்தால் ராமனது கார்யம் கெடாதிருக்கும்? எப்படி நடத்தினால் எனக்கு 'விவேக சூன்யனென்னும் பேர் உண்டாகாதிருக்கும்? தாண்டக்கூடாத இந்த ஜலராசியைத் தாண்டினது எவ்வாறு செய்யின் வீணாகாதிருக்கும்? என்னை ராக்ஷஸர் காண்பார்களாயின், ராவணனுக்குக் கெடுதியை விரும்பும் பேரறிஞனாகிய ராமனது கார்யங்களெல்லாம் வீணாய்ப் போய்விடும். ராக்ஷஸர்களுக்குத் தெரியாமல் இங்கு எவ்விடத்திலிருப்பதும் ஸாத்யமன்று. ஆயிரம் படச்சொல்லி யென்? ராக்ஷஸ உருவத்தையே தரித்திருப்பினும் அவர்க்குத் தெரியாதிருப்பது ஸாத்யமன்று. இனி மற்றொரு உருவத்தைத் தரித்திருப்பின் சொல்லவேண்டுமோ? பலிஷ்டர்களாகிய ராக்ஷஸர்களுக்குத் தெரியாதது எதுவுமே இல்லை ஆகையால் வாயுவுங்கூட (உருவமற்றவனாயினும்) இந்த ராக்ஷஸர்கள் அறியாதிருக்கும்படியாவது அவர்களது அனுமதியில்லாமலாவது லங்கையில் திரியமாட்டானென்று எனக்குத் தோற்றுகின்றது. நான் இங்கு ஸஹஜமாகிய என் பெரிய உருவத்துடனிருப்பேனாயின் எனக்குக் கெடுதி நேரிடுவது ஸித்தம். எனது ஸ்வாமியாகிய ராமனது கார்யமும் கெட்டுப்போம். ஆகையால்

என்னுடைய இந்த ஸொந்த ரூபத்தையே மிகவும் சுருக்கிக்கொண்டு ராமகார்யத்தை நிறைவேற்றும் பொருட்டு ராத்ரிவேளையில் லங்காபுரியில் ப்ரவேசிக்கின்றனன். எப்படிப்பட்டவர்க்கும் புகக்கூடாத ராவண பட்டிணத்தில் ராத்ரியில் புகுந்து அதிலுள்ள க்ருஹங்களையெல்லாம் முழுவதும் தேடி விதேஹராஜன் புதல்வியாகிய ஸீதையைக் காண்கிறேன்' என்று ஆலோசித்தனன். வீரனாகிய அந்த ஹநுமான் இங்ஙனம் சிந்தித்து, ஸீதையைப் பார்க்கும் குதூஹலத்தினால் ஸூர்யன் எப்பொழுது அஸ்தமிக்கப் போகிறானென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தனன். அனந்தரம் ஹநுமான் ஸூர்யன் அஸ்தமிக்கக்கண்டு ராத்ரி ஸமயத்தில் பூனையவ்வளவாகச் சரீரத்தைக் குறுக்கிக்கொண்டு ஆச்சர்யமாகப் புலப்பட்டனன். இங்ஙனம் ஹநுமான் பராக்ரமசாலியாகையால் ப்ரதோஷகாலத்தில் வேகமாகக் கிளம்பி அதி ஸுந்தரமாகி நன்கு ஏற்படுத்தப்பட்ட ராஜமார்க்கங்களோடு விளங்குகிற லங்காபுரியில் ப்ரவேசிக்கத் தொடங்கினன். அந்நகரம் எல்லாவிடத்திலும் மேடைகள் வரிசைவரிசையாக விளங்கப்பெற்றுப் பொன் வெள்ளி ஸ்தம்பங்களாலும் பொற்சாளரங்களாலும் கந்தர்வ நகரம் போன்று ஏழெட்டடுக்குள்ள மெத்தைகளும் ஸ்படிக ரத்னங்களாலும் ஸ்வர்ணங்களாலும் விளக்கமுற்ற ப்ரதேசங்களும் அமைந்து ரமணீயமாயிருந்தது. மேலும், இதிலுள்ள ராக்ஷஸ மந்திரங்கள் ஸ்படிக ரத்னங்கள் இழைத்து ஸ்வர்ணத்தினால் அலங்காரஞ்செய்து வைடூர்ய மணிகளால் விசித்ரஞ் செய்யப்பெற்று முத்துச்சரங்களால் அலங்காரமுற்ற தரைகள் பொருந்திப் ப்ரகாசித்தன. ஸ்வர்ணமயங்களும் வியப்பை விளைவிப்பவைகளுமாகிய ராக்ஷஸர்களின் வெளிவாசற்படிகளும் பற்பல அலங்காரங்கள் செய்யப்பெற்ற லங்காபுரத்தை நாற்புறத்திலும் விளங்கச் செய்தன. இங்ஙனம் ஸீதையைக் காண விருப்பமுற்றிருக்கிற அவ்வானர மஹாவீரன்

இப்படியப்படியென்று சிந்திக்கமுடியாமல் அற்புத உருவத்துடன் புலப்படுவதும் வெளுத்து உயர்ந்திருக்கிற எழுடுக்கு மெத்தைகள் வரிசை வரிசையாக விளங்கப்பெற்றதும் மேலான பொற்சாளரங்களும் வெளிவாசற்படிகளும் அமைந்து மிகவும் புகழ்பெற்று ராவண புஜங்களால் பரிபாலிக்கப்பட்டு பயங்கரமான பலமுடையராக்ஷஸர்களால் சூழப்பட்டதுமாகிய லங்காபுரத்தைக் கண்டு எவ்வண்ணம் நுழையலாம் என்று மனவருத்தத்தையும் அதிலுள்ள ஆச்சர்யங்களைக் கண்டு ஸந்தோஷத்தையும் பெற்றனன். சந்த்ரன் தானுங்கூட அக்கபிகுஞ்ஜரனுக்கு ஸஹாயஞ் செய்பவன்போல் நக்ஷத்ரங்களின் இடையில் நன்கு விளக்கமுற்று நிறைந்த நிலவினால் ஜகத்து முழுமையும் நிரப்பி அனேகமாயிரங் கிரணங்களோடு உதயமாயினன். அனந்தரம் வானரோத்தமனாகிய அந்த ஹனுமான் சங்குபோல் விளக்கமுற்றுப் பால்போலும் தாமரைத் தண்டுபோலும் வெளுத்த நிறமுடையவனாகி மேற்கிளம்பிப் பொய்கையில் ஸஞ்சரிக்கின்ற ஓர் ஹம்ஸப் பறவைபோல் மிகவும் ப்ரகாசிக்கின்ற சந்த்ரனைக் கண்டனன். இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஹனுமான் லங்காதி தேவதையை நிக்ரஹித்து லங்கையில் ப்ரவேசித்தல்.

அனந்தரம் ஸமுத்ரத்தை அனாயாஸமாகத் தாண்டுவது முதலிய மேலான கார்யங்களால் புகழ் பெற்றிருப்பவனும் மஹாமதியுடையவனும் கபிகுலதிலகனுமாகிய அந்த ஹனுமான் லம்பமென்னும் பேருடைய அந்தப்பர்வதத்தில் வனைந்திருக்கையால் தொங்குகின்ற மேகம்போல் புலப்படுகின்ற ஓர் சிகரத்தில் நின்று புத்தியிற் சிறந்தவனாகையால்

அப்பொழுது செய்யவேண்டும் கார்யத்தை ஆலோ
சித்துக்கொண்டு லங்கையில் புகுதற்குவேண்டிய
லங்கன சக்தியை (தாண்டும் ஸாமர்த்யத்தை) ஏற்றுக்
கொண்டு, அழகிய அரண்யங்களும் ஜலப்ரவாஹங்க
ளும் ஸம்ருத்தமா யிருக்கப்பெற்று ராவணனால்
பாதுகாக்கப்பட்டு விளங்குகிற லங்காபுரத்தில், ராத்ரி
யில் ப்ரவேசிக்கத் தொடங்கினன். அந்நகரம் சரத்கால
மேகங்கள்போல் வெளுத்து ரமணீயங்களான
[1] மந்திரங்கள் பல விளங்கவும் ஜலங்களின் கலகல
சப்தம் கிளம்பி மஹா ஸமுத்ரகோஷம் போன்றிருக்க
வும் ஸமுத்ரக்காற்று குளிர்ந்து வீசவும் பெற்று
மிகவும் அழகாயிருந்தது. அங்கு மிகுந்த சீர பல
புஷ்டிகளமைந்த பல ஸைன்யங்களின் ஸிம்ஹநாதங்கள்
விளக்கமுற்றிருந்தன. அது குபேரனது பட்டணமாகிய
அடபாவதிபோன்று வெளிவாசற்படிகளில் அழகிய
நிர்யூஹமென்னுங் கட்டடங்களால் விளக்கமுற்று
ஸர்ப்பங்கள் நிரம்பப்பெற்று ஸம்ரக்ஷிதமாயிருக்கிற
போகவதியைப்போல் வீரர்களான ராக்ஷஸர்களின்
ஸஞ்சாரத்தால் நன்கு ரக்ஷிக்கப்பட்டு அழகுடன்
பிரகாசித்துக்கொண்டிருந்தது மேலும் அது மிகவும்
உயர்ந்த மந்திரங்கள் மூலமாய் மேகமண்டலத்தளவு
பரந்திருக்கையில் மின்னல்களோடு கூடின மேகங்கள்
நிரம்பவும் படியப்பெற்று நக்ஷத்ர மார்க்கத்தில் விளக்க
முற்று ஆங்காங்கு [2] மந்தமாருதம் வீசப்பெற்று
அமராவதிபோல் விளக்கமுற்றிருந்தது. மிகவும்
பெரியதும் பொன்னாற் செய்யப்பட்டதுமாகிய மதிள்
சுற்றிலும் விளங்கப்பெற்றுச் சிறு சதங்கைகள் பலவும்
கணகணவென்று ஒலிக்கப்பெற்ற பதாகைகளால்
அலங்காரமுற்ற அந்த லங்காபுரத்தைநாற்புறத்திலும்
உற்றுப் பார்த்து மதிளுக்கு அருகிற் சென்று
அவ்வானரன் மனத்தில் மிக வியப்புற்றனன்.
மேலும் அது ஸ்வர்ணமயமான வாசற்படிகளும்

---

1. மந்திரம்-வீடு. 2. மந்தமாருதம்-இளங்காற்று.

வைடூர்ய மணிகள் இழைக்கப்பெற்ற திண்ணைகளும் ரத்னங்கள் படுத்த பூமிகளும் உருக்கின ஸ்வர்ணத்தி னுல் செய்யப்பட்ட நிர்யூஹங்களும் (சாரமணைகளும்) வெள்ளியாற் செய்யப்பட்டு நிர்மலங்களாகி வெளுத்து விளங்குகின்ற கட்டடங்களும் வைடூர்யமணிகளால் செய்யப்பட்ட ஸோபானங்களும் (படிகளும்) ஸ்படிக ரத்னப் பொடிகளால் இயற்றப்பட்ட முற்றத்து மணற்க ளும் ஆகாயத்தில் கிளம்பினாற்போல் உயர்ந்து ரமணீயங்களான நாற்புறத்துத் தாழ்வாரங்களும் அமைந்து வஜ்ரம் ஸ்படிகம் முத்து முதலிய ரத்னங்க ளால் அலங்கரிக்கப்பட்டுக் க்ரௌஞ்சங்களும் மயில்க ளும் கூவப்பெற்று ராஜ ஹம்ஸங்களோடுகூடி விளங்கு கின்ற பொன்வாசற்படிகளுடன் ப்ரகாசித்துக்கொண் டிருந்தது. மேலும் வாத்ய த்வனிகளாலும் அங்கும் இங்கும் திரிகின்ற ஸ்த்ரீ புருஷர்களின் ஆபரண த்வனிகளாலும் எங்கும் கோஷம் உண்டாகப்பெற்று அமராவதிபோல் அதி ரமணீயமாகி மிகவும் உயர்ந் திருக்கின்ற மாளிகைகளால் மேல்கிளம்பிப்போவதுபோல் புலப்படுகின்ற அந்த லங்காபுரத்தைக் கண்டு அவன் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனன். இங்ஙனம் மஹாவீரனுகிய அவ்வானர ச்ரேஷ்டன் அழகியதும் மங்களகரமாயிருப்பதும் நிகரற்றதும் பல ஸம்ருத்திக ளுடையதும் ராவணனுல் பரிபாலனஞ் செய்யப்பட்டது மாகி விளங்குகிற அச்சிறந்த நகரத்தைக் கண்டு தனக்குள் 'இந்நகரம் ஆயுதங்களை ஏந்தி முழுவதும் திரிகின்ற ராவண பலங்களால் ரக்ஷிக்கப்பட்டிருக் கின்றது. ஆகையால் மற்றெவனும் இதைப் பலத்தி னுல் எதிரிட வல்லனல்லன். ஒருகால் குமுதனுவது மஹாகபியாகிய ஸுஷேணனுவது, அல்லது மைந்த த்விவிதர்களாவது மஹா பராக்ரமசாலிகளாகையால், ப்ரவேசிக்க முடியாதென்று பேர்பெற்ற இந்நகரத்தை ஜயிப்பினும் ஜயிக்கக்கூடும். மேலும், ஸூர்யகுமார னுகிய ஸுக்ரீவனும் குசபர்வனும் ருக்ஷனும் கேது மாலனும் நானும் கெட்டியாக இதை ஸாதிக்கமுடியும்'

என்று சிந்தித்தனன். இங்ஙனம் சிந்தித்து அக்கபி வரன் கீழ்ச்சொன்ன ஸுக்ரீவாதி வானரர்களுக்கும் தனக்கும் அந்த லங்கையை ஜயிக்கும்படியான ஸாமர்த்யம் இருக்கையில் 'மூன்று லோகங்களையும் வெல்ல வல்லவராகிய ராமலக்ஷ்மணர்களுக்கு அதை வெல்லுவது எவ்வளவு?' என்று ராமலக்ஷ்மணர்களின் பராக்ரமங்களை நினைத்து அவர்கள் அநாயாஸமாகவே லங்காபுரத்தை ஸாதிக்க வல்லரென்று சிந்தித்து ஸந்தோஷமுற்றனன். மேலும் சுற்றிலும் மேற்கிளம் பின பல ரத்னகாந்திகளே மேல் வஸ்த்ரமாகவும் ஸாமக்ரிகள் வைக்கிற கொட்டாரங்களே கர்ணாப ரணங்களாகவும் யந்த்ரசாலைகளே பருத்த கொங்கைக ளாகவும் விளங்கப்பெற்று, யௌவனம் நிறைந்து ஆபரணங்களை அணிந்து ரமணீயமான ஓர் பெண்மணி போல் விளக்கமுற்று, மணிகாந்திகள் தானென்று நிர்மலங்களாகி விளங்குகின்ற பெரிய மாளிகைகளால் அந்தகாரம் தொலையப்பெற்ற அந்த ராக்ஷஸேந்த்ரனது நகரத்தை அவ்வானர வீரன் கண்டனன். அனந்தரம் அங்ஙனம் நுழைகின்ற மஹாபலனாகிய அவ்வானர ஸிம்ஹத்தை அந்த லங்காபுரி நிஜரூபத்துடன் கண்டது. அங்ஙனம் ராவணன் பரிபாலனஞ் செய்கின்ற அந்த லங்காபுரி அக்கபிவரனைப் பார்த்து விகாரமான முகமும் கண்களும் உடைய ஸ்வரூபத்துடன் அவ னிருக்குமிடத்தில் கிளம்பி நின்று அவ்வானரனுக்கு முன்னே புலப்பட்டுப் பெருங் கோஷமிட்டுக்கொண்டு அவனைப் பார்த்து 'ஓ வானரா! நீ யார்? எந்தக் கார்யத்தை உத்தேசித்து இவ்விடம் வந்தனை? உன் ப்ராணன்கள் என் கையில் அகப்படாதிருக்கும் பொழுதே உன் ஸங்கதியை உள்ளபடி உரைப்பாயாக. ஓ வானரா! நாற்புறங்களிலும் ராவணபலங்கள் சூழ்ந்து ரக்ஷித்துக்கொண்டிருக்கிற இந்த லங்கையில் புக உனக்கு முடியாது' என்றனள். அங்ஙனஞ் சொல்லிக் கொண்டு தன்னெதிரில் நிற்கின்ற அந்த லங்கையைக் கண்டு அவ்வீரன் 'நீ என்னை வினவினதெல்லாம்

உள்ளபடி சொல்லுகிறேன்; ஆகட்டும்; முன்பு உன் வ்ருத்தாந்தத்தை அறிய விரும்புகின்றனன். விரூபங்களான கண்களையுடைய நீ யாவள்? எதுக்காக இந்தப் பட்டணத்து வாசற்படியில் நின்றிருக்கின்றனை? பயங்கரமாக என்னை மடக்கி விரட்டுகின்றனை யேன்?' என்று வினவினன். இங்ஙனம் ஹநுமான் வினவும் வார்த்தைகளைக் காமரூபிணியான அவ்விலங்கை செவியுற்றுச் சினந்து அவனை நோக்கிப் பருஷமாகப் பேசிற்று:—'ராக்ஷஸ குலாதிபதியும் மஹானுபாவனுமாகிய ராவணனது கட்டளையின்படி நடக்கும் வேலைக்காரி நான். என்னை எதிர்க்க எவர்க்கும் ஸாத்யமன்று. நான் இந்நகரத்தைப் பரிபாலனஞ்செய்பவள். என்னைத் தடுத்து இப்புரத்தில் புகுவது உனக்கு ஸாத்யமன்று. இப்பொழுது நீ என்னால் அடியுண்டு ப்ராணன்களால் துறக்கப்பட்டுப் பெரியநித்திரையைப் பெறப்போகின்றனை. ஓ வானரனே! நான் இந்த லங்கா நகரமே. நானே நாற்புறத்திலும் இந்நகரத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கின்றனன். இதுவே என் வ்ருத்தாந்தம். உனக்குச் சொல்லினன். இனி உன் வ்ருத்தாந்தத்தைச் சொல்வாயாக' என்றனள். இங்ஙனம் லங்கை மொழிந்த வார்த்தைகளைக் கேட்டு வாயுகுமாரனும் வானரச்ரேஷ்டனுமாகிய அவ்வீரன் அந்த ராக்ஷஸியை அடக்குவதற்கு ப்ரயத்னமுடையவனாகி ஓர் பர்வதம் போல் நிலையுற்று நின்றனன். அதிவிகாரமான பெண்ணுருவத்துடன் புலப்படுகின்ற அந்த லங்கையைக் கண்டு பலிஷ்டனும் புத்தியிற் சிறந்தவனுமாகிய அவ்வானரன் 'ஓ லங்கே! உப்பரிகைகளும் கோட்டைகளும் தோரண வாசற்படிகளும் அமைந்து ரமணீயமான இந்த லங்காபுரத்தைப் பார்க்கவேண்டுமென்று இவ்விடம் வந்தனன். எனக்கு லங்கையைப் பார்க்க வேண்டுமென்று மிகவும் குதூஹலமாயிருக்கின்றது. இவ்விலங்கையிலுள்ள வனங்களையும் உத்யானங்களையும் சூன்யங்களான அரண்யங்களையும் நாற்புறத்திலுமுள்ள பெரிய மாளிகையையும் பார்க்கிறதற்காகவே



2025. ஹநுமான் லங்காதிதேவதையை வெல்லுதல்

நான் வந்தேன்' என்றனன். காமரூபிணியாகிய அவ்விலங்கை அந்தவார்த்தையைக்கேட்டு மீளவும்கொடிய எழுத்துக்களுடன் 'ஓ புத்தியில்லாத வானரோத்தமனே! என்னை வெல்லாமல் ராக்ஷஸ ப்ரபுவாகிய ராவணன் பரிபாலனஞ் செய்துவருகின்ற இந்நகரத்தை இப்பொழுது உனக்குப் பார்க்க முடியாது' என்றனள். அனந்தரம் அக்கபிவரன் அந்த ராக்ஷஸியை நோக்கி 'நல்லியற்கையுடையவளே! லங்கே! நான் இந்த லங்கா பட்டணத்தை முழுவதும் பார்த்துவிட்டுத் திரும்பி வந்தவழியே போகின்றேன். இதுவன்றி மற்றொன்றுஞ் செய்யேன்' என்றனன். அதைக் கேட்ட அவ்விலங்கை பயங்கரமாக உரக்கக் கூச்சலிட்டு வேகத்துடன் அவ்வானரனை உள்ளங்கையினால் கெட்டியாக அறைந்தனள். அப்பால் அந்த லங்கையால் பயங்கரமாக அடிக்கப்பட்ட அவ்வானரவீரன் உரக்கக் கூச்சலிட்டனன். அப்பால் அந்த ஹனுமான் பலத்துடன் இடக்கை விரல்களை மடக்கிக்கொண்டு கோபாவேசத்துடன் அம்முஷ்டியினால் அவ்விலங்கையைப் புடைத்தனன். ஆயினும் அவ்வானரன் அவ்விலங்கையை ஸ்திரீயென்று நினைந்திருந்தமையால் அதிகமாகக் கோபத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அவளும் அம்முஷ்டியடியால் அங்கங்களெல்லாம் விலவிலக்கப்பெற்று முகமும் கண்களும் விகாரமாகிப் புலப்படப்பெற்றுத் திடீலென்று தரையில் வீழ்ந்தனள். அனந்தரம் அந்த ஹனுமான் தன் அடியைப் பொறுக்கமுடியாமல் தரையில் வீழ்ந்திருக்கிற அவ்விலங்கையைக் கண்டு ப்ராஜ்ஞனுகையால் 'இவள் பெண்பிள்ளை; இவளைக் கொல்வது யுக்தமன்று' என்றும், மஹா தேஜஸ்வியாகையால் 'இவளைக்கொல்வது வீரதர்மமன்று' என்றும் நினைந்து அவள்மீது கருணை கூர்ந்தவனாயினன். அனந்தரம் அவ்விலங்கை மிகவும் பயந்து கர்வத்தைத் துறந்து எழுத்துக்கள் தழுதழுத்திருக்குமாறு அந்த ஹனுமானை நோக்கி விநயத்துடன் மொழிந்தனள்:—'ஓ கபிஶ்ரேஷ்டனே! நீ மிகுந்த

புஜபலமுடையவன்; நான் உன் பராக்ரமத்திற்குப் போந்தவளல்லேன்; அருள்புரிவாயாக. நீ வானரர்களெல்லோரிலும் மேலானவன். நான் ராக்ஷஸ ஸ்த்ரீகளில் அதமையாயிருப்பவள். என்னைப் பாதுகாப்பாயாக. மேலும் நீ நல்லியற்கை யுடையவன்; தைர்யமும் பலமும் மிகுந்திருக்கப்பெற்றவர்கள் ஸ்த்ரீகளைக் கொல்லலாகாதென்னும் ஶாஸ்த்ர நியமத்தைத் தவறாமல் அதில் நிலைநிற்பார்களல்லவா? ஆகையால் என்னைக் கொல்லாதிருப்பாயாக. இப்பொழுது பட்டணரூபமாகப் புலப்படுகின்ற இவ்விலங்கையே நான். நீ மஹாவீரன்; மிகுந்த பலமுடையவன். ஆகையால் என்னைப் ப்ராக்ரமத்தினால் வென்றனை. வானரர் தலைவனே! எனக்கு முன்னம் ப்ரஹ்மதேவன் வரங்கொடுத்த விதத்தை உண்மையாக உனக்கு விண்ணப்பஞ்செய்கிறேன். அது யதார்த்தமே; ஆகையால் அதைக் கேட்பாயாக. 'எப்பொழுது வானரனொருவன் வந்து உன்னைப் பராக்ரமத்தினால்வென்று வசப்படுத்துவனோ, அப்பொழுது ராக்ஷஸர்களுக்குப் பயம் வந்ததென்று நீ தெரிந்துகொள்வாய்' என்று ப்ரஹ்மதேவன் எனக்குச் சொல்லினன். நல்லியற்கையுடையவனே! நீ வந்தமையால் எனக்கு ப்ரஹ்மதேவன் ஸங்கேதஞ்செய்த அக்காலம் இப்பொழுது ப்ராப்தமாயிற்று. அது அந்த ப்ரஹ்மதேவனே ஏற்படுத்தினதாகையால் யதார்த்தமேயாகும். அதற்கு மாறுபாடு நேராது. ஸீதாதேவியைத் திருடிக்கொண்டு வந்த காரணத்தினால் துர்ப்புத்தியும் ராக்ஷஸ ப்ரபுவுமாகிய ராவணனுக்கும் ராக்ஷஸர்களனைவர்க்கும் கெடுதி ஸமீபித்து விட்டது. ஆகையால் ராவணன் பாதுகாத்து வருகின்ற இவ்விலங்கையில் இஷ்டப்படி புகுந்து இங்கு நீ செய்ய விரும்பின கார்யங்களை யெல்லாம் முடித்துக் கொள்வாயாக. கபீந்த்ரனே! இப்பொழுது பார்க்க அழகாயிருப்பினும் ராவணன் தன் இருபது புஜங்களால் நன்கு பரிபாலித்து வரினும் நந்திகேஶ்வரன் முதலியவர்களுடைய சாபத்தினால் பாழுடைய ஸித்தமா

யிருக்கிற இவ்விலங்காபுரத்துள் நீ இஷ்டப்படி நுழைந்து யாதொரு தடையுமின்றி ஸுகமாக வேண்டிய இடங்களுக்குச் சென்று பதிவ்ரதாமணியாகிய ஜனகராஜன் புதல்வியைத் தேடுவாயாக' என்றனள். மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் மதிள் சுவரைத் தாண்டி லங்கையுள் புகுதலும், ராக்ஷஸர்களின் உப்பரிகைகளையும் ராவணனது மூலபலத்தையும் காணுதலும்.

அனந்தரம் அந்த ஹனுமான் நினைந்தபடி வடிவங்கொள்ள வல்லவனும் பட்டணங்களிற் சிறந்ததுவுமாகிய லங்கையைப் பராக்ரமத்தினால் ஜயித்து மிக்க ஒளியுடையவனும் மஹாபாஹுவுமாகையால் அதன் [1] கோட்டையுள் வாசற்படி வழியாக நுழையாமல் அதன் சுவர்மேலேறிக் கிளம்பி லங்கையில் ப்ரவேசிக்கமுயன்று கபிராஜனாகிய ஸுக்ரீவனுக்கு மேன்மையைச் செய்ய விரும்பி ராவணனுக்குக் கெடுதியைச்செய்ய நினைத்தவனாகையால் முதல் முதலில் [2] தன் இடக்காலைச் சத்ருக்க

1. 'ஸ்ராமம் வா நகரம் வாபி பத்தநம் வா பரஸ்ய ஹி| விசேஷாத் ஸமயே ஸௌம்ய நத்வாரேண விசேந்ருப' (ராஜனே! பகைவனுடைய க்ராமத்தையாவது நகரத்தையாவது பட்டணத்தையாவது த்வாரத்தின் வழியாய் ப்ரவேசிக்கலாகாது. விசேஷித்து, அவற்றை ஜயிக்க விரும்பும் ஸமயத்தில் அங்ஙனங் கூடாது) என்று சாஸ்த்ரஞ் சொல்லுகிறதாகையால் அந்த நியமத்தைப்பற்றி ஹனுமான் வாசற்படி வழியாக இலங்கையில் ப்ரவேசிக்கவில்லையென்று தெரிகிறது.

2. 'ப்ரயாணகாலேச க்ருஹப்ரவேசே விவாஹகாலேऽபிச தக்ஷிணாங்க்ரிம் | க்ருத்வாऽக்ரதஸ் ஶத்ருபுரப்ரவேசே வாமம் நிதத்யாத்புரதோ ந்ருபால' (ப்ரயாணகாலத்திலும் க்ருஹ

ளின் [1] சிரஸில் வைத்தனன். இங்ஙனம் அம்மாருத குமாரன் தைர்ய லக்ஷ்மியுடன் ராத்ரி ஸமயத்தில் ப்ரவேசித்து முத்துக்களும் புஷ்பங்களும் தூவப் பெற்று ரமணீயமாயிருக்கின்ற ராஜமார்க்கத்தில் புகுந்து மிகவும் அழகாயிருக்கின்ற அந்த லங்காபுரம் முழுவதும் திரியத் தொடங்கினன். அந்நகரத்தில் நிருத்த கீத வாத்ய த்வனிகளும் பயங்கரமான அட்டஹாஸங்களும் விளக்கமுற்றிருந்தன. மேலும், அந்நகரம் ஐராவதம்போல் வெளுத்து விளங்குபவைகளும் ஐராவதத்தின் உருவம்போன்ற கட்டடங்கள் அமைந்தவைகளும் வரிசை வரிசையாக வஜ்ரங்கள் இழைக்கப்பெற்று அழகாயிருப்பவைகளுமான சிறந்த மாளிகைகளோடுகூடி மேகங்கள் நிறைந்த ஆகாயம் போன்று அதிரமணீயமாக ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அப்பொழுது மங்களகாங்களான ராக்ஷஸ மந்திரங்களாலும் மேகங்கள்போல் விளக்கமுற்று விசித்ரங்களாகிப் பத்மமென்றும் ஸ்வஸ்திகமென்றும் வர்த்தமானமென்றும் சொல்லப்படுகிற பலவகை கட்டடங்களால் கட்டப்பட்ட ராஜக்ருஹங்களாலும் முழுவதும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருக்கிற அந்நகரம் விளக்கமுற்றிருந்தது. அங்ஙனம் கபிராஜனுக்கு ஹிதஞ் செய்ய விரும்பி ஸ்வாமிகார்யத்தை நிறைவேற்றும் பெருமையுடன் ஒளிப்பெருக்குற்று விளங்குகிற அக்கபி

---

ப்ரவேசத்திலும் விவாஹகாலத்திலும் வலக்காலை எடுத்து வைக்க வேண்டும். சத்ரு பட்டணத்தில் ப்ரவேசிக்கும்பொழுது முதலில் இடக்காலை எடுத்து வைக்கவேண்டும்) என்று ப்ருஹஸ்பதி சொல்லியிருப்பதுபற்றி ராவணனுக்குக் கெடுதியை விளைக்கும் பொருட்டு முதலில் இடக்காலை வைத்து லங்கையில் புகுந்தானென்றுணர்க.

1. சத்ருதேசத்தில் ப்ரவேசிக்கும்பொழுது முதலில் இடக்காலை வைப்பது அந்தச் சத்ருவின் சிரஸில் வைப்பதுபோலவேயாகுமென்று ராஜஶாஸ்த்ரஞ் சொல்லுகையால் சத்ருக்களின் சிரஸில் வாம பதத்தை வைத்தானென்று கூறப்பட்டது.

குஞ்ஜரன் ராமகார்யத்தின்பொருட்டுத் திரிந்து கொண்டு விசித்ரங்களான பூமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட அந்த லங்கையைக் கண்டு 'எவர்க்கும் புகமுடியாத இந்த லங்காபுரியுள் அநாயாஸமாக ப்ரவேசித்து நாற்புறங்களிலும் ஸீதாதேவியைத் தேடுகின்றேன். இங்கு ராமலக்ஷ்மணர்களின் விருப்பம் தப்பாமல் நிறைவேறுமல்லவா?' என்று மிகவும் ஸந்தோஷமுற்று ஒரு வீட்டினின்று மற்றொரு வீட்டிற்குச் செல்பவனாகி வீடுகள் தோறும் புகுந்து ஆங்காங்குப் பலவகைப்பட்ட க்ருஹங்களைக் கண்டனன். மேலும் யௌவனமதம் நிறைந்து தாமரை யிதழ்போன்ற கண்களையுடைய மடந்தையர் மணிகள் மார்பு கண்டம் சிரஸு என்னும் மூன்று ஸ்தானங்களினின்றுண்டாகி மந்த்ர மத்யம தாரங்களென்னும் மூன்று ஸ்வரங்களோடுகூடி விளங்குமாறு தேவலோகத்து அப்ஸர மடந்தையர்போல் மிக மதுரமாகப்பாடுகிற மெதுவான காநத்தைக் கேட்டுக்கொண்டு போயினன். மற்றும், மஹாநுபாவர்களான அவ்வரக்கரது மாளிகைகளில் ஸ்த்ரீகளுடைய அரைநாண்மாலைகளின் சப்தத்தையும் சிலம்புத் தண்டைகளின் ஒலியையும் ஸ்வர்ணமயமயங்களும் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான மெத்தைப்படிகளில் அம்மாதர்கள் ஸஞ்சரிப்பதாலுண்டாகும் த்வனிகளையும் வீரர்கள் தோள் தட்டுகிற சப்தங்களையும் ஆங்காங்குப் பயங்கரங்களான ஸிம்ஹநாதங்களையும் ஜபஞ்செய்பவர்கள் சொல்லுகிற ருக்வேதாதி மந்த்ரங்களையும் செவியுற்றனன். மேலும் அவன் அங்கு வேதாத்யயனஞ் செய்கிற ராக்ஷஸர்களையும் உரக்கக் கூச்சலிட்டு ராவணனைப்புகழ்கிற ராக்ஷஸர்களையும் கண்டனன். மேலும், ராஜமார்க்கத்தைச் சூழ்ந்து நிலையுற்றிருக்கின்ற ராக்ஷஸர்களின் பெரிய மூலபலத்தையும் அதனிடையில் திரிகின்ற ராவணனுடைய [1] சாரர்கள் பலரையும் கண்டனன். அன்றியும் அவன்

---

1. சாரர்கள்-ஜனங்களின் நிலைமையை அறியும்பொருட்டு மாறுருவம் பூண்ட புருஷர்கள்.

தீக்ஷிதர்களையும் ஜடைதரித்திருப்பவர்களையும் மொட்டைத் தலையர்களையும் எருதுகளின் தோலைத் துணியாக உடுத்திருப்பவர்களையும் ஆடையில்லாத திகம்பரர்களையும் அணிஷ்டங்களைப் போக்க ஆயுதங்கள்போன்ற தர்ப்ப முஷ்டிகளையுடையவர்களையும் அபிசாரச் செயல்களால் சத்ருக்களைக் கொன்று ஜயம் பெறுதற்கு ஸாதனமாக அக்னிகுண்டங்களில் தீ மூட்டுகிறவர்களையும் செம்மட்டி இரும்புத்தடி இவைகளைக் கையிலேந்தினவர்களையும் தண்டாயுதந் தரித்தவர்களையும் ஒற்றைக் கண்ணரையும் ஒற்றைச் செவியரையும் தொங்கு வயிற்றரையும் தொங்கு முலையர்களையும் விகாரமான சரீர முடையவர்களையும் வளைந்த முகமுடையவர்களையும் விஷமாங்கர்களையும் (ஏற்றக் குறைவான அங்க முடையவர்களையும்) குள்ளர்களையும் வில் பிடித்தவர்களையும் கத்தியேந்தினவர்களையும் நூறு ஆணிகளையுடைய இரும்புத்தடி உலக்கை இவை தரித்தவர்களையும் மேலான உழல்தடி யேந்தினவர்களையும் விசித்ரமான கவசந்தரித்து ஜ்வலிப்பவர்களையும் மிகுந்த பருமனில்லாதவர்களையும் மிகவும் இளைப்புறுதவர்களையும் மிகவும் உயரமில்லாதவர்களையும் மிகக் குள்ளமாகாதவர்களையும் மிக வெளுப்பில்லாதவர்களையும் மிகக் கறுப்பில்லாதவர்களையும் மிகக் கூனில்லாதவர்களையும் மிகக் குள்ளமில்லாதவர்களையும் குரூபிகளையும் நாநாவித ரூபமுடையவர்களையும் அழகான உருவமுடையவர்களையும் நல்ல காந்தியுடையவர்களையும் கொடிபிடித்துக்கொண்டிருப்பவர்களையும் பதாகைகள் தரித்திருப்பவர்களையும் பல ஆயுதங்களேந்தினவர்களையும் கண்டனன். இவ்வளவேயன்றிச் சக்தியென்கிற ஆயுதமுடையவர்களையும் வ்ருக்ஷங்களை ஆயுதமாகக் கொண்டவர்களையும் கூரிய நுனியுள்ள இரும்புத்தடியுடையவர்களையும் வஜ்ராயுத முடையவர்களையும் பிண்டிபாலம் பாசாயுதம் இவை தரித்தவர்களையும் கண்டனன்; மற்றும், பூமாலை முடிந்து சந்தனம் முதலியன பூசிக்கொண்டு மேலான ஆபரணங்களணிந்து பலவகை

அலங்காரங்கள் பூண்டு இஷ்டப்படி திரிகிற பல ராக்ஷஸர்களைக் கண்டனன்; மற்றும் கூரான சூலாயுதந் தரித்தவர்களும் வஜ்ராயுதங் கையில் பிடித்தவர்களும் மஹாபலிஷ்டர்களுமான பலரைக் கண்டனன். அனந்தரம் ஹனுமான் ராக்ஷஸாதிபதியாகிய ராவண னுடைய கட்டளைப்படி அந்நகரத்தின் உள்பாகங்களில் ஏமாறுதல் மனவூக்கத்துடன் காத்திருப்பதும் நடுப் பட்டணத்திலிருப்பதுமாகிய லக்ஷக்கணக்குள்ள ராவணனது மூலபலத்தைக் கண்டனன். அப்பொழுது அவ்வானரன் அம்மூல பலத்தைக் கண்ட பின்பு பொன் னூற் செய்யப்பட்ட பெரிய வெளிவாசற்படியுடையதும் புகழ்பெற்றதுமாகிய ராவண க்ருஹத்தைக் கண்டனன். அது பர்வத சிகரத்தில் ஏற்படுத்தப்பட்டு வெண் தாமரைகளுடன் விளங்குகிற அகழிகளால் அலங் கரிக்கப்பட்டுச் சுற்றிலும் மதிளால் சூழப்பட்டிருந்தது. அந்த க்ருஹம் தேவலோகம்போல் மிகவும் திவ்யமாக ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. மேலும், அதில் உயர்ந்த நானாவித சப்தங்களும் குதிரைகளின் கனைப்புகளும் ஸ்வர்ணமயமான [1] மேகலைகள் ரத்ன மயமான சிலம்புத்தண்டைகள் முதலிய பூஷணங்களின் சப்தங்களும் இடைவிடாமல் செவிப்பட்டுக்கொண் டிருக்கும். தேர்களும் பல்லக்கு முதலான வாஹனங் களும் விமானங்களும் மங்களகரமான குதிரை யானை களின் கூட்டங்களும் வெளுத்த மேக ஸமூஹம்போன்று நான்கு தந்தங்களையுடைய [2] தந்தாவளஶ்ரேஷ்டங்க ளும் அங்கு விளக்கமுற்றிருக்கும். மேலும் வேண்டிய ஆஹாரங்களைத் தின்று நினைத்தபடி விளையாடிக் கொண்டு மதித்திருக்கின்ற ம்ருகங்களும் பக்ஷிகளும் விளங்கப்பெற்று ரமணீயமாயிருக்கும். அதன் வாசற் படிகளெல்லாம் மிகவும் அழகாயிருக்கும். மேலும் பாதுகாப்பதில் திறமையுடையவர்களும் மிகவும் சிறந்த

1. அரைநாண் மாலை.
2. தந்தாவளம்—யானை.

மஹாவீர்யமுடையவர்களுமாகிய பலவாயிரம் ராக்ஷஸர்கள் அதைப் பலவிதத்திலும் பத்ரமாகப் பாதுகாத்து வருவார்கள். ஐம்பூநதியிலுண்டான பொன்னுலும் மற்ற பொன்னுலும் இயற்றப்பட்ட கோட்டையுடையதும் மிகுந்த விலையுள்ள முத்துக்களாலும் ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ரமணீயமாயிருப்பதும் சிறந்த காலாகுரு சந்தனங்களால் முழுவதும் பூசப்பட்டுக் கமகமவென்று மணங்கமழப்பெற்று விளங்குவதுமாகிய ராவணனது அந்தப்புரத்திற்குள் ப்ரவேசித்தனன். நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

சந்த்ர ப்ரகாச வர்ணனமும், ஹனுமான் நிலவில் ஸீதையைத் தேடிக் காணுமல் சோகித்தலும்.

அனந்தரம் மிகுந்த மதியுடைய அந்த ஹனுமான் ஆகாயத்தினிடையில் சேர்ந்து கிரணங்கள் விளங்கப் பெற்றுப் பெரிய வெள்ளம்போன்ற நிலவைப் பரப்பிக்கொண்டு பசுமந்தையில் மதித்துத் திரிகிற காளைபோல் ப்ரகாசிக்கின்ற சந்த்ரனைக் கண்குளிரக் கண்டனன்; குளிர்ந்த கிரணங்களால் உலகத்தினுடைய தாபங்களைப் போக்கிக்கொண்டு ஸமுத்ரம் பொங்கி வழியும்படி செய்பவனும் தன்கிரணங்களால் ஸமஸ்த பூதங்களையும் ப்ரகாசிக்கச் செய்பவனும் ஆகாயத்தை எதிர்த்து வருபவனுமாகிய சந்த்ரனைக் கண்டனன். பூமியில் மந்த்ர பர்வதத்தில் எந்தக்காந்தி விளங்குமோ, ப்ரதோஷகாலத்தில் ஸமுத்ரத்தில் எந்தப்ரகாசம் தோன்றுமோ, ஜலங்களிலுள்ள தாமரைகளில் எந்த ஒளி புலப்படுமோ, அப்படிப்பட்ட காந்தி ஸுந்தரனுகிய சந்த்ரனிடத்தில் அப்பொழுது ரமணீயமாக ப்ரகாசித்தது. வெள்ளிக்கூண்டில் விளங்(

வெளுத்த ஹம்ஸம்போலவும், மந்த்ரகிரி குஹையில் ப்ரகாசிக்கிற ஸிம்ஹம்போலவும், மதித்த யானையின் மேல் விளங்குகிற வீரன்போலவும் ஆகாயத்தில் சந்த்ரன் மிக்கவும் ப்ரகாசித்தனன். கூரான கொம்புடைய வ்ருஷபம்போலும், உயர்ந்த சிகரமுடைய மஹா பர்வதம்போலும், பொற்பிடிகளிடப்பெற்ற தந்தங்களை யுடைய மஹாகஜம்போலும், கிரணங்கள் நிறைந்த சந்த்ரன் ப்ரகாசித்தனன். மேலும், பனி நீர்த் திவலைகளாகிற தோஷமற்றவனும் க்ரஹங்களிற் சிறந்த சுக்ரன் ப்ருஹஸ்பதி முதலியவர்களைத் தன் தேஜஸ்ஸி னால் மறைத்து ப்ரகாசிக்கையால் ஜாருக்குமின்றி நிர் மலனுயிருப்பவனும் மஹாக்ரஹமாகிய ஸூர்ய கிரணங் களைப் பெற்றிருப்பதுபற்றிப் பளபளவென்று விளக்க முற்று இருட்டைப் போக்குகின்றவனும், மிகவும் வெளுத்துச் சுற்றிலும் விளங்குகின்ற காந்திப் பெருக்கினால் நடுவிலிருக்கிற கறுத்த களங்கம் மேன். மேலும் நிகுநிகென்று விளங்கப்பெற்றவனும் முயலின் உருவம்போன்ற பூமியின் நிழல் மேனியில் களங்கமாக விளங்கப்பெற்றவனும் மஹாப்ரபாவமுடையவனுமாகிய சந்த்ரன் ப்ரகாசித்தனன். பெரிய ஸிம்ஹமும் ஓர் சிலா தலத்தை (கல் ப்ரதேசத்தை) அடைந்து ப்ரகாசிப்பது போலவும் யானை பெரிய போர்க்களத்தில் நுழைந்து விளங்குவதுபோலவும், அரசன் ராஜ்ய லக்ஷ்மியைப் பெற்றுத் திகழ்வதுபோலவும் சந்த்ரன் துலங்கலுற்ற னன். சந்த்ரன் உதயமாகி ப்ரகாசிக்கையால் அந்த காரம் சிதறிப்போகையில், ராக்ஷஸர்களும் பிசாசர்க ளும் மாம்ஸங்களைத் தின்றுகொண்டு பெரிய ஆடம் பரத்துடன் திரிகையால் தோஷமுற்றதும் மன்மத விகாரத்தை வளரச்செய்கின்ற நிலவு திகழ்கையால் காமினிகளுக்கும் காமுகர்களுக்கும் மனத்திலுள்ள ப்ரணய கோபாதி கலுஷங்களைப்போக்கி அவர்களை ஒருவரோடொருவர் கலக்கச்செய்வதும் ஆனது பற்றியே ஸ்வர்க்கம்போல் ஆனந்தம் கொடுப்பதும் பூஜிக்கத்தகுந்ததுமாகி விளங்குகிற ப்ரதோஷகாலம்

கடந்து சென்றது. அப்பொழுது வீணை வாத்யங்க ளின் தந்த்ரீஸ்வரங்கள் செவிக்கினிதாகப் புலப்பட்டன. நன்னடத்தையுடைய மடந்தையர் தமது பர்த்தாக்க ளோடு கூடி ஸுகமாக நித்ரித்துக்கொண்டிருந்தனர். பூதம் பேதாளம் முதலிய ராத்ரியில் திரிகிற பூத கணங்கள் பயத்தையும் வியப்பையும் விளைவிக்கவல்ல கார்யங்களைச் செய்துகொண்டு விளையாடத் தொடங்கின. மேலும், சிறந்த மதியுடைய அக்கபிவரன் கள் முதலியவற்றைப் பருகி மெய்ம்மறந்திருப்பவரும் ப்ராக்ருத கார்யங்களையும் மறந்து ஏமாறியிருப்பவரும் நிறைந்து மிக்க ஜனக்கூட்ட முடையவைகளும் ரதகஜ துரக ஸமூஹங்களும் அழகிய ஸிம்ஹாஸனங்களும் நிரம்பி வீரலக்ஷ்மீ விலாஸம் பொருந்தியவைகளுமான பல க்ருஹங்களைக் கண்டனன். மேலும், ஒருவரை ஒருவர் பரிஹாஸஞ் செய்பவரும் பருத்த புஜங்களை ஒருவர்மேல் ஒருவர் போகட்டுக்கொண்டு விளையாடு பவரும் மதத்தினாலுண்டாகும் பிதற்றல்களை விசேஷ மாகப் பேசுகிறவர்களும் கொழுப்பினால் ஒருவரை யொருவர் விரட்டுகிறவர்களும் மார்பை நெரிக்கின்றவர்க ளும் சரீரங்களைக் காதலிகளின் மேலிட்டுக்கொண் டிருப்பவர்களும் நினைத்தபடி வடிவங்கொள்ளவல்லவ ராகையால் அப்பொழுதைக்கப்பொழுது நினைத்தபடி வேஷங்களை விசித்ரமாகத் தரிப்பவர்களும் வலிவான வில்லுகளை இழுத்து நாணேற்றுகிறவர்களுமாகிய ராக்ஷஸ வீரர்களைக் கண்டனன். அங்குச் சில மடந்தை யர் சந்தனாதிகளை மேனியிற் பூசிக்கொண்டிருந்தனர். அங்ஙனமே மற்றும் சில ஸுந்தரிகள் அங்கு உறங்கிக் கொண்டிருந்தனர். அழகிய முகாரவிந்தங்களையுடைய சில மடந்தையர் நகைத்துக்கொண்டிருந்தனர். வேறு சில அங்கனைகள் கோபத்தினால் பெருமூச்செறிந்து கொண்டிருந்தனர். மேலும் கர்ஜித்துக்கொண்டிருக் கின்ற பெரிய யானைகளும் மிகவும் பூஜைக்கிடமாகி விளங்குகின்ற ஸத்புருஷர்களும் தமக்குத் தகுந்த ப்ரதிவீரர்கள் அகப்படவில்லையே யென்னும் வெறுப்பி

ஞால் நெடுமூச்சு விடுகின்ற மஹாவீரர்களும் நிறைந்த அவ்விலங்கை நகரம் பெருமூச்செறிகின்ற ஸர்ப்பங்களோடுங்கூடிய ஓர் மடுவுபோல் ப்ரகாசித்தது. மேலும், அந்நகரத்தில் மஹாபுத்தியுடையவரும் ஸரஸஸல்லாப சதுரர்களும் நல்ல தெய்வபக்தியுடையவரும் உலகத்தில் முக்யர்களும் நானாவித உருவமுடையவர்களும் மனத்திற்கினிய நாமங்களுடையவருமாகிய நிசாசரர்களைக் கண்டனன். நல்ல ரூபம் பொருந்தி நானாகுண ஸமூஹங்களால் விஞ்சி அக்குணங்களுக்குத் தகுந்த நடத்தைகளுடையவருமாகிய சில ராக்ஷஸர்களைக் கண்டு ஸந்தோஷித்தனன். மேலும், தமது உருவங்களுக்குத் தகுந்த குணங்கள் பொருந்தின விகார ரூபமுடையவர்கள் சிலரையும் கண்டனன். அன்றியும், அழகான ஆடையாபரணங்களைத் தரிக்கத் தகுந்த மென்மை அமைந்த ஸுந்தர சரீரங்களுடையவரும் காதலரிடம் மிகவும் நிர்மல மனத்துடன் விளங்க முற்றவரும் அவரிடம் மனநிறைவுடன் மிகுந்த ப்ரீதியுடையவராகையால் பதிவ்ரதைகளென்னும் பேர் பெற்று மிகுந்த மஹிமையுடையவரும் அழகிய கடைக்கண் பார்வை முதலிய விலாஸங்களுடையவரும் காதலரிடத்திலும் மதுபானங்களிலும் மனம் பற்றிச் சிறந்த வைபவத்துடன் விளங்குபவரும் நக்ஷத்ரங்கள்போல் திகழ்கின்றவருமாகிய ராக்ஷஸ மடந்தையர்களையும் கண்டனன். மேலும் ஸௌந்தர்ய லக்ஷ்மியால் ப்ரகாசிப்பவரும் அர்த்தராத்ரியில் காதலர்களால் அழுந்த அணைக்கப்பட்டு வெட்கித்து ஆநந்த ஸாகரத்தில் மூழ்கிப் புஷ்பங்களில் மறைந்திருக்கும் பெண் பறவைகள்போல் விளங்குகின்றவருமாகிய மற்றுஞ் சில ஸுந்தராங்கிகளையும் கண்டனன். மேலும், அந்நகரத்தில் உப்பரிகைகளின்மேல் காதலருடைய மடிகளில் ஸந்தோஷத்துடன் உட்கார்ந்திருக்கின்ற சில மடந்தையர்களையும் மணம்புரியப்பட்டுப், பதிவ்ரதா தர்மந் தவறாமல் கணவர்க்கு ப்ரீதியை விளைக்கின்ற சில மாதரசிகளையும், மன்மத விகாரம் பூண்ட சில

மடந்தையர்களையும் கண்டனன். ரதிகேளியில் பற்றி யிருக்கையால் போர்த்தலின்றித் திகம்பரர்களாகிப் பொன் ரேகைபோல் பளபளவென்ற மேனிகள் ஒளி விளங்கப்பெற்ற சில பெண்மணிகளையும் உருக்கின பொன் வர்ணமுடைய சிறந்த சில நங்கையர்களையும், மேலும் மனோஹரமான சரீரகாந்தி யுடையவராயினும் காதலரைப் பிரிந்தமையால் [1] பயிலைமை யடைந்து சந்த்ரன்போல் வெளுத்த வர்ணத்துடன் விளங்குகிற சில வனிதைகளையும் கண்டனன். அனந்தரம் அக்கபி வீரன், தந்தமது காதலரிடஞ் சென்று ரதிகேளியி லாழ்ந்து மனக்களிப்புற்று மனத்துக்கினியர்களான [2] அபிஸாரிகைகளையும் தமது க்ருஹங்களில் தந்தமது கணவர்களோடுகூடி ஸுகித்திருக்கின்ற ஸுந்த ராங்கிகளான குல மடந்தையர்களையும் கண்டனன். மேலும், அவன் ராக்ஷஸ ஸ்த்ரீயென்றும் மனுஷ்ய ஸ்த்ரீயென்றும் வேறுவேறாகத் தெரியும்பொருட்டு, அங்குச் சந்த்ரன்போல் காந்தியமைந்த ஸுந்தராங்கிக ளின் முகங்களையும் வளைந்த இமைமயிர்களால் விளங்கு கின்ற அவரது கண்வரிசைகளையும் உற்றுப்பார்த்து, மேலும் ராமன் மொழிந்த ஸீதையின் ஆபரணங்கள் அம்மடந்தையரிடம் ஏதேனும் புலப்படுமோவென்று அழகிய மின்னற்குவியல்போல் தளதளவெனத் திகழ் கின்ற அவரது ஆபரண ஸமூஹங்களையும் பரீக்ஷித்துப் பார்த்தனன். இப்படி முழுவதுந் தேடியும் ஸீதையைக் காணவில்லை. அவளோ மிகவும் அழகான அங்கங்களை யுடையவள்; நல்வழியில் நடக்குந் தன்மையுள்ள ராஜ வம்சத்திற் பிறந்தவள்; நன்கு புஷ்பித்த அழகான கொடியைப் போன்றவள்; மனத்தினால் நிரூபிக்கப்

1. நிறம் மாறி.

2. 'காந்தார்யிநீதுயாயாதி ஸங்கேதஸாபிஸாரிகா' (காதல னுடன் ஸம்போகத்தை விரும்பி எவள் ஸங்கேத ஸ்தலத்திற்குப் போகின்றாளோ அவள் அபிஸாரிகை யெனப்படுவாள்) என்பதை இங்குணர்க.

பட்டவள்போல் அயோனிஜையா யிருப்பவள்; மேலும் இடைவிடாத பாதிவ்ரத்யமென்னும் பழைய தர்மத்தில் நிலைநின்று ராமனையே நினைந்து நைந்து மன்மத மோஹாவேசத்தினால் நிறைந்து ராமனைப் பார்க்க வேண்டு மென்னும் விருப்பமுற்றுத் தன்னையே சிந்தித்துக்கொண்டிருக்கையால் ப்ரகாசிக்கின்ற ராம ஹ்ருதயத்தில் புகுந்து மடந்தையர்மணிகளனைவரினும் என்றும் மேன்மையுற்றிருப்பவள்; முன்பு ராமனுடன் கலந்திருக்கும்பொழுது மிகுந்த விலையுள்ள மேலான பொன் பூஷணங்களை அணிந்த கண்டத்தையுடையவள், இப்பொழுது ராமனைப் பிரிந்து விரஹதாபத்தினால் வருந்திக் கண்டத்தில் கண்ணீர் நிரம்பப்பெற்றிருந்த னள்; அழகாய் விளங்குகின்ற இமை மயிர்களும் இனி தான கண்டஸ்வரமும்பொருந்தி, வனத்தில் நர்த்தனஞ் செய்கின்ற மயில்பேடுபோல் திகழுந் தன்மையள்; நன்கு ப்ரகாசியாத உருவமுடைய சந்த்ரகலைபோல் காந்தி குறையப்பெற்று இளைத்திருந்தனள்; தூசி படிந்த பொற்கம்பிபோல், ஸ்வபாவ நிர்மலையாயினும் ஸம்ஸ்கார மில்லாமையால் மலினமான மேனியுடையவளாயினள். பாணம் பொதிந்து வெளிவரினும் அதன் துனுக்கை உள்ளே இருக்கையில் மேலுலர்ந்த அந்தப் பாணத்தின் வ்ரணம்போல், வெளியில் ஸமாதானமுற்றிருப்பது போல் தோற்றினும் மனத்தில் பெருவேதனை யுற்றிருந்தனள்; வாயுவேகத்தினால் சிதறிக் கலைந்த மேகவரிசையைப்போல், மீளவும் திருத்த முடியா தென்று தோற்றும்படி மனங் கலங்கப்பெற்றனள். பேசுவோர்களில் வல்லவனும் [1] மனுஜேஶ்வரனுமாகிய ராமனது ப்ரிய பத்னியும் கீழ்ச்சொன்ன நிலைமை யுடையவளுமான ஸீதாதேவியை எவ்வளவு தூரந் தேடியுங் காணாமையால் அப்பொழுது ஹனுமான் துக்கஸாகரத்தில் மூழ்கி மூடன்போல் எதுவுந் தோற்றப்பெறு திருந்தனன். ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று

1. மனுஜேஶ்வரன்—மனுஷ்யர்களுக்கு ப்ரபு.

## ஹநுமான் ராவணனிருக்கிற அந்தப் புரத்தைக் காணுதல்.

நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவனாகிய அந்த ஹநுமான் விமானங்களில் தேடியும் ஸீதையைக் காணாமல் வருத்தமுற்று வேகத்துடன் அவ்விலங்கை நகர் முழுவதுந் தேடத்தொடங்கினன். அனந்தரம் அம்மஹாதீரன், ஸூர்யனோடொத்த ஒளியுடையதாகி விளங்குகின்ற கோட்டையால் சுற்றிலும் சூழப்பட்டுக் கொடிய ஸிம்ஹங்களால் பாதுகாக்கப்படுகிற பெரிய அரண்யம்போல் பயங்கரமான ராக்ஷஸர்களால் காக்கப்பட்டுப் புகக்கூடாதிருக்கிற ராவணபவனத்தை அடைந்தனன். அவன் அதை உற்றுப்பார்க்கும் பொழுது தகதகவென்று விளங்குகின்ற அதன் பொற் சாயை தன்மேல் நிரம்பப்பெற்று மிகுதியும் ப்ரகாசித்த னன். மேலும், அது வெள்ளியால் நிர்மிக்கப்பட்டுப் பொன்வேலைகள் செய்யப்பெற்றுப் பல வர்ணங்கள் அமைந்து விளங்குகிற வெளி வாசற்படிகளாலும் விசித்ரங்களான பல கட்டுக்களாலும் அழகிய [1] மந்திரத்வாரங்களாலும் திகழ்வுற்றிருந்தது. ப்ரமுகர்களான ராஜபுருஷர்கள் மதித்த யானைகளின் மேலேறி அங்குத் திரிந்துகொண்டிருந்தனர். அங்குள்ள சூரர்கள் எப்படிப்பட்ட கார்யத்தையும் அநாயாஸமாக நிறைவேற்றுந் தன்மையர்; அங்குள்ள குதிரைகள் எப்படிப்பட்ட தேர்களையும் இழுத்துக் கொண்டுபோக வல்லவைகளாகிச் சிறந்தவைகளுமா யிருந்தன. தந்தங்களாலும் வெள்ளி பொன்களாலும் நிர்மிக்கப்பட்டு ஸிம்ஹம் புலி இவற்றின் தோல்களா லியற்றின கவசங்களால் மூடப்பட்டு அதிவிசித்ரங்க ளாய் விளங்குகிற பல ரதங்கள் அங்கு எப்பொழுதும் த்வனி கிளம்பும்படி இங்குமங்கும் நடையாடிக்கொண் டிருந்தன. மேலும் அம்மாளிகை நானாவித ரத்னங்க ளால் இழைக்கப்பட்ட விலையுள்ள பீடங்களும் பாத்ரங்

1. மந்திரத்வாரம்—வீட்டு வாசற்படி.

களும் நிறைந்து பல மஹாரதிகர்களுக் கிடமாகிப் பெரிய ரதங்களாலும் ஸிம்ஹாஸனங்களாலும் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அங்குப் பார்க்க இனியவைகளும் மிகக் கம்பீரங்களுமாகிய பலவகைப்பட்ட அந்தந்த ம்ருகங்களும் பக்ஷிகளும் கணக்கின்றி நாற்புறத்திலும் நிறைந்திருந்தன. தனுர்வித்யை முதலான வித்யைகளில் மிகுதியும் பயிற்சியுடைய [1] அந்தபாலர்களான ராக்ஷஸர்கள் அம்மாளிகையை நன்கு பாதுகாத்துக்கொண்டிருந்தனர். மிகுந்த ஸௌந்தர்யம் அமைந்து மேன்மை யுற்றவர்களான மாதரிகள் அம்மாளிகையில் எங்கும் நிறைந்திருந்தனர். மற்றும், அம்மாளிகை ஸந்தோஷமுற்ற மடந்தையர்மணிகள் நிறைந்திருக்கப்பெற்றுப் பெரிய ராக்ஷஸ ஸ்ரேஷ்டர்களால் சூழப்பட்டிருந்தது. அங்குத் திரிகிற ஸ்த்ரீ புருஷர்களின் ஆபரண த்வனிகள் ஸமுத்ரகோஷம் போல் செவிப்பட்டுக்கொண்டிருந்தன. மேலும், அது ராஜலக்ஷணங்களாகிய குடை, சாமரம் முதலியவற்றோடு கூடி நல்ல அகரு சந்தனாதிகளால் வாஸனையேற்றப்பெற்றுப் பெரிய ஸிம்ஹங்களோடு கூடின மஹாரண்யம்போல் மஹாபுருஷர்களால் விளக்கமுற்றுத் துந்துபி ம்ருதங்கம் பணவம் சங்கு முதலிய நானாவித வாத்ய கோஷங்கள் மேலெழப்பெற்று என்றும் கந்த புஷ்பாதிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பர்வகாலங்களிற் செய்கிற ஹோமங்கள் அங்கு இடைவிடாதிருந்தன. அவ்வானர வீரன், இங்ஙனம் எப்பொழுதும் ராக்ஷஸர்களால் பூஜிக்கப்பட்டு ஸமுத்ரம்போல் கம்பீரமாகி மிகுதியுங் கோஷமுண்டாகப்பெற்று மேலான ரத்ன காந்திகளால் விளக்கமுற்று மஹாரத்னமயமாயிருக்கிற ராவண க்ருஹத்தைக் கண்டனன். ராவணன் மஹானுபாவனாகையால் அவனுடைய பெருமைக்குத் தகுந்த பெருமைகள் பலவும் அம்மாளிகையில் அமைந்திருந்தன. ஹனுமான் ரத கஜ துரகங்கள் நிறைந்து அழகிய

1. அந்தபாலர்—வெளியிலிருந்து பாதுகாப்பவர்.

உருவம் பொருந்தின அந்த ராவண பவனத்தைக் கண்டு 'இது லங்கை முழுமைக்கும் ஓர் அலங்காரமாயிருப்பது' என்று நினைத்தனன். பிறகு அந்த ராவண க்ருஹத்தினருகில் ஸீதையைத் தேடிக்கொண்டு திரியத் தொடங்கினன். இங்ஙனம் ஒரு வீட்டினின்று மற்றொரு வீட்டிற்குத் தாண்டிச்சென்று ராக்ஷஸ க்ருஹங்களொவ்வொன்றிலும் தேடினன்; மற்றும், உத்யானங்களிலும் உப்பரிகைகளிலும் பயப்படாமற் தேடிக்கொண்டு திரிந்தனன். அம்மஹாவீரன் பெரியவேகத்துடன் ப்ரஹஸ்தனது க்ருஹத்திற்குச் சென்று அங்கிருந்து மஹாபார்ச்வ பவனத்திற்குச் சென்றனன். அனந்தரம் அம்மஹாகபி மேகம்போல் மிகப் பெரியதாகி விளங்குகிற கும்பகர்ணனது க்ருஹத்திற்கும் விபீஷண பவனத்திற்குஞ் சென்றனன்; அப்பால் அம்மஹாகபி மஹோதர விரூபாக்ஷ வித்யுஜ்ஜிஹ்வர்களின் க்ருஹங்களுக்கும், வித்யுன்மாலியின் க்ருஹத்திற்கும், அங்ஙனமே வஜ்ரதம்ஷ்ட்ரனது வீட்டிற்கும் சென்றனன். மஹா தேஜஸ்வியாகிய ஹனுமான் சுகனுடைய வீட்டிற்கும், புத்திமிக்கிறந்த ஸாரணனது க்ருஹத்திற்குஞ் சென்றனன். அவ்வானரயூதபதி அங்ஙனமே இந்த்ரஜித்தென்னும் மேகநாதனுடைய வீட்டிற்குச் சென்றனன். அவ்வானரச்ரேஷ்டன் ஜம்புமாலி ஸுமாலி ரச்மிகேது ஸூர்யசத்ரு ஆகிய இவர்களது நிலயங்களுக்கும் போயினன். அம்மஹாகபி அங்ஙனமே வஜ்ரகாயனுடைய வீட்டிற்குப்போயினன். அவ்வாயுகுமாரன், தூம்ராக்ஷனது க்ருஹத்திற்கும் அங்ஙனமே ஸம்பாதி பயங்கரனான வித்யுத்ரூபன், கனன் விகனன் சுகநாஸன் வக்ரன் கடன் விகடன் ப்ரஹ்மகர்ணன் தம்ஷ்ட்ரன் ரோமசன் யுத்தோன்மத்தன் மத்தன் த்வஜக்ரீவன் நாதி இவர்களின் பவனங்களுக்கும், [1] வித்யுஜ்ஜிஹ்வனென்னும் பெயருடைய சில

---

1. 'வித்யுஜ்ஜிஹ்வேந்த்ரஜிஹ்வாநாம்' என்று மூலம். வித்யுஜ்ஜிஹ்வன் இந்த்ரஜிஹ்வன் என்னும் இருவரையே

ராக்ஷஸர்களுடைய நிவாஸங்களுக்கும், இந்த்ரஜித்தென்னும் பெயருடைய சில ராக்ஷஸர்களுடைய [1] நிகேதனங்களுக்கும், ஹஸ்திமுகன் கராளன் பிசாசன் சோணிதாக்ஷன் இவர்களது வாஸஸ்தானங்களுக்கும் போயினன். மாருதாத்மஜனும் மஹாயசஸ்வியுமாகிய அந்த ஹநுமான் க்ரமமாக ஒரு வீட்டினின்று மற்றொரு வீட்டிற்குத் தாண்டிச்சென்று சிறப்புள்ள அந்தந்த க்ருஹங்களில் நுழைந்து அவ்வானரத் தலைவன் பெரும் ஸம்ருத்தியுடன் விளங்குகிற அந்த ராக்ஷஸர்களின் ஸம்ருத்தியைக் கண்டனன். இங்ஙனம் வீர்ய லக்ஷ்மியமைந்த அந்தக் கபிகுஞ்ஜரன் முழுவதும் நன்றாகத் திரிந்து எல்லோருடைய க்ருஹங்களையும் தேடிப்பார்த்து அவையெல்லாவற்றையும் கடந்து ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனது க்ருஹத்திற்குப் போயினன். அந்தக் கபிஸத்தமன் அங்கு நாற்புறத்திலும் திரிந்துகொண்டு ராவணனது ஸமீபத்தில் நித்ரை செய்கின்ற விகாரமான கண்களையுடைய சில ராக்ஷஸிகளைக் கண்டனன். சில ராக்ஷஸிகள் [2] சூல முத்கரங்களை ஏந்தியும் சில ராக்ஷஸிகள் [3] சக்தி தோமரங்களைத் தரித்தும் மனவூக்கத்துடன் படுத்திருக்கக் கண்டனன். மற்றும் அந்த ராவண க்ருஹத்தில் காத்திருக்கின்ற நானாவித ஸைன்யங்களையும் பலவித ஆயுதங்களைப் பிடித்து பெருஞ் சரீரமுடைய பல ராக்ஷஸஸ்ரேஷ்டர்களையும், அங்குக் கட்டப்பட்டிருக்கிற மஹாவேகமுடைய சிவப்புக்குதிரைகளையும் வெளுப்புக் குதிரைகளையும், மற்றும் சிறந்த ஜாதியிற் பிறந்து அழகிய உருவம்பொருந்தி கஜசிக்ஷையில் பயின்று யுத்தத்தில்

---

சொல்லுகிறதென்றும் பன்மை ஆர்ஷமென்றும் பக்ஷாந்தரமாக மஹேச்வர தீர்த்தர்.

1. நிகேதனம்—நிவாஸம், வாஸஸ்தானம்.
2. சூலம்—சூலாயுதம்; முத்கரம்—இரும்புத்தடி
3 சக்தி—சக்தியாயுதம்; தோமரம்—ஈட்டி.

ஐராவதத்தை நிகர்த்துப் பகைவரது கஜங்களை யடக்குந் திறமையுடைய மத்த கஜங்களையுங் கண்டனன். அந்த யானைகள் பகைவரது பலங்களை அடக்குந் திறமையமைந்து பெருஞ் சரீரமுடையவையாகி மிகவும் உயர்ந்து மதஜலங்களைப் பெய்கின்றமையால் மழை பெய்கிற மேகங்கள்போலும் அருவிகளோடு கூடின மலைகள்போலும், விளக்கமுற்று மேககர்ஜனம்போன்ற கர்ஜனங்களைச்செய்பவைகளும் யுத்தத்தில் பகைவர்க்கு எதிரிடமுடியாதவையுமா யிருந்தன. மேலும், ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனது க்ருஹத்தில் ஜம்பூநதியில் பிறந்த பொன்னாலும் மற்றை யிடங்களில் விளையும் பொன்களாலும் செய்யப்பட்ட ஆபரணங்களைத் தரித்து முதிர்ந்த ஸூர்யன்போல் விளங்குகிற ஆயிரங் கணக்குள்ள காலாட்களைக் கண்டனன். அவ்வாயுகுமாரன் அம்மாளிகையில் பலவகைப் பல்லக்குகளையும் விசித்ரமான கொடிமாடங்களையும் விசித்ரமான அறைகளையுடைய க்ருஹங்களையும் மற்றுஞ் சில விலாஸ பவனங்களையும் மரத்தினாற் செய்த லீலாபர்வதங்களையும் அழகான [1] ரதிகேளி மந்திரங்களையும் பகல்வேளை விநோதமுறத் தகுந்த லீலா க்ருஹங்களையுங் கண்டனன். அவ்வானரன் இங்ஙனம் பார்த்துக்கொண்டு போகையில் அங்கு மந்தரபர்வதம் போன்ற ஓர் பவனத்தைக் கண்டனன். அதில் மயில்களிருக்கும்படி ஏற்படுத்தின இடங்கள் பலவும் அழகாயிருந்தன. மற்றும், அது நாற்புறத்திலும் த்வஜங்களும் ஆங்காங்கு நானா ரத்னங்கள் நிறைந்த நிதிஜாலங்களும் விளங்கப்பெற்றுச் சிறந்த மதியுடையோர்களால் மிகுந்த சிற்ப ஸாமர்த்யத்துடன் நிர்மிக்கப்பட்டு, பூதநாதனாகிய சிவனது இருப்பிடமான கைலாஸ பர்வதம் போன்று அங்குள்ள க்ருஹங்களெல்லாவற்றிலும் மேலாயிருந்தது. அங்கு ரத்னகாந்திகளும் ராவண

---

1. ரதிகேளி மந்திரம்—ஸம்போகத்திற்காக ஏற்படுத்தப்பட்ட க்ருஹம்.

னுடைய தேஜஸ்ஸூம் முழுவதும் நிரம்பியிருக்கையால் அவ்வுத்தம க்ருஹம் கிரணங்களோடு விளங்குகிற ஸூர்யன்போல் ப்ரகாசித்தது. மேலும், அவ்வானர யூதபதி, அங்குள்ள படுக்கைகளும் பீடங்களும் பாத்ரங்களும் ஸ்வர்ணத்தினாலேயே நிர்மிக்கப்பட்டு மேன்மையுற்றிருக்கக் கண்டனன். மேலும், அது மது பானஞ் செய்யும்பொழுது சிந்துகிற துளிகளால் ஆங்காங்கு நனைந்து ரத்னமய பாத்ரங்கள் நிறைந்து மனத்திற்கினிதாகி நெருக்கமின்றி விசாலமாய்க் குபேர பவனம்போல் விளக்கமுற்றிருந்தது. அங்கு எப்போதும் அரைநாண்மாலைச் சப்தங்களும் சிலம்புத் தண்டைகளின் த்வனிகளும் மேன்மேலும் நாதங்களை விளைக்கின்ற மத்தளவாத்ய கோஷங்களும் நானா ஓசைகளும் செவிப்பட்டுக்கொண்டிருந்தன. ஹனுமான் இங்ஙனம் பல மேடைகளோடுகூடி அநேகங்களுக்குள்ள சிறந்த ஸுந்தரிகளால் நிறைந்து அதிவிசாலங்களான பலகட்டுக்கள் அமைந்து விளங்குகிற அந்த ராவணனது பெரிய மாளிகையுள் ப்ரவேசித்தனன்.

ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.

--•••◆◂ { ஹனுமான் ராவணாந்தப்புரத்தில் பல க்ருஹங்களையும் புஷ்பக விமானத்தையுங் காணுதல். } ▸◆•••

மிகுந்த பலமுடைய அந்த ஹனுமான் வைடூர்ய மணிகளிழைத்த பொற்சாளரங்களும் விநோதார்த்தமாக வைக்கப்பட்ட பறவைக்கூட்டங்களும் அமைந்து வர்ஷாகாலத்தில் மின்னல்களோடும் அவற்றைக் கண்டு கலங்கிப் பறக்கிற பறவைகளோடுங்கூடின மேக ஸமூஹம்போல் புலப்படுகிற க்ருஹங்களைக் கண்டனன்.

மேலும் அந்தப் பெருமாளிகைகளில் முக்யங்களான சங்கு தனுஸ்ஸு கத்தி முதலிய ஆயுதங்கள் அமைந்து நானாவிதங்களாகி விளங்குகிற உள்ளறைகளையும் மற்றும் க்ருஹங்கள் ப்ராஸாதங்கள் முதலியவற்றின் மெத்தைகளில் விசாலங்களாகி ரமணீயங்களாயிருக்கிற மேல் மாளிகைகளையும் கண்டனன்; நானாவித ரத்னங்களால் திகழ்வனவும் தேவாஸுரர்களும் புகழ்ந்து வெகுமதிக்கத்தக்கவைகளும் சிற்பசாஸ்த்ரத்தின்படி நன்கியற்றப்பட்டிருக்கையால் தோஷங்களொன்றுமின்றி விளங்குபவைகளும் ராவணன் தனது புஜபலத்தினால் ஸம்பாதித்தவைகளுமான பல க்ருஹங்களைக் கண்டனன். மிக முயற்சிகொண்டு ஆங்காங்குப் பொருந்தும்படி ஸ்தாபிதங்களாகிப் பூமியில் [1] விஶ்வகர்மாவினால் நேரே நிர்மிக்கப்பட்டவைகள் போன்று பூமியிலுள்ள க்ருஹங்களெல்லாவற்றிலும் குணங்களின் மிகுதியால் மேன்மையுற்று விளங்குகிற ராவண க்ருஹங்களைக் கண்டனன்; பிறகு மிகவும் உயர்ந்த மேகம்போன்று மனத்தைப் பறிக்கும்படி பொன்னாற் செய்யப்பட்ட அழகிய உருவம் பொருந்தி அழகில் எங்கும் நிகரின்றி ராக்ஷஸாதிபதியின் பலத்திற்குத் தகுந்த சிறந்த மாளிகைபோல் விளங்குகிற புஷ்பக விமானத்தைக் கண்டனன். அது

1. ‘மயேந ஸாக்ஷாதிவ நிர்மிதாநி’ என்று மூலம். இங்கு மயஶப்தம் விஶ்வகர்மாவைக் காட்டுகிறது. (நிர்மிக்கப்பட்டவைகள் போன்று) என்ற இவ சப்தார்த்தத்தினால் மயனை வ்யாஜமாகக் கொண்டு ராவண ப்ரயத்னத்தினால் நிர்மிக்கப்பட்டவையென்று கருத்து. அல்லது மற்ற க்ருஹங்கள் விஶ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டவை; இவை மயனை வ்யாஜமாகக்கொண்டு ராவணன் தானே உபாயங்களைத் தெரிவித்துக் கட்டுவித்தவையென்று கருத்து. இங்ஙனம் கோவிந்தராஜர். விஶ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டவையாயினும் மயன் மேன்மேலும் விசித்ர வேலைகள் செய்தமையால் அவனே நேரில் நிர்மித்தானோ என்னும்படியிருப்பவையென்று மஹேஶ்வரதீர்த்தர்.

தெய்வயோகத்தினால் பூமியில் இறங்கின ஸ்வர்க்கமோ என்னும்படி மிகுந்த ஒளியுடன் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. நானாமணி ஸமூஹங்கள் விளங்கவும் பற்பல மரங்களின் புஷ்பங்கள் நிறையவும் பெற்று மிகவும் உந்நதமாயிருக்கையால் புஷ்பங்களின் தூள்கள் நிறைந்த ஓர் பர்வத சிகரம்போல் விளங்கும்; மிகுந்த ஸௌந்தர்ய காந்திகளால் விளங்குகிற மடந்தையர் மணிகள் உலாவிக்கொண்டிருக்கையால் அது மின்னற் கொடிகளால் திகழ்கிற மேகம்போல் மிகுதியும் ப்ரகாசிக்கும் மற்றும், அது சிறந்த ஹம்ஸப்பறவைகள் கட்டப்பெற்று ஆகாயத்தில் புண்யபுருஷர்கள் ஏறிப் போகிற மிகுந்த ஒளியுடைய உஜ்ஜ்வல விமானம்போல் அனைவராலும் பூஜிக்கப்பட்டிருக்கும் அவ்விமான ரத்னம் சிறந்த ரத்னங்கள் இழைக்கப்பெற்றிருக்கையால் பலவகைத் தாதுக்களால் விசித்ரமாகிய பர்வத சிகரம்போலவும், சுக்ரன் முதலிய க்ரஹங்களும் சந்த்ரனும் அமைந்த ஆகாயம்போலவும், நானாவர்ணங்கள் பொருந்திக் கூட்டங்கூடின மேக ஸமூஹம்போலவும் அற்புதமாகப் புலப்படும். அவ்விமானம் பர்வத ஸமூஹங்களால் விளங்குகிற பூமண்டலம் முழுவதும் [illegible]ரத்தில் எழுதப்பெற்றிருந்தது. அப்பர்வதங்கள் வ்ருக்ஷ ஸமூஹங்களோடு திகழ்வனவாக எழுதப்பட்டிருந்தன. அந்த வ்ருக்ஷங்கள் புஷ்பராசிகளுடன் ப்ரகாசிப்பவைகளாகவும், அப்புஷ்பங்கள் தாதுகளும் இதழ்களும் நிறைந்து ரமணீயமாகவும் எழுதப்பட்டிருந்தன. மேலும் அதில் வெளுத்த மாளிகைகளும், நல்ல புஷ்பங்களோடு கூடின தாமரை யோடைகளும் தாதுகள் நிறைந்த தாமரைப்பூக்களும் சிறந்த சித்ர வனங்களும் நன்கு நிர்மிக்கப்பட்டிருந்தன. இங்ஙனம் ரத்ன காந்திகள் மேன்மேலும் வளர்ந்து வருகையால் பளபளவென்று விளக்கமுற்று மேலான மாளிகைகளைக் காட்டிலும் மேன்மையுற்று மிகுதியும் உயர்ந்து புஷ்பக மென்னும் பெயர்பூண்டு திகழ்கின்ற அம்மஹா விமானத்தை அவ்வானர மஹாவீரன் அங்குக் கண்ட

னன். மற்றும் அதில் வைடூர்யங்களாலும் வெள்ளியாலும் பவழங்களாலும் பறவைகள் செய்யப்பட்டிருந்தன. நானாவித ரத்னங்களால் பலவர்ணங்களையுடைய ஸர்ப்பங்களும் சிறந்த ஜாதியிற் பிறந்து அதற்குத் தகுந்த அழகான அவயவங்களமைந்த அச்வங்களும் நிர்மிக்கப்பட்டிருந்தன. மேலும் அதில் ஏற்படுத்தப் பட்ட பறவைகள் அழகான முகமும் சிறந்த சிறைகளும் அமைந்து அந்தச் சிறைகளின்மேல் பவழங்களாலும் பொன்னாலுஞ் செய்யப்பட்ட புஷ்பங்கள் நிரம்பத் திகழ்வுற்றிருந்தன. மேலும், அவை லீலையாகத் தம் சிறைகளை மடக்கிக்கொண்டிருப்பதைக் கண்டால் மன்மதனுக்கு ஸஹாயஞ்செய்யும்பொருட்டு ப்ரத்யக்ஷமாக இவ்வாறு வடிவங்கொண்டு வந்தனவோ என்னும்படி மேன்மேலும் மன்மத விகாரத்தை விளைத்துக் கொண்டிருந்தன மேலும், தாமரைக் குளங்களில் இழிந்து தம்மைத் தாமே அபிஷேகஞ்செய்ய முயன்று தாமரைப் பூக்களைக்கொண்டு விளையாடுகையால் அவற்றின் தாதுகள் சரீரமெங்கும் துலங்கப்பெற்று, அழகான துதிக்கைகள் அமைந்து அத்துதிக்கைகளில் நெய்தலின் இதழ்களைக் கொண்டிருக்கின்ற யானைகளும், அந்த யானைகளால் அபிஷேகஞ் செய்யப் பெற்று ஸுந்தரமான ஹஸ்தாரவிந்தங்கள் அமைந்து அந்த ஹஸ்தங்களில் கமலங்களைத் தரித்துத் திகழ்கின்ற லக்ஷ்மீதேவியும் சித்ரத்தில் எழுதப்பெற்றிருந்தமையால் அவ்விமானம் மிகவும் அழகாயிருந்தது. இங்ஙனம் அழகாயிருப்பதும் மிக்க மங்களமும் அழகிய பர்வதம் போன்றதுமாகிய அவ்விமானம் முழுவதுந் திரிந்து எவ்வளவு தேன்றும் ராவணனாவது அவனுடைய ஸ்த்ரீகளாவது இருக்கிற இடந் தெரியாமையால் ஆச்சர்யம் அடைந்து, வஸந்தருதுவில் நன்கு புஷ்பித்து நல்ல வாஸனை அமைந்து அழகான குஹைகளோடுகூடின ஓர் பர்வதம்போன்ற அவ் விமானத்தைக் கண்டு அதன் முடிவு காண முடியாமையால் மேலும் வியப்புற்றனன். அப்பால் அந்த

ஹனுமான் ஸமஸ்த பூதங்களாலும் பூஜிக்கப்படுவதும் ராவண புஜங்களால் பாதுகாக்கப்பட்டு வருவதுமாகிய அவ்விலங்கைமாநகரில் புகுந்து முழுவதுந் திரிந்து தேடிப்பார்க்கினும் கணவனது கல்யாணகுணங்களால் அவனுக்கு வசப்பட்டு யாவராலும் நன்கு பூஜிக்கத் தகுந்த ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைக் காணமுடியாமல் மிகுதியும் துயரத்தில் ஆழ்ந்தனன். அப்பொழுது ஸதாசார ஸம்பன்னனும் சிறந்த மதியுடையவனும் அழகிய தூரத்ருஷ்டியும் ஸூக்ஷ்ம த்ருஷ்டியும் அமைந்தவனும் மஹாதைர்யமுடையவனுமாகிய ஹனுமான் பலவித உபாயங்களை மனத்தில் சிந்தித்து மிகுதியும் ப்ரயத்னங்கள் செய்து லங்கை முழுவதுந் திரிந்தும் ஸீதையைக் காணநேராமையால் அவனுடைய மனம் மிகவும் துயரத்தில் ஆழ்ந்தது. ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## புஷ்பக விமான வர்ணனம்.

அனந்தரம் வீரனாகிய அவ்வாயுகுமாரன் வானரன் அம்மஹா க்ருஹத்தின் மத்யத்தில் நிலைநின்றிருப்பதும் ரத்னங்களில் சிறந்த வஜ்ரங்களால் விசித்ரஞ் செய்யப் பட்டதும் உருக்கின ஜாம்பூநதமென்னும் சிறந்த பொன்களால் செய்யப்பட்ட மாயப்பறவை முதலியவற் றால் ப்ரகாசிப்பதுமாகிய அந்தப் பெருவிமானத்தைக் கண்டனன். அதன் நிர்மாணவைகரி இப்படிப் பட்டதென்று வர்ணிக்கவும், இதற்கு நிகர் மற்றொன்று உளதென்று காண்பிக்கவும் ஸாத்யமில்லாதிருந்தது. விஶ்வகர்மா 'இது மிகவும் அழகாயிருக்கிறது' என்று புகழ்ந்துகொண்டே நிர்மித்தனன். (அதை நிர்மிக்கும் பொழுது விஶ்வகர்மாவே அதன் அழகைக் கண்டு 'நல்லது' என்று புகழ்ந்தானென்றால், இனி அதன்

அழகைப்பற்றி வேறு என்ன சொல்லவேண்டும்?) மேலும், அது மிகுதியும் உயர்ந்து ஆகாயத்தை அளாவிக்கொண்டிருந்தது. அது அந்த ராவண க்ருஹத்தில் பூமியில் படாமல் அதற்கு அருகில் ஆகாயத்திலேயே நிலைநின்று மிகவும் உயர்ந்திருக்கையால் ஸூர்ய மார்க்கத்தைக் காட்டுகிற ஓர் அடையாளமோ என்னும்படி விளங்கியது. அவ்விமானத்திலுள்ள வஸ்துவொன்றாயினும் வெகு முயற்சியுடன் நிர்மிக்கப்பட்டிருக்குமேயன்றி வேறில்லை. அதில் எவ்விடம் பார்க்கினும் மிகுந்த விலையுள்ள ரத்னங்களிழைக்கப்பெற்றிருக்குமேயன்றி ரத்னங்கள் இழைக்கப் பெறாத இடமொன்றும் புலப்படாது. அதிலுள்ள விசேஷங்கள் தேவக்ருஹங்களிலும் புலப்படா. அதில் எதுவும் மஹாவிசேஷமுடையதாகிப் பார்க்க அதிசயமாய்த் தோற்றுமேயன்றி அங்ஙனம் தோற்றாததில்லை. மேலும், அது பெருந்தவஞ்செய்தும் மிகுதியும் பராக்ரமத்தைக் காட்டியும் ராவணனால் ஸம்பாதிக்கப்பட்டதேயன்றிக் கேவலமாயிருப்பதன்று. அது, தன்மேல் ஏறிக்கொண்டு எங்கெங்குப் போக வேண்டுமென்று மனத்தில் விரும்பினும் அவ்வவ்விடங்களுக்கெல்லாம் போகவல்லது; மற்றும், விமான கோபுராதி நானாவித ஸந்நிவேச விசேஷங்கள் அமைந்திருக்குமாறு நிர்மிக்கப்பட்டது. அதில் ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு விசேஷம் புலப்படும். அதில் அவ்வவ்விடங்களிலுள்ள சிற்ப விசேஷங்களெல்லாம் ஓரே விதமாக ரமணீயங்களாய்ப் புலப்படுமாகையால் எங்குப் பார்க்கிலும் மிகுதியும் ரமணீயமாயிருக்கும்; தன் ப்ரபுவினுடைய மனத்தை அறிந்த மாத்ரத்தில் மனவூக்கத்துடன் வெகு விரைவில் வாயுவை நிகர்த்த வேகத்துடன் போகும்; அதைத் தடுக்க எப்படிப்பட்டவர்க்கும் தரமன்று; மஹானுபாவர்களும் புண்யவான்களும் மிகுந்த ஸம்பத்துடையவர்களும் புகழ்பெற்றவர்களும் ஆநந்த ஸாகரத்தில் மூழ்கிக்கிடப்பவருமான இந்த்ராதிகளின் இருப்பிடமாகிய ஸ்வர்க்க லோகம்

போல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். அது ரத்னாதி விசேஷ வஸ்துக்களைக்கொண்டு சிற்ப விசேஷங்கள் நிறைந்த ஸந்நிவேசங்கள் அமைந்திருக்குமாறு நிர்மிக்கப்பட்டிருக்கும். மேலும், நானாவிதமான பல சிகரங்களால் அலங்காரமுற்று விசித்ரமான பற்பல அவாந்தர சிகரங்கள் விளங்கப்பெற்ற மஹாபர்வத சிகரம்போல் மனத்திற்கு மிகவும் ரமணீயமாகிச் சரத்கால சந்த்ரன்போல் நிர்மலமாய் ப்ரகாசித்தது. [1] மேலும், குண்டலங்களால் திகழ்கின்ற முகங்களும் பெருப்பெருத்த சரீரங்களும் அமைந்து, ஆகாயத்தில் பறப்பவர்போலவும் மஹாவேகமுடையவர் போலவும் தோற்றங்கொண்டு கோபுரந்தாங்கிகள்போன்று பூதகணங்களை நிகர்த்த உருவத்துடன் கூடின பலவாயிரம் ராக்ஷஸ ப்ரதிமைகள் அவ்விமானத்தைத் தூக்கிக்கொண்டு செல்வதுபோல் நிர்மிக்கப்பட்டிருந்தது. வஸந்த காலத்தில் விளங்குகின்ற புஷ்பஸமூஹம்போல் மனோஹரமாகவும் வஸந்த ருதுவைக்காட்டிலும் ரமணீயமாகவும் புலப்படுகின்ற அந்தப் புஷ்பகமென்னும் விமான ரத்னத்தை வானர வீரர்களில் சிறந்த ஹநுமான் கண்டான்.

எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

1. இங்கு 'வஹந்தி யம் குண்டலசோபிதாநநா மஹாசநா வ்யோமசரா நிசாசரா:| விவ்ருத்தவித்வஸ்த விசாலலோசநா மஹாஜவா பூதகணாஸ் ஸஹஸ்ரச:' என்று மூலம். ராவணாந்தப்புரத்தில் விமானம் இருக்கின்றது. தானே போகும்படியான அவ்விமானம் புருஷர்களால் தூக்கப்படுகை அஸங்கதமாகையால் (பூதகணா:) என்று சொல்லப்பட்ட பூதகணங்களென்பது கோபுரந்தாங்கிகள்போன்ற ப்ரதிமைகளென்று தெரிகின்றது அல்லது சேதனர்கள் தூண்டுதலின்றி அசேதனம் தானாகவே

## புஷ்பக விமான வர்ணனம்.

வாயுகுமாரனாகிய ஹநுமான் மிகவும் சிறப்புற்ற மாளிகைபோல் விளங்குகிற[1] அந்தப் புஷ்பகவிமானத்தின் மத்தியில் விளங்குவதும் அகன்று நீண்டிருப்பதுமாகிய மற்றொரு சிறந்த மாளிகையைக் கண்டனன். அந்த ராவணக்ருஹம் ஒரு யோஜனை நீளமும் அரை யோசனை அகலமும் உடையதாகிப் பலவாயிரம் உப்பரிகைகளோடுகூடிப் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. சத்ருக்களை அழிக்குந் திறமையுடைய ஹநுமான், விதேஹ ராஜன் புதல்வியும் அகன்ற கண்களையுடையவளுமாகிய ஸீதையைத் தேடிக்கொண்டு புஷ்பக விமானந் தவிர மற்றை இடங்களில் ராவண க்ருஹம் வரையில் விஸ்தீர்ணமாயிருக்கின்ற அவன் தம்பிகள் புதல்வர்கள் மந்த்ரிகள் முதலியவர்களின் க்ருஹங்களில் முழுவதும் தேடித்திரிந்தனன். தைர்யலக்ஷ்மீ விலாஸம் பொருந்தின ஹநுமான் உத்தமங்களான ராக்ஷஸ பவனங்களைப் பார்த்துக்கொண்டு சென்று பவனங்களெல்லாவற்றிலுஞ் சிறந்ததும் ஸமஸ்த ராக்ஷஸர்களும் அடுத்துப் பிழைக்குமிடமுமாகிய ராக்ஷஸேந்த்ரனான ராவணனுடைய க்ருஹத்தைக் கண்டனன். (அது புஷ்பகத்தின் நடுவிலிருக்கும் க்ருஹத்தைக் காட்டிலும் மேம்பட்டது. அது ராவணனுடைய மூலஸ்தானம்) அங்கு நான்கு தந்தங்களையுடைய

---

போவது அநுசிதமாகையால் பல்லக்கெடுப்பவர்போல் அவ்விமானத்திற்குப் பூதகணங்கள் வாஹகர்களாயிருந்தார்களென்றுணர்க.

1. இங்கு 'ப்ரஸ்யாலயவரிஷ்஠ஸ்ய' என்று மூலம். கோவிந்தராஜ மஹேஶ்வரதீர்த்தர் வ்யாக்யானங்களின்படி பொருள் கூறப்பட்டது. 'ஆலயவரிஷ்஠ஸ்ய' என்று புஷ்பகத்திற்கு ஆதாரமான வீட்டைச் சொல்லுகிறதென்றும் அதன் மத்தியில் உள்ளது புஷ்பகவிமானமென்றும் ராமாநுஜீய வ்யாக்யானம்.

யானைகளும் மூன்று தந்தங்களுடைய யானைகளும் சுற்றிலுஞ் சூழ்ந்திருந்தன. மேலும், அது நெருக்கமின்றி விசாலமாகி ஆயுதங்களைக் கையிலேந்தின ராக்ஷஸர்களால் பாதுகாக்கப்பட்டு ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அந்த ராவண க்ருஹத்தில் ராவண பத்னிகளாகிய ராக்ஷஸமடந்தையர் பலரும், அவன் பராக்ரமத்தினால் கொண்டுவந்த ராஜகன்னிகைகள் பலரும் நிறைந்திருந்தனர். அங்ஙனம் ஆயுதம் பிடித்த வீரர்களாலும் ஸ்த்ரீகளாலுஞ் சூழப்பட்ட அந்த ராவண க்ருஹம், முதலைகளும் பெருமீன்களும் திமிங்கிலங்களும் மற்றை மீன்களும் ஸர்ப்பங்களும் நிறைந்து வாயுவேகத்தினால் அசைக்கப்பட்ட ஸமுத்ரம்போல் புலப்பட்டது. அந்த ராவண க்ருஹத்தில் ஹனுமான் ப்ரவேசித்தனன். குபேரனிடம் யாதொரு ஸம்ருத்தி உளதோ, பச்சைக் குதிரை வாஹனமுடைய இந்த்ரனிடம் யாதொரு ஸம்ருத்தி உளதோ, அவையெல்லாம் ராவண க்ருஹத்தில் எப்பொழுதும் அழியாதிருந்தன. எல்லாரையும் ஸந்தோஷப்படுத்துகின்ற குபேரனுக்கும் யமனுக்கும் வருணனுக்கும் எப்படிப்பட்ட ஸௌபாக்ய ஸம்ருத்தி உளதோ, அதைப்போன்றதென்றாவது அதைவிட மேற்பட்டதென்றாவது சொல்லக்கூடிய ஸௌபாக்ய ஸம்ருத்தி, கும்பகர்ணன் விபீஷணன் முதலிய மற்ற ராக்ஷஸ க்ருஹங்களொன்றிலுமின்றி வேறு வேறாக விளங்கிக் கொண்டிருந்தது. அந்தக் கைதகான ராவண[1] ஹர்ம்யத்தின் நடுவில் மற்றொரு மந்திரம்போல் நிற்கின்ற புஷ்பகமென்னும் விமானத்தை[2] அப்பவனாத்மஜன் கண்டனன். அது நன்கு நிர்மிக்கப்பட்டுப் பல நிர்யூஹமென்னுங் கட்டடங்கள் அமைந்து ரமணீயமாயிருந்தது. அது பூர்வம் ப்ரஹ்மதேவனுக்காகத் தேவலோகத்தில் விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டதாகையால் திவ்ய

1. ஹர்ம்யம்—பணக்காரர்களுடைய வாஸஸ்தானம்.
2. பவனாத்மஜன்—வாயுகுமாரன்.

மாகி ஸமஸ்த ரத்னங்களும் இழைக்கப்பெற்று அழகாயிருந்தது. அதைக் குபேரன் பெருந்தவஞ் செய்து ப்ரஹ்மதேவனிடத்தினின்று தான் பெற்றனன். ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் குபேரனைப் பராக்ரமத்தினால் ஜயித்து அதைக் கைப்பற்றினான். அது, நன்கு இயற்றப்பட்டவைகளும் செந்நாய் ப்ரதிமைகளோடுகூடினவைகளுமான பொற்கம்பங்களும் வெள்ளிக் கம்பங்களும் அமைந்து காந்தியால் எரிவதுபோல் மிகவும் ப்ரகாசித்தது. அதன் மெத்தைமேலுள்ள க்ருஹங்கள் ரமணீயங்களாகி உருவங்களால் மேரு மந்தர பர்வதங்கள்போன்று மிகவும் உயர்ந்து ஆகாயத்தை உறைவனபோல் நாற்புறத்திலும் புலப்பட்டுக்கொண்டு அதற்கு ஓர் அழகை விளைத்துக்கொண்டிருந்தன. அது விஸ்வகர்மாவால் நன்கு நிர்மிக்கப்பட்டு ஸூர்யன்போலவும் அக்னிபோலவும் விளக்கமுற்றுப் பொற்படிகளும் மிகவும் அழகான சிறந்த திண்ணைகளும் பொருந்தி ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அதில் பொன்னாலும் ஸ்படிக ரத்னங்களாலும் சுவர்களின்மேல் அலங்காரத்தின் பொருட்டு ஸ்வஸ்திகம் முதலிய உருவங்களோடு செய்யப்பட்ட சாளரங்களும் காற்று வீசும்பொருட்டு ஏற்படுத்தப்பட்ட சாளரங்களும் அழகாக விளங்கின. சிறந்த இந்த்ர நீலமணிகளாலும் ஸிம்ஹளத்வீபத்தில் விளைகிற மஹா நீலமணிகளாலும் அங்குள்ள திண்ணைகள் இழைக்கப்பட்டிருந்தன. சிறந்த பவழங்களாலும் மிகுந்த விலையுள்ள ரத்னங்களாலும் நிகரில்லாத குண்டு முத்துக்களாலும் அங்கு நாற்புறத்திலும் தரைகள் படுக்கப்பட்டு விசித்ரமாயிருந்தன. அங்கு நல்ல பொன் வர்ணமுடைய செஞ்சந்தனம் மிகுந்த நன்மணம் வீசப் பெற்றிருந்தது. இங்ஙனம் எழுந்த ஸூர்யன்போல் ப்ரகாசிப்பதும், நானாவிதங்களாகி அழகிய உருவங்களோடு விளங்குகிற மெத்தைமேலுள்ள க்ருஹங்களால் விளங்குவதுமாகிய புஷ்பகமென்னும் அத்திவ்ய விமானத்தின்மேல் அம்மஹாகபி ஆரோஹித்தனன்.

அப்பொழுது அவ்வானர மஹாவீரன் அவ்விடத்தில் நின்று மத்யம் பக்ஷ்யம் அன்னம் ஆகிய இவற்றி னுண்டாகி முழுவதும் வியாபித்து, கந்தம் பொருந்தின திவலைகளோடு கூடியிருக்கையால் உருவந்தரித்த வாயுவோ என்னும்படி விளங்குகிற திவ்யமான ஸௌகந்தத்தை ஆக்ராணஞ்செய்துகொண்டிருந்தனன். அவ்வாஸனை மிகவும் சிறந்திருக்கையால் ராவண னிருக்கிற இடத்தினின்றுமே வீசக்கூடியதென்று ஊஹிக்கத்தக்கதாயிருந்தது. ஆகையால் பந்துவா யிருப்பவன் தனக்கு வேண்டிய பந்துவுக்குச் சொல்வது போல், அப்பரிமளம் 'ராவணன் இதோ இருக்கின்ற னன்; இங்கு வா' என்று ராவணனிருந்த மிடத்திற்கு வரச்சொல்லிச் சிறந்த மதியுடைய அந்த ஹனுமானை அழைத்தாற்போலிருந்தது. அப்பால் ஹனுமான் அந்த ராவணனிருக்கிற இடத்திற்குப் புறப்பட்டனன். அது மிகவும் பெரியதும் மங்களகரமுமான ராவணனது மனத்திற்கு அழகான உத்தம வனிதைபோல் மிகுதி யும் இனிமையை விளைவித்துக்கொண்டிருந்தது. அதில் ரத்னமயமான ஸோபானங்களும் (படிக்கட்டுகளும்) பொற்சாளரங்களும் ஆங்காங்கு விளக்கமுற்றிருந்தன. தரைகள் ஸ்படிக ரத்னங்களால் இழைக்கப்பட்டிருந் தன. அங்கு நடுவில் அழகான தந்தப்பலகைகள் புதைக்கப்பட்டிருந்தன. அதில் முத்துக்களாலும் பவழங்களாலும் பொன்னாலும் வெள்ளியாலும் ரத்னங்களாலும் செய்யப்பட்ட ஸ்தம்பங்கள் நாட்டப் பட்டிருந்தன. மேலும், நடுநடுவில் வேறு பலவகை ஸ்தம்பங்களும் நிறைந்து மிகுதியும் அழகாயிருந்தது. அந்த ஸ்தம்பங்களின் நுனியில் பட்டங்கள் பலவும் விளங்கின. அவ்வுன்னத ஸ்தம்பங்களெல்லாம் ஒன்றை யொன்று நிகர்த்துக் கோணலின்றி நேராகி மிகுதியும் உயர்வுற்று நன்கு அலங்காரஞ் செய்யப்பெற்று அந்த க்ருஹத்திற்கு மிகவும் உயர்ந்த இறகுகள்போல் தோற்றுகின்றமையால் அது ஸ்வர்க்கத்தைக் குறித்துக் கிளம்பிப் பறப்பதுபோல் புலப்பட்டுக்கொண்டிருந்தது.

அதில் ஸமுத்ரங்கள் நதிகள் பர்வதங்கள் வனங்கள் முதலிய பூமியின் சிஹ்னங்களால் சித்ரஞ்செய்யப்பட்ட பெரிய ரத்னகம்பளம் தரையில் விரிக்கப்பட்டிருந்தது. ஆகையால், அது தேச ஸமூஹங்களோடும் பல க்ருஹ பரம்பரைகளோடுங் கூடின பூமண்டலம் போன்றிருந்தது. மற்றும், அது மிகுதியும் அகனறு பக்ஷிகள் மகிழ்ந்துக் கலகலவென்று குலாவவும் திவ்ய கந்தங்கள் வீசவும் பெற்று ப்ரகாசித்தது. அதில் மிகவும் மேலான [1] ஆஸ்தரணங்கள் பரப்பப்பட்டிருந்தன. அதுவே ராக்ஷஸாதிபதியாகிய ராவணனிருக்கும் வஸதி. அது ஓரிடத்தில் அகரு தூபங்களால் புகைசூழப்பெற்றதும் ஓரிடத்தில் நிர்மலமாகி ஹம்ஸங்கள்போல் வெளுத்திருப்பதும் ஓரிடத்தில் புஷ்பங்கள் இறைக்கப் பெற்றிருக்கையால் பலவர்ணமுடையதுமாயிருந்தது. அத்திவ்ய விமானம் பல வர்ணங்கள் அமைந்து, வஸிஷ்டரது காமதேனுவைப்போல் விரும்பினவற்றை யெல்லாம் நிறைவேற்றுவதும் மிகுதியும் காந்தி விளங்கப்பெற்றுக் கண்டோர் மனத்திற்கு மிகவும் ஆநந்தம் விளைப்பதும் நிறத்திற்கும் நிறங்கொடுப்பதும் துக்கங்களை யெல்லாம் போக்குவதுமாகி லக்ஷ்மிக்குப் பிறப்பிடம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. ராவணனால் பாதுகாக்கப்பட்டதாகிய அந்த க்ருஹம், ஸுக ஸ்பர்சமுடைய வாயுவும் கண்களுக்கினிய உருவங்களும் செவிக்கினிய மதுர கானங்களும் மிகுந்த ருசியுள்ள [2] பக்ஷ்யாதிகளும் மனத்திற்கினிய வாஸனையும் அமையப்பெற்றிருக்கையால் அங்குப் புகுபவருடைய பஞ்சேந்த்ரியங்களுக்கும் தன்னிடமிருக்கிற சிறந்த ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்களென்னும் ஐவகை விஷயங்களால், பெற்ற தாய் தன் குமாரனுக்கு த்ருப்தியை விளைப்பதுபோல் மிகுதியும்

---

1. ஆஸ்தரணம்—உட்காரவும் படுக்கவும் விரிக்கப்பட்ட கம்பளம் முதலியவை.

2. பக்ஷ்யாதிகள்—பக்ஷ்யம் முதலியவை.



2055. ஹனுமான் ராவணாந்தப்புரத்தில் ஸீதையைத் தேடுதல்.

த்ருப்தியை விளைவித்தது. வாயுகுமாரனாகிய அந்த ஹநுமான் ராவணனுடைய வாஸஸ்தானமாகிய அம்மாளிகையின் மேன்மையைக் கண்டு வியப்புற்று 'இது ஸ்வர்க்கலோகமோ! அல்லது அதிப்ரதானர்களான முப்பத்துமூன்று கோடி தேவர்களின் ஸ்தானமோ! அதிலும் தேவதைகளனைவர்க்கும் ப்ரபுவாகிய இந்த்ரன் வஸிக்கிற அமராவதி நகரமோ! அல்லது 'பரமஸித்தி' என்று புகழத்தகுந்த ப்ரஹ்மலோகமோ!' என்று நினைத்தனன். அவன் அவ்விடத்தில் [1] ஸ்வர்ணமயமான தீபங்களைக் கண்டனன். அவை அசையாமலிருக்கையால் சிறந்த த்யூதஞ் செய்பவரைப்போல் தோற்றிப் பெருஞ் சூதர்களால் சூதாட்டத்தில் தோல்வியடைந்து அவமானமுற்று மனம் வருத்தத்தினால் அசையாதிருக்கின்ற மனிதர்களைப்போல் புலப்பட்டன. அம்மாளிகையில் விளக்கு வெளிச்சமும் ராவணனுடைய தேஜஸ்ஸும் ஆபரணக் காந்திகளும் முழுவதும் வ்யாபித்திருக்கையால் 'இம்மாளிகை எரிகின்றதோ' என்று நினைத்தனன். அப்பால் அவன் அவ்விடத்தில் காஞ்சனமான வஸ்த்ரங்களையும் பூமாலைகளையும் தரித்துப் பலவித அலங்காரங்களால் விளங்குகிற சிறந்த மாதர்கள் பலவாயிரம் பேர் சித்ர கம்பளங்களில் படுத்திருக்கக் கண்டனன். அவர்களெல்லோரும் ராத்ரியில் பற்பல க்ரீடாரஸங்களை அநுபவித்து இளைப்புற்று அர்த்த ராத்ரி ஆனவுடன் இன்னம் விளையாடுவதில் பூர்ணமாகத் த்ருப்தி உண்டாகாதிருப்பினும் மத்யபான மதத்தினாலும் தூக்கமயக்கத்தினாலும் மெய்ம்மறந்து பலாத்காரமாக அப்பொழுதே நித்ரைபோயினர். அங்ஙனம் அசையாமல் படுத்து மிகுதியும் நித்ரை யடைந்திருக்கையால் அரை நாண் மாலை முதலிய பூஷணங்கள் நிஸ்ஸப்தமாயிருக்கப்பெற்ற அம்மடந்தையர் கூட்டம், அங்ஙனம்

1. 'காஞ்சநாங்' என்று மூலம். இதற்கு ஸ்வர்ண ஸ்தம்பங்களிலிருப்பவையென்று மஹேஶ்வரதீர்த்தர் பொருள் கூறுகின்றனர்.

ராத்ரியில் ஹம்ஸங்களும் வண்டுகளும் நிஶ்ஶப்தமா யிருக்கப்பெற்ற ஓர் பெரிய தாமரைக்குளம்போல் ப்ரகாசித்தது. அவ்வாயுகுமாரன் அங்ஙனம் கண்களையும் பல்வரிசை தோன்றாதபடி உதடுகளையும் மூடிக் கொண்டு நித்ரைபோகின்ற அம்மேலான மாதரசிகளின் தாமரை மணங் கமழ்கின்ற அழகிய முகங்களைக் கண்டனன். அம்மடந்தையர்களின் அழகான முகங்கள் விடியற்காலத்தில் முதலில் தாமரைபோல் மலர்ந்திருந்து, மீளவும் ராத்ரியில் மூடிக்கொள்கிற அம்மலர் போலவே அப்பொழுது ப்ரகாசித்தன. தைர்ய வீர்யாதி லக்ஷ்மீ விலாஸம் பொருந்திய அம்மஹாகபி அம்மடந்தையரது முகங்களின் நன்மணம் முதலிய குணங்களைப்பற்றித் தாமரையை நிகர்த்திருப்பவை யென்று நினைத்தமையால் 'மதித்த வண்டுகள் மெய்ம்மறந்து மலர்ந்த தாமரைகள்மீது தேனுக்காக அடிக்கடி வட்டமிட்டு விரும்புவதுபோல் தாமரை போன்ற இம்முகங்களின்மீதும் வட்டமிட்டு விரும்பும். இது நிஜம்' என்று [1] உபபத்தியைப்பற்றி நினைத்தனன். அங்ஙனம் அந்த ஸ்த்ரீ ரத்னங்களோடு கூடி நிர்மலமாய் விளங்குகிற அந்த ராவண க்ருஹம், நக்ஷத்ரங்களோடு கூடிச் சரத்காலத்தில் நிர்மலமாய் விளங்குகிற ஆகாயம்போல் ப்ரகாசித்தது. அம்மடந்தையர்களால் சுற்றிலுஞ் சூழப்பட்ட ராக்ஷஸாதிபதியாகிய ராவணன் நக்ஷத்ரங்களால் சூழப்பட்டுக் காந்தி மிகுந்திருக்கப்பெற்ற சந்த்ரன்போல ப்ரகாசித்தனன். ஹநுமான் அப்பொழுது அந்த மடந்தையர்களின் அழகைக் கண்டு 'புண்ய சேஷத்துடன் ஆகாயத்தினின்று இதுவரையில் பூமியில் விழுந்த நக்ஷத்ரங்களெல்லாம் ஒன்று கூடி இம்மடந்தையராயின' என்று நினைத்தனன். ஏனென்றால் அங்குள்ள அம்மடந்தையர் மணிகளின் ஸரீரகாந்தியும் நிறமும் தெளிவும், அழகிய காந்தியுடன் விளங்குகிற பெரிய நக்ஷத்ரங்களின் காந்தியும் நிறமும் தெளிவும்போல் ப்ரகாசித்தன.

1. உபபத்தி—காரணம்.

அம்மடந்தையர் மத்ய பானஞ் செய்து ரதிகேளி ஸமயங்களில் பளுவும் பருமனுமுள்ள மாலைகள் தாறு மாறாகவும் ஆபரணங்கள் இடம் தப்பிச் சிதறவும் பெற்று நித்ரையினால் மனம் பறியுண்டிருந்தனர். அம்மாதரசிகளில் சிலர்க்கு நெற்றிப் பொட்டுக்கள் கலைந்திருந்தன. சிலர்க்குச் சிலம்புகள் ஒதுங்கி யிருந்தன. சிலர்க்குக் கழுத்து ஹாரங்கள் பக்கத்தில் நழுவியிருந்தன. சிலர்க்கு முத்து மாலைகள் அறுந்து சரீரத்தில் சுற்றிக்கொண்டிருந்தன. மற்றுஞ் சிலர்க்கு ஆடைகள் அவிழ்ந்திருந்தன. சிலர் அரை நாண் மாலைகள் அறுந்திருக்கப்பெற்றுத் தரையில் புரண்டு கொண்டு இளைப்புத் தீரும்பொருட்டுச் சேணத்தை அவிழ்த்துப் புரளவிட்ட பெண் குதிரைகள்போல் ப்ரகாசித்தனர். மேலான குண்டலங்களை அணிந்த மற்றுஞ் சிலர் அறுந்து சிதறின புஷ்பமாலைகளையுடையவ ராகி அரண்யத்தில் புகுந்து மதித்த யானையால் முறிக்கப்பட்ட புஷ்பக்கொடிகள்போல் புலப்பட்டனர். சில மடந்தையர்களின் கொங்கைமேலிருக்கின்ற ஹாரங்கள் சந்த்ர ஸூர்யர்களின் கிரணம்போல் வெளுத்து மிகவும் பருத்திருக்கையால் ஸ்த்ரீகள் ஸ்தனமத்யத்தில் படுத்துறங்குகின்ற ஹம்ஸங்களோ வென்னும்படி விளங்கின. சில ஸுந்தரிகள் கொங்கை மேல் அணிந்த வைடூர்ய மணி ஹாரங்கள் புகை நிறமுடைய மூக்கும் கால்களும் சிறைகளும் அமைந்து நித்ரைபோகின்ற ஹம்ஸங்கள்போல் தோன்றின. மற்றுஞ் சில மாதர்களின் பொற் சரடுகள் அவர்து கொங்கைமேல் படிந்திருக்கின்ற சக்ரவாகங்கள்போல் திகழ்ந்தன. இங்ஙனம் ஹம்ஸம்போலும் சக்ரவாகம் போலும் விளங்குகின்ற ஹாரங்களையும் பெரிய மணற் குன்றுகள்போன்ற நிதம்பங்களையும் உடைய அப் பெண்மணிகள் பெரிய மணற்குன்றுகள் அமைந்து ஹம்ஸங்களும் நீர்க்காகங்களும் விளங்கப்பெற்ற நதிகள்போல் ப்ரகாசித்தனர். நித்ரைபோகின்ற அம்மாதரசிகள் சதங்கைகளின் வரிசைகள் மொக்குக

ளாகவும் பொற்பூஷணங்கள் பெரிய தாமரைகளாகவும் வாஸனைவசத்தால் மேனியில் தோற்றுகின்ற காமவிலாஸங்கள் முதலைகளாகவும் ஓரங்களில் பரவியிருக்கிற புகழ்பெற்ற மேனியினொளியே கரையாகவும் விளங்கப்பெற்று நதிகளை நிகர்த்து ப்ரகாசித்தனர். சில பெண்களின் ம்ருதுவான அவயவங்களிலும் கொங்கை முலைகளிலும் தரித்திருந்த அழகிய ஆபரணங்களின் வரிசைகள் அவர்மேல் காதலுற்று அவரை அணைந்திருக்குங் காமுகர்போல் இருந்தன. சில மடந்தையர் தரித்திருந்த நுண்ணிய வஸ்த்ரங்களின் நுனிகள் அவரது மூச்சுக்காற்றால் அசைக்கப்பட்டு அடிக்கடி அவரது முகத்தின்மேல் பட்டுக்கொண்டிருந்தன. அழகிய வர்ணங்களையுடைய வஸ்த்ரங்களின் நுனிகள் நானாவிதமான அழகிய சரீர காந்தியுடன் விளங்குகின்ற அந்த ராவண பத்னிகளது முகங்களினருகில் மூச்சுக்காற்றால் அசைந்துகொண்டு காற்றினால் அசைக்கப்பட்ட பதாகைகள்போல் ப்ரகாசித்தன. சிறந்த மேனியின் வர்ணமுடையராகித் திகழ்கின்ற சில மாதரசிகள் தரித்த குண்டலங்கள் பெரிய ரத்னங்களிழைக்கப்பெற்றிருக்கையால் தலையணையினருகில் தொங்கி மூச்சுக்காற்றால் மெல்ல மெல்ல அசைந்துகொண்டிருந்தன. இயற்கையாகவே நன்மணம் அமைந்து சர்க்கரையால் செய்யப்பட்ட மத்யத்தைப் பானஞ் செய்கையால் மேலும் மனோஹரமான கந்தங்கள் வீசப்பெற்று ஸுகத்தை விளைப்பதாகிய அம்மடந்தையரது மூச்சுக்காற்றானது அப்பொழுது ராவணன் மேல் வீசிக்கொண்டிருந்ததாகையால் அவனைப் பணிந்திருப்பதுபோல் புலப்பட்டது. அப்பொழுது ராவண பார்யைகளிற் சிலர் மத்யபானஞ் செய்த மயக்கத்தினால் ராவணனுடைய முகமென்று ப்ரமித்துத் தமது சக்களத்திகளின் முகங்களை அடிக்கடி ஆக்ராணஞ் செய்தனர். அம்மடந்தையர்கள் ராவணனிடத்தில் மிகுதியும் மனப்பற்றுடையவராகையால் மத்யபானத்தினாலும் தூக்க மயக்கத்தினாலும்

ஸ்வாதந்த்ரியமின்றி அங்ஙனம் தமது முகத்தைச் சக்களத்திகள் ஆக்ராணஞ் செய்யும்பொழுது ராவணனே ஆக்ராணஞ் செய்கிறனென்று நினைத்துத் தாமும் அவரது முகத்தை ஆக்ராணஞ்செய்து அவர்க்கு ப்ரியத்தையே செய்தனர். அங்கு மற்றுஞ் சில மடந்தையர் கைவளைகளால் விளங்குகின்ற தமது புஜங்களையும் அழகிய தமது ஆடைகளையும் தலையணையாக வைத்துப் படுத்திருந்தனர். ஒருத்தியின் மார்பில் மற்றொருத்தி தலை வைத்துப் படுத்திருந்தனள். அவளது புஜத்தின்மேல் சிலர் தலையிட்டுப் படுத்திருந்தனர். மற்றொருத்தி வேறொருத்தியின் மடிமேல் தலை சாய்த்துக்கொண்டு நித்ரை செய்தனள். அவளது புஜத்தின்மேல் மற்ற சில ஸ்த்ரீகள் தலைவைத்துப் படுத்திருந்தனர். மற்றுஞ் சில மடந்தையர் ஒருவர்க்கொருவர் ஆடைகளையும் பக்கங்களையும் இடையின் முன் புறத்தையும் நிதம்பத்தையும் தலையணையாக வைத்துக்கொண்டு ஒருவர்மேல் கைகால் முதலிய அவயவங்களைப் போகட்டு இயற்கையில் அவ்வளவு ஸ்னேஹமில்லாதவராயினும் மத்யபானத்தினால் மயங்கியிருந்த ஸ்னேஹமுடையவர்போல் படுத்திருந்தனர். அந்தப் பெண்மணிகளின் கூட்டம் கயிற்றால் ஒருவரோடொருவர் கட்டப்பட்டதுபோல் புஜங்களால் ஒருவரையொருவர் பின்னிக்கொண்டு வண்டுகள் போன்ற தலைமயிர் விளங்கப்பெற்றுப் படுத்திருக்கும் பொழுது நாரில் கோக்கப்பட்டு மதித்த வண்டுகளால் சூழப்பட்டு விளங்கும் பூமாலைபோல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அங்கு அந்த ராவண ஸ்த்ரீகளின் கூட்டமானது, அவரது மூச்சுக்காற்றால் பூமாலைகள் ஒன்றோடொன்று சேரவும் இடுப்பு முடிகள் ஒன்றோடொன்று ஸம்பந்திக்கவும் பெற்று ஒருவர் தோள்மேல் ஒருவர் கைகளைப் போகட்டுக்கொண்டு தலை மயிர்கள் ஒன்றோடொன்று சுற்றிக்கொண்டிருக்கப்பெற்றுப் படுத்திருக்கையில், வஸந்த மாஸத்தில் மலர்ந்து காற்று வீசுகையால் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு

மாலைபோல் புஷ்பஸமூஹங்கள் சேர்ந்து அடிபாகங்கள் ஒன்றோடொன்று கலந்து வண்டுகள் நிறைந்து நுனிகள் பின்னிக்கொண்டு இங்ஙனம் காற்று வேகத்தினால் தாறுமாறாயிருக்கின்ற கொடிகளின் கூட்டம் போல் கலந்திருந்தது. அப்பொழுது அந்த ஸ்த்ரீகளின் ஆபரணங்களும் புஷ்ப மாலைகளும் அவையவை இருக்கவேண்டு மிடத்தில் இருப்பினும், அவர்கள் மாலைபோல் ஒருவரோடொருவர் பின்னிக்கொண்டு படுத்திருக்கையால் 'இவை இவளுடையவை, இவை அவளுடையவை' என்று வேறாகப் பிரித்தறிந்து கொள்ள முடியாதிருந்தன. ராவணன் விழித்துக் கொண்டிருப்பின் அந்த ஸ்த்ரீகளைப் பார்க்க முடியாதாகையால், அங்குப் பொற்கம்பங்களில் வைத்திருக்கும் தீபங்கள், அவன் வேகமாகத் தூங்கிக்கொண்டிருக்கையில் அசையாமல் நாலுவித காந்தியுடன் விளங்குகின்ற அப்பெண்மணிகளை இமைகொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பவைபோல் தோற்றின. ராஜர்ஷிகளின் ஸ்த்ரீகளும் பித்ருதேவதைகளின் பெண்டிர்களும் தைத்யர்களின் வனிதைகளும் கந்தர்வ ஸ்த்ரீகளும் ராக்ஷஸ கன்னிகைகளும் எல்லாரும் அந்த ராவணனைத் தாமே விரும்பி வந்திருந்தனர். அன்றி ராவணன் தானே ஆசைப்பட்டுப் பிடித்துக் கொண்டு வந்தவரல்லர். சிலர் பிடித்துக்கொண்டு வந்தவர்களும் உளர். ஆனால் அவன் அந்த ஸ்த்ரீகளின் பந்துக்களோடு யுத்தம் செய்வேண்டுமென்னும் விருப்பத்தினால் அம்மடந்தைய ரெல்லோரையும் பிடித்துக்கொண்டு வந்தானேயன்றிக் காமவிருப்பத்தினாலன்று. யௌவனமதம் நிறைந்த சில மடந்தையர் மன்மத பாதை பொறுக்கமுடியாமல் தாமே ராவணனைக் கைப்பற்றினர். அங்கு மடந்தையர் மணியாகிய ஜனகராஜன் புதல்வி ஸீதை ஒருத்தி தவிர மற்றவர் அனைவரும் ராவணனைத் தாமே விரும்பி வந்தவரன்றி ராவணனால் பலாத்காரஞ் செய்து கொண்டுவரப்பட்டவரல்லர். ஒவ்வொருத்தியும் ராவண

னது ஸௌந்தர்யாதி குணங்களைக் கண்டு மோஹித்து வந்தவளேயன்றி, அவன் பராக்ரமத்தினால் கொண்டு வரப்பட்டவள் ஒருத்தியும் இல்லை. ஒவ்வொருத்தியும் ராவணனைத் தவிர மற்றெவனையும் விரும்பினவளல்லள் ராவணன் கைப்பற்றுவதற்கு முன்னம் மற்றொருவனை மணம்புரிந்தவள் ஒருத்தியும் அங்கு அகப்படாள். ராவண பார்யைகளில் நற்குலத்தில் பிறக்காதவளும் அழகில் குறைந்தவளும் திறமையில்லாதவளும் உபசாரம் இல்லாதவளும் மன உயர்த்தியில்லாதவளும் அழகியனான ராவணனுக்கு ஆசைப்படத்தகாதவளும் ஒருத்தியும் அகப்படாள். அப்பால் பகைவர்க்குங்கூட மேன்மையை விரும்பும் நற்புத்தியுடையவனும் வானரவீரனுமாகிய அந்த ஹனுமானுக்கு [1] 'ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனுடைய பார்யைகளான

---

1. இங்கு 'ஸைதைவ ஸாத்வீயிஸ்து ஹரீஶவாஸ்ய யதீஶ்ரயீ ராகவதர்மபத்நீ| இமா யதா ராக்ஷஸராஜபார்யா: ஸுஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே:|| புநஶ்ச ஸோசிந்தய தார்த்தரூபோ த்ருவம் விஶிஷ்டா குணதோ ஹி ஸீதா| அதாயமஸ்யாம் க்ருதவாந் மஹாத்மா லங்கேஶ்வர: கஷ்டமநார்யகர்ம' என்று மூலம். (ராகவ தர்மபத்நீ இமா ராக்ஷஸராஜபார்யா யதா ஈத்ருஶீயதி) ராமனது தர்ம பத்னியாகிய ஸீதை, இந்த ஸ்த்ரீகள் ராவணனுக்கு எப்படி பார்யைகளாயிருக்கிறார்களோ, அப்படியே தானும் ஆவாளாயின், அதாவது—ஸ்வயம்வரத்திற்கு முன்னமே ஸீதை ராவணனுக்கு இந்த ஸ்த்ரீகளைப்போல் தர்மபத்னியாவாளாயின் (அஸ்ய ஸுஜாதம்) இவனுக்கு ஸுக்ருதமே ஆகும் என்று (ஸாதுபுத்தே: ஹரீஶவாஸ்ய ஸாத்வீயி: ஸைதைவ) நற்புத்தியுடைய ஹனுமானுக்கு இக்கெடும்புத்தி உண்டாயிற்று. ஹனுமான் நல்ல புத்தியுடையவனாயினும் குரங்குத் தனத்தைப்பற்றி 'ராவணனுக்கு ஸீதை இந்த ஸ்த்ரீகளைப் போலவே பார்யையாயிருப்பாளாயின், அவனுக்குப் பாக்யமே' என்று இக்கெடும் புத்தி உண்டாகப் பெற்றனன். இங்ஙனம் மன வூக்கந்தவறுதலால் இப்படிப்பட்ட துர்ப்புத்தி உண்டானதற்குப் பச்சாத்தாபம் அடைந்து (புநஶ்ச ஸோசிந்தயத்) பாதிவ்ராத்

அப்படியே ஸீதையும் ராமனோடு கூடிப் போகங்களை அநுபவிக்கும்படி ராவணன் அவளை ராமனுக்குத் திருப்பிக் கொடுப்பானாயின், இவன் சிறப்புப் புகழத் தக்கதாயிருக்கும்' என்னும் இவ்வெண்ணம் உண்டாயிற்று. மீளவும், அவன் 'ஆ! ஸீதை பாதிவ்ரத்யம் முதலிய குணங்களில் மிகுதியும் மேன்மையுற்றவள். பெரிய வம்சத்தில் பிறந்தும் லங்கேஸ்வரனாகிய ராவணன் அப்படி இவளை அபஹரித்து வீணபவாதத்தை அடைந்து விலக்கத்தக்கதான காரியத்தைச் செய்தானல்லவா! ஐயோ! என்ன கஷ்டம் வந்தது' என்று சிந்தித்தனன். ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

### ஹநுமான் மந்தோதரியைப் பார்த்து ஸீதையென்று ப்ரமித்தல்.

ஹநுமான் அந்த கர்ப்பூரத்திலும் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்து மேலான ராவணனது மஞ்சத்தைக் கண்டான். அது தேவேந்த்ரனது படுக்கையைப்போல் விளங்கி வைடூர்ய ரத்நங்களால் சிருஷ்டிக்கப்பட்டு உயர்ந்த மணிகளாலும் அலங்காரஞ் செய்யப்பெற்றிருக்கிறது. மேலும் அந்தப் படுக்கையினின்று இழியும்போது இளைப்பாறுவதன்பொருட்டு

---

பட்டார்களோ, (ராவணஸ்ய ஈத்ருஸீ ஸ்யாத் யதி) ஸீதையும் இப்படி ஆவாளாயின் ஸீதையும் இப்படியே ராவணனால் அபஹரிக்கப்படுவாளாயின், (அஸ்ய) இந்த ராவணனுக்கு, (ஸுஜாதம்) நல்லதா? நல்லதன்று. ராவணன் இந்த ஸ்த்ரீகளை அபஹரித்தாற்போலவே ஸீதையையுங்கூட அபஹரித்திருப்பானாயின், இவனுக்கு எள்ளளவும் அது சுபமாகாதென்று புத்திசாலியான ஹநுமானுக்குத் தோற்றியது. இந்த ஸ்லோகத்திற்கு இன்னம் பலவாறாகப் பொருள் கூறுவர். ஆயினும் வளர்த்தியின் பயத்தால் எழுதுகிறிலோம்.

யிருந்த விலையுள்ள மேலான ஆஸனங்கள் சுற்றிலும் போடப்பட்டிருந்தன. அவை ஓரங்களில் தந்தமயமாகவும் அப்புறம் சொஞ்சதூரம் வரையில் பொன்மயமாகவும் இருக்கையால் அந்தந்த இடங்கள் நானாவர்ணங்களமைந்து ரமணீயங்களாயிருந்தன. அவை மற்றை இடங்களெல்லாவற்றிலும் வைடூர்ய மணிகளால் செய்யப்பட்டிருந்தன. அவற்றின்மேல் மிருதுவுஞ் சிறந்த படுக்கைகள் பரப்பப்பட்டிருந்தன. அம்மஞ்சத்தின் ஓர் பக்கத்தில் தலைமாட்டில் மேலான முத்துஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டதும் வெளுத்துச் சந்த்ரன்போல் ப்ரகாசிப்பதுமாகிய ஓர் குடையையும் ஹனுமான் கண்டனன். அங்ஙனம் அவன் கண்ட மேலான மஞ்சமானது பொன்னாற் செய்யப்பட்டு ஸூர்யன்போல் தகதகவென்று விளக்கமுற்றிருந்தது. அதைச் சுற்றிலும் அசோக புஷ்பங்களால் தொடுத்த மாலைகள் கட்டப்பட்டிருந்தன. சாமரந்தரித்த மடந்தையர் அதைச் சுற்றிலும் வீசிக்கொண்டிருந்தனர். பலவகை ஸுகந்தங்கள் மணங் கமழ்ந்தன. மேலான தூபங்க ளிடப்பெற்று அது ரமணீயமாயிருந்தது. அம்மஞ்சத்தின்மேல் சிறந்த படுக்கைகள் பரப்பப்பட்டிருந்தன. ஆட்டின் தோலும் அதன்மேல் மூடியிருந்தது. அது நாற்புறத்திலும் மேலான பூமாலைகளால் அலங்காரஞ் செய்யப்பெற்றிருந்தது. அம்மஹாகபி அந்த மஞ்சத்தின்மேல் ராக்ஷஸ கன்னிகைகளுக்கு ப்ரியனும் ராக்ஷஸர்களுக்கெல்லாம் ஸுகத்தை விளைவிப்பவனுமாகிய ராவணன், ராத்ரியில் நானாவித க்ரீடைகளை நடத்திப் பலவகை மத்யங்களைப் பருகி ஓய்ந்து நித்ரித்துக்கொண்டிருக்கக் கண்டனன். அந்த ராவணன் மேகம்போல் கறுத்துத் தளதளவென்று விளங்கும் குண்டலங்களை அணிந்து சிவந்த கண்களும் நீண்ட புஜதண்டங்களும் அமைந்து விளக்கமுற்றிருந்தனன். அவன் பொன்சரிகை வஸ்த்ரங்களை இடையில் கட்டிக் கமகமவென்று மணங்கமழ்கின்ற செஞ்சந்தனத்தை மேனியில் பூசிக்கொண்டு, ஆகாயத்

தில் மின்னல்களோடுகூடி ஸந்த்யையின் காந்தியால் சிவந்தும் இருக்கிற மேகம்போல் புலப்பட்டனன். மேலும், அவன் திவ்யமான பல ஆபரணங்களைத் தரித்துச் சிறந்த உருவம் அமைந்து காமரூபியுமாகி, வ்ருக்ஷங்களும் அரண்யங்களும் புஷ்பங்களும் அடர்ந்து ஸமுத்ர மதனஞ்செய்த பின்பு நித்ரைசெய்வதுபோல் நிஸ்சலமாயிருக்கின்ற மந்தர பர்வதத்தை நிகர்த்து உலகங்களைக் கலக்கிவிட்டு நித்ரித்துக்கொண்டிருந்தனன். ப்ரகாசிக்கின்ற அம்மஞ்சத்தில் படுத்து நித்ரை போகின்ற ஸர்ப்பம்போல் பெருமூச்சு விடுகின்ற வீரனும் ராக்ஷஸேச்வரனுமாகிய ராவணனை அவ்வானர திலகன் அதிர்ந்துச் சென்று, உடனே "தெய்வமே! இவ்வளவு ஸமீபத்தில் வந்துவிட்டேனோ? என்ன என் புத்தி? இவன் பாபிஷ்டனல்லவா? நமது ஸீதாதேவியை எடுத்துக்கொண்டு போயினனே! இவனருகில் வரக்கூடுமா?" என்று மனத்தில் கலங்கி விலகி மிகுதியும் பயந்தவன்போல் கொஞ்சம் அப்பாற் சென்றனன். அப்பால் அவ்வானரவீரன் படியில் சென்று அங்குள்ள ஒரு திண்ணையில் ஏறிக்கொண்டு நித்ரை செய்கின்ற ராக்ஷஸேச்வரனாகிய ராவணனைக் கண்டனன். தன் காற்றுமேனோக்கின மற்றைய யானைகளை மதம் பிடிக்கச்செய்யவல்லதாகிய [1] கந்தகஜம் படுத்திருக்கப் பெற்றதோர் பெரிய மலைச்சாரலானது மற்றைய யானைகள் வரக்கூடாதிருக்கையால் ஏகாந்தமாயிருப்பதுபோல் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் நித்ரை போகின்றமையால் அம்மேலான மஞ்சமானது பயத்தினால் மற்றெவரும் வரக்கூடாதிருக்கையால் ஏகாந்தமாயிருந்தது. மேலும், மஹானுபாவனாகிய ராவணன் படுக்கையின் மேல் சாய்த்திருக்கிற [2] புஜங்களிரண்டையும் அநு

1. கந்தகஜம்-மதம்பிடித்த யானை.

2. இங்கு ராவணனுக்கு இரண்டு புஜங்களும் இரண்டு தோள்களும் கூறப்பட்டிருக்கின்றன. அவனுக்குக் கைகளிருபதும் தலைகள் பத்தும் இருப்பினும் நினைத்தபடி வடிவங்கொள்ள

மான் கண்டனன். அவ்விரண்டும் பொன் தோள்வளைகள் இடப்பெற்று இந்த்ர த்வஜம்போல் தோன்றின. முன்பு இந்த்ரனுடன் போராடும்பொழுது அவனது ஐராவதத்தின தந்தங்கள் பொதிந்துகொள்கையாலுண்டான வ்ரணக் காய்ப்புகள் அவற்றில் விளங்கிக்கொண்டிருந்தன. பருத்த அவன் தோள்கள் இந்த்ரனுடைய வஜ்ராயுதத்தின் அடிகள் நிகழப்பெற்றிருந்தன. மேலும் விஷ்ணுதேவனுடைய சக்ராயுதத்தின் அழுப்புகளும் அவைகளில் அழகாகத் தோற்றிக்கொண்டிருந்தன. அவை மிகவும் பருத்து வற்றக்குறைவுகளின்றி ஒன்றையொன்று நிகர்த்துத் தோள்கள் நன்றாகத் தீர்ந்து ஸந்திபந்தங்கள் திடமாக அமைந்து சரீரத்திற்குப் பொருந்தி மிகுதியும் பலிஷ்டங்களாயிருந்தன. மேலும், அவை சுபலக்ஷணங்களாகிய நகங்களும் அங்குஷ்டங்களும் அமைந்து விரல்களும் உள்ளங்கைகளும் நிகழ்ந்து ரமணீயங்களாயிருந்தன. அன்றியும் அவை இரும்புத் தடிகள்போல் உருண்டு யானைத் துதிக்கைபோல் பருத்துச்[1] சுப்ரமான படுக்கையில் இடப்பட்டு ஐந்து தலைப் பாம்புகள்போல் ப்ரகாசித்தன. மற்றும், அவை முயலின் ரக்தம்போல் சிவந்து மிகுதியுங் குளிர்ந்து சிறந்த வாஸனைகள் அமைந்த மேலான சந்தனத்தினால் நன்கு பூசப்பட்டிருந்தன; ஆபரணங்களாலும் நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்தன; சிறந்த மடந்தையர்களால் அவை பிடிக்கப்படுபவை; சிறந்த வாஸனைகளும் அமைந்திருந்தன. மேலும், அவை, யக்ஷர்களையும் பன்னகர்களையும் கந்தர்வர்களையும் தேவதைகளையும் தானவர்களையும் யுத்தத்தில் அழப்படுத்திக்கொண்டிருப்பவை. இங்ஙனம் மந்தர பர்வதத்தில் சித்தை

வல்லவனுகையால் ஸ்த்ரீகளை ஸந்தோஷப்படுத்தும்பொருட்டு மன்மத க்ரீடையின் ஸௌகர்யத்திற்காக ஒரு தலையையும் இரு புஜங்களையும் தரித்தானென்று தெரிகின்றது.

1. சுப்ரமான-வெளுப்பான.

செய்கின்ற சினந்த மஹாஸர்ப்பங்கள்போல் படுக்கையின்மேல் நீட்டப்பட்ட புஜங்களிரண்டையும் ஹநுமான் கண்டனர். பெரிய பர்வதம்போல் ப்ரகாசிக்கின்ற அந்த ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் நீண்டு பருத்துருண்ட அப்புஜதண்டங்களால் இரண்டு சிகரங்களையுடைய மந்தர பர்வதம்போல் ப்ரகாசித்தனன். அங்ஙனம் ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணன் படுத்து நித்ரித்துக்கொண்டிருக்கையில் அவனது பெருமுகத்தினின்று மூச்சுக்காற்றானது மா புன்னை இவற்றின் பரிமளங்களும் சிறந்த மகிழம்பூ வாஸனையும் ஷட்ரஸங்களும் அமைந்த அன்னத்தின் வாஸனையும் நிறைந்து மத்யவாஸனையை முன்னிட்டுக்கொண்டு அந்தப் படுக்கையறை முழுவதையும் நிறைப்பது போன்று வெளிவந்தது. முத்துக்களும் ரத்னங்களும் இழைக்கப்பெற்றிருக்கையால் நாநாவர்ணமுடையதாகி வியப்புறச் செய்வதும் தூக்கத்தினால் கொஞ்சம் இடந்தவறியிருப்பதுமாகிய பொற்கிரீடமும் அவனது காந்தியை மேன்மேலும் வளர்த்திக்கொண்டிருந்தது. குண்டலங்களின் காந்தியால் அவனது முகம் மிகுதியும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. பருத்து நீண்டு விசாலமாயிருக்கின்ற அவனது மார்பு செஞ்சந்தனம் பூசப்பட்டுத் தளதளவென்று விளங்குகின்ற ஹாரத்துடன் கூடித் திகழ்ந்தது. அவன் உடுத்திருந்த வெண்பட்டு வஸ்த்ரமானது நித்ராவசத்தினால் கொஞ்சம் நழுவியிருந்தது. ரக்தம்போல் சிவந்த கண்களையுடைய அவ்வரக்கன் மிகுந்த விலையுள்ள மேலான பீதாம்பரத்தை உத்தரீயமாகச் சுற்றிக்கொண்டிருந்தனன். மேலும், அவன் உளுந்துராசிபோல், கறுத்து ஸர்ப்பம் போல் பெருமூச்செறிந்துகொண்டிருந்தனன். இங்ஙனம் வெளுத்த படுக்கையில் படுத்து, அகன்ற கங்கையின் ப்ரவாஹ மத்யத்தில் நித்ரித்துக்கொண்டிருக்கிற யானைபோல் புலப்பட்டுக்கொண்டு, நாற்புறத்திலும் ஸ்தம்பங்களில் வைக்கப்பட்டிருக்கிற நான்கு ஸ்வர்ண தீபங்கள் ப்ரகாசித்துக்கொண்

டிருக்கையால் ஸமஸ்த அவயவங்களும் நாற்றிசையிலும் தெளிவாகத் தோன்ற ஆபரணங்களை அணிந்திருக்கையால் மின்னற்கொடியோடு கூடின மேகம்போல் ப்ரகாசிப்பவனும், மிகுதியும் மஹானுபாவனுகையால் பார்வைகளின் மனத்திற்கு மிகவும் இனிப்பைக் கொடுப்பவனுமாகிய அந்த ராக்ஷஸாதிபனானது பாதமூலத்தில் (காற்கடையில்) இருக்கின்ற அவனது பத்னிகளையும் ஹநுமான் கண்டனன். அந்த ராக்ஷஸேச்வரனது க்ருஹத்தில் சந்த்ரன்போல் திகழ்கின்ற அழகான முகமுடையவர்களும் சிறந்த குண்டலங்களை அணிந்து விளங்குவோர்களும் வாடாத பூமாலைகளையும் பூஷணங்களையும் தரித்திருப்பவருமாகிய அந்த ராவணனது பார்யைகளை அக்கபியூதநாதன் கண்டனன். அப்பால் அவ்வானர வீரன், நாட்யங்களிலும் வாத்யங்களிலும் கைதேர்ந்து ராக்ஷஸேந்த்ரனது புஜங்களிலும் தொடைகளிலும் உட்காரும்படி அவனுக்கு வல்லபைகளாகி மேலான ஆபரணங்களைத் தரித்துப் படுத்திருக்கிற ஸ்த்ரீகளைக் கண்டனன். அம்மடந்தையர் கைகளைத் தலையணையாக வைத்துக்கொண்டு படுத்திருக்கையால் வஜ்ரங்களும் வைடூர்யங்களும் இழைக்கப்பெற்ற பொற்குண்டலங்களும் தோள்வளைகளும் காதுகளின் ஓரங்களில் ஸம்பந்தித்திருக்கக் கண்டனன். சந்த்ரன்போல் ஸுந்தரங்களான அந்த ஸுந்தரிகளின் முகங்கள் அழகிய குண்டலங்கள் அமைந்து மேன்மேலும் ரமணீயங்களாகி விளங்கப்பெற்று அவ்விமானம் நக்ஷத்ரஸமூஹங்களோடுகூடின ஆகாயம்போல் ப்ரகாசித்தது. நுண்ணிய அழகான இடையுடைய அந்த ராக்ஷஸாதிபதியின் மடந்தையர் மிகுதியும் மத்யமதத்தினாலும் ரதிகேளியாலும் இளைப்புற்று அவ்வோ இடங்களில் படுத்து நித்ரித்துக்கொண்டிருந்தனர். சிறந்த அழகுள்ள ஓர் பெண்மணி நடனத்தில் திறமையுடையவளாகையால் வாஸனாபலத்தினால் தூக்கத்திலும் ம்ருதுவான அபிநயங்களால் அழகான அவயவங்கள் அசையப்பெற்று நித்ரை

செய்தனள். வீணையை அணைத்து நித்ரைபோகின்ற ஓர் பெண்மணி, நதியில் மிதந்துசென்று தெய்வாதீனமாய்த் தெப்பத்தைப்பற்றி வேர்களும் தண்டுகளும் இதழ்களும் அழியாதிருக்கப்பெற்ற ஓர் தாமரைக் கொடிபோல்ப்ரகாசித்தனள். கறுத்த கண்களையுடைய மற்றொரு மடந்தை டமண்டயமென்னும் வாத்யத்தைக் கக்ஷத்தில் வைத்து நித்ரித்துக்கொண்டு, இளம் பிள்ளையையுடைய ஒருத்தி அந்தப் பிள்ளையினிடம் ப்ரீதியால் அதை அணைத்திருப்பதுபோல் ப்ரகாசித்தனள். ஸௌந்தரமான ஸமஸ்த அவயவங்களும் திரண்டுருண்ட கொங்கைகளும் அமைந்த ஓர் பெண்மணி, வெகுகாலமாகப் பிரிந்திருந்த தன் காதலனை மீளவும் அடைந்து ஆசைதீர அழுந்த ஆலிங்கனஞ் செய்வதுபோல், தப்பட்டையைத் தழுவிப் படுத்திருந்தனள். தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஓர் அங்கனை, ஏகாந்தத்தில் தனது ஆசைநாயகனை அவாவுற அழுந்தக் கட்டியணைக்குங் காமுகிபோல், புல்லாங்குழலை அணைத்து நித்ரித்துகொண்டிருந்தனள். நியமங்களையுடையவளும் நர்த்தனத்தில் தீங்கவளுமாகிய மற்றொரு வனிதை எழுதந்திகளமைந்த வீணையைப் பிடித்து நித்ரைசெய்பவளாகிக் காதலனைக் கட்டியணைத்து நித்ரைபோகின்ற ஓர் காமினிபோல் புலப்பட்டனள். மதம் பொருந்தின கண்களையுடைய ஓர் மடந்தையர்மணி, ஸ்வர்ணம்போல்ப்ரகாசிப்பனவைகளும் மென்மை யமைந்து பருத்து மனத்திற்களிப்பைக் கொடுப்பனவைகளுமாகிய அங்கங்களால் பத்தளத்தைக் கெட்டியாகத் தழுவி நித்ரித்துக்கொண்டிருந்தனள். நுண்ணிய இடையுடையவளும் தோஷங்களொன்றுமின்றி அழகாயிருப்பவளுமாகிய ஓர் அங்கனை மத்யபானத்தினால் மதங்கொண்டு வாத்யம் வாசித்தமையால் இளைப்புற்றுப் பணவமென்னும் வாத்யத்தைப் புஜத்திற்கும் பார்ஶ்வத்திற்கும் இடையிலிருக்குமாறு கக்ஷத்தில் வைத்துக்கொண்டு நித்ரைசெய்தனள்.

மற்றோர் ஆடவள் கையால் ஒரு[1] டிண்டிமத்தையும் மற்றொரு கையால் மற்றொரு டிண்டிமத்தையும் அணைத்துப் படுத்துக்கொண்டு வயதுள்ள காதலனை யும் புதல்வனையும் அணைத்துக்கொண்டிருக்கும் வனிதைபோல் ப்ரகாசித்தனள். தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஓர் இளம்பிடி ஆடம்பரமென்னும் வாத்யத்தை இரு கைகளாலும் கெட்டியாக நடுவில் அணைத்து மத்யபான மதத்தினால் மெய்ம்மறந்து நித்ரித்துக்கொண்டிருந்தனள். மற்றொரு காரிகை ஜலம் நிறைந்த கலசத்தைத் தரித்துத் தன்மேல் கவிழ்த்துக்கொண்டு குங்குமாதிரஸங்கள் கலந்த அந் நீரில் கொஞ்சம் நனைந்து நித்ரித்துக்கொண்டு வஸந்த ருதுவில் வாடாதிருக்கும்பொருட்டு ஜலம் தெளிக்கப் பெற்றதும் புஷ்பங்களால் நானாவர்ணமுமான பூமாலை போல் புலப்பட்டனள். ஓர் மங்கை பொற்கலசங்கள் போன்ற கொங்கைகளிரண்டையும் கைகளால் பிடித்துக்கொண்டு கடுநித்ரையால் மெய்ம்மறந்து படுத்து நித்ரித்துக்கொண்டிருந்தனள். தாமரை போன்ற கண்களும் பூர்ணசந்த்ரன்போன்ற அழகிய முகமும் பொருந்தின ஓர் ஸுந்தரி மதத்தினால் மெய்ம் மறந்து அழகான பின்புறமுடைய மற்றொரு மடந்தையை ஆலிங்கனஞ்செய்து நித்ரித்தனள். மற்றுஞ் சில உத்தம காந்தைகள், காமினிகள் தாம் விரும்பின காதலர்களைப்போல் நானாவித வாத்யங்களை அணைத்து அவற்றைத் தமது கொங்கைகளால் இறுக்கிக்கொண்டு நித்ரைசெய்தனர். அம்மடந்தை யர்களினிடையில் ஏகாந்தத்தில் இடப்பட்ட ஓர் மேலான சயனத்தில் படுத்து ஸௌந்தர்யத்தின் மிகுதி யால் திகழ்கின்ற மற்றொரு மடந்தையை (மந்தோ தரியை) அவ்வானரன் கண்டனன். அப்பெண்மணி முத்துக்களும் ரத்னங்களும் இழைக்கப்பெற்ற பூஷணங்களை மிகுதியும் அணிந்திருந்தனள். அவ் வங்கனை தன் சரீர காந்தியால் சிறந்த அம்மாளிகை

1. டிண்டிமம்—உடுக்கையின் விசேஷம்.

## ஹநுமான் மீளவும் அந்தப்புரத்தில் ஸீதையைத் தேடுதல்.

ஹநுமான் அப்பால் மந்தோதரியை ஸீதையென்று நினைத்த அப்புத்தியை விட்டு எப்பொழுதும் போல் மனங்குதிரப் பெற்றனன். அம்மஹாகபி ஸீதையைக்குறித்து மற்றொருவிதமாக ஆலோசித்துக் கொண்டு 'அந்தப் பதிவ்ரதையான ஸீதை ராமனைப் பிரிந்து இங்ஙனம் ஸுகமாக நித்திரைபோகமாட்டாள்; போஜனஞ் செய்யமாட்டாள்; அலங்காரமுஞ் செய்து கொள்ள மாட்டாள்; மத்யபானஞ் செய்யாள்; ராமனைக் காட்டிலும் மற்றொருவனைத் தேவேந்த்ரனையாயினும் கைப்பற்ற மாட்டாள். ஏனென்றால் — ராமனுக்கு நிகரானவன் மனுஷ்யர்களில் ஒருவனும் அகப்படானென்பது ஸித்தமே; தேவதைகளிலுங்கூட அப்படிப் பட்டவன் எவனும் இல்லை. ஆகையால், இவள் ஸீதை அன்று; வேறெவளோ ஒருத்தி' என்று நிச்சயித்து அங்கிருந்து பானசாலைக்குச் சென்று திரிந்தனன். அங்குச் சில யுவதிகள் க்ரீடைகள் செய்து இளைப்புற்றுப் படுத்திருந்தனர். மற்றுஞ் சிலர் பாட்டுகள்பாடி ஶ்ரமப்பட்டு நித்திரித்துக்கொண்டிருந்தனர். சிலர் நர்த்தனஞ் செய்து இளைப்புற்று உட்கார்ந்திருந்தனர். மற்றுஞ் சிலர் மத்யபானஞ் செய்து மெய்ம்மறந்து நித்திரித்துக்கொண்டிருந்தனர். முரஜங்களையும் மத்தளங்களையும் பீடங்களையும் தலையணைகளாக வைத்துக் கொண்டு சில ஸுந்தரிகள் படுத்திருந்தனர். மற்றுஞ் சில மடந்தையர் மிருதுவுஞ் சிறந்த படுக்கையில் படுத்து நித்திரித்துக்கொண்டிருந்தனர். ஸமஸ்த ஆபரணங்களையும் அணிந்து, தமது ஸௌந்தர்யத்தையும் தமது காதலனாகிய ராவணனுடைய [1] ராமணீயகத்தையும் வர்ணிக்குந் தன்மையுடையவராகிப் பாட்டுக்களின் பொருள்களை அமைந்திருக்குமாறு மொழிந்து கொண்டு தேச காலங்களை அறிந்த அழகான உரை

1. அழகையும்.

களைப் பேசுகின்ற அனேகமாயிரம் பெண்மணிகளோடு பாஹ்ய ஸுராதங்களையும் பந்தாதிகளையும் அனுபவித்து இளைப்புற்று நித்திரை செய்கின்ற ராவணனை அவ்வானர யூதநாதன் கண்டனன். மஹாபுஜனும் ராக்ஷஸர் தலைவனுமாகிய அந்த ராவணன் அந்தப் பெண்மணிகளின் நடுவில், பெரிய தொழுவத்தில் ஆநிரையினிடையில் இருக்கின்ற காளைபோல் ப்ரகாசித்தனன். ராக்ஷஸேந்த்ரனாகிய அந்த ராவணன் அம்மடந்தையர்களால் சூழப்பட்டு மஹாரண்யத்தில் பெண்யானைகளால் சூழப்பட்ட மதகஜம் போல் புலப்பட்டுக்கொண்டிருந்தனன். அந்த வானரஸிம்ஹன், மஹானுபாவனும் ராக்ஷஸர் தலைவனுமாகிய அந்த ராவணனது க்ருஹத்தில் ஸமஸ்த வஸ்துக்களும் நிறைந்த பானபூமியைக் கண்டனன். அவன் அந்தப் பான பூமியில் மான்களுடையவும் எருமைக்கடாக்களுடையவும் பன்றிகளுடையவும் மாம்ஸங்கள் வேறு வேறு பிண்டங்களாக வைத்திருக்கக் கண்டனன். அந்த வானரவீரன் அகன்ற பொன் பாத்ரங்களில் மயில்களையும் கோழிகளையும் சேதஞ் செய்யாமல் அப்படியே பசனஞ்செய்து வைத்திருக்கும் மாம்ஸங்களையும் பாதி சாப்பிட்டு மிகுந்திருக்கின்ற பலவற்றையும் கண்டனன். ஹனுமான் அவ்விடத்தில் தயிரும் ஸௌவர்ச்சல லவணமுஞ் சேர்த்து மணமிட்டு வைத்திருக்கின்ற பன்றி மாம்ஸங்களையும் ஓர் வகை ஆட்டு மாம்ஸங்களையும் முள்ளம்பன்றி மாம்ஸங்களையும் மான் மாம்ஸங்களையும் மயில் மாம்ஸங்களையும் கண்டனன். அவன் பசனஞ் செய்யப்பட்ட பலவாறான மீன்குக்குடங்களும் பறவைகளின் மாம்ஸங்களையும் பாதி பக்ஷிக்கப்பட்டு மிகுந்திருக்கிற சகோரபக்ஷி மாம்ஸங்களையும் எருமைக்கடாமாம்ஸங்களையும் ஏகசல்யங்களென்னும் மத்ஸ்ய மாம்ஸங்களையும் கூடிய வரையில் நன்கு பசனஞ் செய்யப்பட்ட ஆட்டுமாம்ஸங்களையும் நக்கத் தகுந்த தேன் முதலியவற்றையும் பலவகைப் பானகங்களையும் நானாவித போஜ்ய பதார்த்தங்களையும் கண்டனன். உப்பும் புளிப்பும் மிகுந்திருக்கவும்

வெள்ளைக்கடுகு மணஞ் சேர்க்கவும் பெற்று ஷட்ரஸங் களுங் கலந்து செய்யப்பட்ட பலவகைப் பக்ஷ்ய விசேஷங்களையும் கழற்றிவைக்கப்பட்ட மிகுந்த விலை யுள்ள ஹாரங்களையும் தண்டைகளையும் தோள்வளை களையும் மத்யபானஞ் செய்யும் பாத்ரங்களினின்று அப்புறம் எடுத்து வைக்கப்பட்ட பலவகைப் பழங்களை யும் உடையதாகிப் புஷ்பங்கள் இறைக்கப்பெற்ற அந்த பான பூமியானது மிகுதியும் சோபையுடன் ப்ரகா சித்துக்கொண்டிருந்தது. அந்தப் பானபூமியில் ஆங் காங்கு மிகவுங் கெட்டியான வஸ்திரங்களையுடைய சயனங்களும் ஆஸனங்களும் வைக்கப்பட்டிருந்தன. அவை ஸ்வர்ணமயங்களாய்ப் பெருங்காந்தி பெற்றிருக்கை யால் அந்தப் பானபூமி நெருப்பின்றியே பற்றிக் கொண்டெரிவதுபோல் புலப்பட்டுக்கொண்டிருந்தது. ஹனுமான் அவ்விடத்தில் பலவகை ஸூதர்களால் செய்யப்பட்டவையாகையால் நானாவித ரஸங்கள் அமைந்தவைகளும் மேன்மையான ஸம்பாரங்களைச் சேர்த்து மிகுதியும் நிபுணர்களான சமையற்காரர்களாற் பக்வஞ் செய்யப்பட்டு ஸித்தமாகிப் பானபூமியில் வேறு வேறாக வைக்கப்பட்டிருப்பவைகளுமான நானாவித மாம்ஸங் களையும் அம்ருத மதனஞ்செய்யும்பொழுது உண்டான தெளிந்த பலவகை மத்யங்களையும், அன்றியும் சர்க்கரை யாற் செய்யப்பட்ட மத்யங்களையும் புஷ்பரஸங்களால் இயற்றின மத்யங்களையும் பழங்களின் சாறுகளால் செய்த மத்யங்களையும் ஆகிய இயற்கையான மத்யங் களையும் செயலால் தீர்ந்த மத்யங்களையும் வாஸனையின் பொருட்டுத் தூவின பலவகைக் கந்தப் பொடிகளையும் கண்டனன். இங்ஙனம் அந்தந்த மாம்ஸங்களும் மத்யங் களும் வேறுவேறாகக் கந்தப்பொடி இடப்பெற்றிருக் கையாலும் பலவாறாகத் தொடுக்கப்பட்ட புஷ்பமாலை களும் வெள்ளியாலும் ஸ்படிகங்களாலும் செய்யப் பட்டபலவகைப் பாத்ரங்களும் நிறைந்திருக்கையாலும், மேலும் பொன்னாற் செய்த வேறு பானபாத்ரங்கள் நாற்புறமும் ஆங்காங்கு நிறைந்திருக்கையாலும்

அந்தப்பூமி முழுவதும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அவ்வானரவீரன் அப்பொழுது அவ்விடத்தில் வெள்ளிக்குடங்களிலும் பொற்குடங்களிலும் நிறுத்தியும் வைக்கப்பட்டிருக்கின்ற மேலான மத்யத்தைக் கண்டனன். அன்றியும் அவ்விடத்தில் பொன் பாத்ரங்களும் ரத்னங்களால் செய்த பாத்ரங்களும் வெள்ளிப் பாத்ரங்களும் எல்லாம் மத்யங்கள் நிறைந்திருக்கக் கண்டனன். மற்றும் அவன் ஓரிடத்தில் பாதிப்பருகி யிருந்த மத்யங்களையுடைய பாத்ரங்களையும், மற்றோ ரிடத்தில் மத்யம் முழுமையும் பானஞ் செய்யப்பட்டிருக் குன்யமாயிருக்கின்ற பாத்ரங்களையும், ம[illegible] சிறிதும் பருகப்படாமல் அப்படியே நிறைந்திருக்கின்ற பாத்ரங்களையுங் கண்டனன். அந்த [illegible] ரிடத் தில் பலவகைப் பக்ஷ்யங்களையும், [illegible] பங்கிட்டு வைக்கப்பட்ட மத்யங்களையும், [illegible] புளி[illegible]ருக்கின்ற [illegible]களையும், [illegible] தில் பாத்ரங்கள் உடைந்திருப்பதையும், [illegible] தாறுமாறாகச் சிதறிக்கிடப்பதையும், [illegible] கலந்திருக்கின்ற [illegible]களையும் [illegible]களையும், மற்றும் பலவகைப்பட்டு சிதறியிருக்கின்ற [illegible] படுக்கைகளையும், ஒருவரையொருவர் அணைந்துக் கொண்டு நித்ரை செய்கின்ற சிறந்த மடந்தையர் சிலரையும், மற்றும் ஒருத்தி நித்ரித்துக்கொண்டிருக் கையில் அதிகமயக்கத்தினால் தெரியாமல் அன்னிய வஸ்த்ரத்தை இழுத்து உடுத்துக்கொண்டு நித்ரை போகின்ற சில மாதர்களையும் பார்த்துக்கொண்டே ஸஞ்சரித்தனன். அந்தப் பெண்களின் மூச்சுக்காற்று வீசுகையில், அவரது மேனியிலிருக்கின்ற [illegible] வஸ்த்ரங்களும் புஷ்பமாலைகளும் மந்தமாருதத்தினால் அசைக்கப்பட்டவைபோல் மெல்ல மெல்ல அசைந்து கொண்டிருந்தன. அங்குக் குளிர்ந்த சந்தனத்தினுடை யவும் இனிய மத்ய ரஸத்தினுடையவும் பலவகைப் பூமாலைகளுடையவும் க்ருஹங்களுக்கு வாஸனை யேற்றும்பொருட்டு இடப்பட்ட பலவகைத் தூபங்க

ளுடையவும் நானாவித ரஸங்களுடையவும் ஸுகந்தித்திற்குரிய சந்தனங்களுடையவும் தலைமயிர்களுக்குவாஸனையேற்றுந் தூபங்களுடையவும் பலவாறான அந்தந்த வாஸனைகளைக் கொள்ளைகொண்டு காற்று பலவாறாக வீசிக்கொண்டிருந்தது. அதனால் கமகமவென்று க்ராணேந்த்ரியத்திற்கு மிகுதியும் த்ருப்தியை விளைக்க வல்ல நறுநாற்றமானது அந்தப் புஷ்பகவிமானம் முழுமையும் வ்யாபித்திருந்தது. அந்த ராக்ஷஸாலயத்தில் சில மடந்தையர் பச்சை நிறமுடையவர்களும் மற்றுஞ்சிலர் வெண்மை நிறமுடையவர்களும் மற்றுஞ்சிலர் பொன் வர்ணமுடையவர்களுமாகிப் படுத்து நித்ரித்துக்கொண்டிருந்தனர். அவர்கள் ஆசைதீர மன்மத க்ரீடைகளை நடத்தி இளைப்புற்று நித்ரைக்கு உட்பட்டிருந்தும் அவரது உருவம் ராத்ரிவேளையில் மூடிக்கொண்டிருக்கிற தாமரைக்கொடிகளின் உருவம் போல் அழகாயிருந்தது. மிகுதியும் தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ற அக்கபிகுஞ்சரன் இங்ஙனஞ் சிறிதும் விடாமல் ராவணனது அந்தப்புரம் முழுவதும் சுற்றிப் பார்த்தனன்; அன்றி ஸீதையைமாத்ரங் காணவில்லை. அம்மாருதி அப்பொழுது அந்த ஸ்த்ரீகளை அங்ஙனம் பார்த்துக்கொண்டிருந்து, உடனே பரஸ்த்ரீகளைப் பார்ப்பதனால் தர்மலோபம் நேரிடுமே யென்னும் பயத்தினால் பார்க்கக்கூடுமோ கூடாதோ என்று சங்கித்தவனாகித் தனக்குள், 'இங்ஙனம் பெருநித்ரையில் ஆழ்ந்து மெய்ம்மறந்து பரஸ்த்ரீகள் படுத்திருக்கையில் அவர்களைக் கண்டனன். இது எனக்கு மிகுதியும் தர்மலோபத்தை விளைக்குமே. நான் ஒரு காலும் பரஸ்த்ரீகளைப் பார்க்கவேண்டுமென்று அவர்மேல் கண் வைத்ததில்லை? அப்படியிருந்தும் நான் பிறனால் கைப்பற்றப்பட்ட பெண்டிர்களைக் கண்டனனே! இது யுக்தமாகுமா! என்று மிகுதியுஞ் சிந்தித்தனன். அந்த ஹநுமானுடைய மனம் மிகவும் கம்பீரமானது; அது எப்பொழுதும் எந்த மாறுதலும் பெறாமல் நியமத்துடன் ஒரே ரீதியாயிருக்கும். ஆகையால் அவனுக்கு

அந்தப்புரத்தில் தேட முயன்றனன். பதினொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹநுமான் ஸீதை அகப்படாமையால் பலவாறு சிந்தித்து மீளவும் அந்தப் புரத்தில் தேடுதல்.

அந்த ஹநுமான் ஸீதையைக் காணவேண்டுமென்னும் விருப்பத்துடன் ராவண க்ருஹத்தின் இடையிலிருக்கிற கொடிமாடங்களிலும் சித்ரக்ருஹங்களிலும் ராத்ரி காலங்களில் வஸிக்கும் க்ருஹங்களிலும் முழுமையும் தேடியும் கண்களுக்கினியளாகிய ஸீதையைக் காணவில்லை. அவ்வானர மஹாவீரன் அங்ஙனம் எவ்வளவு தேடியும் ராமனது ப்ரியபத்னியாகிய ஸீதையைக் காணாமல் தனக்குள் 'நான் எவ்வளவு தேடிக் கொண்டிருப்பினும் ஸீதை அகப்படாதிருக்கின்றனளே. ஆகையால் ஸீதை நிச்சயமாக மரணம் அடைந்திருப்பாள். ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை பாதிவ்ரத்யமென்னும் சிறந்த பூஜ்யமார்க்கத்தில் எப்பொழுதும் தவறாதிருப்பவள். ஆகையால் தன்னை ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் எவ்வளவு நிர்ப்பந்தித்த போதிலும் தன் பாதிவ்ரத்யத்தைக் காப்பாற்றிக் கொள்வதிலேயே முயற்சியுடையவளாகி அவனுக்கு உட்படாமலே இருப்பாள். அதனால், அவன் அதிதுஷ்ட கார்யங்களையும் முன்பின் பாராமல் செய்பவனாகையால் பாபமென்று நினையாமல் அப்பெண்மணியைப் பிடித்துக் கொன்றிருப்பான். ஜனகராஜன் புதல்வியாகிய அந்த ஸீதை, ஏற்றக்குறைவான அவயவங்களும் விகாரவேஷங்களும் அமைந்து சிறிதும் காந்தியில்லாமல் பெருப்பெரிய முகங்களும் நீண்டு விகாரமான கண்களும் உடைய ராவணனது வேலைக்காரிகளான

பெண்களைப் பார்த்துப் பயந்து ப்ராணனை விட்டிருக்கக் கூடும். ஸீதையைக் காணாமல், பகைவன்மேல் பராக்ரமத்தையும் நிறைவேற்றாமல், வானரர்களும் நானும் வெகுகாலம் திரிந்து கடத்திவிட்டோமாகையால் இப்பொழுது ஸுக்ரீவனிடம் போக எனக்குச் சிறிதும் ஸாத்யமில்லை. அங்ஙனம் போவேனாயின், அவன் பலிஷ்டனும் மிகக்கொடிய தண்டனை செய்பவனுமாகையால் என் ப்ராணன்கள் தங்கா. ராவணனது அந்தப்புரம் முழுவதும் தேடிப்பார்த்தனன். ராவணனது பார்யைகளெல்லோரையும் பார்த்தனன். பதிவ்ரதையாகிய ஸீதையை மாத்ரம் காணப்பெற்றிலேன். என் ப்ரயாஸமெல்லாம் வீணாய் விட்டது. ஸீதையைக் காணாமல் கபிராஜனிடம் போகையில், என்னைப் பார்த்து அங்கதன் முதலிய வானரர்கள் ஒன்றுகூடிச் சேர்ந்து 'ஐயா! நீ வீரன், அங்குப்போய் என்ன செய்தனை? எங்கு அதை மொழிவாயாக' என்று வினவுவார்கள். அப்பொழுது அவர்கள் வினவுகையில் அந்த ஸீதையைக் காணாமலே அவர்க்கு என்னென்று மறுமொழி கூறுவேன்? அவனிடம் போகாமல் இங்கேயே பொழுது போக்குவேனாயின், நான், [illegible] காலம் வரையில் காத்திருந்து, அக்காலம் கடக்கவே ப்ராயோபவேசஞ் செய்வார்கள். எனது நடந்த வ்ருத்தாந்தங்களைப் புகழ்ந்து சொல்லும் வ்ருத்தர்களாகிய ஜாம்பவானும், அதற்கு உத்ஸாஹப்படுத்தின அங்கதனும் அதைக் கேட்கவந்த மற்றை வானரர்களும் ஸமுத்ரத்தின் அக்கரைக்குத் தாண்டிப்போய் வந்திருக்கிற என்னைக் குறித்து, என்னசொல்வார்கள்? அழிவில்லாத உத்ஸாஹமே ஸம்பத்திற்கு மூலம். உத்ஸாஹமே பரம ஸுகத்தை விளைவிப்பது. உத்ஸாஹமே எப்பொழுதும் ஸமஸ்த கார்யங்களையும் நடத்துவது. ஆகையால் அது இல்லாமல் ஒருகார்யமும் நடக்காது. ப்ராணி எந்தெந்த கார்யஞ் செய்யுமோ, அதையெல்லாம் உத்ஸாஹமே பயன்படச் செய்கின்றது. ஆகையால் நானும் அந்த

உத்ஸாஹத்தை அவலம்பித்து அதன்மூலமாக ஸீதை
யைத் தேடும்பொருட்டுச் சிறந்த ப்ரயத்னங்களைச்
செய்கின்றனன். தான், ராவணன் பரிபாலித்துவருகிற
லங்கையிலுள்ள ப்ரதேசங்களை யெல்லாம் மீளவும்
தேடுகின்றனன். பானசாலையெல்லாந் தேடியாய்
விட்டது. புஷ்பக்ருஹங்களிலும் தேடிப்பார்த்தா
யிற்று. சித்ரசாலைகளிலும் ஆராய்ந்தனன். க்ரீடா
க்ருஹங்களிலும் வீட்டின் பின்புறத்திலுள்ள
தோட்டங்களின் நடுவீதிகளிலும் விமானங்களிலும்
எல்லா இடங்களிலும் பலவாறு தேடிப்பார்த்தனன்.
ஆயினும் மீளவும் தேடிப்பார்க்கிறேன் என்று ஆலோ
சித்தனன். அவன் இங்ஙனம் ஆலோசித்து மறுபடியும்
பூமிக்ருஹங்களிலும் நாற்சந்தி வீதிகள் கலக்கும்
மார்க்கங்களில் நிர்மிக்கப்பட்ட க்ருஹங்களிலும்
தேடத்தொடங்கினன். அம்மஹாகபி பூதலத்தில் அடிக்கடி
உயர்ந்த இடங்களில் ஏறிக்கொண்டிருப்பதும் இறங்குவதும்
நின்று பார்ப்பதும் உடனே அப்புறம் நடப்பதும் வாசற்
கதவுகளைத் திறப்பதும் சாத்துவதும் க்ருஹங்க
ளுக்குள் நுழைவதும் வெளிப்புறப்படுவதும் ஆகிய பல
செய்கைகளைச் செய்து எல்லாவிடங்களிலும் ஸீதை
யைத் தேடிக்கொண்டு திரிந்தனன். ராவணனது
அந்தப்புரத்தில் நாலங்குல ப்ரதேசமும் ஹனுமான்
தேடிப்பாராதது இல்லை. கோட்டைகளின் இடையி
லுள்ள வீதிகளிலும் சைத்ய வ்ருக்ஷங்களின் அடித்
திண்ணைகளிலும் கடைவாயில்களிலும் புஷ்கரிணிக
ளிலும் ஆகிய எல்லா இடத்திலும் அவ்வானரவீரன்
தேடினன். அவ்விடத்தில் ஹனுமான் பற்பலவிதமான
உருவமுடையவர்களாகி ஸ்வயமாக ஏற்பட்ட விகாரமும்
தாமாக ஏற்படுத்திக்கொள்ளுகிற விகாரமும் நிறைந்து
தோற்றுகிற ராக்ஷஸ ஸ்த்ரீகளைக் கண்டானே யன்றி
ஸீதையைக் காணவில்லை. ஹனுமான் அவ்விடத்தில்
ஸௌந்தர்யத்தினால் உலகமெங்கும் நிகரின்றி அழகா
யிருக்கிற வித்யாதர ஸ்த்ரீகளைக் கண்டானேயன்றி
ராமனுக்கு ஸந்தோஷத்தை விளைக்கும் ஸீதையை

மாத்ரம் காணவில்லை. ஹனுமான் அவ்விடத்தில் பருத்த ஜகனமுடையவர்களும் பூர்ணசந்த்ரன்போன்ற அழகிய முகமுடையவர்களுமாகிய நாககன்னிகைகளைக் கண்டானன்றி நுண்ணிய இடையுடைய ஸீதையை மாத்ரங் காணவில்லை. ஹனுமான் அவ்விடத்தில், ராக்ஷஸேச்வரனாகிய ராவணனால் கொண்டுவந்து சிறையில் வைக்கப்பட்ட நாககன்னிகைகளைக் கண்டானன்றி ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையை மாத்ரங் காணவில்லை. மஹா பராக்ரமமும் சிறந்த மதியுடையவனும் வாயுகுமாரனுமாகிய ஹனுமான் அந்த ஸீதையைக் காணாமல் இதர ஸ்த்ரீகளை மாத்ரம் பார்த்துக்கொண்டு அடிக்கடி வருத்தமுற்றிருந்தனன். வாயுகுமாரனாகிய அந்த ஹனுமான், வானரச்ரேஷ்டர்களான அங்கதாதிகளின் ப்ரயத்னமும் தான ஸமுத்ரந்தாண்டி வந்ததும் வீணானதைக் கண்டு மிகவும் சிந்தையிலாழ்ந்தனன். வாயு ஸூனுவாகிய அந்த ஹனுமான் அப்புஷ்பக விமானத்தினின்று இறங்கி மனத்தில் வருத்தம் மிகப்பெற்றுத் தனக்குள் இங்ஙனஞ் சிந்திக்கத்தொடங்கினான். பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

### ஹனுமான் ஸீதையை அசோக வனத்தில் தேடத்தொடங்கித் தேவதா நமஸ்காரஞ் செய்தல்.

வானரர் தலைவனாகிய அந்த ஹனுமான் விமானத்தினின்று கோட்டைக்குக் கிளம்பி மேகத்தில் விளங்கும் மின்னல்போல் மிகுந்த வேகங்கொண்டனன். ஹனுமான் அங்ஙனம் ராவணக்ருஹத்தினின்று கோட்டைக்குவந்து ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைக் காணாமல் தனக்குள் தான் 'நான், ராமனுக்கு

ப்ரியஞ்செய்யவேண்டுமென்று லங்கை முழுவதும் பலவாறு தேடிப்பார்த்தனன். ஆயினும் ஸர்வாங்க ஸுந்தரியாகிய ஸீதாதேவி எனக்கு அகப்பட வில்லையே! நான் குட்டைகளிலும் குளங்களிலும் தாமரையோடைகளிலும் சிற்றாறுகளிலும் பெரிய நதிகளிலும் ஜலப்ராயமான அரண்ய மத்யங்களிலும் புகமுடியாத பர்வதங்களிலும் அடிக்கடி தேடிப் பார்த்தேன். இங்குள்ள பூமியெல்லாம் திரிந்து திரிந்து தேடிப்பார்த்தேன் ஆனால் ஸீதைமாத்ரம் அகப்பட வில்லை. க்ருத்ரராஜனாகிய ஸம்பாதி இங்கு ராவண க்ருஹத்தில் ஸீதை இருக்கிறாளென்று சொல்லினன். எவ்வளவு தேடிப்பார்க்கிலும் அப்பெண்மணி எனக்கு இங்கு அகப்படவில்லையே! மிகவும் மஹனீயமாகிய விதேஹதேசத்தில், அதிலும் ஸதாசாரநிஷ்டர்களான ஸத்புருஷர்கள் வஸிக்கிற மிதிலாநகரத்தில் மிகுதியும் கர்மயோகநிஷ்டரென்று ப்ரஸித்திபெற்ற ஜனகராஜன் புதல்வியாகிய அயோனிஜையான ஸீதாதேவியுங்கூடத் தன் சீலந்தவறி துஷ்ட சரித்ரனாகிய ராவணனுடன் ஸ்னேஹஞ் செய்வாளா? எள்ளளவுஞ் செய்ய மாட்டாள். அந்த ராக்ஷஸன் ஸீதையை எடுத்துக் கொண்டு மிக்க வேகத்துடன் கிளம்பிப்போகும் பொழுது ராமபாணங்களை நினைத்துக்கொண்டு பயப் பட்டு விலவிலத்துப்போகையில் கைகள் தழதழத்துத் தவறி அந்த மார்க்கமத்யத்தில் ஸீதை கீழே விழுந்திருப்பாளோ என்னவோ? அப்படி இல்லை யாயின், அவன் ஸித்தர்கள் ஸஞ்சரிக்கும்படியான ஆகாசமார்க்கத்தில் ஸீதையைக் கொண்டுபோகையில், அம்மஹானுபாவை ஸமுத்ரத்தைக்கண்டு மனந் தத்தளிக்கப்பெற்றுத் திடந்தப்பி அதில் வீழ்ந்திருப்பா ளென்று எனக்குத் தோற்றுகின்றது. ராவணன் ஸீதை யைக் கீழ்விழாதபடி தன் புஜங்களால் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு போகையில், அக்கண்ணழகி அம்மஹானுபாவை, அவனுடைய துடைகளின் வேகத்தையும் புஜங்களின் நெருக்கத்தையும் பொறுக்க

முடியாமல் நலுங்கி ப்ராணனை இழந்திருக்கலாமென்று யான் நினைக்கின்றனன். ராவணன் ஸமுத்ரத்திற்கருகில் ஆகாயத்தில்போய்க்கொண்டிருக்கையில், ஜனகராஜன் புதல்வி துடித்து ஸமுத்ரத்தில் வீழ்ந்திருக்கலாம். ராவணன் துஷ்டனாகையால் தன்னை அங்கீகரியாமைக்குக் கோபித்து, ஸஹாயஞ்செய்யப் பந்துக்கள் இல்லாமல் திக்கற்றுத் தனக்கிடமான அப்பெண்மணியைப் பிடித்துப் பக்ஷித்திருப்பான். அப்படியில்லையாயின் ராக்ஷஸராஜனாகிய ராவணனது பார்யைகள் ஸீதையைக்கண்டு சக்களத்தித்தனத்தினால் கொடிய மனமுடையவராகி, எந்தக் கொடுமையும் அறியாதவளும் கருநெய்தலை நிகர்த்த கண்களையுடையவளுமாகிய அந்த ஸீதையைப் பிடித்துப் பக்ஷித்திருப்பார்களோ? மன இரக்கத்திற்கிடமான அந்த வைதேஹி பரிபூர்ண சந்த்ரன்போல் விளங்குவதும் தாமரையிதழ்போன்ற கண்களுடையதுமாகிய ராமனது முகத்தை த்யானித்துக்கொண்டு விரஹ வேதனையால் ப்ராணன்களைத் துறந்தனளோ? ஸீதை, 'ஐயோ! ராமா! லக்ஷ்மணா!' என்றும், 'ஆ! அயோத்தியே' என்றும் பலதடவை புலம்பித் தன்னைக் காக்குந் திசைகாணாமல் வருந்திச் சரீரத்தை விட்டிருப்பாள்! ஒருகால் ஸீதை ராவணனது க்ருஹத்தில் பூமிக்ருஹம் முதலிய ஏதோ ஓரிடத்தில் மறைக்கப்பட்டுக் கூண்டில் அடைக்கப்பட்ட பெண்கிளிபோல் இனிய குரலுடன் ஸந்தேஹமின்றி அடிக்கடி கதறிக் கொண்டிருப்பாள். அயோனிஜையாகப் பிறந்து ஸீதையென்னும் பெயர்பெற்றுக் கர்மயோக நிஷ்டராகிய ஜனக மன்னவனுக்குப் புதல்வியாகி, மூன்றுலோகங்களிலும் எதிரில்லாத வீரனும் மஹா ஸுந்தரனும் மஹானுபாவனுமாகிய ராமனுடைய பத்னியாகிய அந்தப் பதிவ்ரதை, அழகிய இடையுடைய அம்மாது சிரோமணி, கருநெய்தலின் இதழ்போன்ற கண்களையுடைய அந்த ஸீதை ராவணன் எவ்வளவு நிர்ப்பந்தஞ் செய்யினும் அவனுக்கு உட்படுவாளா?

டாள். 'இந்தச் சிந்தை எதுக்கு? போய் நடந்த வ்ருத்தாந்தத்தை மொழியலாகாதா?' என்றால், ராமன் தன் பார்யையிடத்தில் மிகுந்த காதலுடையவன். ஆகையால் ஸீதை ரஹஸ்யமான இடத்தில் மறைக்கப் பட்டுப் புலப்படாதிருக்கின்றனளோ, அல்லது ஸமுத்ரத்தில் விழுந்தாவது மற்றும் எதனாலாவது ப்ராணன்களை இழந்தனளோ? அல்லது ராமனைப் பிரிந்திருக்கப் பொறாமல் தானே மரணம் அடைந்தனளோ? இவற்றில் நடந்ததை எதையும் ராமனுக்குத் தெரிவிப்பது யுக்தமன்று. ஸீதை அகப்படவில்லை யென்று சொல்வேனாயின், ராமன் ப்ராணன்களை விடுவான். அப்பொழுது எனக்குத் தோஷம் வரும். சொல்லாதிருப்பேனாயின், ஸ்வாமியை வஞ்சித்ததாகும். அப்பொழுதும் தோஷம் நேரிடும். இனிச் செய்ய வேண்டுவது எப்படி? எனக்கு இரண்டும் ஒன்றோடொன்று விருத்தமாகத் தோற்றுகின்றது' என்று ஆலோசித்தனன். ராமனுக்கு ஸீதையின் ஸங்கதியை அறிவிக்கும் கார்யம் இங்ஙனம் விருத்தமாயிருக்கையில் 'இனி இப்பொழுது செய்ய அடுப்பதென்? எது கார்ய ஸாதகம்?' என்று இந்த இரண்டு பக்ஷங்களையுங் குறித்து ஹனுமான் மீளவும் ஆலோசிக்கத்தொடங்கித் தனக்குள் 'நான் ஸீதையைக் காணாமல் இங்கிருந்து வானரேந்த்ரனாகிய ஸுக்ரீவனது நகரமான கிஷ்கிந்தைக்குப் போவேனாயின், அதன்மேல் எனக்கு விளையும் ப்ரயோஜனம் யாது? யாதும் இல்லை. ஸீதையைப் பாராமலே போவேனாயின் நான் இப்பொழுது ஸமுத்ரத்தைக் கடந்ததும் லங்கையுள் ப்ரவேசித்ததும் ராக்ஷஸர்களைக் கண்டதும் ஆகிய இவையெல்லாம் வீணேயாகும். நான் ஸீதையைப் பாராமல் கிஷ்கிந்தையுள் புகுவேனாயின், என்னைப் பார்த்து ஸுக்ரீவன் என்ன சொல்லுவான்! வானரர்கள் எல்லோரும் சேர்ந்து என்னை என்னென்பர்களோ! தசரதகுமாரர்களாகிய அந்த ராம லக்ஷ்மணர்கள் என்னை என்ன சொல்வார்களோ! நான் அவ்விடஞ்சென்று காகுத்ஸ்த ராமனைக்

கண்டு 'நான் ஸீதையைப் பார்க்கவில்லை' என்று மிகுதியும் அப்ரியமான இந்த வ்ருத்தாந்தத்தை மொழிவேனாயின், அவன் ப்ராணன்களை விடுவான். ஸீதையைக்குறித்துச் செவிகளுக்குக் கடுவும் பயங்கரமும் க்ரூரமும் அஸஹ்யமும் இந்த்ரியங்களைத் தபிக்கச் செய்வதுமாகிய இந்தக் கொடிய வ்ருத்தாந்தத்தைக் கேட்டு அந்த ராமன் ப்ராணன்களோடு இருக்க மாட்டான். அந்த ராமன் அங்ஙனம் கஷ்டம் அடைந்து மனத்தில் மரணம் அடைவதாக நிச்சயித்திருப்பதைக் கண்டு, அவனிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடைய மேதாவியாகிய லக்ஷ்மணனும் பிழைத்திருக்க மாட்டான். தனது அண்ணனும் தம்பியுமாகிய ராமலக்ஷ்மணர்கள் இருவரும் மரணம் அடைந்ததைக்கேட்டுப் பரதனும் மரணம் அடைவது நிச்சயம். பரதன் மரணம் அடைவதைக் கண்டு சத்ருக்னனும் ப்ராணன்களோடிருக்க மாட்டான். இங்ஙனம் புத்ரர்கள் எல்லோரும் மரணம் அடைவதைக்கண்டு தாய்மார்களாகிய கௌஸல்யை ஸுமித்ரை கைகேயிகளும் ப்ராணன்களை வைத்துக் கொண்டிருக்க மாட்டார்கள். இதற்கு ஸந்தேஹமே இல்லை. ராமன் அங்ஙனம் மரணம் அடைந்ததைக் கண்டவுடனே வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் க்ருதஜ்ஞனாகையால் ராமன் தனக்குச் செய்த உபகாரத்தை நினைத்து ஸத்யஸந்தனாகையால் ராமனுக்கு ஸீதையைக் கொண்டுவந்து கொடுப்பதாகச்செய்த ப்ரதிஜ்ஞை பொய்யானதற்குப் பரிதபித்து ப்ராணன்களை விடுவான். பர்த்தா மரணம் அடைகையில் ருமையும் அந்த வருத்தத்தினால் பீடிக்கப்பட்டு மனத்தில் பரிதாபமுற்று வேதனை மிகப்பெற்றுத் தீனையாகி மனக்களிப்பற்று மன இரக்கத்திற்கிடமாகி ப்ராணன்களை விடுவாள். தாரை, வாலி மரணம் அடைந்ததற்கே துக்கத்தினால் நலுங்கிச் சோகத்தினால் இளைத்து ப்ராணன்களை மாத்ரம் பிடித்துக் கொண்டிருக்கிறாள்; இனி ராஜனாகிய ஸுக்ரீவனும் மரணம் அடைவானாயின், துக்கத்தைப் பொறுக்க

முடியாமல் தானும் ப்ராணன்களை விடுவாள். குமாரன் அங்கதனும் தாய் தந்தைகளின் மரணத்தையும் ஸுக்ரீவனுடைய ஆபத்தையும் கண்டு ப்ராணன்களை எங்ஙனம் வைத்துக்கொண்டிருப்பான்? வானரர்கள் அனைவரும் ப்ரபுவாகிய ஸுக்ரீவன் மரணம் அடைந்த துக்கத்தினால் மிகவும் வருந்தி உள்ளங்கைகளாலும் முட்டிகளாலும் தலைகளைப் புடைத்துக்கொண்டு மரணம் அடைவார்கள் பெரும் புகழுடைய கபிராஜ ஸுக்ரீவன் வானரர்க ளெல்லோரையும் குளிர்ந்த உரைகளாலும் வேண்டியவற்றை யெல்லாங் கொடுப்பதனாலும் எழுந் தெதிர்கொள்வது முதலியவற்றால் கௌரவிப்பதனாலும் மிகுதியும் ஆதரித்துக்கொண்டு போருபவன்; ஆகையால் அப்படிப்பட்ட மன்னவன் மரணம் அடைகையில் வானரர்களெல்லோரும் துக்கத்தைப் பொறுக்க முடியாமல் ப்ராணனை இழப்பார்கள். இனி, வானரோத்தமர்கள் அரண்யங்களி லாவது பர்வதங்களிலாவது க்ருஹம் முதலிய மறைவான இடங்களிலாவது ஒன்றுகூடி லீலாரஸங்களை அனுபவிக்க மாட்டார்கள். தமது பர்த்தாவாகிய ஸுக்ரீவன் மரணம் அடைந்த துக்கத்தினால் பீடிக்கப் பட்டுப் புத்ரர்களோடும் பார்யைகளோடும் மந்த்ரிகளோடும் கூடி மேடுபள்ளமான இடங்களிற் சேர்ந்து பர்வத சிகரங்களினின்று வீழ்ந்து ப்ராணன்களை விடுவார்கள். இனி வானரர்கள் விஷத்தைப் பருகியோ, உரிபோட்டுக்கொண்டோ, அக்னிப்ரவேசஞ் செய்தோ ப்ராயோபவேசம் இருந்தோ, ஆயுதங்களால் அடித்துக் கொண்டோ ப்ராணன்களை விடுவார்கள். நான் போன வுடனே கிஷ்கிந்தையில் எங்குப்பார்க்கிலும் பயங்கர மான அழுகையும் இக்ஷ்வாகு வம்சத்திற்கு நாசமும் வானரகுலத்திற்கு விநாசமும் நேருமென்று தோற்று கிறது. நான் இப்படிப்பட்ட அனர்த்தத்தை விளைப்பவ னுவேனுகையால் இங்கிருந்து கிஷ்கிந்தைக்குப் போகவே மாட்டேன். ஸீதையைக் காணுமல் ஸுக்ரீவனைக் காண்பது என்னுல் ஸாத்யமன்று. நான் அங்குப்

போகாமல் இங்கேயே இருப்பேனாயின், தர்மஸ்வபா வர்களும் மஹாரதர்களுமாகிய ராமலக்ஷ்மணர்கள், ஸீதையைக் கண்டு நான் வருவேனென்னும் ஆசையால் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பார்கள். நல்ல மனமுடைய வானரர்களும் அங்ஙனமே ப்ராணன்களை விடாதிருப்பார்கள். நான் ஸீதையைக் காணாதிருப்பே னாயின் கையில் அகப்பட்டதையும் வாயில்விழுவதையும் புஜித்துக்கொண்டு செடியடியில் வாஸஞ் செய்பவனாய் நியமங்களைக் கைப்பற்றி வானப்ரஸ்தனாய் விடுகிறேன். அப்படியில்லையாயின், காய் கிழங்குகளும் ஜலமும் வெகுவாயிருக்கப்பெற்ற இந்த ஸமுத்ர ஸமீபத்தி லுள்ள ஜலப்ராயமான இடத்தில் சிதையை ஏற்படுத் திக்கொண்டு அரணிக்கட்டையினின்றுண்டாகி எரி கின்ற அக்னியில் குதித்து ப்ராணன்களை விட்டுவிடு கிறேன். அப்படி இல்லையாயின், நான ப்ராயோபவேசஞ் செய்து எதையும் உட்கொள்ளாதிருந்து என் தேஹத்தினின்று ஆத்மாவை வெளிப்படச் செய்கை யில், உடலான கலேபரத்தை (சரீரத்தைக்) காக்கை களும் புலி முதலிய க்ரூரஜந்துக்களும் பக்ஷிக்குமாக. இங்ஙனம் ஆத்மத்யாகஞ் செய்வது தோஷமன்று. இவ்விதமாக ப்ராயோபவேசத்தினால் ப்ராணன்களை விடுவது மஹர்ஷிகளால் புகழப்பட்ட மார்க்கமென்று எனக்குத் தோற்றுகிறது. ஸீதையைக் காணேனாயின், நீரிலாவது நன்றாகக் குதித்து விடுகிறேன். இவ்விரவு, முன்னம் லங்காதி தேவதையை வென்றதனால் சுபமான தொடர்ச்சி யுடையதும் ஸீதையைத் தேடுவதற்கு அனுகூலமாக நிலவு காயப்பெறுகையால் மனோ ஹரமாயிருப்பதும் எனக்கு விளையும் கீர்த்தியே தனக்குப் பூமாலை போல் அலங்காரமாயிருக்கப் பெற்றதும், 'ஹனுமான் லங்கையில் புகுந்த ராத்ரி' என்று உலகமெங்கும் புகழ்பெற்றதும், நான் கண் விழித்திருக்கையால் எனக்கு மிகுதியும் நீண்டது போல் புலப்படுவதுமாயிருக்கின்றது. 'இப்படிப்பட்ட இவ்விரவு எனக்கு ஸீதை அகப்படாமையால்

வீணுயிருக்கின்றது. சாவதைக் காட்டிலும் பிழைத் திருப்பது மேலாகையால், நான் நியமங்களை அவலம் பித்துச் செடியின்கீழ் வாஸஞ்செய்து தவஞ்செலுத்திக் கொண்டிருக்கிறேன். கறுத்த கண்களையுடைய அந்த ஸீதாதேவியைக் காணுமல் இங்கிருந்து திரும்பிப் போவதில்லை. 'ஸுக்ரீவனிடம் போகவேண்டாம். அங்க தாதிகளுடன் போய்க் கலக்கவேண்டாமா' என்றால், நான் ஸீதை யிருக்குமிடந் தெரிந்துகொள்ளாமல் இங்கிருந்து அங்கதாதிகளிடம் போயினும், ஸீதை அகப்படவில்லை யென்று செவியுற்றவுடனே அங்கத னும் மற்ற எல்லா வானரர்களும் ப்ராணனை விடு வார்கள். புருஷன் சாவானுயின், அனேக தோஷங்க ளுண்டு; பிழைத்திருப்பானுயின் மற்றெப்போதாயினும் சுபங்களைக் காண்பான். ஆகையால் நான் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்கிறேன். அங்ஙனம் பிழைத் திருப்பேனுயின் எப்பொழுதாயினும் நன்மை நிச்சய மாய் விளையுமேயன்றி விளையாமல் போகாது' என்று ஆலோசித்தனன். வானர திலகனுகிய ஹனுமான் அப்பொழுது இங்ஙனம் அடிக்கடி பலவாறாக மனத்தில் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தானன்றி எத்தனை நோக்கழித்தும் அவன் அவ்வருத்தத்தின் கரையைச் சேரவில்லை. மேலும், அவன் தனக்குள் 'பத்துக் கழுத்துக்களுடையவனும் மஹாபலனுமாகிய ராவணனையாயினும் கொல்லாமல் விடமாட்டேன். அவனையாவது அடித்துக்கொன்றுவிடுகிறேன். அவன் கொண்டுபோன ஸீதை அகப்படாமற்போயினும் போகட்டும். எப்படியாயினும் ஆகட்டும். அவன் செய்ததற்கு ப்ரதி செய்து பகையைத் தீர்த்துக் கொண்டதாகின்றது. அல்லது, இந்த ராவணனை ஸமுத்ரத்திற்கருகாமையில் ஆகாசமார்க்கத்தில் வில விலக்கும்படி எடுத்துக்கொண்டுபோய், யாகத்தில் அக்னிக்குப் பசுவைக் கொடுப்பதுபோல் ராமனுக்குக் காணிக்கையாக ஸமர்ப்பிக்கிறேன்' என்று அந்த ஸீதையின் ஸ்திதியை அறியாமல் விசாரஞ்செய்து

அவ்விஷயத்தையே மனத்தில் இடைவிடாமல் பாவித்துக்கொண்டு சோகம் மேலெழப்பெற்று மீளவும் அபாரமான சிந்தாஸமுத்ரத்தில் ஆழ்ந்து 'நான் பெரும் புகழுடையவளும் ராமபத்னியுமாகிய ஸீதை அகப்படும் வரையில், இந்த லங்காபட்டணத்தில் அடிக்கடி தேடிக் கொண்டிருக்கிறேன். நான் ஸம்பாதியின் வசனத்தையே நம்பி ராமனை இவ்விடம் அழைத்துக்கொண்டு வந்திருப்பேனாயின், ராமன் தன் பார்யையாகிய ஸீதையைக் காணாமல் அதற்காக வானரர்களெல்லோரையும் கொளுத்திவிடுவான். நான் ஆஹார நியமத்துடன் இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு இங்கேயே வஸித்திருக்கின்றேன். எனக்காக, அந்த ராமன் முதலிய நரர்களும் (மனிதர்களும்) ஸுக்ரீவன் முதலிய வானரர்களும் அனைவரும் நாசம் அடையாதிருப்பார்களாக. பெரிய வ்ருக்ஷங்களோடு கூடின அசோகவனிகை ஒன்று இதோ புலப்படுகின்றதே; இங்குப் போகிறேன். இது வரையில் இதை நான் தேடவில்லையல்லவா? வஸுக்களையும் ஏகாதச ருத்ரர்களையும் த்வாதசாதித்யர்களையும் அச்வினி தேவதைகளையும் ஸமஸ்த மாருதர்களையும் நமஸ்கரித்து, ராக்ஷஸர்களுக்குத் துக்கத்தை வளர்ப்பவனாகி இவ்வசோகவனிகையில் ப்ரவேசிக்கிறேன். நான் ராக்ஷஸர்களெல்லோரையும் வென்று, தவஞ் செய்பவனுக்குத் தவத்தின் பலனைக் கொடுப்பதுபோல், இக்ஷ்வாகு வம்சத்திற்கு ஆநந்தம் விளைப்பவளாகிய ஸீதையை ராமனுக்குக் கொடுக்கிறேன்' என்று சிந்தித்தனன். மஹாதேஜஸ்வியாகிய அவ்வாயு குமாரன் ஹனுமான் சிந்தையால் இந்த்ரியங்கள் வ்யாகுலமாக முஹூர்த்தகாலம் சிந்தித்து மீளவும் அசோகவனிகைக்குப் போக எழுந்திருந்து 'ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் நமஸ்காரம். ஜனகராஜன் புதல்வியாகிய அந்த ஸீதா தேவிக்கும் நமஸ்காரம். ருத்ரன் இந்த்ரன் யமன் வாயுதேவன் ஆகிய இவர்களுக்கும் நமஸ்காரம். சந்த்ர ஸூர்யர்களுக்கும் தேவகணங்களுக்கும் நமஸ்காரம்'

என்று அம்மாருதி அந்தத்தேவதைகளுக்கும் ஸுக்ரீவ
னுக்கும் நமஸ்காரஞ்செய்து அசோகவனிகையின்
நிலைமையை அறிவதற்காக அதன் திசைகளை எல்லாங்
கண்டு மனித்திற்கினிதாகிய அவ்வனத்தில் புகுவதற்கு
முன்னம் மனத்தினால் நிச்சயித்துக்கொண்டு பின்பு
செய்யவேண்டிய கார்யத்தைக் குறித்து ஆலோசனை
செய்தனன்.—'காவல்காக்கிற பல ராக்ஷஸர்களை
யுடையதும் இடையிடையில் வனங்கள் நிறைந்ததும்
பெருக்குதல் முதலிய சீர்திருத்தங்களெல்லாம் செய்யப்
பெற்றதுமாகிய இவ்வசோகவனிகையை நான்
அவஶ்யம் தேடிப்பார்க்கவேண்டியதாயிருக்கின்றது.
இதைக் காக்கும்பொருட்டு ராவணன் ஏற்படுத்தின
காவற்காரர்கள் இதிலுள்ள வ்ருக்ஷங்களை ஜாக்ரதை
யுடன் பாதுகாத்துவருகின்றனர். ஸர்வவ்யாபகனும்
பகவானுமாகிய வாயுதேவனும் பயத்தினால் மிகுதியும்
மரங்களை அசைக்கிக்கொண்டு வீசுவதை விட்டிருக்
கின்றனன். இப்படிப்பட்ட இடத்தில் நான் புகுவது
எப்படியெனில், ராமனுக்குக் கார்யஸித்தி உண்டாகும்
பொருட்டும் ராவணனுக்கு நான் அகப்படாதிருக்கும்
பொருட்டும் என் தேஹத்தைச் சுருக்கிக்கொண்டேன்.
நான் கார்யஸித்திக்கனுகூலமாக என்னால் கூடுமான
ப்ரயத்னஞ் செய்தேன் இவ்விஷயத்தில் தேவதைக
ளும் ரிஷிகணங்களும் அக்கார்யம் நடைத்தேறும்படி
செய்வார்களாக. ஸமஸ்த மஹிமைகளும் பொருந்தி
ஸ்வயம்புவாகிய ப்ரஹ்மதேவனும் தேவதைகளும்
அக்னியும் வாயுவும் வஜ்ராயுதந் தரித்த தேவேந்த்ர
னும் பாஶஹஸ்தனாகிய (கையில் பாஶாயுதந்தரித்த)
வருணனும் சந்த்ர ஸூர்யர்களும் மஹானுபாவர்க
ளான அஶ்விநீதேவதைகளும் ஸமஸ்த மருத்துக்க
ளும் சிவனும் எனக்குக் கார்யஸித்தியைக் கொடுப்பார்க
ளாக. ஸமஸ்த பூதங்களும் ஸமஸ்த பூதப்ரபுவாகிய
விஷ்ணுவும் மற்றும் மார்க்கத்தில் கண்ணுக்குப்
புலப்படாதிருப்பவர்களும் எனக்குக் கார்யஸித்தியைக்
கொடுப்பார்களாக. உயர்ந்த மூக்குடையதும் வெளுத்

தழகிய பல்வரிசை யமைந்ததும் ஒருதோஷமுமில்லாத ஸௌந்தர்யமுடையதும் வெளுத்த புன்னகை விளங்கப் பெற்றதும் தாமரையிதழ் போன்ற கண்கள் பொருந்தியதும் தெளிந்த சந்த்ரன்போல் புலப்படுவதுமாகிய அந்த [1] மஹாநுபாவையின் முகத்தை நான் எப்பொழுது பார்க்கப்போகிறேன்! துஷ்டனும் பாபிஷ்டனும் கொடுஞ்செயலினனுமாகிய இந்த ராவணன் மிகுதியும் பயத்தை விளைப்பதான உருவமுடையவனாயினும் மேலுயர்ந்த இனியவேஷம் பூண்டுவந்து பலாத்காரமாகப் பரிபவஞ் செய்யப்பெற்ற அவ்வபலை, தயைக்கிடமான அந்த வைதேஹி இப்பொழுது என் கண்ணுக்குப் புலப்படுவது எப்படியோ?" என்று ஆலோசித்தனன். பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஹனுமான் அசோகவனிகையில் புகுந்து ஸிம்சுபாவ்ருக்ஷத்தைக் காணுதல்.

மஹாதேஜஸ்வியாகிய ஹனுமான் முஹூர்த்த காலம் அங்ஙனம் ஆலோசித்து அவ்வசோகவனிகையில் ப்ரவேசிக்க மனங்கொண்டு அந்த ராவணக்ருஹத்தினின்று அசோகவனிகையின் ப்ராகாரத்திற்கு (கோட்டைக்கு)க் கிளம்பினன். அந்த மஹாகபி அக்கோட்டையின் மேல் உட்கார்ந்து மிகுதியும் ஸந்தோஷமுற்றுச் சரீரம் முழுவதும் மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்று வஸந்த காலத்தின் ஆரம்பத்தில் நுனியெல்லாம் நன்கு புஷ்பித்த மாமரங்களையும் மனோஹரமான அசோக வ்ருக்ஷங்களையும் நன்கு

1. ஸீதாதேவியின்.

புஷ்பித்த செண்பகமரங்களையும் நறுவிலி மரங்களையும் புன்னை மரங்களையும் மாமரங்களையும் மர்க்கடக வ்ருக்ஷங்களையும் மற்றும் நாநாவித வ்ருக்ஷங்களையுங் கண்டனன். அப்பால் அவன் நாணினின்று விடப்பட்ட பாணம்போல், அதிவேகமாக மாந்தோப்புக்கள் சூழப் பெற்று அநேகமாயிரங் கொடிகள் நிறைந்த வ்ருக்ஷ ஸமூஹத்திற்குக் குதித்துப் போயினான். அவன் மனிதர்கள் அனைவர்க்கும் களிப்பை விளைவிப்பதும் ம்ருகங்களும் பக்ஷிகளும் நிறைந்து விளங்குவதுமாகிய வஸந்தருதுவின் ஆரம்பகாலத்தில் அவ்வசோகவனிகையில் ப்ரவேசித்தனன். அவ்வனம் வியப்பை விளைவிப்பதும் பக்ஷிகளின் த்வனிகளால் முழுவதும் சப்திப்பதும் வெள்ளி நிறமுடையவைகளும் பொன்னிறம் அமைந்தவைகளுமாகிய வ்ருக்ஷங்கள் சுற்றிலும் சூழப் பெற்றதுமாயிருந்தது. அது நாநாவிதப் பறவைகளும் ம்ருக ஸமூஹங்களும் நிறைந்திருக்கையால் விசித்ரமாகி மாந்தோப்பு செண்பகத்தோப்பு முதலிய பலவகைத் தோப்புக்களும் அமைந்து விடியற்காலத்து ஸூர்யன் போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. புஷ்பங்களும் பழங்களும் நிரம்பிய பலவகை வ்ருக்ஷங்கள் அதில் நிறைந்திருந்தன. அதில் குயில்களும் சிறந்த வண்டுகளும் மிகுதியும் மதித்து எப்பொழுதும் விளக்கமுற்றிருந்தன. மயில்கள் மதங்கொண்டு மதுரமாகக் கேகாவென்று சப்தித்துக்கொண்டிருந்தன. பலவகைப்பக்ஷி ஸமூஹங்கள் அங்கு விளங்கின. ஹநுமான், அழகான இடையின் பின்புறமுடையவளும் தோஷங்களொன்றுமில்லாத ஸௌந்தர்யத்துடன் விளங்குபவளும் ராஜகுமாரத்தியுமாகிய அந்த ஸீதையைத் தேடிக்கொண்டு ஸஞ்சரிப்பதனால் செடிகளையும் மரங்களையும் அசைத்து ஸுகமாக நித்ரித்துக்கொண்டிருந்த பக்ஷிகளை எழுப்பிவிட்டனன். அப்பொழுது பக்ஷிகள் குவியல் குவியலாக மேற்கிளம்புகையில் வ்ருக்ஷங்கள் அவற்றின் சிறகுகளால் அடிக்கப்பட்டு நாநாவர்ணங்களும் நாநாவிதங்களுமான புஷ்பங்களை மிகுதியும் உதிர்த்தன.

அங்ஙனம் உதிர்கின்ற புஷ்பங்களால் நிறைந்திருக்கிற வாயுகுமாரனாகிய ஹனுமான் அசோக வனிகையின் மத்தியில் [1] புஷ்பகிரியோ என்னும்படி விளங்கினான். எல்லாத்திசைகளிலும் ஓடிக்கொண்டு வ்ருக்ஷஸமூஹங்களின் இடையிலிருக்கின்ற அந்த வானரனைப் பார்த்து ஸமஸ்த ப்ராணிகளும் வஸந்தனென்று நினைத்தன. அவ்வனத்தின் பூமியெல்லாம் வ்ருக்ஷத்தினின்று உதிர்கின்ற நானாவித புஷ்பங்களால் நிறைந்திருக்கையில், அது ஆபரணங்களை அணிந்த ஓர் மடந்தைபோல் ப்ரகாசித்தது. அந்த ஹனுமான் மிகுந்த பலமுடையவனாகையால் அந்த வ்ருக்ஷங்களைப் பலமுள்ளளவும் நாற்புறங்களிலும் அசைக்கையில், அவை அப்பொழுது நானாவித புஷ்பங்களை உதிர்த்தன. இங்ஙனம் ஹனுமான் அந்த வ்ருக்ஷங்களைப் பிடித்து நாற்புறத்திலும் கெட்டியாக அசைக்கையில், அவற்றிற்கு வஸ்த்ரம்போன்ற இலைகளும் தலைப்பாகை போன்ற நுனிமொக்குகளும் ஆபரணம்போன்ற புஷ்பங்களும் பழங்களும் உதிர்ந்துபோனமையால், அந்த வ்ருக்ஷங்கள் சூதாடித் தோல்வியடைந்து ஜயித்தவர்களுக்குக் கொடுக்கும்பொருட்டு ஆடையாபரணங்களை இழந்த சூதர்கள்போல் புலப்பட்டன. புஷ்பங்கள் நிறைந்த அம்மேலான வ்ருக்ஷங்கள் மஹாவேகமுடைய ஹனுமானால் அசைக்கப்பட்டு வேகமாகப் புஷ்பங்களையும் இலைகளையும் பழங்களையும் உதிர்த்தன. அவ்வானரனால் அசைக்கப்பட்ட அந்த வ்ருக்ஷங்களெல்லாம் காற்றால் அசைக்கப்பட்டவைபோல் பக்ஷிஸமூஹங்கள் ஓடப்பெற்றுப் புஷ்பம் இலை முதலியவை ஒன்றும் இல்லாமல் அடிமரம் மாத்ரமே மிகுந்து உபயோகமற்றிருக்கையால் அணுகத் தகாதவைகளாயிருந்தன. அங்ஙனம் ஹனுமான் வாலாலும் கைகளாலும் கால்களாலும் உரப்பாக அறைகையில் மேலான வ்ருக்ஷங்கள் முறியப்பெற்ற அவ்வசோகவனிகை, ரதிகேளியின் வேகத்தில் தலை

1. புஷ்பங்களால் இயற்றின பர்வதம்.

மயிர்கள் அவிழ்ந்தலையவும், ஆலிங்கனங்களால் சந்தனப் பூச்சுக்கள் உதிரவும், நன்கு பானஞ் செய்கையால் அதரம் தந்தம்போல் துலங்கவும், நகக்ஷதங்கள் திகழவும், தந்தக்ஷதங்கள் ப்ரகாசிக்கவும் பெற்று விளங்குகிற ஓர் மடந்தையர்மணிபோல் புலப்பட்டது. வர்ஷா காலத்தில் காற்று விந்த்ய பர்வதத்திலுள்ள மேகஸமூஹங்களைத் துளித்துளியாகச் செய்வதுபோல் ஹனுமான் வலிமையினால் அவ்வனத்திலுள்ள பெருங் கொடிகளின் ஸமூஹங்களை அழித்தனன். அவ்வானரன் அவ்வனத்தில் திரிந்துகொண்டு மனோஹரமான வெள்ளி பூமிகளையும் பொன் பூமிகளையும் கண்டனன். மற்றும் அதில் நானாவித உருவத்துடன் விளங்குகிற நடைவாவிகளையுங் கண்டனன். அவை மிகுதியுஞ் சிறந்த ஜலமுடையவையாகி ஆங்காங்குச் சிறந்த ரத்னங்கள் இழைக்கப்பட்ட படிக்கட்டுகள் அமைந் திருந்தன. அவற்றில் முத்துக்களாலும் பவழங்களாலும் மணற்குன்றுகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அவற்றுள் ஆங்காங்குத் தரைகள் ஸ்படிக ரத்னங்களால் படுக்கப்பெற்றிருந்தன. அவற்றின் கரைகளில் பொன் வர்ணமுடைய நானாவித வ்ருக்ஷங்கள் மிகுதியும் அவற்றிற்குச் சோபையை விளைத்துக்கொண்டிருந்தன. மேலும் அவற்றில் தாமரை வனங்களும் நெய்தல் வனங்களும் மிகுதியும் மலர்ந்திருந்தன. அவற்றில் சக்ரவாகங்களும் நீர்க்கோழிகளும் ஹம்ஸங்களும் ஸாரஸப் பறவைகளும் கூவிக்கொண்டிருந்தன. நீண்டவைகளும் இருபுறத்திலும் வ்ருக்ஷங்கள் அடர்ந்திருக்கப் பெற்றவைகளும் அம்ருதம்போல் மதுரமான ஜலமுடையவைகளும் மனோஹரமுமான வாய்க்கால்கள் அவற்றைச்சுற்றிலும் பெருகிக்கொண்டிருக்கையால் அவை மிகுதியும் அழகுற்றிருந்தன. மற்றும், அவை அனேகமாயிரங் கொடிகள் நிறைந்த கல்ப வ்ருக்ஷங்களின் புஷ்பங்களால் நிரம்பியிருந்தன; அன்றியும் நானாவிதப் புதர்களால் இடைவெளியின்றிச் சுற்றிலுஞ் சூழப்பட்டிருந்தன; மேலும், இடையிடையில் அலரி

செடிகள் புஷ்பித்திருக்கையால் அலங்காரமுற்றிருந்தன. அப்பால் வானர ஸிம்ஹமாகிய ஹநுமான் மேகம் போல் புலப்படுவதும் உயர்ந்த சிகரங்களை யுடையதும் (ஜகதிபர்வதமெனப்படுவதும்) ஆகிய ஓர் அழகான மண்மலையைக் கண்டனன். அதன் சிகரங்கள் நானுவிதங்களாகி நாற்புறத்திலும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தன. அதில் கல்வீடுகள் முழுவதும் நிறைந்திருந்தன. பலவகை வ்ருக்ஷங்களும் அதில் ஏராளமாயிருந்தன. அவ்வானரன் அப்பர்வதத்தினின்று ஓர் நதி பெருகினதைக் கண்டனன். அது அம்மலையினின்று பூமியில் வீழ்ந்து பாய்கையால், கோபத்தினால் காதலனுடைய மடியினின்று குதித்துத் தரையில் விழும் காதலிபோல் புலப்பட்டது. அதன் ஜலப்ரவாஹத்தில் பழங்களின் பாரத்தினால் வணங்கி நுனிக்கிளைகள் தரையிற்பெற்ற வ்ருக்ஷங்களால் அந்நதி விளங்குமுற்றிருப்பதைக் கண்டால், போகவேண்டாமென்று பந்துக்களால் கைகொண்டு தடுக்கப்பட்ட கோபங்கொண்ட ஓர் வனிதைபோல் தோற்றியது. அங்ஙனம் அந்நதி கொஞ்சதூரம் அம்மலையை விட்டுப் பாய்ந்து அதன்மேல் வ்ருக்ஷங்களின் கிளைகளால் தடுக்கப்பட்டு மீளவும் பர்வதத்தின் பக்கத்தில் பாய்ந்து வருவது பற்றி பந்துக்கள் ஸமாதானப்படுத்துகையில் கோபத்தைவிட்டுக் கலக்கந்தீர்ந்து மீளவும் காதலனைத் தொடர்ந்த காதலிபோல், அவ்வானர வீரனுக்குப் புலப்பட்டது. வாயுகுமாரனாகிய அவ்வானர ஸிம்ஹன் அப்பர்வதத்தின் அருகில் நானுவித பக்ஷி ஸமூஹங்களால் விளங்குகிற தாமரைக்குளங்களையும், மற்றும் செயலால் தீர்க்க ஓர் நடைவாவியையுங் கண்டனன். அந்நடைவாவியில் குளிர்ந்த ஜலம் நிறைந்திருந்தது. அதன் படிகள் மேலான ரத்னங்கள் இழைக்கப்பட்டிருந்தன. அதன் மணற்குன்றுகள் முத்துக்களாலும் பவழங்களாலும் ஏற்படுத்தப்பட்டிருந்தன. மற்றும், அது பலவகை ம்ருகங்களால் விசித்ரமாகப் புலப்பட்டுக்கொண்டு சுற்றிலும் விசித்ர

மான வனங்களால் வியப்புறும்படி யிருந்தது. விஶ்வ கர்மாவால் நிர்மிக்கப்பட்டு மிகுதியும் பெரியனவாகிய உப்பரிகைகளாலும் செயலால் தீர்ந்த வனங்களாலும் அது நாற்புறத்திலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்குப் புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த வ்ருக்ஷங்க ளெல்லாவற்றிற்கும் அடியில் வந்து உட்காருவோர்க்கு வெயில் படாதிருக்கும்பொருட்டு மேல்கட்டுக்களும் திண்ணைகளும், அத்திண்ணைகளுக்குப் பொன் படிக்கட்டுக்களும் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அவ் வானரயூதபதி பலகொடி ஸமூஹங்களும் ஏராளமான இலைகளும் நிறைந்து நாற்புறத்திலும் பொன்மயமான திண்ணைகள் அமைந்து விளங்குகிற ஓர் சிம்சுபா வ்ருக்ஷத்தைக் கண்டனன். அவன் அங்குநானாவிதமான பூமிபாகங்களையும் மிகுதியும் ஆழமான அருவிகளையும் மற்றும் பொன்நிறமுடையவையாகி அக்னிபோல் தகதகவென்று விளங்குகின்ற சில பொன்மரங்களையுங் கண்டனன். அப்பொழுது வீரனாகிய ஹனுமான் அப்பொன் மரங்களின் காந்தியால், ஸூர்யன் மேரு பர்வதத்தின் காந்தியால் ஸ்வர்ணமயமாகப் புலப்படு வதுபோல், தானும் ஸ்வர்ணமயமாகப் புலப்படுகையால் 'நான் இப்பொழுது ஸ்வர்ணமயனானேன்' என்று நினைத்துக்கொண்டனன். அவன் அங்ஙனம் ஸ்வர்ண மயமான வ்ருக்ஷஸமூஹங்களோடு கூடியதும் காற்று வீசுதலால் அவற்றில் கட்டியிருக்கிற அநேகமாயிரஞ் சிறியமணிகள் சப்திக்கையில் பலவகைச் சப்தங்கள் அமைந்ததுமான அசோகவனிகையைக்கண்டு ஆச்சர்ய முற்றனன். அம்மஹாபாஹு, நுனிகள் புஷ்பித்து ரமணீயமாகி, முதிர்ந்த முளைகளும் தளிர்களும் நிறைந்து குவியலாக இலைகளும் அடர்ந்து விளங்குகிற அந்தச் சிம்சுபா வ்ருக்ஷத்தின்மேல் ஏறித் தனக்குள் 'ஸீதை ராமனைக் காண மனவிருப்பமுற்று அது கிடையாத வருத்தத்தினால் மனக்களிப்பற்றுப் பிரிந்த வர்களுக்கு மனோவிநோதத்தின்பொருட்டு வனவிஹா ராதிகள் இஷ்டமாயிருக்குமாகையால் இவ்விடத்தில்

இங்குமங்கும் உலாவுவதற்குத் நி[illegible]ரென்று வருவாள்; ஆகையால் நான் இவ்விடத்தில் அப்பெண்மணியைப் பார்க்கக்கூடும். துஷ்டஸ்வபாவனாகிய ராவணனது அசோகவனிகை இது மிகுதியும் அழகாயிருக்கின்றது; மற்றும் செண்பகமரங்களும் சந்தனமரங்களும் மகிழ மரங்களும் அடர்ந்து ரமணீயமாயிருக்கின்றது. இந்தத் தாமரைவோடையும் மிக ரமணீயமாகிப் பக்ஷி ஸமூஹங்களால் விளக்கமுற்றிருக்கின்றது. ராமனது பத்னியும் ஜனகராஜன் புதல்வியுமாகிய அந்த ஸீதை இந்தத் தாமரை வோடைக்குத் தவறாமல் வருவாள். அம்மடந்தையர்மணி ராமனது அருமைக் காதலி ஜனகராஜன் புதல்வி வனங்களில் திரிந்து வழக்கப்பட்டவளாகையால் இவ்விடம் தவறாமல் வருவாள். அப்படி இல்லையாயின், இளமானுடைய கண்கள்போன்ற கண்களையுடைய அம்மநோனு பாவை ஸீதை, ராமனைப்பற்றின சிந்தையால் இளைத்துப் பண்டிதையாகையால் விரஹதாபத்தைப் போக்கும் விதம் அறிந்து இவ்வசோகவனத்திலுள்ள இந்தத் தாமரை வோடையின் அருகிலிருக்கின்ற இவ்வனத்திற்கு வருவாள். அழகான கண்களையுடைய அம்மாதரசி எப்பொழுதும் வனவாஸத்தில் விருப்பமுடையவளும் வனத்தில் திரியுந்தன்மை யுடையவளுமாகையால் இப்பொழுது ராமனைப்பிரிந்த துயரத்தினால் பரிதாபமுற்றிருப்பதுபற்றி அந்தத் தாபத்தைப் போக்கும்பொருட்டு இவ்வனத்திற்கு அவச்யம் வருவாள். ராமனது ஆசை நாயகியும் ஜனகமஹாராஜன் புதல்வியும் பதிவ்ரதையுமாகிய ஸீதை என்றும் எப்பொழுதும் வனத்தில் திரிகிற ப்ராணிகளைப் பார்க்க விருப்பமுடையவளாயிருப்பவள். இது நிஜம். ஆகையால் அவள் இவ்வனத்தில் திரியும் ப்ராணிகளைப் பார்க்க வருவாள். அன்றியும் சிறந்த யௌவனம் அமைந்து விளங்குகிற அவ்வரவர்ணினி ஜானகி ஸந்தியை உபாஸிப்பதில் விருப்பமுடையவளாகையால் ப்ரதிதினமும் ஸந்தியை உபாஸிக்கும்பொருட்டு நல்ல

ஜலமுடைய இந்நதிக்கு நிச்சயமாக வருவாள். அழகான இவ்வசோகவனிகை, ராஜேந்த்ரனாகிய ராமனது ப்ரியபத்னியும் மிகுந்த ஸௌந்தர்யமான அந்த ஸீதைக்குத் தகுந்திருக்கின்றது. சந்த்ரன்போல் அழகான முகமுடைய அம்மஹாநுபாவை பிழைத்திருப்பாளாயின், அவஸ்யம் அழகிய ஜலமுடைய இந்நதிக்கு வருவாள்' என்று ஆலோசித்தனன். மஹாநுபாவனாகிய ஹநுமான் இங்ஙனம் ஆலோசித்து ராஜஸ்ரேஷ்டனான ராமனது பத்னியாகிய ஸீதையின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு நாற்புறத்திலும் தேடுவோனாகி நன்கு புஷ்பித்திருப்பதும் இடைவெளியின்றி அடர்ந்திருப்பதுமாகிய அந்த வ்ருக்ஷத்தின் இலை மறைவில் மறைந்திருந்து அங்குள்ள விசேஷங்களையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தனன்.

பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஹநுமான் ஸீதையைக் காணுதல்.

அந்த ஹநுமான் அச்சிம்சுபா வ்ருக்ஷத்தில் இருந்து ஸீதாதேவியைத் தேடமுயன்று, நாற்புறத்திலும் பலவிதமாக உற்றுப் பார்த்துக்கொண்டு அங்ஙனம் அவ்வசோகவனிகை முழுவதையும் ஆராய்ந்து பார்த்தனன். அது கல்பகக் கொடிகளாலும் பலவகை வ்ருக்ஷங்களாலும் விளக்கமுற்று மிகுதியும் மேலான வாஸனைகளும் ரஸங்களும் சூழப்பெற்று எல்லா இடத்திலும் நன்கலங்கரிக்கப்பட்டு ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. மேலும், நந்தனவனம்போல் புலப்பட்டுக்கொண்டு ம்ருகங்களும் பக்ஷிகளும் நிறைந்து மேடைகளும் உப்பரிகைகளும் அடர்ந்திருக்கவும் குயிலினங்கள் சூலாவவும் பெற்று ஸ்வர்ணமயமான தாமரைகளும் நெய்தல்களும் அமைந்த நடைவாவிக

ளோடும் பலவகை ஆஸனங்களோடும் படுக்கைகளோ
டும் அனேகமாயிரம் பூமி க்ருஹங்களோடுங்கூடி ப்ரகா
சித்துக்கொண்டிருந்தது. அங்குள்ள வ்ருக்ஷங்கள்
எல்லா ருதுக்களிலும் புஷ்பிப்பதும் காய்ப்பதும்
பழுப்பதுமாகி அவ்வனத்திற்கு மிகுதியும் அழகை
விளைத்துக்கொண்டிருந்தன. சிவக்கப் புஷ்பித்திருக்
கின்ற அசோக வ்ருக்ஷங்களின் காந்தியால் அப்
பொழுது உதயமாகின்ற ஸூர்யன்போல் ப்ரகாசித்துக்
கொண்டு எரிகிறதோ என்னும்படி விளங்குகிற அசோக
வனிகையை அம்மரத்தின் மேலிருக்கிற ஹனுமான்
கண்டனன். பலவகைப் பக்ஷிகள் மூக்கினுல் புஷ்பங்
களைக் கவ்விக்கொண்டு அதனுல் சிரோபூஷணம்
அணிந்தவைபோன்று அடிக்கடி குவியல் குவியலாக
ஒரே ஸமயத்தில் கிளம்பும்பொழுது அவற்றின் சிறகு
களால் அடிக்கப்பட்டுக் கிளைகளினின்று இலைகள்
உதிர்கையில் அப்பக்ஷிகள் அதை இலையில்லாத
வெறுங்கிளையுடையதாகச் செய்கின்றனவோ என்னும்
படி புலப்பட்டுக்கொண்டிருந்தது. நுனிமுதல் அடி
வரையில் நிரம்பவும் புஷ்பித்துக் காண்போர்களின்
சோகத்தைப் போக்குகிற அசோக வ்ருக்ஷங்களும்,
புஷ்பஸமூஹமாகிற பெரும் பாரத்தினுல் மிகுதியும்
வணங்கியிருக்கையால் தரையைத் தொடுவதுபோல்
புலப்படுகின்ற புஷ்பித்த கர்ணிகார வ்ருக்ஷங்களும்
மிகுதியும் புஷ்பித்த பலாச வ்ருக்ஷங்களும் அங்கு
நிறைந்திருந்தன. அவ்வப்ரதேசம் அங்ஙனம் நன்கு
புஷ்பித்த வ்ருக்ஷங்களின் காந்தியால் எரிவதுபோல்
நாற்புறத்திலும் புலப்பட்டது. அவ்வனத்தில் பற்பல
ஸுரபுன்னைமரங்களும் எழிலைப்பாலை மரங்களும்
செண்பகமரங்களும் நறுவிலி மரங்களும் நாற்புறத்தி
லும் ஆழ்ந்து வளர்ந்த வேர்களுடன்கூடி நிரம்பவும்
புஷ்பித்து மிகுதியும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தன.
அவ்வனத்தில் அசோக வ்ருக்ஷங்கள் சில பொன்வர்ண
முடையவைகளும், சில அக்னிஜ்வாலைபோல் ப்ரகா
சிப்பவைகளும், சில நீலரத்னம் போன்றவைகளும்

மைபோன்றவைகளுமாகி இங்ஙனம் அநேக மாயிரம் ப்ரகாசித்துக்கொண்டிருந்தன. மேலும், அது பலவகை வ்ருக்ஷ ஸமூஹங்களோடுகூடின நந்தனவனத்தைக் காட்டிலும் மேலாகிக் குபேரனது சைத்ரரதமென்னும் உத்யானம்போல் விசித்ரமும் இன்னது இனியதென்று நிரூபித்துச்சொல்ல முடியாததும் திவ்யமும் மிக ரமணீயமும் எல்லாவிடத்திலும் காந்தியமைந்ததும் புஷ்பங்களென்னும் நக்ஷத்ரங்களோடு விளங்கமுற்றிருப்பதுபற்றி இரண்டாவது ஆகாசம்போன்றதும் புஷ்பங்களென்னும் ரத்னங்களால் விசித்ரமாயிருப்பது பற்றி ஐந்தாவது ஸமுத்ரம் போன்றதும் எல்லா ருதுக்களிலும் புஷ்பங்கள் நிறைந்து தேன்மணங் கமழப்பெற்ற வ்ருக்ஷங்கள் அடர்ந்ததுமாகி ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. மற்றும், அவ்வுத்யானம் நாநாவித சப்தங்களைச் செய்கிற ம்ருக ஸமூஹங்களும் பக்ஷிகளும் நிறைந்து ரமணீயமாகிப் பல வாஸனைகளோடு வீசுகிற காற்றுடன்கூடி மனோஹரமாகி நன்மணம் அமைந்திருப்பதுபற்றி நன்மணமுடைய பர்வதஸ்ரேஷ்டமான இரண்டாவது கந்தமாதனம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. வானரதிலகனாகிய அந்த ஹநுமான் இங்ஙனம் அவ்வசோகவனிகையைக் கண்டு அவ்விடத்திலேயே கொஞ்சம் அருகாமையில் மிகுதியும் உயர்ந்திருப்பதும் வெளத்தாலயம்போல் நிர்மிக்கப்பட்டதுமாகிய ஓர் உப்பரிகையைக் கண்டனன். அது இடையில் ஆயிரம் ஸ்தம்பங்களுடையதாகிக் கைலாஸபர்வதம்போல் வெளுத்துப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அதில் பவழங்களால் செய்யப்பட்ட படிக்கட்டுக்களும் மேலான ஸ்வர்ணத்தினால் இயற்றப்பட்ட திண்ணைகளும் விளங்கின. அது கண்களைப் பிடுங்குவதுபோல் காந்தியால் மிகுதியும் ப்ரகாசிப்பதும் நிர்மலமுமாகி மிகவும் உயர்ந்திருக்கையால் ஆகாயத்தை அளாவுவதுபோல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது.

## ஹனுமான் ஸீதையைக் காணுதல்.

அனந்தரம், அந்த ஹனுமான், அவ்வனத்தில் [1] மலினவஸ்த்ரந்தரித்துச் சுற்றிலும் ராக்ஷஸஸ்த்ரீகள் சூழ்ந்து காத்துக்கொண்டிருக்க உபவாஸத்தினால் இளைத்துத் தீனையாகி அடிக்கடி பெருமூச்செறிந்து கொண்டு சுக்லபக்ஷத்தின் ஆரம்பத்தில் நிர்மலமான சந்த்ரனைப்போல் காந்தி குறைந்திருக்கப்பெற்ற ஓர் பெண்மணியைக் கண்டான். அவள் மிகுதியும் உருவம் மாறியிருக்கையால், வருந்தி அறியக்கூடியவளாயிருந்தனள். அவள் அழகிய சரீரகாந்தியுடையவளாயினும் அழுக்குவஸ்த்ரந் தரித்திருந்தமையால் புகைமூடின அக்னி ஜ்வாலைபோல் ப்ரகாசித்தனள். மேலும், உத்தரீயமின்றிப் பொன்வர்ணமுடையதும் நலுங்கினதுமாகிய விலையுயர்ந்த ஒரு வஸ்த்ரத்தையே உடுத்துக்கொண்டிருந்தனள். அப்பொழுதே பூமியினின்று கிளம்பினவள்போல் அழுக்குடன்கூடி அலங்காரஞ் செய்பவன் அருகில் இல்லாமையால் அலங்காரமின்றித் தாமரையில்லாத ஓடைபோன்று, ராமனைப்பிரிந்து வருந்திக்கொண்டிருந்தனள். அவள் பாபபுருஷரிடம் அகப்பட்டோமே யென்று வெட்கமுற்றுப் பதியைப் பிரிந்த துக்கத்தினால் பரிதபித்து மிகவும் வாடின இரக்கத்திற் கிடமாகி ராவணன் கையில் அகப்பட்டு அங்காரக க்ரஹத்தினால் பிடிக்கப்பட்ட ரோஹிணி போல் புலப்பட்டனள். அவள் கண்ணீர் நிறைந்த முகமுடையவளாகி மனக்களிப்பின்றி ஆஹாரமில்லாமையால் இளைத்து எப்பொழுதுஞ் சோகத்திலாழ்ந்து இடைவீடின்றிச் சிந்தையில் மூழ்கி எப்பொழுதும் துக்கமே கதியாயிருந்தனள். அன்றியும் அம்மடந்தையர்மணி தனக்குப்ரியமான ஜனத்தைக் காணநேராமல் சத்ருக்களான ராக்ஷஸ ஸ்த்ரீகளின் கூட்டத்தையே பார்த்துக்கொண்டு தன் ஜாதியில் சேர்ந்த ம்ருக ஸமூஹங்களைப் பிரிந்து நாய்க் கூட்டங்களால் சூழப்

1- மலினம்-அழுக்கான.

பட்ட மான்பேடுபோல் வருத்தமுற்றிருந்தனள். அப்பெண்மணி கறுத்த ஸர்ப்பம்போல் ப்ரகாசிப்பதும் இடையின் பின்புறம் வரையில் தொங்குவதுமாகிய ஒரே தலைப் பின்னலுடன் கூடிச் சரத்காலத்தில் கறுத்த வனஸமூஹத்தோடுகூடின பூமிபோல் திகழ்வுற்றிருந்தனள். அவள் ஸுகங்களை அனுபவிப்பதற்கே உரியவள்; இதுவரையில் என்றும் வ்யஸனப்பட்டறியாதவள்; ஆதலால் அப்பொழுது வருத்தமுற்று மிகுதியும் பரிதபித்துக்கொண்டிருந்தனள். ஹனுமான், அகன்ற கண்களுடையவளும் மிகுதியும் அழுக்கடைந்து இளைத்திருப்பவளுமாகிய அவ்வணங்கையை நன்றாக உற்றுப்பார்த்து யுக்திகள் அமைந்த காரணங்களால் 'இவளே ஸீதை' என்று ஊஹித்தனன். அவ்வானரன் 'காமரூபியாகிய அந்த ராக்ஷஸன் அப்பொழுது எடுத்துக்கொண்டுபோன மாதர்மணிக்கு எப்படிப் பட்ட உருவம் இருக்க நாம் கண்டனமோ, அப்படிப் பட்ட உருவமே இவளுக்கும் இருக்கின்றது' என்று ஊஹித்தனன். அம்மடந்தையர்மணி, பூர்ண சந்த்ரன் போன்ற முகமும் அழகிய புருவங்களும் திரண்டுருண்டு அழகான கொங்கைகளும் அமைந்து தன் தேஹகாந்தியால் திசைகளை யெல்லாம் இருளற்று விளங்கும்படி செய்துகொண்டு கறுத்து நீருநிகென்ற தலைமயிர்களும் கோவைப்பழம்போல் சிவந்த அதரமும் சிறுத்து அழகான இடையும் நன்கமைந்த பாதங்களும் தாமரையிதழ்போன்ற கண்களும் விளங்கப்பெற்று மன்மதனுடைய ரதிதேவிபோல் விளக்கமுற்றிருந்தனள். மேலும், அம்மாது ஸமஸ்த ஜகத்தினுடைய மனத்திற்கும் இனியளாகிப் பூர்ணசந்த்ரனுடைய காந்திபோல் திகழ்வுற்று மிகுதியும் இளைத்திருக்கிற அழகான மேனியுடன் தரைமேல் உட்கார்ந்து, நியமங்களைக் கைப்பற்றின தாபஸிபோல் புலப்பட்டுக்கொண்டிருந்தனள். பயப்படுந்தன்மையுடைய அப்பெண்மணி மிகுதியும் நெடுமூச்செறிந்துகொண்டு ஸர்ப்பராஜ கன்னிகைபோல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனள். அம்மடந்தை

யர்மணி, பெரிய துக்கபரம்பரைகள் மேன்மேலும் வளர்ந்துவரப்பெற்று மனக்களிப்பின்றி, மிகுதியும் புகைகளாற்சூழப்பட்ட அக்னிஜ்வாலைபோல் காந்தி குறையப்பெற்றிருந்தனள். மேலும், அவ்வங்கங்களை ஸந்தேஹத்திற்கிடமான பொருளையுடைய மன்வாதி ஸ்ம்ருதிபோலவும், க்ஷீணித்த ஸம்பத்துபோலவும், அவிஸ்வாஸம் நிறைந்த ஸ்ரத்தைபோலவும், தடைபட்ட ஆசைபோலவும், விக்னம் அடைந்த கார்யஸித்திபோலவும், கலக்கமுற்ற மதிபோலவும், விபவாதத்தினால் அழிந்த கீர்த்திபோலவும் ஸ்ரீராமனோடு சேரவொட்டாமல் தடுக்கையால் வழியுந் தோன்றாமல் மிகுதியும் வருந்தி ராக்ஷஸனாகிய ராவணன் தன்னை வருத்திக்கொண்டு வருகையால் இளைத்துச் சரீரமெல்லாம் ஒடுங்கி இளமான்பேடு போல் அகன்ற கண்களுடையவளாகி அங்குமிங்கும் உற்றுப் பார்த்துக்கொண்டு மிகுதியுங் கண்ணீர் நிறைந்திருப்பதும் கறுத்து வளைந்த இமை மயிர்களுடையதும் கலக்கமுற்றதுமாகிய முகத்துடன் அடிக்கடி பெருமூச்செறிந்துகொண்டு மேனியெல்லாம் அழுக்கடையப்பெற்று வருந்தி அலங்காரங்களுக்குத் தகுந்தவளாயினும் பர்த்தாவைப் பிரிந்திருக்கையால் அலங்காரத்தை இழந்து கறுத்த மேகங்களால் மறைக்கப்பட்ட சந்த்ரகாந்திபோல் புலப்பட்டுக் கொண்டிருந்தனள். அடிக்கடி அப்யாஸஞ்செய்யாமையால் நிலைபெறாமல் மறப்படைந்த வித்யைபோல் இளைத்திருக்கின்ற ஸீதையை அடிக்கடி பார்த்து அந்த ஹநுமானுடைய புத்தி 'அங்ஙனம் இளைத்து மிகுந்த அழுக்கடைந்திருக்கின்றனளே! இவள் ஸீதையோ அன்றோ' என்று ஸந்தேஹம் அடைந்தது. இலக்கணப்படி அமையாத சொல்லின் பொருளை வருந்தி அறிவதுபோல், ஹநுமான் அலங்காரமில்லாமல் உபவாஸாதிகளால் உருவம் மாறியிருக்கிற ஸீதையை ராமன் சொன்ன அடையாளங்களைக்கொண்டு ஆலோசித்து மிகவருத்தப்பட்டு அறிந்தனன். ஹநுமான், சிந்தைக்கிடமாகாத

வளும் அகன்ற கண்களுடையவளுமாகிய அந்த ராஜ குமாரத்தியைக்கண்டு பொருந்தின பல காரணங்களைக் கொண்டு இவள் ஸீதையேயென்று ஊஹித்தனன். ராமன் ஹனுமானோடு, அவன் புறப்படும்பொழுது ஸீதையின் அங்கங்களில் எந்தெந்த ஆபரணங்கள் இருப்பதாக மொழிந்தனனோ, அவ்வாபரணங்களை யெல்லாம் ஸீதை பதிவ்ரதையாகையால் பர்த்தாவைப் பிரிந்த ஸமயத்தில் தரிக்கலாகாதென்று வ்ருக்ஷங்களின் கிளைகளில் வைத்திருக்கக் கண்டனன். அவ்வாபரணங்கள் கிளையில் வைக்கப்பட்டு விளக்கமுற்றிருந்தன. நல்ல வேலைத்தரமுள்ள குண்டலங்களும் செவிகளில் அணிகிற புஷ்பாகாரமுடைய த்ரிவர்ணகமென்னும் அழகான ஆபரணங்களும் மணிகளாலும் பவழங்களாலும் செய்யப்பட்டு மிகவிசித்ரங்களான ஹஸ்தாபரணங்களும் (கையில் அணிகிற ஆபரணங்களும்) அப்பெண்மணியின் விரஹதாப வெப்பத்தினால் கறுத்திருந்தன. அன்றியும், அந்தந்த ஆபரணங்கள் வெகு காலமாக அணியப்பட்டிருந்தவையாதலால், அப்பொழுது கழற்றிவைத்திருப்பினும், அந்தந்த அவயவங்களில் அவ்வாபரணங்களால் ஏற்பட்டிருக்கின்ற அடையாளங்களையுங் கண்டனன். ஹனுமான் அவற்றைக் கண்டு 'ராமன் அடையாளமாகச் சொன்ன ஆபரணங்களே இவையென்று யான் நினைக்கின்றேன். அந்த ருஶ்யமூக பர்வதத்தில் ஸீதை எந்த ஆபரணங்களை வீசிப்போகட்டனளோ, அவ்வாபரணங்கள் எனக்கு இவ்விடத்தில் புலப்படவில்லை. அப்பொழுது போகடாத ஆபரணங்களே இப்பொழுது இங்கிருப்பவையாம். இவ்விஷயத்தில் ஸந்தேஹம் இல்லை. அப்பொழுது ருஶ்யமூக பர்வதத்தின்மேல், மஞ்சள் வர்ணமுடையதும் பொற்பட்டம்போல் ப்ரகாசிப்பதுமாகிய மேலான உத்தரீயம் ஆகாயத்தினின்று நழுவி மரத்தின் கிளையில் தங்கியிருக்கையில் அதை வானரர்கள் கண்டனர். மற்றும், கலகலவென்று சப்தஞ் செய்துகொண்டு பெரியனவாகிய

மேலான ஆபரணங்களும் தரையில் விழ வானரர்கள் கண்டனரல்லவா. அவையெல்லாம் இவள் வீசியெறிந்தவைகளேயாம். இவ்வஸ்த்ரம் வெகுகாலமாக விடாமல் தரித்து வருகையால் மிகுதியும் கலுங்கி மிகவும் அழுக்கடைந்திருக்கின்றது. ஆயினும் அப்பர்வதத்தின்மேல் எறியப்பட்ட மற்றொரு வஸ்த்ரம்போல் அதேவர்ணமும் அதே காந்தியும் உடையதாயிருக்கின்றது. இவள், ராவணன் எடுத்துக்கொண்டுபோகையால் ராமனது கண்களுக்குப் புலப்படாமல் மறைந்திருப்பினும், அவன் எப்பொழுதும் மனத்தில் த்யானித்துக்கொண்டிருக்கையால், என்றும் விடாமல் அவனுடைய மனத்திலேயே இருக்கின்றனளோ, பொன்போன்ற மேனியின் வர்ணமுடைய இவள், ராமனது ப்ரியமஹிஷியான அப்படிப்பட்ட ஸீதையே. ராமன் எவளைக்குறித்துக் காருண்யம், கொடுந்தன்மையில்லாமை (அதாவது ஆஸ்ரிதர்களை விடாது ரக்ஷிக்கும் ஸ்வபாவம்) சோகம், மன்மத விகாரம் ஆகிய இந்நான்கு காரணங்களால் பரிதபிக்கின்றாரோ, அப்படிப்பட்ட ஸீதையே இவள். ஆபத்காலத்தில் ஸ்த்ரீகளை எங்ஙனம் ரக்ஷிக்க வேண்டுமோ, அங்ஙனம் ரக்ஷியாது போனேனாகையால் தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ள முடியாமல் காணாது போயினளே என்னுங் காருண்யத்தினாலும், நம்மை அடுத்திருப்பவளை ரக்ஷிக்கநேராது போயிற்றேயென்னும் ஆஸ்ரித ரக்ஷண ஸ்வபாவத்தினாலும், வேதங்கள் பார்யை புருஷனது தேஹத்தில் பாதியென்று மொழிகிறபடியே என் சரீரத்தில் பாதியாகிய என் மனைவி அகப்படாமற் போயினளே என்னுஞ் சோகத்தினாலும், என் மனத்திற்கு இனிப்பை விளைக்கின்ற என் காதலி காணாதிருக்கின்றனளே என்னும் மன்மதவிகாரத்தினாலும் எந்த ஸுந்தரியைக்குறித்து ராமன் பரிதபிக்கின்றாரோ, அந்த ஸீதையே இவள். இத்தேவியின் உருவமும் அங்கப்ரத்யங்க ஸௌந்தர்யமும் எப்படிப்பட்டதோ, ராமனது உருவமும் அங்கப்ரத்யங்க ஸௌந்தர்யமும் அப்படிப்பட்டதேயாம்.

ராமனது உருவமும் அங்க ப்ரத்யங்க ஸௌந்தர்யமும் எப்படிப்பட்டதோ, இவளது உருவமும் அங்க ப்ரத்யங்க ஸௌந்தர்யமும் அப்படிப்பட்டதேயாம். ஆகையால் கறுத்தபுகான கண்களையுடைய இம்மடந்தையர் மணி அவனுக்குத் தகுந்திருக்கின்றனள். இந்த ஸீதா தேவியின் மனம் ராமனிடத்தில் மிகுதியும் நிலையுற்றிருக்கின்றது; அந்த ராமனுடைய மனமும் இவளிடத்தில் மிகுதியும் நிலையுற்றிருக்கின்றது. அனதுபற்றியே இம்மடந்தையர்மணி முஹூர்த்தமாயினும் ஜீவித்திருக்கின்றனள். அப்படியே தர்மஸ்வபாவனாகிய அந்த ராமனும் அதைப்பற்றியே முஹூர்த்தமாயினும் ஜீவித்திருக்கின்றனன். இப்படி இருவரும் ஒருவர்க்கொருவர் மனத்தில் நிலையுற்றிருக்கையால் இங்ஙனம் பிழைத்திருக்கிறார்களேயன்றி, இப்படியில்லையாயின் முஹூர்த்தகாலமாயினும் பிழைத்திருக்கமாட்டார்கள். ராமன் ஸீதை இல்லாதிருப்பினும் தேஹத்தைத் தரித்திருக்கின்றானே, ஸீதை மாத்ரம் ஸ்வதந்த்ரையல்லளாகையால் தேஹத்தை விட வல்லளல்லள்; ராமன்

---

1. இங்கு 'து:க்ஷசதந்த்ரஸவாக ராமோஹிநோபடுநயா ப்ரஹா:| யாரயச்யாத்யனோ தேஹம் சோகேநாவஸீததி' என்று மூலம். 'அந்யத்ர பீஷ்மாத் காங்கேயாதந்யத்ர ச ஹநூமத:| ஹரிணீ 'வாரபாத்ரேண சர்மணா மோஹிதஞ் ஜகத்' (கங்கா புத்ரனான பீஷ்மனையும் ஹநுமானையுந் தவிர மற்றை ஸமஸ்த லோகமும் காமத்திற்குட்பட்டதே) என்கிறபடியே பீஷ்மனைப்போல் காமத்திற்குட்படாமல் பால்யம்முதல் பரம வைராக்யம் அமைந்து வீரப்ரஹ்மசாரியாயிருக்கிற ஹநுமான் அந்த மால்யவத் பர்வதத்தில் ஸீதைக்காக வருந்துகின்ற ராமனது சோகாதிசயத்தைக் கண்டு ஆச்சர்யப்பட்டு 'ஐயோ! வஸிஷ்டரிடம் எத்தனையோ நாளாகச் சிஷ்யவ்ருத்தியிலிருந்த இவனுங்கூட ஒரு பெண்பிள்ளைக்காக இங்ஙனம் சோகிப்பதே!' என்று தான் விரக்தனாகையாலே நிந்தித்துப் பரிஹாஸஞ் செய்தனன். அப்படிப்பட்ட விரக்தன் இப்பொழுது இந்த ஸீதையின் வைலக்ஷண்யத்தைக் கண்டு விசேஷஜ்ஞனாகையால் 'இவளைட்

புருஷனுகையால் ஸ்வதந்த்ரனுயிருந்தும் தேஹத்தை விடாமல் வைத்துக்கொண்டிருக்கின்றனே; மற்றும், துக்கத்தினுல் வருந்தி இளைப்புற்றிருக்கின்றனே; இது மிகுதியும் செய்யமுடியாத கார்யம். இப்படிப்பட்ட கார்யத்தை அவன் செய்திருக்கின்றனன். இங்ஙனம் மற்றெவனும் இருக்க வல்லனல்லன். சிறந்த மடக்கையர் மணியாகிய இந்த ஸீதையை இழந்து அம்மஹாபாஹுவாகிய ராமன் முஹூர்த்தமாயினும் பிழைத்திருக்கின்றனே; இப்படிப்பட்ட பதிவ்ரதையைப் பிரிந்து மற்றொருவன் இருக்கமாட்டானாகையால் அவன் எப்படிப்பட்டவர்க்கும் செய்ய முடியாத கார்யத்தைச் செய்கின்றான்' என்று சிந்தித்தான். வாயுகுமாரனுன ஹநுமான் அப்பொழுது இங்ஙனம் அழுக்கடைந்த வஸ்த்ரந்தரித்து ஒருவாறு மூடிய பதிவ்ரதா தர்மங்களோடு கூடின ஸீதையைப் பார்த்து

பிரிந்து ராமன் தேஹத்தைத் தரித்திருப்பது கல்விதற்கரிய ஸாத்யமன்று' என்கிறான்—(துஷ்கரம்) [illegible]. (துஷ்கரம் க்ருதவான் ராம:) இவளைப்பிரிந்து ப்ராணனைத் தரித்திருக்கிற ராமன் மிகுதியுஞ் செய்யமுடியாத கார்யஞ் செய்தான். இவளைப்பிரிந்தும் தேஹத்தைத் தரித்திருப்பது [illegible] செய்யமுடியாத கார்யமல்லவா? (ப்ராண [illegible]) [illegible] போற்றுதலை யேற்றக்களிலும் [illegible] ப்ராணயாத்ரையில் (ஸ்நேஹ [illegible]) சிறிது [illegible] அறியாதவன். (யாய [illegible] தேஹம்) பிறகிடத் தியாசித்து வந்த தேஹத்தைத் தரித்திருக்கிறதோ? தன்னுடைய தேஹமன்றோ இது? (தேஹம்) போகத்திற்கிடமானதன்றோ [illegible]? துக்கத்திற்கிடமல்லவே? ஸீதையின் ஸரீரம் பரதந்த்ரமாகையால் அவள் அதை விடுவது யுக்தமன்று. ஸ்வாதீனமான ஸரீரத்தை யுடைய ராமன் தன் தேஹத்தை விடாதிருப்பது யுக்தமன்றென்று கருத்து. அவனும் 'மத்தாகார த்வம் ப்ரகாஸஸே' என்கிற படியே பக்த பரதந்த்ரனுகையால் ஸ்வாதீனனன்றே யென்னில் சொல்லுகிறான். (நஸோகேநாவஸீதி) சோகத்தினுல் இளைப்புற்றிருக்கின்றனே?

ஸந்தோஷம் அடைந்து மனத்தில் ராமனை நினைந்து ஸீதை மீளவும் அவனைப் பெறுதற்கு வேண்டிய பதிவ்ரதா தர்மங்களில் மாறுதிருக்கின்றமையால் ப்ரபுவாகிய ராமன் மஹாபாக்யமுடையவனே யென்று அவனைப் புகழ்ந்தனன். பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் ஸீதையிருக்கும் துர்த்தசையைக் கண்டு மிகுதியும் புலம்புதல்.

வானரர் தலைவனாகிய ஹனுமான் புகழத்தகுந்த ஸீதாதேவியையும் கல்யாணகுணங்களால் மிகவும் இனியனாகிய ராமனையும் புகழ்ந்து மீளவும் சிந்தையில் மூழ்கினான். தேஜஸ்வியாகிய அந்த ஹனுமான் முஹூர்த்த காலம் ஆலோசித்து உடனே கண்களில் நீர் ததும்பப்பெற்று ஸீதையைக் குறித்து இங்ஙனம் புலம்பினன் :— 'இப்பெண்மணி, பெரியோர்களால் சிக்ஷிக்கப்பட்ட பரம தார்மிகனாகிய லக்ஷ்மணனுக்கு மிகுதியும் பூஜிக்கத்தகுந்தவள்; மேலும் அவனது அண்ணனும் ஜகத்ரக்ஷகனுமாகிய ராமனுக்கு மிகுதியும் ப்ரீதிக்கிடமாயிருப்பவள். இப்படிப்பட்ட ஸீதையும் துக்கத்தினால் வருந்துவாளாயின், இனிக் காலத்தைக் கடக்க எவனுக்கும் ஸாத்யமன்று. இத்தேவி, ராமன் ஆஶ்ரிதர்களைக் காப்பதையே வ்ரதமாகவுடையவனென்று தெரிந்தவள்; அவனே ப்ரயத்னஞ் செய்வானென்று நன்கறிந்தவள்; ராமன் ம்ருகமென்று பின்றொடர்கையில், அதை மாரீசனென்று கண்டுபிடித்த மஹாபுத்திமானாகிய லக்ஷ்மணன் ப்ரயத்னஞ் செய்வானென்றறிந்தவள்; ராமன் தலையால்

தாங்கும்படியான [1] வாத்ஸல்யமுடையவள்; ஆகையால் இவள் தன் ப்ராணன்கள் நசிக்கும்படியான காலம் ஸம்பவிக்கினும், ஒரு ப்ரயத்நமும் செய்யாமல் சிறிதும் கலக்கமடையாமல் வர்ஷாகாலம் வந்த பொழுதும் கலங்காத கங்கையைப்போல் ப்ரகாசிக்கின்றனள். [2] ஸ்வபாவத்திலும் வயதிலும் நடவடிக்கையிலும் குலத்திலும் ஸாமுத்ரிக லக்ஷணங்களிலும் ஸ்ரீராமனுக்குத் தகுந்திருக்கையால் இவளுக்கும் அவன் தகுந்திருக்கின்றனன். ஆதலால் இவளுக்கு

1. ப்ரீதிக்கிடமாயிருக்கை.

2. இங்கு 'துல்யசீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம்। ராகவோऽர்ஹதி வைதேஹீம் தம்சேயமஸிதேக்ஷணா' என்று மூலம். (துல்யசீலவயோவ்ருத்தாம்) சீலமாவது—ஸ்வபாவம். 'அஸ்யா தேவ்யா மநஸ்தஸ்மிம்ஸ்தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்' (அத்தேவியின் மனம் ராமனிடத்திலும் ராமனுடைய மனம் அவளிடத்திலும் நிலையுற்றிருக்கும்) என்கிறபடியே ராமனுக்கு அநுரூபமான ஸ்வபாவமுடையவள். பதினாறு வயதுடையவனுக்குப் பன்னிரண்டு வயதுடையவளே தகுந்தவளென்கிறபடியே ராமனுக்குத் தகுந்த வயதுடையவள். 'தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்' என்று தோஷமும் குணமாகத் தோற்றுந் தன்மையன் ராமன்; 'பாபாநாம்வா ஸுபாநாம்வா வதார்ஹாணாம் ப்லவங்கம' கார்யங் கருணமார்யேண ந கஶ்சிந்நாபராத்யதி' (ஹநுமானே! பாபிஷ்டர்களாயினும் புண்யாத்மாக்களாயினும் வதிக்கத் தகுந்தவரிடத்தில், பூஜ்யரான ராமன் க்ஷமைசெய்வதே யுக்தம். அபராதஞ் செய்யாதவன் ஒருவனும் இல்லையன்றோ!) என்று தன்னை ஹிம்ஸித்த ராக்ஷஸ ஸ்த்ரீகளையும் கொல்லவேண்டாமென்று வேண்டும்படியான நடத்தையுடையவள் ஸீதை. அப்படிப்பட்ட நடத்தையுடைய ராமனுக்கு அநுரூபமான இப்படிப்பட்ட நடத்தையுடையவளென்றபடி. (துல்யாபிஜநலக்ஷணாம்) குலமும் ஸாமுத்ரிகாதி லக்ஷணங்களும் ராமனோடொத்திருக்கப்பெற்றவள். ஸார்வபௌமனுடைய பார்யைக்கு வேண்டிய ஸாமுத்ரிக லக்ஷணங்க

அவனைக்காட்டிலும் ஒரு விசேஷம் உண்டு; இவள் கறுத்தழகிய கண்களையுடையவள். ஆகையால் அவனைக் காட்டிலும் இவளுக்குக் கண்ணழகே விசேஷம்' என்று புலம்பினான். அந்த ஹநுமான் புதிய பொன்போல் ப்ரகாசிப்பவளும் உலகமனைத்திற்கும் இனிமைக் கொடுப்பவளான லக்ஷ்மீதேவியைப் போன்றவளுமாகிய ஸீதையைப் பார்த்து ராமனை மனத்தில் நினைத்துக் கொண்டு தனக்குள் இங்ஙனம் மொழிந்தனன்:— 'அகன்ற கண்களையுடைய இப்பெண்மணிக்காகவே ராமன் மஹாபலனாகிய வாலியையும் பராக்ரமத்தில் ராவணனை நிகர்த்த கபந்தனையும் கொன்றனன். மேலும் இவளுக்காகவே ராமன் வனத்தில் பராக்ரமத்தைக் காட்டித் தேவேந்த்ரன் சம்பராஸுரனைக் கொன்றாற்போல் யுத்தத்தில் பயங்கர பராக்ரமனாகிய விராதனென்னும் ராக்ஷஸனை முடித்தனன். மேலும் இம்மடந்தைக்காகவே ஜநஸ்தானத்தில் பயங்கரமான செயலுடைய பதினாலாயிரம் ராக்ஷஸர்கள் அக்னி ஜ்வாலைபோன்ற பாணங்களால் அடிக்கப்பட்டார். எல்லாமறிந்த மதியுடைய ராமன், இவளுக்காகவே

---

ளெல்லாம் அமையப்பெற்றவள். இப்படிப்பட்டவளாகையால் (ராமஸ்யார்ஹதி வைதேஹீம்) ராமனுக்கு ஸீதை தகுந்திருக்கின்றனள். (தஞ்சேயமஸிதேக்ஷணா) ஸீதைக்கும் ராமன் தகுந்திருக்கின்றனன். உலகத்தில் ஸௌந்தர்யாதி குணங்களெல்லாமுடையவளுக்கு ஸௌந்தர்யாதி குணங்களெல்லாம் அமைந்தவன் அகப்பட்டான். இவ்விருவர்க்குமோ ஸமஸ்த லக்ஷணங்களும் சேர்ந்திருக்கின்றனவல்லவா!' என்று ஆச்சர்யப்படுகிறான். ஆனால் ஸீதைக்கு (அஸிதேக்ஷணா) கறுத்த கண்ணுடையவள்) என்று விசேஷம் அதிகமாகையால் ராமனைக் காட்டிலும் ஸீதையின் நேத்ர ஸௌந்தர்யம் அதிகமென்று சொல்லப்படுகிறது. ஆனதுபற்றியே ராமன் 'நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்' (அந்தக் கறுத்த கண்ணுடைய ஸீதையைப் பிரிந்து ஒரு க்ஷணகாலமும் ஜீவிக்கமாட்டேன்) என்றானென்று தெரிகின்றது.

யுத்தத்தில் கரனைக் கொன்றனன்; த்ரிசிரனையும் மஹா தேஜஸ்வியாகிய தூஷணனையும் முடித்தனன். இவள் நிமித்தமாகவே ஸுக்ரீவன் பெறமுடியாததும் உலகமெங்கும் பூஜிக்கத்தகுந்ததும் வாலியால் பரிபாலிக்கப்பட்டதுமாகிய வானர ராஜ்யமாகிய ஐஶ்வர்யத்தைப் பெற்றனன். அகன்ற கண்களையுடைய இப்பெண்மணியைப்பற்றியே நான் நதநதிபதியும் பெரிய மேன்மையுடையதுமாகிய ஸமுத்ரத்தைத் தாண்டி வந்தனன்; இந்த லங்காபுரத்தையும் கண்டனன். இந்த ஸீதைக்காக ராமன் ஸமுத்ரம் வரையிலுள்ள பூமண்டலத்தையெல்லாம், பூமியைமாத்ரமா! ஸமஸ்தலோகங்களையும் தலைகீழாகச் செய்யினும் அதுவும் யுக்தமேயென்று எனக்குத் தோற்றுகின்றது. த்ரைலோக்ய ராஜ்யம் மேற்பட்டதா? ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை மேற்பட்டவளா? என்று ஆலோசித்துப் பார்க்கையில், த்ரைலோக்ய ராஜ்யம் முழுவதும் ஸீதையின் பதினாறில் ஒருபாகத்திற்கும் ஈடாகாது. யாவள் தர்மஸ்வபாவனும் மிதிலாதிபதியும் மஹானுபாவனுமாகிய ஜனக மஹாராஜனுக்குப் புதல்வியோ; பர்த்தாவை அனுஸரித்திருக்கையாகிற பாதிவ்ரத்யமென்னும் வ்ரதம் திடமாக அமையப்பெற்றவளோ; கலப்பையின் நுனியால் கீறப்பட்ட யாகக்ஷேத்ரத்தில் பூமியைப் பிளந்துகொண்டு தாமரைத் தூசிபோன்ற பரிசுத்தமான அந்த யாகபூமியின் தூள்கள் படியப்பெற்று வெளியானவளோ; அந்த ஸீதை இப்பெண்மணியே. இவளே, பராக்ரமசாலியும் பூஜிக்கத் தகுந்த ஸ்வபாவமுடையவனும் யுத்தங்களில் பின்வாங்காதவனுமாகிய தசரத மஹாராஜனுக்குப் புகழ்பெற்ற பெரியமருமகள். ஸமஸ்த தர்மங்களும் உணர்ந்தவனும் பிறர் செய்த உபகாரங்களை நன்கறிந்தவனும் எல்லாமறிந்த மதியுடையவனுமாகிய ராமனுடைய அருமைக்காதலியான இந்த ஸீதை ராக்ஷஸ ஸ்த்ரீகளிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றனள். எவள், பர்த்தாவினிடத்திலுள்ள ஸ்நேஹ பலத்தினால் ஸமஸ்த போகங்களையும்

பரிபூர்ணமாகத் துறந்து மேல்வருகின்ற வனவாஸ துக்கங்களையும் நினையாமல் ஜநஸஞ்சாரமில்லாத வனத்தில், அது போகங்களுக்கு ஏகாந்த ஸ்தல மென்று புகுந்து, முன்பு மிகுதியும் மதுரமான ஆஹாரங்களைப் புஜித்தவளாயினும் அடவியில் அகப்படக்கூடிய காய்கிழங்குகளால் த்ருப்தி அடைந்து பர்த்தாவுக்கு எப்பொழுதும் ஏமாறாமல் சுஶ்ருஷை செய்து கொண்டு க்ருஹத்தில் இருப்பதுபோலவே வனத்திலும் மிகுந்த ஸந்தோஷமுற்றிருந்தனளோ; அப்படிப்பட்டவளும் பொன்வர்ணமுடைய மேனியுடன் ப்ரகாசிப்பவளும் புன்னகை விளங்கப் பேசுந் தன்மையளுமாகிய இந்த ஸீதை அனர்த்தங்களுக்குச் சிறிதும் தகாதவளாயினும் இப்படிப்பட்ட யாதனையைப் பொறுத்திருக்கின்றனளே! என்னென்னலாகும்? நன்னடத்தையுடையவளும் இங்ஙனம் ராவணனால் பலாத்காரஞ் செய்துகொண்டு வரப்பட்டவளுமாகிய இம்மடந்தையர் மணியைத் தாஹமுடையவன் தண்ணீர்ப்பந்தலைக் காண்பதுபோல் ராமன் காண உரியவளுயிருக்கின்றனன். ராஜ்யத்தை இழந்த மன்னவன் மீளவும் ராஜ்யத்தைப் பெற்று ஸந்தோஷம் அடைவதுபோல், ராமன் மீளவும் ஸீதையைப்பெற்று ஸந்தோஷம் அடைவான். இது நிஜம். இந்த ஸீதை புஷ்பம் சந்தனம் முதலிய ஆசைப்படத் தகுந்த போகபதார்த்தங்களும் பந்துக்களும் இல்லாதிருப்பினும் ராமனுடன் கலந்து பரிமாறுவதற்கு மிகுதியும் விருப்பமுற்றிருப்பவளாகையால் பிழைத்திருப்போமாயின் எப்பொழுதாயினும் ப்ராணநாதனைக் காண நேருமென்று நினைத்துத் தேஹத்தைத் தரித்திருக்கின்றனள். இந்த ஸீதை இப்பொழுது இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளையும் பார்க்கவில்லை; மற்றும், ராமனைப் பிரிந்திருக்கையால், இந்த வ்ருக்ஷங்கள் பூவும் காயும் நிறைந்திருப்பினும் ராக்ஷஸ ஸ்த்ரீகளைப்போலவே பார்க்கமுடியாதவைகளாயிருக்கையால் இவற்றையும் பார்க்கவில்லை; மனத்தை ராமனொருவனிடத்திலேயே நிலைபெறச் செய்து மற்றவைகளையெல்லாந் துறந்து

சக்ரவாகத்தைப் பிரிந்த பெண் சக்ரவாகம்போல் கணவனது பிரிவை ஒரு நொடிப்பொழுதும் பொறுக்க முடியாமல், காண்போர்க்குக் கருணையை விளைப்பதும் இப்படியப்படி யென்று சொல்லவும் நினைக்கவும் முடியாததுமான தசையை அடைந்திருக்கின்றனள். புஷ்பங்களின் பாரத்தினால் நுனிகள் தாழ்ந்திருக்கப்பெற்ற அசோக வ்ருக்ஷங்களும், வஸந்த ருதுவாகையால் பனியின் உபத்ரவம் நீங்கப்பெற்றுப் பலவாயிரங் கிரணங்களோடு விளக்கமுற்று ஸூர்யன் போல் உஷ்ண கிரணங்களில்லாமல் உதித்திருக்கின்ற சந்த்ரனும் இவளுக்கு மிகுதியும் துயரத்தை விளைவிக்கின்றன' என்று தனக்குள் மொழிந்துகொண்டனன். பலிஷ்டனும் வானரர்தலைவனும் மிகுந்த வேகமுடையோனுமாகிய அந்த ஹநுமான் இங்ஙனம் இவ்விஷயத்தைத் தன் மனத்தில் விசாரித்து 'இவள் ஸீதையே' என்று புத்தியில் நிச்சயங்கொண்டு அந்தச் சிம்சுபாவ்ருக்ஷத்தில் உட்கார்ந்திருந்தனன். பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹநுமான் ஸீதையைப் பார்க்கிற
காவல் புரிய ராக்ஷஸிகளைக்
காண்பதும், ஸிம்சுபா வ்ருக்ஷத்தில்
மறைந்திருத்தலும்.

அதன்பிறகு ஆம்பல்மலர்க்குவியல்போல்ப்ரகாசித்துக்கொண்டு நிர்மலனாய் விளங்குகிற சந்த்ரன், கறுத்த ஜலப்ரவாஹத்தில் ஹம்ஸம் ஸஞ்சரிப்பதுபோல் நிர்மலமாய்க் கறுத்திருக்கின்ற ஆகாயத்தில் வெகுதூரஞ் சென்று அதன் [1] அபரபாகத்தை அடைந்தனன். நிர்மலமான காந்தியுடன் ப்ரகாசிக்கின்ற அந்தச் சந்த்ரன் ஹநுமானுக்குத் தன் நிலவைக் காட்டி ஸஹாயஞ்செய்

1. பின்பாகத்தை.

பிடிக்கப்பட்ட சந்த்ர மண்டலத்தையுடைய பூர்ணிமையின் ராத்ரிபோலவும், யானைகள் துதிக்கைகளால் தாமரையிலைகளையும் தாமரைப் பூக்களையும் அழிக்கையில் பக்ஷிகள் பயந்தோடப்பெற்று ஆகுலமாயிருக்கின்ற தாமரைக்குளம் போலவும், கரையுடைந்து நீரெல்லாம் மற்றோரிடத்தில் பாயப்பெற்று உலர்ந்த நதிபோலவும் புலப்படுகின்ற வைதேஹியை ஹநுமான் கண்டனன். மற்றும் அவள் பதியைப் பிரிந்த சோகத்தினால் பீடிக்கப்பட்டு உபவாஸத்தினால் இளைத்து க்ருஷ்ண பக்ஷத்து ராத்ரிபோல் பர்த்தாவைப் பிரிந்த துக்கத்தினால் தேஹவர்ணகாந்தி மெலிந்து தேய்ந்துபோனவளாயிருப்பதுபற்றிக் காந்தியும் குறையப்பெற்றிருந்தாள். மிகுந்த மேன்மையுடையவளும் அழகான அவயவங்கள் அமையப்பெற்றவளுமாகிய அந்த வைதேஹி ராக்ஷஸர்களாலிழைக்கப்பட்ட கர்ப்பக்ருஹத்தில் வசிக்கத் தகுந்தவளாயினும் வெறும் புழுதியான வெளித்தரையில் உட்கார்ந்திருப்பதுபற்றிக் கொஞ்ச நேரத்திற்கு முன்னமே பறிக்கப்பட்டு வெயிலில் வாடுகின்ற தாமரைத் தண்டுபோல் புலப்பட்டனள். மேலும் ஆரண்யத்தில் வேட்டைக்காரர்களால் பிடியுண்டு ஸ்தம்பத்தில் கட்டப்பட்டு யானைக்கூட்டத்தின் தலைமையுள்ள ஆண் யானையைப் பிரிந்து பெருமூச்செறிந்துகொண்டு மிகுதியும் துக்கத்தினால் பரிதபிக்கின்ற பெண் யானைப் பேடுபோல் பரிதபித்துக்கொண்டிருந்தனள். எண்ணெய் காப்பில்லாமையால் தலைமயிர்களெல்லாம் ஒன்று சேர்ந்து பின்னிக்கொண்டு நீண்டு தொங்குகின்ற ஜடையுடைய சரத்ருதுவில் கறுத்த வனவரிசையுடைய பூமிபோல் ப்ரகாசித்துக்கொண்டு உபவாஸத்தினாலும் சோகத்தினாலும் சிந்தையாலும் பயத்தினாலும் மிகுதியும் க்ஷீணித்து இளைத்துத் தீனையாகிப் பாதிவ்ரத்யமென்னும் தவத்தையே தனமாகக்கொண்டு மிதமான ஆஹாரத்தை உட்கொள்கையென்னும் உத்தமஸ்த்ரீ லக்ஷணத்துடன் கூடித் துக்கத்தினால் பரிதபித்துக் கைகளைக் குவித்துக்கொண்டிருக்கையால் மனத்தில்

ராமனால் ராவணனுக்குப் பரிபவம் நேரவேண்டுமென்று தன் இஷ்ட தேவதையைக் குறித்து வேண்டிக்கொள்பவள்போல் புலப்பட்டனள். இங்ஙனம் தனக்கு ரக்ஷகர் எவரேனும் அகப்படுவாரோ என்று சுற்றுமுற்றும் உற்றுப்பார்த்து சோதனையே கதியாகி அழகான இமை மயிர்கள் அமைந்து கடையில் சிவந்து நடுவில் வெளுத்துத் திகழ்கின்ற விசாலநேத்ரங்கள் விளங்கவும் எந்த சிந்தைக்கும் இடமில்லாமல் எப்பொழுதும் ராமனை அநுஸரித்திருக்கையே மிகுந்த செல்வமாயிருக்கவும் பெற்ற அந்த மிதிலாதிராஜன் புதல்வியாகிய ஸீதையை, ராவணன், தன் மரணத்திற்காகவே தன்மேல் விருப்பமுறச் செய்யத் தொடங்கினான்.

பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

4 { ராவணன் ஸீதையை வசப்படுத்திக் கொள்ளும்பொருட்டுப் பலவாறாக வேண்டுதல்.

அங்ஙனம் [1]தைந்யம் அடைந்து ஆநந்தமிழந்து காண்போர்களுக்கு மிகுதியும் கருணையை விளைக்கின்ற அந்தப் பதிவ்ரதையான ஸீதைக்கு ராவணன் ஸாபிப்ராயமான இனிய வசனங்களால் பேசுகையுடன் தன் ஹ்ருதயத்தை இங்ஙனம் தெரிவித்தனன். 'யானையின் துதிக்கைபோன்ற துடைகளையுடைய ஸீதே! நீ என்னைப் பார்த்துப் பயத்தினால் ஸ்தனங்களையும் வயிற்றையும் மறைத்துக்கொண்டு உன்னை எனக்கு எள்ளளவும் புலப்படாதபடி செய்ய விரும்புவது போலிருக்கின்றனை. ஸீதே! அகன்ற கண்களுடையவளே! அவயவங்களெல்லாவற்றிலும் சுபலக்ஷணங்கள்

1. தைந்யம்—மனஇரக்கத்திற்கிடமாயிருக்கை.



2128. ஹனுமான் ஸிம்சுபாவ்ருக்ஷத்தில் மறைந்திருக்க ராவணன் ஸீதையை ப்ரார்த்தித்தல்.

பாட்டங்களாலும் இனிய வாத்யங்களாலும் பொழுது போக்கிக்கொண்டு ஸுகமாயிருப்பாயாக. அழகிய அங்கங்களுடையவளே! நீ மடந்தையரெல்லோரிலும் மேலானவள். நீ இங்ஙனம் இருக்கலாகாது. அவயவங்களில் ஆபரணங்களைத் தரிப்பாயாக. என்னை அடைந்த பின்புங்கூட நீ ஆபரணங்களில்லாமல் இப்படி தகாத நிலைமையில் இருப்பது எப்படி யுக்தமாகும்? அழகாகப் படர்ந்திருக்கின்ற உனது இந்த யௌவனமெல்லாம் வீணாய்க் கடந்து போகின்றதே. வேகமாகப் பாய்ந்த ஜலப்ரவாஹம் மீளவும் திரும்பமாட்டாததுபோல் கடந்த வயது மீளவும் திரும்ப நேராது. ஆகையால் இப்பொழுதே போகங்களை அனுபவிப்பாயாக. அழகிய காட்சியுடையவளே! உலகத்தில் எங்காயினும் உன்னைப்போன்ற உருவமுடையவள் மற்றொருத்தியும் புலப்படாள். ஆகையால் மேன்மேலும் சிறந்த உருவங்களைப் படைக்கிற அந்த ப்ரஹ்மதேவன் உன்னைப் படைத்து இனி உன்னைக் காட்டிலும் மேலான உருவத்தைப் படைக்க முடியாதென்று நினைத்து ஸ்ருஷ்டிசெய்வதையே துறந்து போனானென்று நினைக்கிறேன். அல்லது, உருவங்களைப் படைக்கிற அந்த ப்ரஹ்மதேவன் உன்னைப் படைத்தவுடனே ஆயுள் க்ஷீணித்தமையால் உயிர் மாண்டானென்றும் சொல்லலாம்; அவன் இருப்பானாயின், உன்னைப்போன்ற உருவங்களை மேன்மேலும் படைப்பானல்லவா? ஸீதே! நிகரில்லாத ஸௌந்தர்யத்தினாலும் யௌவனத்தினாலும் விளங்குகின்ற உன்னைக் கண்டு ஒருவ ப்ரஹ்மதேவனைப் போன்றவனாயினும் எவன் தான் பொருள்செய்யாமல் கடக்க வல்லனாவான்? ஒருவன ப்ரஹ்மதேவனுங்கூட மோஹிப்பான். இனி மற்றை எவன் மனமயக்கமுறாதிருக்க நேரும்? பருத்த இடையின் பின்புறமும் சந்த்ரன்போன்ற அழகான முகமும் பொருந்தின ஸீதையே! உனது அவயவங்களில் எதைதைப் பார்க்கிறேனோ, அந்தந்த அவயவத்தில் என் கண் மிகுதியும் ஆழ்ந்து அதைக்கடந்து மற்றொன்

றைச் சொல்ல முடியாதிருக்கின்றது. நான் உன் அவயவங்களில் எதைப்பார்க்கினும், மீளவும் என் கண்ணை அதினின்றும் திருப்பமுடியாதிருக்கின்றனன். ஸீதே! எனக்குப் பார்யையாவாயாக. நான் பரபுருஷனென்னும் இவ்வஜ்ஞானத்தைத் துறப்பாயாக. உனக்குச் சுபம் விளையுமாக. நான் இங்குமங்கும் பல இடங்களினின்று கொண்டு வந்த உத்தமஸ்த்ரீகள் பலர் இருக்கின்றனர். உனக்குச் சுபம் உண்டாகுமாக. அவர்களெல்லோர்க்கும் நீ அக்ரமஹிஷியாயிருப்பாயாக. பயப்படுந்தன்மையளே! நான் நானு லோகங்களினின்று பராக்ரமத்தினால் கொண்டுவந்த ரத்னங்களும் என் ராஜ்யமும் உன்னுடையவைகளே; நானும் உன்னுடையவனே. ஆகையால் இவற்றையெல்லாம் நீ இஷ்டப்படி அனுபவிக்கலாம். விலாஸமுடையவளே! நான் உனக்காக நானாவித நகரங்களும் வரிசையாயிருக்கப்பெற்று விளங்குகிற பூமண்டலத்தையெல்லாம் ஜயித்து ஜனகமஹாராஜனுக்குக் கொடுக்கிறேன். என்னெதிரில் நின்று போராடவல்ல மற்றொருவன் எவனும் இதுவரையில் இந்த உலகத்தில் எனக்குப் புலப்படவில்லை. யுத்தத்தில் என் பராக்ரமம் எவ்வளவு நிகரில்லாததோ, அது எவ்வளவு பெரியதோ அதைக் காண்பாயாக. என் சத்ருக்களில் தேவதைகளும் அஸுரர்களும் என்னுடன் யுத்தஞ்செய்து பலதடவைகளில் தோல்வியடைந்து த்வஜங்கள் முறியப்பெற்று என்னெதிரில் நிற்கமுடியாமல் ஓடிப்போயினர். இனிப் பிறர் ஸங்கதி சொல்லவேண்டுமோ? (இப்படிப்பட்டவனாகையால் என்னிடத்தில் வைரஸ்யமின்றி) நீயே விருப்பங்கொள்வாயாக. இப்பொழுது நன்கலங்கரித்துக்கொள்ள ஸம்மதிப்படுவாயாக. உன் அவயவங்களெல்லாவற்றிலும் ஒளி திகழப்பெற்ற ஆபரணங்களை அணிய அனுமதி கொடுப்பாயாக. நீ நன்கு அலங்கரித்துக்கொண்டிருக்கையில், அழகாயிருக்கின்ற உன் உருவத்தைப் பார்க்க விரும்புகின்றனன் நீ ஆபரணமில்லாமலே மிகவும் அழகாயிருக்கின்றனை; ஆபரணங்

களை அணிவாயாயின், உன்னழகை வர்ணிக்கவே முடியாதென்று தோன்றுகிறது. அழகிய முகமுடையவளே! நீ இந்த இருக்குவாதத்தைத் துறந்து என்னிடத்தில் மன இரக்கமுடையவளாகி நன்கு அலங்கரித்துக்கொண்டு உன் மனம்போனபடி போகங்களை அனுபவிப்பாயாக. பயப்படுந் தன்மையளே! [1] மத்யங்களைப் பருகுவாயாக; இஷ்டப்படி விளையாடிக் கொண்டிருப்பாயாக. வேண்டினவர்களுக்கு இஷ்டப்படி பூமியையாவது தனங்களையாவது கொடுப்பாயாக. என்னை நம்பி என்னிடம் ப்ரீதி வைப்பாயாக. ஸங்கோசப்படாமல் தைர்யத்துடன் உனக்கு வேண்டிய கார்யங்களில் என்னைத் தூண்டுவாயாக. நீ என் அனுக்ரஹத்தினால் மனக்களிப்புற்று விளையாடிக்கொண்டிருக்கையில், உன் பந்துக்கள் அது கண்டு மனக்களிப்புறுவார்களாக. மங்கல ஸ்வபாவமுடையவளே! என் ஸம்ருத்தியையும் என் ஸம்பத்தையும் என் கீர்த்தியையும் காண்பாயாக. ஸௌபாக்யமுடையவளே! ஸுந்தரீ! மரவுரி உடுத்து அரண்யவாஸஞ்செய்கின்ற ராமனை அடைந்து நீ என்ன செய்யப்போகின்றனை? அவனால் உனக்கு என்ன ப்ரயோஜனம்? வெற்றியற்று ஸம்பத்தையும் இழந்து அரண்யத்தில் அகப்பட்டு வானப்ரஸ்தர்களின் வ்ரதத்தைக் கைப்பற்றித் தரையில் படுத்திருக்கின்ற ராமன் இன்னம்பிழைத்திருக்கிறானோ இல்லையோ என்று எனக்கு ஸந்தேஹமாயிருக்கின்றது. ஸீதே! [2] முன்புறத்தில் நாரைகள் திரியப்பெற்று மிகுதியும் கறுத்திருக்கிற மேகங்களால் மறைக்கப்பட்ட நிலவைப் பார்க்க முடியாததுபோல், என் வசத்திலிருக்கின்ற உன்னை ராமனுக்குப் பார்க்கவும் ஸாத்யமன்று. ஹிரண்யகசிபு இந்த்ரன் கையில் அகப்

1. மத்யம்-கள்.

2. நாரைகள் திரிவது மேகங்களின் பெருமையைக் காட்டுகிறது. மஹாமேகங்களில்தான் நாரைகள் திரிவதாக வர்ணிப்பது வழக்கம்.

பட்ட தன் பார்யையை மீளவும் நாரதன் மூலமாகப் பெற்றானே; அங்ஙனமே என் கையில் அகப்பட்ட உன்னை ராமன் மீளவும் பெறுவானென்று எண்ணுகின்றனையா? அவன் என்ன செய்யினும் என்னிடமிருந்து மீளவும் உன்னைப் பெறவல்லனல்லன். பயப்படுந்தன்மையளே! உன் புன்னகை எவ்வளவோ அழகாயிருக்கின்றது. உன் பல்வரிசை மிகுதியும் ரமணீயமாயிருக்கின்றது. உன் கண்களின் அழகே அழகு. உன் விலாஸங்கள் ஒப்பற்றவை. இவ்வளவு அழகுடையவளாயினும் கடைசியில் பயப்படுந் தன்மையளாயிருக்கின்றனையே! தைர்யம் இல்லாமற்போயிற்றே இப்படிப்பட்ட அழகினால், கருடன் ஸர்ப்பத்தைப் பறிப்பது போல் என் மனத்தைப் பறிக்கின்றனையே! நீ நலுங்கின பட்டு வஸ்த்ரந் தரித்து இளைத்து ஆபரணம் ஒன்றும் அணியாதிருப்பினும் உன்னைப் பார்த்தவுடனே என் பார்யைகளிடத்தில் எனக்கு ருசி உண்டாகாதிருக்கின்றது. நீ நல்ல வஸ்த்ரந் தரித்து நன்கு அலங்கரித்துக்கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கக் காண்பேனாயின், எப்படி இருப்பேனோ? ஸீதே! எனது அந்தப்புரத்தில் ஸமஸ்த ஸுலக்ஷணங்களும் அமைந்த மடந்தையர் மணிகள் எத்தனைபெயர் இருக்கின்றனரோ, அவர்களெல்லோர்க்கும் ஈஶ்வரியா யிருப்பாயாக. கறுத்த முன்னெற்றி மயிர்களுடையவளே! மூன்று லோகங்களிலும் எங்கும் சிறப்புற்றவராகிய என் பார்யைகள் அனைவரும், ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு அப்ஸரஸ்த்ரீகள் பரிசர்யை செய்வதுபோல் உனக்குப் பரிசர்யை செய்வார்கள். அழகிய புருவமுடையவளே! அழகான இடையின் பின்புறமுடையவளே! குபேரனிடமுள்ள ரத்னங்களையும் தனங்களையும் நான் ஜயித்துக் கொண்டு வந்திருக்கின்றனன்; அவை எல்லாவற்றையும் என்னையும் உன்னிஷ்டப்படி அநுபவிப்பாயாக. தேவி! ராமன் தவத்திலாவது பலத்திலாவது பராக்ரமத்திலாவது தனத்திலாவது தேஜஸ்ஸிலாவது கீர்த்தியிலாவது எனக்கு நிகராகமாட்டான். மடந்தையர்

மணியே! நீ உன் மனம்போனபடி மத்யபானஞ் செய்வாயாக; மனக்களிப்புடன் திரிவாயாக; விளையாடிக்கொண்டிருப்பாயாக; வேண்டிய போகங்களை அனுபவிப்பாயாக. உனக்குத் தனஸமூஹங்களையும் பூமியையும் கொடுக்கிறேன். மாதரார்மணியே! என்னிடம் ப்ரீதிவைத்து மனக்களிப்புடன் விளையாடிக்கொண்டிருப்பாயாக. நீ இங்ஙனம் மனக்களிப்புற்றிருக்கையில் உன் பந்துக்கள் அனைவரும் உன்னுடன் கூடி ஸந்தோஷத்தை அனுபவிப்பார்களாக. பயப்படுந்தன்மையளே! பிஷ்பித்த வ்ருக்ஷ ஸமூஹங்கள் நெருங்கியிருக்கவும் வண்டுகள் மதுரமாக ஜங்காரஞ்செய்யவும் பெற்று ரமணீயமான ஸமுத்ர தீரத்திலுள்ள கானகங்களில் பொற்பூஷணங்களாலும் நிர்மலமான ஹாரங்களாலும் மேனியெல்லாம் அலங்காரஞ்செய்துகொண்டு என்னுடன் க்ரீடித்திருப்பாயாக. இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸீதை ராவணனது வாக்யங்களைக்
கண்டித்துத் தன்னை மீளவும்
ராமனிடங் கொண்டுபோய்ச் சேர்க்கச்
சொல்லுதல்.

பயங்கராகிய அந்த ராக்ஷஸன் ராவணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு ஸீதை மனவருத்தமுற்று, தீனஸ்வரத்துடன் தீன வாக்யத்தை இங்ஙனம் மெதுவாக அவனுடன் சொல்லத்தொடங்கினாள். மடந்தையர் மணியாகிய அந்த ஸீதை, எப்பொழுதும் புன்னகை விளங்கப்பெற்ற அப்பதிவ்ரதை துக்கத்தினால் பீடிக்கப்பட்டு ரோதனஞ் செய்துகொண்டு பயத்தினால் நடுக்கமுற்றுக் காண்போர்களுக்கு மன இரக்கமுண்டாகுந் தசையிலிருந்து மனத்தில்

பதியையே த்யானஞ்செய்துகொண்டு [1] ஸஹஜமான புன்னகையுடன், ராவணனோடு நேரில் வார்த்தை சொல்லத் தகாதாகையால், ஒரு த்ருணத்தை நடுவில் வைத்துக்கொண்டு அவனைக்குறித்து 'என்னிடத்தினின்று மனத்தைத் திருப்பிக்கொள்வாயாக.

1. இங்கு 'த்ருணமந்தரத: க்ருத்வா ப்ரத்யுவாச ஶுசிஸ்மிதா | நிவர்த்தய மனோ மத்த: ஸ்வஜனே க்ரியதாம் மன:' என்று மூலம் (த்ருணமந்தரத: க்ருத்வா) புல்லை நடுவே வைத்து, 'ஆஸநஞ்சாந்நமுதகம்' என்கிறபடியே ராஜாக்களுக்குப் பீடமிடுதல் அன்னமிடுதல் ஜலங்கொடுத்தல் செய்யவேண்டுமாகையால் அதற்கு ப்ரதியாகப் புல்லை இட்டு உபசாரஞ்செய்யில் மனந்தெளிந்து திரும்பிப்போவனோ என்னுஞ் சங்கையால் 'அஹாவேஷ்டிருக்ஷம்' என்னும் மர்யாதையால் ஆஸனமிட்டாளென்று சொல்லலாகும். அல்லது ராவணன் ஸமீபித்து வருகையால் அவனை அருகே வரவொட்டாமல் ஒரு தடை வைக்கவேண்டுமென்று 'ஸ்தம்பே ந ஸலிலேநவா பங்க்திச்சேதோஹி ஜாயதே' (த்ருணத்தாலும் ஜலத்தாலும் பங்க்திபேதம் உண்டாகிறது) என்னும் ந்யாயத்தைப்பற்றி ஒரு புல்லை நடுவே வைத்தாளென்னலாகும். அல்லது—'பரபுருஷநிரீக்ஷணம் நாபி ஸம்பாஷணம்' என்கிறபடியே ஸ்த்ரீகளுக்குப் பரபுருஷ தர்ஶநாதிகள் கூடாதாகையால் புல்லை இட்டு அதை வ்யாஜமாக்கி அவனை உபஶ்ரோதாவாக்கும்பொருட்டு இங்ஙனஞ் செய்தாளென்னலாகும். உபஶ்ரோதாவாவது அருகேயிருந்து செவியுற்றிருப்பவன். அல்லது—தான் கடாக்ஷித்தவையெல்லாம் புத்திஸம்பன்னங்களாமாகையால் தனக்கு அனுகூலமான அசேதன த்ருணத்தைச் சேதனமாக்குகிறேனென்று அங்ஙனஞ் செய்திருக்கலாம். அல்லது—த்ருணத்தைச் சேதனமாக்கி நம் சக்தியை ஆரோபித்தோமாயின், அந்த நம் வைபவத்தைக் கண்டு பயந்து வழிக்கு வருவனோ என்று இங்ஙனம் செய்தனள். அல்லது—அஜ்ஞனாகிய உன்னை 'த்ருணமிவ லகு மேமேநே' என்கிறபடியே இந்தப் புல்லைப்போல் நிரூபிக்கிறேனென்று இங்ஙனஞ் செய்தாளென்று கருத்து. அல்லது 'ஜ்ஞாநேந ஹீந: பஶுபிஸ் ஸமாந:'

திருப்பிக்கொண்டு உன் பார்வைகளிடஞ் செலுத்துவா

என்கிறபடியே ஆஹாரநித்ராபய மைதுனங்கள் தவிர மற்ற தொன்று மறியாத பசுவைப்போன்றவனுகையால் உனக்கு இந்தப் புல்தான் போக்யமாம் என்று தெரிவிக்கும்பொருட்டுப் புல்லை இடையில் வைத்தாள். அல்லது - 'விசித்ராணி ச மால்யாநி சந்தநாந்யகுரூணி ச। விவிதாநி ச வாஸாம்ஸி திவ்யாந்யாபரணாநி ச। பாநி வைஶ்ரவணே ஸாஹீருத்நாநி யாநாநி ச' என்று நீ எனக்குக் காட்டினவற்றையெல்லாம் இந்த த்ருணமாக நினைக்கிறேனென்று அங்ஙனம் செய்தாள். அல்லது-இந்த த்ருணத்தைப் போல் 'ஸர்வ்யா ரோஷேண வஹிஷ்க்ருத:' (பொறுமையையும் கோபத்தையும் துறந்து) ராமனைப் பற்றுவாயாக என்று தெரிவிக்கும்பொருட்டு இங்ஙனம் செய்தாள். அல்லது—'யிதமௌ பயிகந்தர்த்தும் ராமஸ் ஸ்யாநம் பரிப்ஸதா। வயத்ருசாக்ஷமேதா வோபாய:' உன்னிருப்பிடத்தையும் ப்ராணனையும் காப்பாற்ற வேண்டுமாயின், இந்தப் புல்லைக் கவ்விக்கொண்டு அந்தப் புருஷ ஸிம்ஹனது பாதங்களில் விழுவாயாக என்றாள். அல்லது-இந்தப் புல்லை ஸ்வதப்யமாகச் செய்து அதினின்று ராகவஸிம்ஹனை வெளிப்படுத்திக் கெடுதிகளை நினைக்கின்ற உன் ஹ்ருதயத்தைப் பிளக்கச்செய்வேனென்றாள். அல்லது-த்ருணத்திகளை முன்னே இட்டு ப்ரதிஜ்ஞை செய்யவேண்டுமென்னும் மர்யாதையின்படி 'க்ஷிப்ரந் தவ ஸ நாதோ மே ராமஸ் ஸௌமித்ரிணா ஸஹ। தோயமல்பமிவாதித்ய: ப்ராணநாதாஸ்யதே ஶரை:' (ராமன் லக்ஷ்மணனோடு வந்து பாணப்ரயோகஞ் செய்து ஸூர்யன் கிரணங்களால் ஜலத்தை இழுப்பதுபோல் உன் ப்ராணன்களைக் கொண்டு போகும் விதத்தைக் காண்பாய்) என்று த்ருணத்தையிட்டு ப்ரதிஜ்ஞை செய்தாள். அல்லது-வாமனன் சுக்ராசார்யனுடைய கணகளைத் துரும்பால் கிளறினாற்போல் 'யதீயத் பஶ்யாமி தேஹமாத்ரம் ஸீதாம்ஶ ஸத்ருஶாநநே। தஸ்மிம்ஸ்தஸ்மிந் ப்ருஶாம் ப்ரோணிசக்ஷூர்ம மக்லியேயதே' என்கிறபடியே பரதாரதர்ஶனஞ் செய்த உன் கண்களை இதனால் குத்துகிறேனென்றாள். அன்றியே 'ஸதர்ஹம் ஸம்ஸ்தரார்த் ப்ரஹ்வ்ய ஹிரஸ்திஸ்ம ஸதக்ஷிணம்' என்கிற படியே தர்ப்பத்தைக்கொண்டு காகாஸுரனுடைய கண்ணை

யாக பாபஸ்வபாவன் நல்ல மோக்ஷ ஸித்தியைப்பெற

இல்லை செய்தாற்போல் இந்த த்ருணத்தைக்கொண்டு உன் கண்களை இல்லை செய்கிறேனென்றாள். 'ஸீதாயாஸ் தேஜஸா' என்றும் 'ந த்வா குர்மி தசக்ரீவ பஸ்மபஸ்மார்ஹ தேஜஸா' என்றும் சொல்லப்பட்ட பாதிவ்ரத்யமாகிற தேஜஸ்ஸில் இந்தப் புல்லை இட்டு அதைப் பற்றவைத்து அதில் உன்னைக் கொளுத்தி விடுவேனென்றாள். அன்றியே-இந்த த்ருணத்தைச் சேதிப்பது போல் உன் தலையைச் சேதிப்பேனென்றாள். இங்ஙனஞ் செய்து (ப்ரத்யுவாச) அவன் வார்த்தைகளைத் தடுத்து ப்ரதிகூலமாக மொழிந்தனள். ஸாது-தர்மமவேக்ஷஸ்வ' (ஸாதுக்களின் தர்மத்தில் கண்வைத்து நடப்பாயாக) 'யதா தவ ததாந்யேஷாம் தாரா ரக்ஷ்யா:' (உன் பார்யைப் போலவே பிறரது பார்யைகளையும் ரக்ஷிக்கவேண்டும்) 'ஏவம் த்வாம் பாபகர்மாணம் வக்ஷ்யந்தி நிக்ருதா ஜநா:' (ஜனங்கள் உன்னால் உபத்ரவஞ்செய்யப்பட்டு இங்ஙனம் உன்னைப் பாபிஷ்டனென்று சொல்வார்கள்) 'தேநமைத்ரீ பவது தே' (அவனோடு நட்பு செய்துகொள்வாயாக) 'அந்யதா த்வம் ஹி குர்வாணோ வதம் ப்ராப்ஸ்யஸி' (மற்றொரு விதமாக நீ செய்வாயாயின் வதம் பெறுவாய்) 'ப்ராணைஸ்த்யக்ஷ்யஸே ஸமை:' (பாணங்களால் உன் ப்ராணன்களைக் கொண்டுபோவான்) என்று பல வாறாகப் பேசினாள். இங்ஙனம் பேசும்பொழுது அவளது முக விலாஸம் எப்படியிருந்ததென்னில் (ஸுசிஸ்மிதா) தன் பாபத் தினால் நசிக்கப்போகிற இவன் இங்ஙனம் மொழிகின்றானே யென்று நகைத்தனள். (ஸுசிஸ்மிதா) 'ஹஸந்நபி ந்ருபோ ஹந்தி' (ராஜன் சிரித்துக்கொண்டேயிருப்பினும் கொன்றுவிடுவான்) என்கிறபடியே ராஜமர்யாதையை அறிந்த ராஜபுத்ரியும் ராஜ மஹிஷியுமாகையால் அங்ஙனம் நகைத்தனள். (ஸுசிஸ்மிதா) (ஆச்ரமந்து தயோஸ்ஸூந்யம் ப்ரவிச்ய நரஸிம்ஹயோ:| கோசரம் கதயோர் ப்ராத்ரோரபநீதா த்வயாதம' (புருஷ ஸிம்ஹர்களான ராமலக்ஷ்மணர்கள் ஆச்ரமத்தில் இல்லாத ஸமயத்தில் புகுந்து என்னைக் கொண்டுவந்தனையே! இப்படிப் பட்ட நீயா! அவர்களோடு போராடி ஜயித்துக் கொண்டுவர முடியாத நீயா! 'ந ராமஸ் தபஸா தேவி நபலேந ந விக்ரமை:|

விரும்பத்தகாததைப்போல், நீ என்னை விரூபவாதுயுக்த

---

நயநேந மயி ஜூம்ப:' என்று ராமனைக்காட்டிலும் உன்னை மேலாகச் சொல்லுகின்றனையென்று நகைத்தனள். (ஸாசிஸ்மிதா) செத்துக் கழுகுகளும் காகங்களும் மூக்கால் குத்தி இழுக்கும்படி விழுந்திருக்க வேண்டியவன். 'ஸங்கே ஜீவதிவா நவா' (ராமன் பிழைத்திருக்கிறானோ இல்லையோ ஸந்தேஹமாயிருக்கின்றது) என்று ராமனுடைய திருமேனிக்கு அனிஷ்டஞ் சொல்லுகின்றாயே என்று நகைத்தனள். (ஸாசிஸ்மிதா) 'விபீஷணஸ்யேயம ஹி லங்கைஸ்வர்யமக்ஷய கஜ்ஞ்சப்| ஸ்ரீமதா ராஜராஜேந லங்காயா மபிஷேசித:' என்கிறபடியே விபீஷணனுக்கு ராமன் கொடுத்த ஐஸ்வர்யத்தையோ 'மஹீயம் மானுஷமஸ்ய தலஸ்ரீயம் ஹரே' என்று உன்னை ஐஸ்வர்யமாக ப்ரமித்துப் பிதற்றுகிறானே யென்று நகைத்தனள். (ஸாசிஸ்மிதா) 'உபயாய ஹாராஜந் த்ஸ்ய லோகநாதஸ்ய தா ஜூதப்| கயம் ராமோபஹாஸ்யாமி' (அந்த லோகநாதனுடைய புஜத்தைத் தலையணையாக வைத்துக்கொண்ட எனக்கு மற்றொருவனது புஜம் எப்படித் தலையணையாகும்?) என்றிருக்கும்படியான என்னை 'யாஞ்சாஹஸ்தஸ்ய யாஸ்யாவம்' என்று பிதற்றுகிறானேயென்று நகைத்தனள். இங்ஙனம் நகைத்துச் சொன்னது யாதெனில் (நிவர்த்தய மந:) 'மநோ ஹேதுஸ் ஸர்வேஷாமிந்த்ரியாணாம் ப்ரவர்த்தநே' என்கிறபடியே மூலபூதமான மனத்தைத் திருப்பினவுடனே மற்ற இந்த்ரியங்களும் திரும்புமாகையால் மனத்தைத் திருப்பிக்கொள்வாயாக. (நிவர்த்தய மந:) உன் மனத்தைத் திருப்பி உன் ப்ராணனைகளைத் திருப்பிக்கொள்வாயாக. மனோவ்யாபாரத்தைத் திருப்பிக் கொள்வேனாயின், ராஜகார்யங்களெல்லாம் தாறுமாறாகுமென்னில் (மத்தோ நிவர்த்தய) மற்ற எல்லாவற்றினின்றுந் திருப்பச் சொல்லவில்லை; என்னிடத்தினின்று மாத்ரமே திருப்பச் சொல்லுகிறேன். 'உன்னிடத்தினின்று திருப்பிக்கொள்வேனாயின் மனம் சூன்யமாகுமோ என்னவோ' என்னில்-(ஸ்வஜநே க்ரியதாம்) மனத்தை என்னிடத்தினின்று திருப்பி உனக்குத் தகுந்த உன் ஜனத்தினிடத்தில் களிப்புறும்படி வைப்பாயாக. (ஸ்வஜநே க்ரியதாம்) 'ஸ்வேஷு தாரேஷு ரதிந் ரோபலஸாம்

மன்று. எவ்வளவு விரும்பினும் பாபிஷ்டனுக்கு மோக்ஷம் நேரிடாததுபோல், உனக்கு நான் ஸித்திக்க மாட்டேன். நான் பரிசுத்தமான குலத்தில் புகுந்தவள்; அங்ஙனமே மஹாகுலத்தில் பிறந்தவள்; பதிவ்ரதை; இப்படிப்பட்ட நான், நிந்தைக்கிடமாகிச் செய்யத் தகாத இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்வது யுக்தமன்று' என்றனள். அந்த ஸீதை மஹாபதிவ்ரதை யென்று மிகுதியும் புகழ்பெற்றவளாகையால் ராவணனைப் பொருள்செய்யாமல் அப்புறம் திரும்பிக் கொண்டு மீளவும் அவனைக் குறித்து மொழிந்தனள். 'நான் பரபுருஷனுடைய பார்யை; மேலும் பதிவ்ரதை; ஆகையால் உனக்குப் பார்யையாகத் தகுந்தவளல்லேன். ஸத்புருஷர்களின் தர்மத்தை நன்கறிவாயாக. அதினின்று தவறவேண்டாம். ஸத்புருஷர்களின் நியமத்தின்படி நன்கு செல்வாயாக. இப்படிப்பட்ட துர்நடத்தை உனக்குத் தகாது. ராக்ஷஸனே! பிறர் உன் பார்யையைப் புணரும்பொழுது உனக்கு எப்படி இருக்குமோ, ஸ்வபார்யையே உபமானமாகக்கொண்டு, உன் பார்யைகளை வ்யபிசாராதி தோஷம் இல்லாதபடி நீ ரக்ஷிப்பதுபோலவே பிறரது பார்யைகளையும் வ்யபிசாராதிகள் இல்லாதபடி ரக்ஷிக்க வேண்டும். ஆகையால் பிறரது பார்யைகளை விட்டு உன பார்யைகளோடேயே க்ரீடிப்பாயாக. தன் பார்யைகளிடத்தில் த்ருப்தி உண்டாகப்பெறாமல் சபலமுற்றுச் சபலமான

யஹும்' என்னும்புத்தியை மாற்றி 'ஸ்வேஷு தாரேஷு ரம்யதாம்' (ஸ்வபார்யைகளிடத்திலே ப்ரீதி வைப்பாயாக.) என்னிடத்தில் மனத்தை வைத்து அவர்களைக் கண்ணெடுத்துப் பாராதிருப்பாயாயின் அவர்கள் வருத்தப்படுகையில் 'பரிஹ்ருதவிஷண்ணேசேத் ஸார்யா ஹர்த்தா விநஶ்யதி' (பார்யை அவமதிசெய்யப்பட்டு வருந்துவாளாயின் பர்த்தா நசிப்பான்) என்கிறபடியே உனக்கு அனர்த்தம் நேருமாகையால் அவரது மனங் குளிர்ந்திருக்கும்படி மனத்தை என்னிடத்தினின்றுந் திருப்பி அவரிடத்தில் வைப்பாயாக.

இந்த்ரியங்களுடன் மறைவாக அனிஷ்டங்களைச்செய்வதில் கைதேர்ந்து பரஸ்த்ரீகளைப் புணருவானாயின், அவர்கள் அவனைப் பரிபவப்படும்படி செய்வார்கள்; அதனால் அவன் தன்னுடைய ஆயுள் ஐச்வர்யம் முதலியவையெல்லாம் நசிக்கப்பெற்றுக் கெடுதியைப் பெறுவான். [1] இங்கு உனக்கு இப்படிப்பட்ட அனர்த்தம் உண்டாகாதபடி நல்லது சொல்லும் பெரியோர்கள் எவரும் இல்லையா? எவரில்லை. விபீஷணாதிகள் இருக்கிறார்களல்லவா? இருந்தும் நீ அனுஸரிக்கமாட்டாயே. அனுஸரிக்காதபக்ஷத்தில் அவர்கள் நன்மையை எப்படி சொல்லுவார்கள்? நீ அவர்களை அனுஸரித்திருக்கமாட்டாய். உன் விபரீதமான இந்தத் துர்ப்புத்தியே அதைத் தெரிவிக்கின்றது. உன் புத்தி இப்படிப்பட்டதென்று உன் கண்ணுக்குப் புலப்படு

1. இங்கு 'இஹ ஸந்தோ ந வா ஸந்தி ஸதோ வா நாநுவர்த்தஸே। ததாஹி விபரீதா தே புத்திராசாரவர்ஜிதா' என்பது மூலம். (இஹ) மிக விசாலமாகித் துலங்காநின்ற சிறப்புப்பெற்ற இவ்விடத்தில், (இஹ) 'அதிக்ஷோத்ராஸிகே ஜாஸிக ராக்ஷஸா நாம் ஸ்ரீஹோ ஸ்ரீஹே' 'ஸாஸிராவ ஸி தவம்மாக்ஷஸாம்' என்று வேதவைதிக மர்யாதைகள் நடப்பதாகப் பாவிக்கிற இக்ஷேத்ரத்தில். (ஸந்தோ ந) ஸத்புருஷர்கள் இல்லை. பிறர்க்கு அனர்த்தத்தை விளைக்கும் ப்ரஹஸ்த தூம்ராக்ஷ வஜ்ரதம்ஷ்ட்ராதிகளான அஸத்துக்களைக் கண்டோமல்லது பிறர்க்கு நன்மை செய்யுந் தன்மையுள்ள ஸத்துக்களைக் கண்டிலம். (ஸந்தோ ந) ஒரு ஸஜ்ஜனன்-அதாவது-விபீஷணன் ஒருவன் இருந்தானாயின் 'த்வாந்து திக்குலபாம்ஸநம்' (சீ போ!) குலபாம்ஸநே!) என்று தூரத்திக் கதவடைப்பார்களோ? பலர் இருக்கிலன்றோ அங்ஙனஞ் செய்யாமல் ஈடேறக்கூடும். அங்ஙனம் பலர் இல்லாமற்போனார்களா? (வா) இல்லையென்னலாகாது. ஆனால் என்னென்னில்-(ஸந்தி) இருக்கவே இருக்கின்றனர். (ஸந்தி) இந்தப் பட்டணத்தில் இவ்வளவு விஜய ஸம்பத் புத்ராதி ஸம்ருத்தி இருக்கையால் இதற்கு மூலமான தர்மானுஷ்டானமும் உபதேசஞ் செய்யும் ஸத்புருஷர்களும் இருக்கவேண்டும். அங்ஙனம் இல்லாது

கிறதா? என்கிறாயோ? நீ சிஷ்டர்களின் ஆசாரத்தைத்

---

பக்ஷத்தில் அகாரணகார்யோத்பத்தி ப்ரஸங்கிக்கும். அதாவது-காரணமில்லாமல் கார்யம் உண்டாக நேரிடும். இதுவோ ஸம்பவிப்பதன்று என்று கருத்து. (ஸந்தி) ஸத்புருஷர்களென்பவர் ஒருவகைப்பட்டவரல்லர். அநீதியைச் சொல்லுவதும் செய்வதுமாயிருப்பவர்களே அஸத்துக்கள். ஸத்தர்மோபதேசம் செய்யும்பொழுது ஸத்துக்களே. கும்பகர்ண விபீஷணாதிகள் இருக்கையால் ஸத்புருஷர்கள் உளரே. (ஸந்தி) ஸத்தை (இருக்கை) மாத்ரமேயன்றிக் கார்யஞ்செய்பவரல்லர். இருப்பார்களாயின் உபதேசிக்கமாட்டார்களா என்னில் (ஸம்சாவா நாநுவர்த்தஸே) இருந்தும் 'நாப்ருஷ்டஃ கஸ்யசித் ப்ரூயாத்' 'ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா| உபதேக்ஷ்யந்தி' நமஸ்காரம் முதலியவற்றால் அநுவர்த்தனஞ் செய்யிலன்றோ அவர்கள் சொல்லுவார்கள். 'நேற்று வந்தவனை; அநுவர்த்திக்கவேண்டுமோ அநுவர்த்தித்தேன் மேலே தெரிந்ததேயப்படி' என்னில்-(ததாபி விபரீதா தே வ்ருத்திஃ) அப்படித்தான், இதில் ஸந்தேஹமுண்டோ. உன் புத்தி விபரீதமாயிருக்கின்றதே. நதியின் ப்ரவாஹத்தைப் பார்த்துப் பர்வத ப்ராந்தத்தில் மழையை ஊஹிப்பதுபோல் உன் புத்தியின் கோணலைப் பார்த்துப் பெரியோர்களை அநுவர்த்திக்கவில்லையென்று தெரிந்துகொண்டேன். புத்தி கண்ணுக்குப் புலப்படுவதன்றே, எங்ஙனம் அறிந்தாயென்னில்-(ஆசாரவர்ஜிதா) அது கண்ணுக்குப் புலப்படாததாயினும் கார்யத்தினால் ஊஹிக்க வேண்டியதாயிருக்கிறது. (ஆசாரவர்ஜிதா) ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட வர்ணாஶ்ரமாநுஷ்டானமாவது-ஆசாரம்-அதை உன்னிடத்தில் காணேன். அதைப்பற்றி உன் புத்திவைபரீத்யத்தை ஊஹிக்கிறேன். புத்தியாவது-மனோவ்யாபாரம். ஆசாரம்-வெளிச்செயல். (ஆசாரவர்ஜிதா) 'சிவனைக்குறித்தும் ப்ரஹ்மாவைக் குறித்தும் தவம் முதலியன செய்த எனக்கு ஆசாரம் எப்படி இல்லை' என்பாயாயின், இயற்கையில் குளிர்ந்திருக்கிற ஜலம் அக்னிஸம்பந்தத்தினால் சுடுவதுபோல் நீ ஐஶ்வர்யம் தீர்க்காயுஸ்ஸு ஶாஸ்த்ரம் முதலியவற்றில் அபேக்ஷையால் தவம் முதலியன செய்தாயன்றி இயற்கையில் ஆசாரமற்றவனே யென்று கருத்து.

துறந்து இங்ஙனஞ் செய்கையே உன் புத்தி விபரீத மென்பதைத் தெரியப்படுத்துகின்றது. அல்லது, பண்டிதராயிருப்பார் உனக்குத் தாமே [1] ஹிதோக்திகளைச் சொல்லினும், நீ ராக்ஷஸரிடம் மேலுக்கு மாத்ரம் ஸ்நேஹத்தை அபிநயித்துக்கொண்டு உள்ளே அவர்க்கு நாசத்தையே விளைவிக்க நினைத்து அப்பண்டிதர்களின் ஹிதோபதேசங்களைப் பாராட்டாதிருக்கின்றனையா என்ன? நல்ல மனத்தெளிவில்லாதவனும் அபக்தியுடையவனும் ராஜனாவானாயின், தேசங்களும் பட்டணங்களும் ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்திருப்பினும் நாசம் அடையாமல் தவறு. அப்படியே பலவகை ரத்னங்கள் நிறைந்து ரமணீயமாயிருக்கின்ற இந்த லங்கையெல்லாம் உன்னை ராஜாவாகப் பெற்று உன்னொருவனுடைய அபராதத்தினால் சீக்ரத்திலேயே நாசம் அடையப்போகின்றது. ராவணா! பாவச் செயலுடையவன் தூரத்ருஷ்டியில்லாமல் தான் செய்த பாபங்களால் அடிக்கப்பட்டு நாசம் அடையக்கண்டு ஸமஸ்த ப்ராணிகளும் ஆநந்தம் அடைவார்கள். இங்ஙனமே பாபகர்மாவாகிய உனக்கு இனி நாசம் உண்டாகும்பொழுது, முன்பு உன்னால் வஞ்சிக்கப்பட்ட ஜனங்களெல்லோரும் 'எமது பாக்யத்தினால் பயங்கரனாகிய இவனுக்கு வ்யஸனம் ஸம்பவித்தது' என்று ஸந்தோஷத்துடன் சொல்வார்கள். என்னை உனது அந்தப்புர ஸ்த்ரீகளெல்லோர்க்கும் ஈஸ்வரியாயிருக்கச் செய்கையாலாவது உன் ஆபரணங்களைக் கொடுக்கையாலாவது உன்னிடம் ஆசைப்படச்செய்ய உனக்கு எள்ளளவும் ஸாத்யமன்று; [2] ப்ரபை ஸூர்யனைப் பிரிந்திருக்கமாட்டாதாப்போல், நானும் ராமனை எள்ளளவும் பிரிந்திருக்கமாட்டேன். ராமனுக்கு நான் வேறுபட்டவளல்லேன். லோகநாதனாகிய அந்த ராமனுடைய புஜம் ஸமஸ்தலோகங்களாலும் புகழப்படுந் தன்மையுடையது; அப்படிப்பட்ட புஜத்தைத்

---

1. ஹிதமான உரைகளை. 2. ப்ரபை—ஒளி.

தலையணையாக வைத்துக்கொண்டு அற்பனாகிய மற்றொருவனுடைய புஜத்தை எப்படி நான் தலையணையாக வைத்துக்கொள்வேன்? நான் அப்படிப்பட்ட லோகநாதனாகிய ராமனால் அணைக்கப்பட்டுப் பெருமைக்கிடமான அவனது வலபுஜத்தைத் தலையணையாகக் கொள்ளும் புகழுடையவள். இப்படிப்பட்ட நான் இனி அநாமதேயனாகிய உன்னைப்போன்ற மற்றொரு அற்பனுடைய புஜத்தில் என்னவென்று தலைசாய்ப்பேன்? வேத வ்ரதங்களை நிறைவேற்றி ஸ்நானஞ்செய்து மிருந்த மதியுடைய ஆத்மஜ்ஞானியாகிய ப்ராஹ்மணனுக்கு யோகாப்யாஸ வித்யை அமைந்திருக்குமாறு, நான் பூமிக்கெல்லாம் பதியான அந்த ராமனுக்கே தகுந்த பார்யையாயிருப்பவள்; அன்றி மற்றொருவனுக்கும் அல்லேன். ராவணா! நீ நல்லவனல்லவா? அடவியிலுள்ள ஆண் யானையை, அதைப் பிரிந்து கட்டுண்டு வருந்துகிற பெண் யானையோடு சேர்ப்பதுபோல் ராமனைப் பிரிந்து வருந்துகின்ற என்னுடன் ராமனைச் சேர்ப்பாயாக. 1 நீ இவ்விலங்கையில் ஸுகமாயிருக்க விரும்பு

1. 'மித்ரமௌபயிகங் கர்த்தும் ராமஃ ஸ்தாநம் பரீப்ஸதா। வதஞ்சாநிச்சதா கோரம் த்வயாஸௌ புருஷர்ஷபஃ' ராவணன் இவ்வாறு தாயென்னும் எண்ணமில்லாமல் சில அஸங்கதங்களைச் சொல்லுகையில் ஸீதாதேவி வருத்தமுற்று 'இவனுடைய ஸ்வபாவம் என்ன இப்படி இருக்கின்றதே! இவனுக்கு ஹிதம் உபதேசிப்பவன் எவனேனும் எவ்வாறு நேரப்போகிறு'னென்று 'இஹ ஸந்தோ நவாஸந்தி' இத்யாதிகளால் மிகுதியும் சிந்தித்து மன இரக்கமுற்றுத் தானே ஹிதோபதேசஞ் செய்கின்றனள்:—(மித்ரமௌபயிகங் கர்த்தும் ராமஃ) ராமனுடன் விரோதம் தகாது; அவனோடு ஸ்நேஹம் பண்ணிக்கொள்வதே யுக்தம். (மித்ரமௌபயிகங் கர்த்தும்) மிகவும் அபராதியான உனக்கு அவன் திருவடிகளில் சரணம்புகுதலே யுக்தம். இங்கு மித்ரமென்றிருக்கச் சரணமென்று பொருள் கூறுவதெங்ஙனேயென்னில்:—அடுத்த ச்லோகத்தில் 'விதிதஸ்ஸஹி தர்மஜ்ஞஶ் ஶரணாகதவத்ஸலஃ' என்று ராமனைச் சரணம்புகுந்தவரிடத்தில் ப்ரீதியுடையவனாகச்

வாயாயின், பயங்கரமான சாவை விரும்பாதிருப்பாயா

சொல்லி, உடனே ‘தேந மைத்ரீ ஹவது தே’ (அவனுடன் ஸ்னேஹம் பண்ணிக்கொள்வாய்) என்கையில் (அப்படிப்பட்ட சரணாகதவத்ஸலனைச் சரணம் அடைவாய்) என்று சரணாகத வத்ஸல ஶப்தத்தினால் மைத்ரீ செய்வது சரணம்புகுவதேயென்று பொருள் கொள்ளவேண்டும். ஆகையால் (மித்ரங்கர்த்து மௌபயிகம்) என்பதற்கு (சரணம் புகுவதே யுக்தம்) என்னும் பொருள் கூறுவது யுக்தமே. அன்றியும் ‘அர்ச்சநம்வந்தநந் தாஸ்யம்ஸக்ய மாத்மநிவேதநம்’ என்று பக்திப்ரகாரங்களில்-ஸக்யத்தை-அதாவது-மைத்ரியை ஒரு பக்திப்ரகாரமாகச் சொல்லுகையால் (மித்ரங்கர்த்தும்) என்பதற்கு (அவனைச் சரணம் புகுவாய்) என்னும் பொருளே பொருந்துகின்றது. ‘தமேவ ஶரணங்கச்ச ஸர்வபாவேந பாரத’ என்று வேறு சில தார்மிகரும் ஸர்வ ப்ரகாரத்தாலும் சரணம் புகுதலைச் சொல்லியிருக்கின்றனர். ஆகையால் இங்கு மைத்ரியாவது கேவல மைத்ரியாகாமல் மித்ரபாவத்துடன் சரணம் புகுதலேயாகின்றது. ஆயினும் ஸீதை சரணமென்றே நேராகச் சொல்லலாகாதா? மித்ரமென்பானேனென்னில் அற்பர்கள் தம்மைப் பெரிதாக நினைப்பார்கள். ஸீதை பெருந்தன்மையுடையவளாகையால் ‘சரணம் அடைவாய்’ என்று பிறனுக்குக் குறைவாகச் சொல்லாமல் ‘மித்ரனாகச் செய்துகொள்வாய்’ என்று தம்முடன் ஒப்பாக வெகுமானித்துச் சொல்லினள். இங்ஙனஞ் சொன்னது அவள்மாத்ரமே அன்று; ராமன் கேவலம் ஒரு ராக்ஷஸனை ‘மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்’ (மித்ரபாவத்தோடு வந்தவனை) என்றும், ஒரு குரங்கை ‘ஸவாசமே’ (எனக்கு நண்பனுமாயிருப்பவன்) என்றும், ஒரு வேடனை ‘ஆத்மஸம: ஸகா’ (எனக்குத் தகுந்த ஸகா) என்று தனக்குத் தகுந்த மித்ரனாகவும் சொல்லிக்கொண்டனன். அல்லது ‘ந நமேயம்’ என்று பிறர்க்கு உட்படமாட்டேனென்ற ராக்ஷஸனும் துர்மானியுமாகிய ராவணனைப் பார்த்துச் ‘சரணம் புகுவாய்’ என்றுரைக்கில் ஸம்மதிக்க மாட்டானாகையால் மைத்ரீ செய்துகொள்வாயென்னில், ஸம்மதிப்பனென்று (மித்ரங்கர்த்து மௌபயிகம்) என்றுரைத்தனள். ராவணன் ‘நான் மைத்ரீ செய்துகொள்ளப்போகையில் ராமன்

யின். புத்ரஸுஹ்ருதிகளாகிய ராவணாதி சரணாகதி செய்து

அதை அங்கீகரித்து அருள் புரியாமல் கொடியனாயிருந்து விரட்டுவாயாயின், என்ன செய்வேன்? என்னில் (ராமஃ) விடமாட்டாமல் கலக்குந் தன்மையுடையவன். (ராமஃ) வேடரோடும் குரங்குகளோடும் உறவுசெய்கிறவன் இத்தனை யோக்யதையுடைய உன்னை விடுவானோ? (ராமஃ) நீ உன் ஸஹவாஸம் வேண்டாமென்னிலும் 'யதிவா ராவண: ஸ்வயம்| ஆநயைநம்' (ராவணனுடைய தம்பியை மாத்ரமேயன்று ராவணன் தானே வந்து சரணம் புகினும் காப்பாற்றுகிறேன். இவனை அழைத்துக் கொண்டுவா) என்று வரவழைப்பதும், அவனுக்கு ஆபத்து வரின். 'மசஉம' (பயப்படாதே என்று விடுவதுமாகி உன்னிசைவை எதிர்பார்க்குமவன் நீயே அவனுடன் ஸ்நேஹஞ்செய்ய இசைவாயாயின் விடுவனோ? (ராமோ மித்ரஞ் கர்த்தும் ஔபயிகம்) துஷ்டஹ்ருதயர்களுமாய் அதுபோகசந்தேகஞ் செய்பவர்களுமான ப்ரஹஸ்தாதிகளை விட்டு 'ஸர்வஜ்ஞம் ஸர்வஹ்ருத்கதம்' என்றும், 'நிஸ்ஸீமஸ்ரணம் ஸாதுஜ' என்றும் சொல்லப்படுகிற ஸர்வஜ்ஞஸர்வஹ்ருத்தான ராமனோடு நட்புச் செய்வாயாக. (ஸ்தாநம் பரீப்ஸதா வ்யக்தம் சாரித்ரம்) உன்னிருப்பிடத்தையும் உன் ப்ராணனையுமாயினும், இதற்கு முன்பு உன்னுடையவைகளேயாயினும், இதற்குப் பின்பும் அவை உன்னுடையவைகளேயாயிருக்க விரும்புவாயாயின், அவனுடன் நட்புச் செய்வாயாக. (ஸ்தாநம் பரீப்ஸதா) ஸ்தானமாவது இருப்பிடம். 'அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்' என்று உன் தம்பியான விபீஷணனுக்கு இவ்விலங்கையில் பட்டங்கட்டுவது நிச்சயம். அங்ஙனம் செய்யாதிருக்கும்படி நீயே இதில் நிலைநின்று வாஸஞ்செய்து இதை ஆளவேண்டுமென்று விரும்புவாயாயின், ராமனைப் பற்றுவாயாக. (ஸ்தாநம் பரீப்ஸதா) ஸ்தானமாவது நிலைநிற்றல். 'தீர்ந்லோகாந் ஸம்பரிக்ரம்ய' என்ற காகாஸுரனைப்போல் கண்ட விடங்களிலும் திரிந்து வருந்தாமல் ஓரிடத்திலேயே நிலையாயிருக்க விரும்புவாயாயின்; (ஸ்தாநம்) ஆவது இருத்தல். நீ சதுரங்கபலமாகிய உன் பரிவாரங்களோடு கூடியவனாயிருக்க விரும்புவாயாயின், (ஸ்தாநம்) ஆவது அதிஷ்டானம், நிலைமை உன் ப்ரஹஸ்தாதி மந்த்ரிவர்க்கமும் கும்பகர்ணாதி பந்துக்களும் நீ ஸம்பாதித்த பொருளும் வெகுகாலமாகக் குடியிருக்கிற இந்த

கொள்வதே யுக்தம். எனெனில், அவன் ஸமஸ்த தர்மங்

ராஜதானியுமிருக்கிற இந்நிலைமை அழியாதிருக்க விரும்புவாயாயின் ராமனைச் சரணம் புகுவாயாக. 'ராஜதானியும் மற்றவையும் எல்லாம் என்னதீனமாயன்றோ இருக்கப் பார்த்துக்கொண்டிருக்கிறேன். நான் இப்பொழுது வேறோரிடத்தில் போயிருக்கிறேனோ. இல்லையே' என்பாயாயின், 'ஸாதலம் வி ப்ரவிஸேஸ பாதாலம் வாபி ராவண। பிதாமஹஸகாஸம் வா ந மஜ்ஜீவந் விமோக்ஷ்யஸே' என்கிறபடியே பூமியில் சில மறைவான இடத்திற்காவது உன் ஜன்மபூமியான (பிறப்பிடமான) பாதாளத்திற்காவது, ப்ரமனிடத்து உன்னை இங்ஙனம் தலைகால் தெரியாதிருக்கச் செய்த ப்ரஹ்மதேவனது ஸமீபத்திற்காவது போயினும், ப்ராணன்களோடு தப்புவித்துக்கொள்வது முடியாது. சுற்றுப்பக்கங்களில் போயிருக்கப் பார்க்கினும் அவனுடைய ஸ்நேஹம் வேணுமே உனக்கு. 'ப்ரவசித்த ஸ்தலங்களில் போயிருக்க விருப்பமுண்டோ அவன் தயை வேணும்' என்பாயாயின், அதில்லை. அஜ்ஞாதவாஸமாக ஓரிடத்தில் மறைந்திருக்க விரும்புவாயாயினும், (வயம் நிச்சிதா) உன்னை ப்ராணனோடு விடிலன்றோ நீ மறைந்து திரியக்கூடும். அங்ஙனமாக விரும்பாயாயின், அவனைப் பற்றுவாயாக. (வயம் நிச்சிதா) வ்யாதி முதலியவற்றால் எப்படியாயினும் மரணம் நேரப்போகிறதேயன்றி விடப்போகிறதில்லையே; ஆகையால் மரணம் நேரட்டுமே என்பாயாயின் ஒரு மரணமேயன்றிச் சத்ருவாயிருப்பவன் ஸைன்யத்துடன் உன் பட்டணத்தில் புக அவனால் தலையறுப்புண்டாயென்கிற பரிபவமுங்கூட நேரிடும். அது வரவேண்டாமென்று விரும்புவாயாயின், 'வீரனுக்குச் சத்ருவால் சாவது மேலன்றோ' என்று நினைப்பாயாயின், (கோரம் வயம் நிச்சிதா) உலகத்திலுள்ளவரைப்போல் ஸாதாரணமாக மரணம் அடைய விரும்புவாயாயின், அதற்கும் அவனைப் பற்றவேணும். (கோரம் வயம்) உன்னைக் கொல்லும்பொழுது ஸுலபமாக விடுவானோ? ஒரு தூதனை இவ்விடம் அனுப்பி உனது நந்தனவனத்தைத் தரைமட்டமாக அழித்து உன் ஸேனையைக்கொன்று உன்னை அவமானப்படுத்தி உன் ஸபையில் புகுந்து தன் ப்ரபு கௌரவத்தையும் உனது லாகவத்தையும்

களையும் அறிந்தவன்; சரணம் அடைந்தவரிடத்தில்

சொல்லி உன் ராஜதானியைக் கொளுத்திக் கரியாக்கித் திரும்பிப் போய் அபாரமான பரிவாரங்களைக் கொண்டுவந்து மிகுதியும் ஆழ்ந்ததாகிய உன் மனத்தில் கல்லை நடுவதுபோல் உனக்கு ஜலதுர்க்கமாகிய ஸமுத்ரத்தில் கற்களை இட்டு அணைகட்டி வழி பண்ணிக் குரங்குகளைக் கால்நடையாகவே அழைத்துக்கொண்டு வந்து உன் ராஜதானியைத் தடுத்து உன் பரிவாரங்களை யெல்லாம் பாழ்செய்து உன்னைச் சார்ந்தவர்களின் மூக்கை அறிவதும் காலைத் தறிப்பதும் பனம்பழம் உதிர்வதுபோல் உன் தலைகளை உதிர்ப்பதும் தோள்களைக் கழிப்பதும் உடலைத் துளைப்பதும் இந்த ரக்ததாரையை உன் பெண்டிர்களுக்குக் கொண்டுபோய்க் காட்டும்படி 'மர்ம' என்று விட்டுத் தாக்குவதும் செய்து இங்ஙனஞ் சித்ரவதஞ் செய்தன்றோ உன்னைக் கொல்வது. இப்படிப்பட்ட மஹாகோரமான வதத்தை விரும்பாதிருப்பாயாயின் அவனைப் பற்றுவாயாக. 'ராமனது கோபத்தால் இங்ஙனம் பட்டவர் உண்டோ, என்ன (த்வயா) இப்படி வேறொருவனும் இத்தனை அபராதஞ் செய்தவன் இல்லை. ஆகையால் இங்ஙனம் அவனால் கோரவதத்தை அனுபவித்தவனும் இல்லை. அஸஹ்யாபசாரஞ் செய்து சித்ரவதத்திற்குத் தகுந்த உன்னொருவனுக்கு இவ்வளவும் வேண்டியதே. (ஸ்யாதம் பரஸ்பராவயஞ்சா பிசஹிதா த்வயா) நீ அங்கிருக்கவேண்டுமென்னினும் சித்ரவதமில்லாமல் சாகவேண்டுமென்னினும் அவனைப் பற்றவேணும். அவனைப் பற்றுவதற்கு அவன் இங்கு ஸமீபத்தில் இல்லையே யென்ன (அஸௌ) இதோ இங்கேயே இருக்கிறானென்கிறாள். வெகு தூரத்திலிருக்கிற ராமனை இதோ இருக்கிறானென்று ஸீதை சொல்லுவதெப்படி என்னில்- 'அஸௌ ராமமேவாநுபஸ்யதி' (இவள் ராமனையே பார்த்துக்கொண்டிருக்கிறாள்) 'ராமேதி ராமேதி ஸதைவ புத்த்யா விசிந்த்ய' (ராம ராம என்று எப்பொழுதும் ராமனையே புத்தியால் த்யானித்து) என்று எப்பொழுதும் ஸீதை ராமனையே பாவித்துக்கொண்டிருப்பது பற்றி அவன் அவளுக்கு எப்பொழுதும் ப்ரகாசமாக ஸமீபித்திருக்கையால் 'இதோ' என்று காட்டுகிறாள். ராவணனுக்கோ

மிருந்த வாத்ஸல்யமுடையவன்; அவன் இத்தகைய

இதற்கு முன்பு ராமனோடு வாஸனை இல்லாமையால் அங்ஙனம் தோற்றாது. ப்ராதிகூல்யனுகிய மாரீசனுக்கு முன்னம் ராமனால் விஸ்வாமித்ர யாகத்தில் அடிபட்ட அவ்வாஸனை மாறாதிருக்கையால் 'வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஸ்யாமி' (வ்ருக்ஷங்கள் தோறும் பார்க்கிறேன். ராமன் ஒவ்வொரு மரத்திலும் எனக்குத் தென்படுகிறான்) என்கிறபடியே புலப்பட்டதெல்லாம் ராமனாகவே தோற்றிய தல்லவா. ராவணனும் யுத்தத்தில் ராமனோடு வாஸனை உண்டான பின்பு ராமபாணங்கள் மனத்தில் படியப்பெற்று 'ஸமரந்ராகவ வாணாநாம்' என்று ராமபாணங்களையே நினைத்துக்கொண்டு போனானல்லவா. 'ராமன் அருகே இருப்பினும் நான் பற்றப் பார்க்கையில், என் விரோதங்களை நினைத்து மனங்கலங்கப் பெற்றவன் என்னை அங்கீகரிப்பானோ' என்னில் (புருஷர்ஷப:) அவன் 'அவிஜ்ஞாதா' (பிறர்செய்த குற்றங்களில் கண்வையாதவன். அவை அவன் மனத்தில் படா) என்றும் 'நஸ்மரத்யப காராணாம் ஸதமப்யாத்மவத்தயா' (நூறு அபராதங்கள் செய்யினும் கம்பீர மனமுடையவனாகையால் அவன் அவற்றை நெஞ்சிலும் நினைப்பவனல்லன்) என்றும் 'அபராயாநஜிஜ்ஞஸ் ஸர் ஸஷைவ குருதே தயாம்' (அபராதங்களைப் பாராட்டாமல் எப்பொழுதும் தயைசெய்பவன்) என்றும் புகழப்பட்ட தர்மப்ரபுவல்லனோ அவன். (புருஷர்ஷப:) 'தோஷோ யத்யபி தஸ்யஸ்யாத் ஸதாமேதத கர்ஹிதம்' அவனிடத்தில் தோஷம் இருப்பினும் விடமாட்டேன். இங்ஙனம் செய்வதைப் பெரியோர்கள் நிந்திக்கமாட்டார்கள்) என்றுரைக்கும் புருஷோத்தமனல்லனோ அவன். (புருஷர்ஷப:) நீ புருஷர்களில் அதமனாயிருப்பதுபோல், அவன் புருஷர்களில் உத்தமனாயிருப்பவன். (புருஷர்ஷப:) 'புருஷோத்தம:' என்கிறபடியே அதமனாயிருப்பவன் பிறர்செய்த அபராதங்களை மனத்திலேயே வைத்துப் பகை தீர்த்துக்கொள்ள இருப்பான். மத்யமனாயிருப்பவன் அவற்றைக் காலக்ரமத்தில் மறந்துபோவான். உத்தமனாயிருப்பவன் 'அபராதங்களை நினைப்பதேன்? அவற்றை மறப்பதேன்?' என்று முதலே அபராதங்களை மனத்தில் படுத்தமாட்டான். (புருஷர்ஷப:) நீ அனுகூலனாகி அவனைச் சரணம் புகாயாயின், அவனுடைய சார்ங்கமென்னும் தனுஸ்ஸினால்

னென்பது எல்லோர்க்குந் தெரிந்த விஷயமே. ஆகை யால் உனக்குப் பிழைத்திருக்க வேண்டுமென்று விருப்பம் உளதாயின், [1] சரணாகதவத்ஸலனான அந்த ராமனுடன் ஸ்நேஹஞ் செய்துகொள்வாயாக. நீயும் ராமனை அருள்புரியச்செய்வாயாக. நானும் உனக்காக வேண்டிக்கொள்ளுகிறேன். அவன் சரணம் புகுந்தவ ரிடம் ப்ரீதி மிகுந்திருக்கப் பெற்றவனாகையால் தப்பா மல் மன்னிப்பான். ராமனைச் சரணம் புகுவது மாத்ரமே போராது. நீ மனத்தில் கலக்கத்தை விட்டுச் சுத்த மனத்துடன் என்னை ராமனுக்குச் சேர்ப்பிக்க வேண்டும். இவ்வண்ணம் நீ என்னை ராமனுக்குக் கொடுத்துவிடுவாயாயின், உனக்கு நன்மை உண்டாகும். ராவணா! நீ இங்ஙனமன்றி வேறுவிதமாகச் செய்வா யாயின், , தப்பாமல் ராமனால் வதம் பெறுவாய். ஒருகால் இந்த்ரன் ப்ரயோகித்த வஜ்ராயுதம் உன்னைப் போன்றவனை விட்டாலும் விடக்கூடும். யமன் உன்னைப் போன்றவனைப் பிடித்து நெடுநாள் விடினும் விடக் கூடும். லோகநாதனாகிய ராமன் கோபமுறுவானாயின் உன்னைப்போன்ற துஷ்டஸ்வபாவனை எவ்விதத்திலும் விடமாட்டான். நீ சீக்ரத்திலேயே இந்த்ரன் ப்ரயோ கித்த வஜ்ராயுதத்தின் பெருங்கோஷம் போன்றதும் பெரிய நாதமுடையதுமாகிய ராமனுடைய தனுஸ்ஸின் சப்தத்தைக் கேட்பாய். அழகான கணுக்கள் அமைந்து விஷஜ்வாலைகளால் ஜ்வலிக்கின்ற முக முடைய ஸர்ப்பங்கள் போல் விளக்கமுற்று ராம

---

உனக்கு மரணம் நேருவது ஸித்தமே. அவன் சார்ங்கபாணி யல்லவா? என்றனள். இதில் ஸீதையின் மன இரக்கத்தின் பெருமையையும் வாத்ஸல்யமும், இவற்றிற்கும் உடன்படாத ராவணனுடைய பாபத்தின்பெருமையும் சொல்லப்பட்டன.

1. சரணாகத வத்ஸலனான—தன்னைச் சரணம் அடைந்தவர்க ளிடத்தில் வாத்ஸல்யமுடையவனான. சரணம் அடைகையாவது— நீயே எனக்கு ரக்ஷகனென்று பற்றுகை, சரணம்—ரக்ஷகம். வாத்ஸல் யம்—தோஷங்களையே போக்யமாகக்கொண்டு ப்ரீதி செய்கை.

லக்ஷ்மணர்களின் நாமங்களால் அடையாளம் பெற்ற பாணங்கள் சீக்ரத்திலேயே லங்கையில் வந்து விழப் போகின்றன. அந்த பாணங்கள் கழுகின் இறகுகள் கட்டப்பெற்றுப் பட்டணத்தின் மேல் நாற்புறத்திலும் விழுந்து ராக்ஷஸர்களை முடித்துக்கொண்டு சிறிதும் அவகாசமில்லாதபடி பட்டணம் முழுமையும் நிரம்பப் போகின்றன. பெருமையுடைய அந்த ராமனென்னும் கருடன், கருடன் ஸர்ப்பங்களை அழிப்பதுபோல், வேகமாக ராக்ஷஸர்களென்னும் மஹாஸர்ப்பங்களை அழிக்கப்போகின்றனன். உன் கையிலிருந்து ராமனுக்கு என்னைப் பெறத்தாமதமென்றனையே! விஷ்ணு மூன்றடிகளால் அஸுரர்களிடமிருந்து திகழ்கின்ற லக்ஷ்மியை அபஹரித்ததுபோல், சத்ருக்களை அழிக்கவல்ல என் பதியாகிய ராமன் உன்னிடமிருந்து என்னைச் சீக்ரத்திலேயே கொண்டுபோவான். ராக்ஷஸா! ஜனஸ்தானத்திலுள்ள இடமெல்லாம் பாழாகையில் அங்குள்ள ராக்ஷஸ பலம் முழுமையும் முடிந்துபோகையில், நீ எதிர்கொண்டு யுத்தஞ்செய்ய வல்லமையில்லாதவனாகையால் பயந்து என்னைத் திருடிக்கொண்டு வந்தமையாகிற இந்தக் கொடுஞ் செயலைச் செய்தனை. அற்பனே! புருஷஸ்ரேஷ்டர்களான அந்த அண்ணன்தம்பிகள் ராமலக்ஷ்மணர்கள் வெளியில் போனவுடனே ஒருவருமில்லாத அவர்களுடைய ஆச்ரமத்தில் புகுந்து திருட்டுத்தனத்தினால் என்னைக் கொண்டு வந்தனை. அப்பொழுது ராம லக்ஷ்மணர்களின் வாஸனையையாவது மோந்திருப்பாயாயின் பெரும்புலிகளின் வாஸனையைக் கண்ட அற்ப நாய்போல் நீ அவ்விடத்தில் அவர்களது ஸம்முகத்தில் நிமிஷமாயினும் நின்றிருக்க மாட்டாய். நீ முதலே பலமில்லாமையால் பயப்பட்டிருப்பவன். அப்படிப்பட்ட உனக்கு அந்த ராம லக்ஷ்மணர்களிருவருடன் யுத்தம் நேருமாயின், உனக்கு ஜயமுண்டாவது ஸம்பவிப்பதொன்றன்று; யுத்தத்திற்கு ப்ரஸக்தியே இல்லை; அவர்கள் உன்னைப் பார்த்தவுடனே பலாத்காரமாக வதித்து

'நான் உனக்கு ஏற்படுத்தின கெடுவான ஸம்வத்ஸரத்தில் இன்னம் இரண்டு மாதங்களே காத்திருக்க வேண்டும். அதற்குமேல் காக்கமுடியாது. வரவர்ணினீ! அதற்குமேல் தாமதஞ்செய்யாமல் நீ என் படுக்கையில் ஏறவேண்டும். அவ்விரண்டு மாதங்களுக்குமேல் நீ என்னைப் பர்த்தாவாக அங்கீகரிக்க விருப்பமுறாதிருப்பாயாயின், அப்பால் ஒரு நிமிஷமாயினும் பொறுக்க மாட்டேன். அந்தக் கெடு தாண்டின மறுநாள் விடியற்காலையில்தானே விடியற்கால போஜனத்திற்காக உன்னைச் சமையற் பள்ளியில் என் நிமித்தம் கொன்று விடுவார்கள்' என்றனன். ராக்ஷஸாதிபதி ராவணன் இங்ஙனம் ஸீதையை விரட்டுகையில், அங்கு ராவணனுடன் வந்திருக்கிற தேவஸ்திரீகளும் கந்தர்வ கன்னிகைகளும் மனவருத்தத்தினால் கண் கலங்கப்பெற்று மிகவும் துக்கித்தனர். அந்த ராக்ஷஸனால் விரட்டப்பட்ட ஸீதையை அவர்களில் சிலர் உதடுகளை அசைத்தல் முதலிய சேஷ்டைகளாலும், சிலர் முகஸம்ஜ்ஞைகளாலும், சிலர் கண்சேஷ்டைகளாலும் ஸமாதானப்படுத்தினர். இங்ஙனம் அவர்களால் ஸமாதானப்படுத்தப்பட்ட ஸீதை, ராக்ஷஸேச்வரனான ராவணனைப் பார்த்துப் பாதிவ்ரத்யமாகிற தன்னடத்தையின் பெருமையால் கர்வம் நிறைந்திருப்பதும் தனக்கு உசிதமுமான வசனத்தை இங்ஙனம் மொழிந்தனள்:—'இவ்விடத்தில் உனக்கு மேன்மையை விரும்புவோன் எவனுமே இல்லை. பதிவ்ரதையாகிய என்னை இங்ஙனம் விரும்புகையாகிற அநிந்திதமான கார்யத்தினின்று 'இது தகாது' என்று சொல்லி உன்னைத் திருப்புவோன் ஒருவனும் இல்லையே. இருப்பானாயின் தடுக்கமாட்டானா. ஒருவனும் தடுக்கவில்லையே. ஆகையால் அப்படிப்பட்டவன் ஒருவனும் இல்லை. இது நிஜம். தேவேந்த்ரனுக்குச் சசீதேவி போல் தர்மாத்மாவாகிய ராமனுக்குப் பத்னியாகிய என்னை மூன்று லோகத்திலும் நீயொருவன் தவிர மற்ற எவன்தான் மனத்தினாலாவது இங்ஙனம் விரும்பு

வான்? எவனும் விரும்பமாட்டான். இனி வாயாற் சொல்வானோ? ராக்ஷஸாதமா! அளவில்லாத ஒளியுடன் ப்ரகாசிக்கின்ற ராமனது பத்னியாகிய என்னை இப்படிப்பட்ட வார்த்தைகள் மொழிந்தனையே, இந்தப் பாபத்திற்கு நீ எங்குப் போய்த்தான் தப்புவித்துக் கொள்ளப்போகின்றனை? அடா! எந்த லோகம் போயினும் உன்னை அது விடாது. அரண்யத்தில் மதித்த யானையும் முயலும் போர்புரியக் கூடுமாயின் எப்படி இருக்குமோ, அப்படியே ராமனும் நீயும் யுத்தத்தில் கூடுவீர்களாயின் ராமன் மதித்த யானைபோலும் நீ அற்பமான முயல்போலும் ஆவீர்கள். இப்பொழுது இங்ஙனம் கர்வத்துடன் பேசுகின்றனையே; அப்பொழுது மாயாம்ருகமென்னும் வ்யாஜத்தினால் ராமலக்ஷ்மணர்களை வெகுதூரம் போகச்செய்து திருட்டுத்தனத்தினால் என்னைக் கொண்டுவந்தனையே; இதற்கு உன் பந்துக்களினிடையில் வெட்கமில்லை. இருக்கின்றனையே! நீ இன்னமும் அந்த ராமனது கண்களுக்கு அகப்படவில்லை; அவன் கண்களிற் படுவாயாயின், அவன் ப்ராபவத்தை அறிவாய். புகழ்க்கிடமாகாதவனே! (அபூஜ்யனே!) நிந்தைக்கிடமாயிருப்பவனே! பதிவ்ரதையான என்னைக் காமவிகாரத்துடன் பார்க்கின்றனையே! இடையிற் கறுத்துக் கடைகளிற் கோரோசனாவர்ணம் பொருந்தி விகாரமுற்று க்ரூரங்களான உன் கண்களிரண்டும் என் தரையில் இற்று விழாதிருக்கின்றனவோ? அந்தத் தர்மாத்மாவின் பத்னியும் தசரத மஹாராஜனது மருமகளுமாகிய என்னைச் சொல்லக்கூடாத இந்த உரைகளைச் சொல்லுகின்றனையே! ஏன் உன் நாக்கு அறுந்துவிழாதிருக்கின்றது? ராவணா! உன் கொடுஞ்செயலுக்கு உன்னை நீறு செய்யவேண்டியதே; ஆயினும் 'அபகாரிகளைச் சபிப்பாய்' என்று என் பர்த்தாவான ராமனது ஆஜ்ஞை இல்லாமையாலும், பாதிவ்ரத்யமாகிற என் தவத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுகையாலும் என் தேஜஸ்ஸினால் உன்னை நீறு செய்யாதிருக்கின்றனன். நான் புத்தி

களுமான ராக்ஷஸ ஸ்த்ரீகளெல்லோரையும் குறித்து, 'ராக்ஷஸிகளே! நீங்களனைவரும் ஒன்றுகூடி ஜனக ராஜன் புதல்வியாகிய ஸீதையைச் சீக்ரத்தில் எனக்கு ஸ்வாதீனமாகும்படி செய்வீர்களாக. ப்ரதிகூலகார்யங் களாலும் அனுகூல கார்யங்களாலும் நல்வார்த்தை சொல்லுகையாகிற ஸாமோபாயத்தினாலும் வேண்டினவற்றைக் கொடுக்கையாகிற தானோபாயத்தினாலும், அவை பலிக்காவிடின் பேதோபாயத்தினாலாவது, அதுவும் பலிக்காதுபோமாயின் தண்டோபாயத்தினாலாவது இப்பெண்மணியை எனக்கு ஸ்வாதீனப்படுத்த வேண்டும்' என்று ஆஜ்ஞாபித்தனன். ராக்ஷஸேந்த்ரனாகிய அந்த ராவணன் இங்ஙனம் அந்த ஸ்த்ரீகளுக்குப் பலமுறை கட்டளையிட்டு மேலும் காமமும் கோபமும் மனத்தில் மேலெழப்பெற்று அடிக்கடி ஸீதையைப் பலவாறு விரட்டினன். அனந்தரம் ராவணனது கனிஷ்ட பார்யையாகிய [1] தான்யமாலினி யென்னும் ஒரு ராக்ஷஸி விரைவுடன் ராவணனைக் கிட்டி அழுந்தக் கட்டிக்கொண்டு இவ்வசனத்தை மொழிந்தனள்:— 'மஹாராஜனே! ராக்ஷஸேஸ்வரா! என்னுடன் க்ரீடிப்பாயாக. நீ ராக்ஷஸேஸ்வரன். இப்படிப்பட்ட உனக்கு விகாரவர்ணமுடையவளும் தீனையும் மனுஷ்ய ஸ்த்ரீயுமாகிய இந்த ஸீதையால் என்ன ப்ரயோஜனம்? மஹாராஜனே! இங்ஙனம் இவள் உன்னை அங்கீகரியாதிருப்பதைக் கண்டால் உன் பாஹுபலத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட திவ்யமான உத்தம போகங்களை அனுபவிக்கும் பாக்யத்தை இவளுக்கு ப்ராஹ்ம தேவன் விதிக்கவில்லை யென்று தோற்றுகிறது. ஆகையால் இவள் என்ன செய்வாள்? தன்னை விரும்பா

---

1. இங்குக் கேவலம் தான்யமாலினியை மாத்ரம் சொல்லியிருப்பினும் மந்தோதரியையும் கூட்டிக்கொள்ளவேண்டும். மேல் ஹனுமான் தான் போய்வந்த வ்ருத்தாந்தங்களை அங்கதாதிகளுக்குச் சொல்லும்பொழுது, மந்தோதரி ராவணனைத் தடுத்ததாகச் சொல்லியிருக்கின்றனன்.

தவளை ஆசைப்படின், தேஹத்திற்கு வீண்பரிதாபமே யொழிய வேறு பயன் இல்லை. தன்னை விரும்புகிறவளை ஆசைப்படுபவனுக்கு மேலான ஸந்தோஷம் உண்டாகும். ஆகையால் உன்னை மிகுதியும் விரும்புகின்ற என் மேல் ஆசை வைப்பாயாக' என்றனள். மேகம்போன்றவனும் மஹாபலிஷ்டனுமாகிய அந்த ராவணன், தான்யமாலினி இங்ஙனம் சொல்லித் தன்னை எடுத்துக் கொண்டு அப்புறம் போகையில், சிரித்துக்கொண்டே திரும்பிப்போயினன். அந்த ராவணன் பூமியை நடுங்கச் செய்பவன்போல் அடிகளையிட்டுச் சென்று ஸூர்யன் போல் ப்ரகாசிக்கின்ற தன் க்ருஹத்திற்குள் ப்ரவேசித்தனன். தேவ கன்யகைகளும் கந்தர்வ கன்யகைகளும் நாக கன்யகைகளும் அந்த ராவணனைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு அவனுடன் அவ்வுத்தம க்ருஹத்தில் ப்ரவேசித்தனர். மன்மதவிகாரத்தினால் மதிமயங்கப் பெற்ற அவ்விராவணன் இங்ஙனம் தர்மத்தில் நிலை நின்று மனம் திடமாயிருக்கப்பெற்றுப் பயத்தினால் கிடுகிடுவென்று நடுங்குகின்ற ஸீதையை இவ்வாறு விரட்டிவிட்டு ப்ரகாசிக்கின்ற தன் பவனத்திற்குப் போயினன். இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

[ராக்ஷஸிகள் ஸீதையை விரட்டுதல்.]

பகைவரை அழச்செய்யுந் தன்மையுள்ள ராக்ஷஸ ராஜனாகிய ராவணன் ஸீதையைக் குறித்து இங்ஙனம் மொழிந்து உடனே ராக்ஷஸ ஸ்த்ரீகளனைவர்க்கும் அவளை விரட்டி வசப்படுத்தும்படி ஆஜ்ஞைசெய்து புறப்பட்டுப்போயினன். அந்த ராக்ஷஸேஸ்வரன் புறப்பட்டு அந்தப்புரஞ் சேர்ந்தவுடனே பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸஸ்த்ரீகளெல்லோரும் ஸீதையிடம் ஓடி

வந்து சுற்றிக்கொண்டனர். அனந்தரம் அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் கோபத்தினால் உடம்பு தெரியாமல் ஸீதையிடம் வந்து மிகவும் கொடிய சொல்லுடன் அவ்வைதேஹியைக் குறித்து இங்ஙனம் மொழிந்தனர் :— ஸீதே! ராவணன் புலஸ்த்ய ப்ரஜாபதியின் வம்சத்தில் பிறந்தவன்; ஆகையால் குலம் முதலியவற்றில் மிகுதியும் மேன்மையுடையவன்; மஹானுபாவன்; பத்துத் தலையுடையவன்; அப்படிப்பட்டவனுக்குப் பார்யையாயிருத்தல் உனக்கு ஏன் மேலாகத் தோற்றவில்லை!' என்றனர். அப்பால் ஏக ஜடையென்னும் ராக்ஷஸி கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்றுப் பிடியிலடங்கும்படி மிகுதியும் நுண்ணிய இடையுடைய ஸீதையை அழைத்து 'மரீசி முதலிய ப்ரஜாபதிகள் அறுவர்களில் நான்காமவரான புலஸ்த்யரென்னும் ப்ரஸித்திபெற்றவர் ஒருவர் உளர். அவர் ப்ரஹ்மாவின் [1] மானஸபுத்ரர். அந்தப் புலஸ்த்யருடைய மானஸ புத்ரர் ஒரு மஹர்ஷி உளர். அவர் விச்ரவஸ்ஸென்னும் பேருடையவர். அவர் மஹாப்ரபாவமுடையவர்; ப்ரஹ்ம தேவன்போல் மிகுந்த ஒளியுடையவர்; அகன்ற கண்களுடையவளே! அந்த விச்ரவஸ்ஸின் புதல்வனே சத்ருராவணனாகிய (சத்ருக்களை அழப்படுத்துந் தன்மையனாகிய) இந்த ராவணன். அப்படிப்பட்ட ஸத்குலத்தில் பிறந்து ராக்ஷஸர்களனைவர்க்கும் ப்ரபுவாகி ப்ரகாசிக்கின்ற ராவணனுக்குப் பார்யையாயிருக்க நீ உரியவளாயிருக்கின்றனை. ஸர்வாங்க ஸுந்த்ரீ! (ஸமஸ்த அங்கங்களும் அழகாயிருக்கப் பெற்றவளே!) நான் சொல்லும் வார்த்தையை ஏன் அங்கீகரியாதிருக்கின்றனை? என்றனள். அனந்தரம் பூனையின்கண்போன்ற கண்களையுடைய ஹரிஜடையென்னும் ராக்ஷஸி கோபத்தினால் கண்களைக் சுழற்றிக்கொண்டு ஸீதையைப்

---

1. மனத்தினால் நிர்மிக்கப்பட்டவர். மனத்தினால் நினைத்தபடியெல்லாம் படைக்கும் வல்லமையுடையவன் ப்ரஹ்மதேவன். அங்ஙனமே மஹர்ஷிகளும்.

பார்த்து 'முப்பத்து மூன்றுகோடி தேவர்களும் தேவேந்த்ரனும் எவனால் வெல்லப்பட்டனரோ, அப்படிப்பட்ட ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணனுக்குப் பார்யையாயிருத்தல் உனக்குத் தகுந்திருக்கின்றது' என்றனள். அனந்தரம் ப்ரகஸையென்னும் ராக்ஷஸி கோபாவேசத்தினால் மெய்ம்மறந்து ஸீதையைப் பார்த்துப் பயங்கரமாக விரட்டிக்கொண்டு 'அடி! வீர்யத்தினால் கர்விஷ்டனும் சூரனும் யுத்தங்களில் பின்வாங்காதவனும் பல பராக்ரமங்கள் அமைந்தவனு மாகிய ராவணனுக்குப் பார்யையாயிருத்தலை ஏன் பெறமாட்டாய்? மஹாபலனாகிய அந்த ராக்ஷஸராஜன் ராவணன் தன் பார்யைகள் அனைவரிலும் மிகுந்த அன்பிற்கிடமாயிருப்பவளும் கௌரவிக்கப்பட்டவளும் மஹாபாக்யவதியுமாகிய மந்தோதரியையும் துறந்து உன்னையே பற்றியிருப்பான். ராவணன்,' அனேக மாயிரம் ஸ்த்ரீகளால் நிறைந்து பலவகை ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிற அந்தப்புரத்தையும் விட்டு உன்னையே பற்றியிருப்பான்' என்றனள். விகடையென்னும் பெயருடைய மற்றொரு ராக்ஷஸி ஸீதையைப் பார்த்து 'அடிக்கடி யுத்தத்தில் தேவதைகளையும் பன்னகர்களையும் கந்தர்வர்களையும் தானவர்களையும் எவன் வென்றானோ, அப்படிப்பட்ட ராவணன் உன் பார்ஶ்வத்தில் வந்திருக்கின்றனன். ஸீதே! நீ என்ன அற்பையோ! ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்த அந்த ராக்ஷஸ ப்ரபுவுக்கு அந்த மஹானுபாவனுக்கு ராவணனுக்குப் பார்யையாயிருக்க உனக்கு இப்பொழுதும் ஏன் மனம் வரவில்லையோ?' என்றனள். அதன் பிறகு துர்முகியென்னும் ராக்ஷஸி, அந்த ஸீதையை நோக்கி 'நீண்ட கடைக்கண்களுடையவளே! எவனுக்குப் பயந்து ஸூர்யன் வெயில் காயமாட்டானோ, வாயு வேகமாக வீசமாட்டானோ, அப்படிப்பட்ட ராவணனிடத்தில் நீ ஏன் மனவிருப்பங்கொள்ள மாட்டேனென்கிறாய்? அழகான புருவங்களையுடைய ஸுந்தரீ! எவனிடம் பயந்து வ்ருக்ஷங்கள் புஷ்ப

வர்ஷங்களைப் பெய்கின்றனவோ, எவன் விரும்பின பொழுதெல்லாம் மலைகளும் மேகங்களும் ஜலத்தைக் கொடுக்கின்றனவோ, அப்படிப்பட்ட ராக்ஷஸேஸ்வரனும் ராஜராஜனுமாகிய ராவணனுக்குப் பார்யையாயிருக்க நீன் ஏன் விருப்பஞ்செய்ய மாட்டேனென்கிறாய்? அழகிய புன்னகையுடையவளே! லீலா விலாஸங்கள் அமையப்பெற்றவளே! தேவீ! உனக்கு யதார்த்தமான ஸங்கதியை நன்கு மொழிந்தனம். நீ எங்கள் வார்த்தையை அங்கீகரிப்பாயாக. அப்படி செய்யாது போவாயாயின் உன் ப்ராணங்கள் தக்குவது அரிது' என்றனள். இருபத்து மூன்றாவது ஸர்க்கம்

ராக்ஷஸ ஸ்த்ரீகள் மீளவும் ஸீதையை விரட்டுதலும், ஸீதை ரோதனஞ் செய்தலும்.

அதன்பிறகு விகாரமான முகத்தையும் பருஷமான ஸ்வபாவத்தையும் உடைய அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள், அந்த ஸீதையின் அருகே வந்து, மீளவும் பருஷமும் அப்ரியமுமான வாக்யங்களை இங்ஙனம் மொழிந்தனர்:- 'ஸீதே! மேன்மையால் ஸமஸ்த பூதங்களின் மனத்தையும் இழுக்கவல்லதும் மிகுதியும் மேலான படுக்கைகளோடு கூடி விளங்குவதுமான அந்தப்புரத்தில் வஸிக்கும்படி உன்னை வேண்டுகையால் அங்கு வாஸஞ்செய்ய நீ ஏன் ஸம்மதியாதிருக்கின்றனை? நீ மனுஷ்ய ஸ்த்ரீயாகையால் மனுஷ்யனாகிய ராமனுக்குப் பார்யையாயிருத்தலையே மேலாக எண்ணுகின்றனை. ஆனால் இது மிகுதியும் புத்தியில்லாமையே! வேண்டாம்; இனியாவது ராமனிடத்தினின்று மனத்தைத் திருப்பிக் கொள்வாயாக. இனி எப்பொழுதாயினும் நீ ராமனுக்குத் தக்கமாட்டாய். மூன்று

ஸகல தனங்களையும் இஷ்டப்படி அனுபவிப்பவனும் ராக்ஷஸர்தலைவனுமாகிய ராவணனைப் பர்த்தாவாக அடைந்து ஸுகமாக விளையாடிக்கொண்டிருப்பாயாக. மங்கல ஸ்வபாவமுடையவளே! நிந்தைக்கிடமாகாதவளே! நீ ஒரு தோஷமுமில்லாத ஸுந்தரி; ஆயினும் மனுஷ்ய ஸ்த்ரீயாகையால், மனுஷ்யனாகிய அந்த ராமன் ராஜ்யம் கைசேரப்பெற்று விரும்பின விருப்பங்களை ஈடேற்றிக்கொள்ள முடியாதவனாகித் தீனனாயிருப்பினும், அவனையே விரும்புகின்றனை. ஆகையால் ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் எவ்வளவு வேண்டிக்கொள்ளினும் அவனை விரும்பாதிருக்கின்றனை' என்றனர். தாமரை யிதழ்போன்ற கண்களையுடைய அந்த ஸீதை ராக்ஷஸிகள் சொன்ன வார்த்தையைக் கேட்டு நீர் நிறைந்த கண்களுடன் அவர்களை நோக்கி இம்மொழியை மொழிந்தனள் :—'நீங்களெல்லோரும் ஒன்று சேர்ந்து என்னைக் குறித்து உலகத்தவர் மிகுதியும் த்வேஷிக்கத் தகுந்த இந்த வார்த்தையை வாயால் சொல்லுகிறீர்களே! இப்படிப்பட்ட வார்த்தை மிகுதியும் பாபவிஷயமென்று உங்கள் மனத்திற்குத் தோற்றாதிருக்கின்றதே! உங்களுடைய இவ்வசனம் பாபிஷ்டமாயிருக்கையால் என் மனத்தில் யுக்தமாகத் தோற்றவில்லை. மனுஷ்ய ஸ்த்ரீ ராக்ஷஸனுக்குப் பார்யையாதல் எள்ளளவும் யுக்தமன்று. ஆகையால் நீங்களெல்லோரும் கூடி உங்களிஷ்டம் வந்தபடி என்னைப் பக்ஷிக்கினும் பக்ஷிப்பீர்களாக. அதுவாயினும் எனக்கு இஷ்டமேயன்றி நீங்கள் சொன்னபடி நான் செய்யமாட்டேன். எனக்கு எவன் பர்த்தாவோ, அவன் தீனனாயினும் ராஜ்யம் கைசேராதவனாயினும் அவனே எனக்குக் குரு. ஸுவர்ச்சலை ஸூர்யனிடத்தில் அநுராகம் உண்டாகப் பெற்றிருப்பதுபோல், நான் அவனிடத்திலேயே அநுராகமுண்டாகப் பெற்றிருப்பேன். மஹாபாக்யவதியான சசீதேவி தேவேந்த்ரனைப்போலவும், ரோஹிணி சந்த்ரனைப் போலவும், லோபாமுத்ரை அகஸ்த்யரைப் போலவும், ஸுகன்யை

ச்யவனரைப்போலவும், ஸாவித்ரி ஸத்யவந்தனைப் போலவும், ஸ்ரீமதி கபிலரைப்போலவும், மதயந்தி ஸௌதாஸனைப்போலவும், கேசினி ஸகரசக்ரவர்த்தியைப் போலவும், தமயந்தி நலனைப் போலவும், நான் இக்ஷ்வாகு குலாலங்காரனும் என் பர்த்தாவுமாகிய ராமனையே அனுஸரித்திருக்கின்றேன்' என்றனள். ராவணனால் கட்டளையிடப்பெற்ற அந்த ராக்ஷஸிகள் ஸீதை மொழிந்த வார்த்தையைக் கேட்டுக் கோபாவேசத்துடன் மெய்ம்மறந்து பருஷ வசனங்களால் அம்மடந்தையர்மணியை விரட்டிக்கொண்டிருந்தனர். சிம்சுபா வ்ருக்ஷத்தில் மறைந்திருக்கிற அந்த ஹனுமான் எதுவும் பேசாமல் அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதையை விரட்டுகிற வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தனன். ராக்ஷஸிகள், பயத்தினால் கிடுகிடுவென்று நடுங்குகின்ற அந்த ஸீதையைச் சுற்றிக்கொண்டு மிகுதியுங் கோபமுற்றவராகித் தகதகவென்று ஜ்வலித்துத் தொங்குகின்ற தம்முதடுகளை மிகவும் நக்கிக்கொண்டனர். அவர்கள் மிகவும் சினந்து விரைவாகக் கண்ட கோடாலிகளை ஏந்திக்கொண்டு ஸீதையைப் பார்த்து விரைவுடன், இவள் 'ராக்ஷஸர்க்கு ப்ரபுவான ராவணனுக்குப் பார்யையாயிருக்கத் தகுந்தவளன்று' என்றனர். அழகிய முகமுடைய அம்மடந்தையர்மணி ஸீதை பயங்கரமான உருவமுடைய அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் அங்ஙனம் விரட்டிக்கொண்டிருக்கையில் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு ஹனுமான் மறைந்திருக்கிற அந்தச் சிம்சுபா வ்ருக்ஷத்தினருகே வந்தனள். அனந்தரம் அகன்ற கண்களையுடைய அந்த ஸீதை, ராக்ஷஸ ஸ்த்ரீகள் சுற்றிலும் சூழ்ந்து வருகையில் அந்தச் சிம்சுபாவ்ருக்ஷஞ் சேர்ந்து சோகத்தில் மூழ்கியிருந்தனள். ராக்ஷஸிகள் உபவாஸங்களாலும் வ்ரதங்களாலும் இளைத்துத் தீனமான முகத்துடன் கூடி அழுக்கடைந்த வஸ்த்ரந் தரித்திருக்கின்ற அந்த ஸீதையைச் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு மீளவும் விரட்டினர். அனந்தரம் பயங்கரமான கண்களும்

உன்னதமான உதரமும் கொடுந்தன்மையும் பொருந்திய விநதை யென்னும் ராக்ஷஸி, கோபம் நிறைந்த உருவத்துடன் அந்த ஸீதையை நோக்கி 'ஸீதே! உனக்குப் பர்த்தாவிடத்திலுள்ள ஸ்னேஹத்தைக் காட்டினை. இதுவரையில் காட்டினது போதும். மங்கல ஸ்வபாவமுடையவளே! எல்லா விஷயங்களிலும் அதியாகச் செய்வது துக்கத்தின் பொருட்டே ஆகும் (துக்கத்தையே விளைக்கும்); ஆகையால் எதிலும் மிதமின்றி ஊற்றமுறலாகாது. நீ மனுஷ்யஜாதிக்குத் தகுந்த பாதிவ்ரத்ய மென்னும் [1] விதானத்தை இவ்வளவு காலமாக வெளிப்படுத்தினை. இனிப்போதும். உன் பாதிவ்ரத்யத்திற்கு நான் மிகுதியும் ஸந்தோஷமுற்றவளாயினன். உனக்குச் சுபம் உண்டாகுமாக. ஸீதே! நான் உனக்குப் பத்யமான வார்த்தையொன்று மொழிகின்றேன்; அதையுஞ் செய்வாயாக. பராக்ரமம் மிகுந்தவனும் அழகில் சிறந்தவனும் தேவர்களுக்கு ப்ரபுவான இந்த்ரன்போல் விளக்கமுற்றவனும் ஸமர்த்தனும் தானசீலனும் அனைவரும் ஆசைப்படத் தகுந்த காட்சியுடையவனும் ஸமஸ்த ராக்ஷஸ ப்ரபுவுமாகிய ராவணனைப் பர்த்தாவாக அங்கீகரிப்பாய். கேவல மனுஷ்யனும் தீனனுமாகிய ராமனை விட்டு இப்படிப்பட்ட ராவணனையே அங்கீகரிப்பாயாக. ஸீதே! மங்கல ஸ்வபாவமுடையவளே! நீ திவ்யமான சந்தனம் பூசி, திவ்யமான ஆபரணங்களை அணிந்து, அக்னிக்கு ஸ்வாஹாதேவியும் இந்த்ரனுக்குச் சசீதேவியும்போல் ராவணனுக்குப் பார்யையாகி, இன்று முதல் ஸமஸ்த லோகங்களுக்கும் அரசியா யிருப்பாயாக. ராமனோ உன்னைப் பிரிந்த துக்கத்தினால் பரிதபித்து இனிப் பிழைத்திருக்கமாட்டான். அவனுடைய ஆயுளும் தீர்ந்தாற்போலவே. அப்படிப்பட்டவனால் உனக்குப் பயன் யாது? நான் இப்பொழுது சொன்ன வார்த்தையின்படி நீ செய்யாயாயின் இம்முஹூர்த்தத்திலேயே

---

1. ஏற்பாட்டை.

நாங்களெல்லோருஞ் சேர்ந்து உன்னைப் பிடித்துப் பக்ஷித்து விடுவோம்' என்றனள். தொங்குகின்ற ஸ்தனங்களையுடைய விகடை யென்னும் மற்றொரு ராக்ஷஸி மிகுந்த கோபத்துடன் விரல்களைப் பிடியாகப் 'பிடித்து' கர்ஜித்துக்கொண்டு ஸீதையைப் பார்த்து 'அடி மிகுதியும் துர்ப்புத்தியே! நீ இதுவரையில் பல அப்ரியவசனங்களைச் சொல்லினும் ராவணன் தயையாலும் மனத்தின் மேன்மையாலும் அவற்றை யெல்லாம் பொருத்துக்கொண்டனன். இந்தக் காலத்திற்குத் தகுந்தபடி நாங்கள் உனக்கு ஹிதம் உரைத்தனம்; நீ அதைச் செய்யாதிருக்கின்றனை. இப்பொழுது நீ ஸமுத்ரத்தின் இக்கரைக்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றனை. மற்றெவர்க்காயினும் இக்கரைக்கு வரமுடியாதாகையால், உன்னைக் கொண்டு போவதற்கில்லை. இங்ஙனம் மற்றெவர்க்கும் புகக்கூடாத இக்கரைக்கு வந்திருக்கை மாத்ரமேயன்றி எப்படிப்பட்டவர்க்கும் புக மிகவும் பயங்கரமான ராவணாந்தப்புரத்தில் புகுந்தவளாயினை. இப்படி பயங்கரமான ராவணக்ருஹத்தில் தகையப்பட்டுக் கொடிய ராக்ஷஸிகளாகிய எங்களால் நன்கு பாதுகாக்கப்பட்டிருக்கின்றனை. இவ்வளவு பத்ரத்திலிருக்கின்ற உன்னை இங்கிருந்து விடுவித்துக் காப்பாற்றுவதற்கு ஸாக்ஷாத் தேவேந்த்ரனுக்கும் ஸாத்யமன்று. உனக்கு ஹிதஞ்சொல்லுகிற என் வார்த்தையின்படி செய்வாயாக. இங்ஙனம் கண்ணீர் பெருகிக்கொண்டிருப்பது போதும். துக்கிப்பதால் ப்ரயோஜனம் இல்லை. ஆகையால் அதைத் துறப்பாயாக. நீ ராவணனிடத்தில் ஸ்னேஹம் உண்டாகப் பெற்று மிகுதியும் ஆநந்தத்துடனிருப்பாயாக. இங்ஙனம் எப்பொழுதும் ஒரே ரீதியாக வருத்தமுற்றிருப்பதை விடுவாயாக. ஸீதே! ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுடன் கூடி ஸுகமாக விளையாடிக்கொண்டிருப்பாயாக. பயப்படுந்தன்மையளே! ஸ்த்ரீகளுக்கு யௌவனம் ஸ்திரமன்றென்பது உனக்குத் தெரியுமல்லவா? ஆகையால் உன்னுடைய யௌவனம் கடந்து

போவதற்கு முன்னமே ராவணனுடன் கூடி ஸுகத்தை அனுபவிப்பாயாக. அழகான கண்களையுடையவளே! ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுடன் கூடி ரமணீயமான உத்யான வனங்களிலும், பர்வதங்களின் அருகிலுள்ள வனங்களிலும் உலாவிக்கொண்டிருப்பாயாக.ஸுந்தரி! ஏழாயிரம் ஸ்த்ரீகள் உன் ஸ்வாதீனத்திலிருந்து உனக்குப் பணிவிடை செய்துகொண்டிருப்பார்கள்; ஸமஸ்த ராக்ஷஸர்களுக்கும் ப்ரபுவான ராவணனைப் பர்த்தாவாக அங்கீகரிப்பாயாக. ஸீதே! நான் சொன்ன வார்த்தையை உள்ளபடி நடத்தாது போவாயாயின் உன் ஹ்ருதய மாம்ஸத்தைப் பிடுங்கித் தின்பேன்' என்றனள். அனந்தரம் சண்டோதரி யென்னும் ராக்ஷஸி கோபத்தினால் மெய்ம்மறந்து பெரிய சூலத்தைச் சுழற்றிக்கொண்டு ஸீதையை நோக்கி 'மான் பேடுபோல் அலமருகின்ற கண்கள் அமைந்து பயந்து பெருமூச்சு விடுகையால் ஸ்தனங்கள் நடுங்கப்பெற்ற இந்த ஸீதையை ராவணன் இவ்விடம் கொண்டு வருகையில் நான் பார்த்தது முதலாக எனக்குப் பெரிய விருப்பம் உண்டாயிருக்கின்றது. இந்த ஸீதையைக் கொன்று இவளது வயிற்றில் வலப்பக்கத்திலிருக்கிற காலகண்டமென்னும் மாம்ஸபிண்டத்தையும் அதன் இடப்பக்கத்திலுள்ள குல்மமென்னும் மாம்ஸபிண்டத்தையும், அதன் மேலுள்ள மாம்ஸ விசேஷத்தையும், தாமரை மொக்குபோன்ற ஹ்ருதயமென்னும் மாம்ஸத்தையும் அதனடியில் அதற்காதாரமாயுள்ள ஓர்வகை மாம்ஸத்தையும் குடல்களையும் தலையையும் தின்னவேண்டுமென்று எனக்கு எண்ணம்' என்றனள். அனந்தரம் ப்ரகஸையென்னும் ராக்ஷஸி ஸீதையைப் பார்த்து 'இந்தக் கொடியளது கழுத்தைப் பிடித்துப் பீடிப்போம். ஏன் வெறுமனே இருக்கவேண்டும்? அதன்பிறகு 'மனுஷ்ய ஸ்த்ரீயாகிய அந்த ஸீதை செத்தாள்' என்று ராஜனுக்குச் சொல்வோம். அப்பால் ராஜனும் 'ஆனால் பக்ஷிப்பீர்களாக' என்று மொழிவான். இதற்கு எள்ளளவும் ஸந்தேஹம் இல்லை' என்ற

ணள். அனந்தரம் அஜாமுகியென்னும் ராக்ஷஸி 'நீங்க ளெல்லோரும் இந்த ஸீதையை அறுத்து மாம்ஸங்களை ஸமமாகத் துண்டிப்பீர்களாக. அதன் பிறகு நாமெல் லோரும் அவற்றைப் பங்கிட்டுக் கொள்வோம். எனக்குக் கலஹஞ்செய்வது ஸரிப்படாது. பருகத் தகுந்த நானாவிதமான மத்யங்களையும் பலவகைத் துவையல்களையும் ஏராளமாகக் கொண்டுவாருங்கள்' என்றனள். அனந்தரம் சூர்ப்பணகை யென்னும் ராக்ஷஸி 'அஜாமுகி என்ன சொன்னாளோ, அதுவே எனக்கும் ப்ரியமாயிருக்கின்றது. சோகங்களை யெல்லாம் போக்கடிக்குந்தன்மையுள்ள மத்யத்தை விரைவில் கொண்டுவருவீர்களாக. மனுஷ்ய மாம்ஸத் தைப் பக்ஷித்து மத்யத்தையும் பானஞ் செய்து லங்கையின் மேல்பாகத்திலிருக்கின்ற நிகும்பிலை யென் னும் பத்ரகாளிக்கு ப்ரீதியாகும்படி நர்த்தனஞ் செய் வோம்' என்றனள். தேவகன்னிகைபோல் விளங்கு கின்ற அந்த ஸீதை இங்ஙனம் அதிபயங்கரமாக ராக்ஷஸ ஸ்த்ரீகள் விரட்டிக்கொண்டிருக்கையில் தைர்யத்தை யிழந்து ரோதனஞ் செய்தனள்.

இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.



ஸீதை ராக்ஷஸிகள் சொன்னவற்றைக் கண்டித்து அசோக வ்ருக்ஷத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு பலவாறாக வருந்துதல்.

பயங்கரமான உருவமுடைய அந்த ராக்ஷஸிகள் அங்ஙனம் பருஷமாகவும் பயங்கரமாகவும் பல வார்த் தைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில் ஸீதை செவி யுற்று மிகுதியும் ரோதனஞ்செய்தனள். ஸீதை அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் அங்ஙனம் பயங்கரமாக மொழிந்த வார்த்தைகளைக் கேட்டு மிகவும் பயந்திருப்பினும்

பாதிவ்ரத்யத்தையே மனத்தில் நிலைநிறுத்திக் கொண்டிருப்பவளாகையால், இடங்கொடுக்காமல் கண்ணீர்களால் தடுக்கப்பட்ட உரைகளுடன் 'எப்பொழுதாயினும் மனுஷ்யஸ்த்ரீ ராக்ஷஸனுக்குப் பார்யையாகத் தகாள். ஆகையால் ராவணனுக்குப் பார்யையாகத் தகுந்தவளல்லேன். உங்களிஷ்டப்படி நீங்களெல்லோரும் என்னைத் தின்பீர்களாக. நான் என்னவோ நீங்கள் சொன்னபடி செய்யேன்' என்றனள். அங்ஙனம் தேவகன்யகைபோன்ற அந்த ஸீதை ராவணனால் விரட்டப்பட்டும் ராக்ஷஸ ஸ்த்ரீகளின் இடையில் அகப்பட்டும் துக்கத்தினால் பரிதபித்து எள்ளளவும் ஸுகமுறாதிருந்தனள். அந்த ஸீதை அடவியில் கூட்டத்தினின்று தவறிச் செந்நாய்களால் பிடிக்கப்பட்டு வருந்துகின்ற மான்பேடுபோல், தன் அவயவங்களில் தான் நுழைபவள் போன்று அங்கத்தை மடக்கிக்கொண்டு மிகுதியும் கிடுகிடுவென்று நடுங்கினள். அவள், [1] அச்சிம்சுபா வ்ருக்ஷத்தின் அருகில் நன்கு புஷ்பித்துப் படர்ந்திருக்கிற அசோக மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு, சோகத்தினால் மனம் தத்தளிக்கப்பெற்றுத் தன் பர்த்தாவான ராமனை த்யானித்தனள். அப்பெண்மணி தன் பெரிய கொங்கைகளைக் கண்ணீர் பெருக்குகளால் நனைப்பதும் மனத்தில் ராமனையே சிந்திப்பதுமாகி அப்பொழுது சிறிதும் துயரத்தினுடைய முடிவைக் காணாதிருந்தனள். அம்மாதரசி, பெருங்காற்றில் வாழைமரம் நடுங்கி நிலத்தில் விழுவதுபோல், நடுக்கமுற்றுத் தரையில் வீழ்ந்து, மீளவும் எழுந்து ராக்ஷஸிகளிடம் பயத்தினால்

---

1. ஹனுமானிருக்கிற சிம்சுபா வ்ருக்ஷத்தின் கிளையும் அசோக வ்ருக்ஷத்தின் கிளையும் ஸமீபித்திருக்கையால் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருந்ததுபற்றி ஸீதை சிம்சுபா வ்ருக்ஷத்தினடியில் சேர்ந்திருப்பினும் சிம்சுபா வ்ருக்ஷத்தினருகிலுள்ள அசோக வ்ருக்ஷத்தின் கிளையைப் பிடித்துக்கொள்ள நேர்ந்ததென்று தெரிகிறது.

முக நிறம் மாறப்பெற்றிருந்தனள். அப்பொழுது அங்ஙனம் நடுங்குகின்ற அந்த வைதேஹியின் நீண்டகன்ற ஜடை, அசைந்துகொண்டிருக்கையால் சலிக்கின்ற ஸர்ப்பம்போல் புலப்பட்டது. அவள் பெருமூச்செறிந்துகொண்டு துக்கத்தினால் பரிதாபமுற்றுச் சோகத்தினால் மதிமயங்கப்பெற்றுப் பெருவியஸனத்துடன் கண்ணீர் பெருக்கிக்கொண்டு புலம்பினள். அந்தப் [1]பதிதேவதை மிக்க மனவருத்தத்துடன் 'ஆ! ராமா!' என்றும், 'ஐயோ! லக்ஷ்மணா!' என்றும் 'ஆ என் மாமி கௌஸல்யே! ஆ! ஸுமித்ரே!' என்றும் புலம்பிக்கொண்டு 'நான் இப்படி இங்குத் தயையில்லாத ராக்ஷஸிகளால் பீடிக்கப்பட்டு வருந்தி ராமனைப் பிரிந்து பரிதாபமுற்று முஹூர்த்தமாயினும் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்கின்றேனே! ஆகையால் 'ஸ்த்ரீக்காயினும் புருஷனுக்காயினும் ஈச்வர இச்சை இல்லாதபொழுது மரணம் நேராது' என்று பண்டிதர் சொல்லுகிற லோக வார்த்தை ஸத்யமாகவே இருக்கின்றது. பொருள் மிகுதியும் நிறைந்திருக்கிற ஓடம் ஸமுத்ரத்தினிடையில் காற்று வேகத்தினால் அடிக்கப்பட்டுச் சாய்வதுபோல், அற்ப புண்யமுடையவளும் ஏழையுமாகிய நான் அநாதைபோல் நாசம் அடையப்போகின்றேன். என் ப்ராணேச்வரனைப் பார்க்க நேராமல் இங்ஙனம் ராக்ஷஸிகளின் வசம் அகப்பட்டு ஜலப்ரவாஹம் மோதுகையால் அறுப்புண்ட ஆற்றின்கரைபோல் நாசம் அடைகின்றேன். மலர்ந்த தாமரையிதழ்போன்ற கண்களுடையவனும் ஸிம்ஹம்போல் மிடுக்குள்ள நடையமைந்தவனும் நன்றியுடையவனும் அனைவர்க்கும் இனிய உரைகளை உரைக்கும் தன்மையனும் என் பர்த்தாவுமாகிய ராமனை இப்பொழுது புண்யாத்மாக்கள் பார்த்துக்கொண்டிருப்பார்கள்; நான் பாபிஷ்டையாகையால் என் அன்பனாகிய ராமனைப் பார்க்க நேராதிருக்கின்றனன். அப்படிப்பட்ட ஆத்மஜ்ஞனாகிய ராமனைப் பிரிந்து நான் கொடிய

1. பர்த்தாவையே தெய்வமாக உடையவள்.

விஷத்தைப் பருகினவள்போல் சிறிதும் பிழைத்திருக்க வல்லளல்லேன். நான் இப்பொழுது மிகுதியும் பயங்கரமான துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கின்றேனே! இப்படிப்பட்ட துக்கத்திற்குக் காரணமாக நான் பூர்வஜன்மத்தில் எப்படிப்பட்ட பாபத்தைச் செய்தேனோ? இப்படிப்பட்ட மஹாதுக்கத்தை அனுபவித்துக்கொண்டுபிழைத்திருக்கப்போறேன்; ப்ராணனை விட விரும்புகிறேன். எனக்கு இங்ஙனம் ராக்ஷஸ ஸ்த்ரீகள் காவலிருக்கின்றனர். ஆகையால் நான் இனி எப்பொழுதும் ராமனைச் சேரவல்லளல்லேன். மனுஷ்யர்களுக்குத் தாம் விரும்பினபொழுது மரணம் உண்டாக நேராதே. ஆகையால் என்னிஷ்டப்படி எனக்கு இப்பொழுது மரணம் உண்டாகாதே. போகட்டும், அக்னிப்ரவேசம் முதலியவற்றால் ப்ராணனை விடலாமென்னில், பதிக்கு அதீனையாகையால் •பதியின் ஆஜ்ஞையில்லாமல் ப்ராணன்களைவிட எனக்கு அதிகாரம் இல்லையே. ஆகையால் 'சீ! மனுஷ்யத்தனம் எதுக்கு? சீ? ஒருவர்க்குட்பட்டிருத்தலும் ஓர் பிழைப்பா?' என்று ரோதனஞ்செய்தனள். இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸீதை தன் பாக்யக்குறையைப் பலவாறாகச் சிந்தித்து ப்ராணன்களை விட நிச்சயித்தல்.

இவ்வாறு மொழிந்துகொண்டிருக்கிற அந்த ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை, தலையை வணக்கி முகம் நிரம்பக் கண்ணீர் பெருகப்பெற்று, இங்ஙனம் புலம்பத் தொடங்கினள். அவள் பைத்யம் பிடித்தவள்போலும் மனவூக்கமற்றவள்போலும் மனங்குதிரப் பெறாதவள் போலும் சோகித்துக்கொண்டு, இளைப்பாறும்

பொருட்டுத் தரையில் புரளவிட்ட பெண்குதிரைபோல் தரையில் புரண்டு ரோதனஞ் செய்தனள். 'ராமன் ஏமாறியிருக்கையில் காமரூபியாகிய ராக்ஷஸன் ராவணன், நான் கூச்சலிட்டுக்கொண்டிருப்பினும் விடாமல் பலவந்தமாக என்னைப் பிடித்துக்கொண்டு வந்தனன். ராமனைப் பிரிந்து ராக்ஷஸ ஸ்த்ரீகள் வசம் அகப்பட்டு அவர்கள் மிகுதியும் பயங்கரமாக விரட்டிக் கொண்டிருக்கையில் ராமனையே நினைத்துக்கொண்டு இம்மஹா துக்கத்தினால் மிகவும் வருந்துகின்ற நான் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்க வல்லளல்லேன். மஹாரதனாகிய ராமனைப் பிரிந்து இந்த ராக்ஷஸிகளின் இடையில் அகப்பட்டுக்கொண்டிருக்கிற எனக்கு இனி ப்ராணன்களால் ப்ரயோஜனமென்ன? ப்ராணன்களால் ப்ரயோஜனம் இல்லாதபொழுது பணங்களாலாவது ஆபரணங்களாலாவது என்ன ப்ரயோஜனம்? இவ்வளவு துக்கத்திற்கும் இந்த என் ஹ்ருதயம் பல சுக்கலாய்ப் பிளவாதிருக்கின்றதே! ஆகையால் இது கல்லைப்போல் மிகுதியும் உறுதியுடையது. இது நிஜம். இப்படி இல்லையாயின், கிழத்தன்மையும் மரணமும் அற்றதாக வேண்டும். இல்லையாயின், இப்படி அசையாதிருக்குமா! அப்படிப்பட்ட ராமனைப் பிரிந்து இப்படிப்பட்ட பாவப் பிழைப்பு பிழைத்துக்கொண்டு கொஞ்ச நேரமாயினும் ப்ராணன்களைக் காப்பாற்றிக்கொண்டிருக்கிறேனே! நான் எவ்வளவு பாபிஷ்டையோ! எவ்வளவு அயோக்யையோ! சீ! என் பிழைப்புப் பாழாக. நாற்புறங்களிலும் ஸமுத்ரஞ் சூழப்பெற்ற பூமண்டலம் அனைத்திற்கும் ப்ரபுவும் இனிது உரைப்பவனும் என் அன்பனுமாகிய ராமன் இல்லாதிருக்க எனக்கு ப்ராணன்களில் ப்ரீதி எதுக்கு? ஸுகத்திலாவது ஆஸக்தி எதுக்கு? ராக்ஷஸ ஸ்த்ரீகளே! நானென்னவோ சரீரத்தை விடுவேனன்றி வைத்துக்கொண்டிருக்கமாட்டேன். ஆகையால் உங்களைப்பற்றி எனக்குப் பயமில்லை. நீங்கள் பிளந்தாலும் பிளப்பீர்களாக; பிடித்துப் பக்ஷிப்பினும் பக்ஷிப்பீர்களாக. நான் என்னன்பனைப் பிரிந்து வெகுகாலம்

இந்தத் துக்கத்தைப் பொறுக்கமாட்டேன். நான் ராக்ஷஸனுகிய ராவணனை இடக்காலாலும் பரிசிக்க மாட்டேன். இனி அவனை மிகுதியும் நிந்தைக்கிடமாக விரும்புவது ஏது? இவன் கொடுந்தன்மையுடன் என்னை விரும்புகின்றனே! இவனுக்கு எவ்வளவு தடுத்துச் சொல்லினும் தெரியவில்லையே! தன் ஸ்வரூபம் இப்படிப்பட்டதென்றும் தன் குலம் இப்படிப்பட்டதென்றும் இவன் அறியாதிருக் கின்றனே. இல்லையாயின் என்னையுங்கூட விரும்பு வானு? நீங்கள் என்னை இரு துண்டங்களாக நறுக்கு வீர்களாக; பிடித்துக் கிழிப்பீர்களாக; அவயவங்கள் வேறுவேருகத் துண்டிப்பீர்களாக; எரிகிற நெருப்பி லிட்டுக் கொளுத்துவீர்களாக; எதுவேனுஞ் செய்வீர்க ளாக. நான் ராவணனை அணுகமாட்டேன். நீங்கள் எவ்வளவு நேரம் பிதற்றிலும் என்ன உபயோகம்? ராமன் தோஷமுடையவரிடத்திலும் குணத்தையே நினைக்குந் தன்மையன்; சிறிது உபகாரஞ் செய்யினும் அதைப் பெரிதாகப் பாவிப்பவன்; எவர்க்கு எந்த வ்யஸனம் நேரிலும் மிகுதியும் மன இரக்க முறுந் தன்மையன்; ரகுகுலாலங்காரன். பிறருடைய ஸம்ருத்தி யில் கண்வைத்திருப்பவன். இப்படி அவன் குணங்கள் பகைவரது கோஷ்டியிலும் புகழ்பெற்றவை. இப்படிப் பட்ட ராமன் என்மேல் தயையற்றிருக்கின்றனன். அவனைச் சொல்லுவானேன். என் தெளர்ப்பாக்யமே இதற்குக் காரணமென்று ஊஹிக்கின்றனன். எவன் தானெருவனே ஜனஸ்தானத்தில் பதினுலாயிரம் ராக்ஷ ஸர்களைப் பறக்கடித்தானே, அப்படிப்பட்ட வீரனுக்கு என்னருகே வந்து என்னைப் பாதுகாக்கத் தடையா திருக்கின்றது? ஒன்றுமில்லை யாகையால் ஏன் வந்து என்னைக் காக்காதிருக்கின்றனன்? அற்பவீர்யமுடைய ராக்ஷஸனுகிய ராவணன் என்னைத் தடுக்கின்றனன்; இவன் ராமனுக்கு ஒருபொருளா? என் பர்த்தாவாகிய அந்த ராமன் யுத்தத்தில் ராவணனைக் கொல்ல வல்லவ னல்லவா! தண்டகாரண்யத்தில் ராக்ஷஸர்தலைவனுகிய

விராதனைக் கொன்ற ராமன் என்னை ஏன் வந்து ரக்ஷியாதிருக்கின்றனன்? இந்த லங்கை ஸமுத்ர மத்யத்தில் இருக்கின்றது; ஆகையால் எவர்க்கும் எதிர்க்கமுடியாதென்பது வாஸ்தவமே; ஆயினும் ராம பாணங்களைத் தடுப்பதற்கு இதில் ஒன்றும் இல்லையே! நான் ராமனுக்குக் கேவலமாயிருப்பவளல்லள்; அவனுக்கு அன்பிற்கிடமான பார்யை; இப்படிப்பட்ட தன் பார்யையை ராக்ஷஸன் ஒருவன் கொண்டுபோகையில் தான் திடபராக்ரமனாயிருந்தும் ராமன் என்னைப் பாதுகாக்காதிருக்கின்றானே! இதற்குக் காரணம் யாதோ; தெரியவில்லையே? லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமன், நான் இங்கிருக்கிறேனென்பதை இது வரையிலும் அறியாதிருக்கவேண்டும். அறிந்திருப்பானாயின், அவன் மஹா தேஜஸ்வியாகையால் தனக்குண்டான இந்த அவமானத்தைப் பொறுத்திருப்பானோ? பொறுத்திருக்கமாட்டான்; உடனே ராவணனைக் கொன்றுவிடுவான். எவன் என்னை ராவணன் எடுத்துக் கொண்டு வரும்பொழுது பார்த்துக்கொண்டிருந்தானாகையால் என் ஸங்கதியை ராமனுக்குத் தெரிவிப்பானோ, அப்படிப்பட்ட ஜடாயுவையுங்கூட ராவணன் யுத்தத்தில் கொன்றுவிட்டனன். அந்த ஜடாயு கிழத்தன்மை மேலெழப் பெற்றவனாயினும் த்வந்த்வ யுத்தத்தில் ராவணனோடு நின்று யுத்தஞ்செய்து அங்ஙனம் தன்னால் கூடியவரையிலும் என்னை ரக்ஷித்து மஹாகார்யஞ் செய்தனன். அந்த ராமன் நான் இங்கிருக்கிறேனென்று அறிந்திருப்பானாயின் இப்பொழுதே கோபித்துப் பாணங்களைப் பரப்பி உலகத்திலெங்கும் ஓரரக்கனும் இல்லாதபடி செய்வானே! நான் இருப்பதை அறிவானாயின், அவன் இந்த லங்கை முழுவதையும் பாழாக்குவான்; இதைச் சுற்றிக் கொண்டிருக்கிற ஸமுத்ரத்தையும் வற்றி வெறுந்தரையாகச் செய்வான்; மற்றும், அற்பனாகிய இந்த ராவணனுடைய பெயரையும் கீர்த்தியையும் பாழ்செய்து விடுவான். பிறகு, நான் இங்கு எப்படி புலம்புகின்றேனோ,

அப்படியே வீடுகள் தோறும் ராக்ஷஸ ஸ்த்ரீகள் அனை
வரும் ராமனால் தத்தம் கணவர்கள் மாண்டுபோகப்
பெற்று இதைக்காட்டிலும் மேலாகப் புலம்பப்
போகின்றனர்; இதற்கு ஸந்தேஹம் இல்லை ராமனும்
லக்ஷ்மணனும் ராக்ஷஸர்கள் இருக்கிற இந்த லங்கை
முழுவதுந் தேடி, சத்ருக்களெல்லோரையும் கொன்று
விடுவார்கள். பகைவனென்பவன் எவனாயினும் அந்த
ராமலக்ஷ்மணர்களின் கண்களில் படுவானாயின், சிறிது
நேரமும் பிழைத்திருக்கமாட்டான். இனிச் சீக்ரத்தி
லேயே இந்த லங்கையின் மார்க்கங்களெல்லாம் சிதை
யின் [1] தூமங்களால் சூழப்பட்டுக் கழுகுகள் கூட்டங்
கூட்டமாய் வட்டமிடப்பெற்று ஶ்மஶானத்தை
யொத்திருக்கப்போகின்றன. நான் சீக்ரத்திலேயே
என் மனோரதம் ஈடேறப்பெறுவேன். இதற்குச்
சந்தேஹமே இல்லை. இப்பொழுது நீங்கள் இப்படி
துர்மார்க்கத்தில் புகுந்திருக்கையே, உங்கள் அனை
வர்க்கும் கெடுதி தவறாமல் ஸம்பவிக்குமென்று தெரி
விக்கின்றது. லங்கை ஸ்வல்ப காலத்திலேயே அழகு
அழியப்பெற்று நாசம் அடையப்போகின்றதென்ப
தற்கு ஸூசகமான அபசகுனங்கள் எவ்வெவை
வேண்டுமோ, அவையெல்லாம் இதில் புலப்படுகின்றன.
எவர்க்கும் எதிரிடக்கூடாத லங்கையானது, பாபிஷ்ட
னும் ராக்ஷஸாதமனுமாகிய ராவணன் பாழான பின்பு
கணவனை யிழந்த காதலிபோல் அழகற்றிருக்கப்
போகின்றது; இது நிச்சயம். மற்றும், இந்த லங்காபுரி
தனக்கு நாதனாகிய ராவணனும் ராக்ஷஸவீரர்கள்
அனைவரும் பாழாகி ராக்ஷஸிகள் மாத்ரமே மிகுந்
திருக்கப்பெற்று, பர்த்தாவை யிழந்த ஸுந்தரிபோல்
மங்கள உத்ஸவங்களொன்றுமில்லாமல் காந்தியற்
றிருக்கப்போகின்றது. இன்னம், இந்த லங்கையில்
வீடுகள் தோறும் பர்த்தாக்கள் சாகையால் துக்கித்து
ரோதனஞ் செய்கின்ற ராக்ஷஸப்பெண்களின் கூக்குரல்
சீக்ரத்திலேயே என் செவியில் படப்போகின்றது.

1. தூமம்—புகை.

சிவந்த கடையுடைய கண்கள் அமையப்பெற்றவனும் மஹாசூரனுமாகிய அந்த ராமன், ராவணனது வீட்டில் நான் இருக்கிறேனென்று அறிவானாயின் அந்த க்ஷணமே இந்த லங்காபுரி அவனது பாணங்களால் கொளுத்தப்பட்டு இருள் மூடப்பெற்றுக் காந்தியற்று மேலான ராக்ஷஸர்கள் அனைவரும் முடியப்பெற்ற தாகுமே. (இந்த என் விருப்பம் ஈடேறுமன்றி இதற்கு முன்னமே என் கதை முடிகின்றதே!) க்ரூரனும் நீசனுமாகிய இந்த ராவணன் எனக்கு ஏற்படுத்தியிருக்கிற ஓராண்டென்னுங் கெடுவில் இரண்டு மாதங்களே மிகுந்திருக்கின்றன வாகையால் அதன் காலம் இதோ வந்துவிட்டதே. 'கொல்லுவதாக வெறுமனே விரட்டுவது மாத்ரமே யன்றி அப்படிப்பட்ட தப்புக்கார்யத்திற்கு முயலமாட்டார்கள்' என்னலாகுமோ! பாபத்தையே செய்யுந்தன்மையாராகிய ராக்ஷஸர்கள் அதர்மத்தையே கைப்பற்றியிருப்பவராகையால் இது செய்யத்தகாத கார்யம் என்பதையுங்கூட அறியார்கள். ஆதலால் என்னைக் கொல்லுவதற்கும் பின்வாங்கமாட்டார்கள். ஆனதுபற்றி அவர்களால் அப்படிப்பட்ட பெரிய அனர்த்தம் இப்பொழுது எனக்கு நேர்ந்தாலும் நேரக்கூடுமல்லவா! இந்த ராக்ஷஸர்கள் எப்பொழுதும் மாம்ஸத்தையே பக்ஷித்துக்கொண்டிருக்கும் கொடியர்களாகையால் இவர்களுக்கு தர்மமென்பது எள்ளளவும் தெரியாது. ஆகையால் ராக்ஷஸனாகிய இந்த ராவணன் என்னை விடியற் காலத்திலுண்ணும் உணவாகக் கொண்டு பக்ஷித்துவிடுவான். இது தவறாது. சிவந்த கடைக்கண்களையுடைய அந்த ராமனைக் காணநேராமல் மிகுதியும் வருந்துகின்றனன். நான் கண்களுக்கு இனிதாகப் புலப்படுகின்ற ராமனை யிழந்து என்ன செய்வேன்? இங்கு எவனேனும் எனக்கு விஷங் கொடுப்பானாயின், அதைப்பருகி ராமனைப் பிரிந்திருப்பதைக் காட்டிலும் சீக்ரமாக யமனைப் பார்ப்பேன். லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமனுக்கு நான் இங்கு ப்ராணன்களோடிருக்கிறேனென்பது இதுவரையிலும்

தெரியாதென்பதாகத் தோற்றுகின்றது. தெரிந்திருக்குமாயின் அவர்கள் வெறுமனே இருப்பார்களா? பூமி முழுவதும் என்னைத் தேடவே தேடுவார்கள். அங்ஙனம் தேடக்காணாமையால் அவர்க்கு என் ஸங்கதி தெரியாதென்றே தோற்றுகின்றது. அப்படியில்லையாயின், வீரனாகிய லக்ஷ்மணனுக்ரஜன் ராமன் என்னைப் பற்றின துக்கத்தினாலேயே பரிதபித்துப் பூமியில் தேஹத்தை விட்டு ஸ்வர்க்கலோகம் அடைந்திருப்பான். இது நிச்சயம். என் நாதனாகிய ராமன் அங்ஙனம் மரணம் அடைந்து ஸ்வர்க்கலோகத்திற்குப் போகையில், தாமரையிதழ்போன்ற கண்களையுடைய அம்மஹாநுபாவனைத் தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் அங்குப் பார்த்துக் கொண்டிருப்பார்களாகையால் அவர்கள் மிகுதியும் பாக்யசாலிகள். அப்படியில்லையாயின், ராமன் ராஜாவாயினும் ரிஷியைப் போன்றவன்; மிகுதியும் கம்பீர ஸ்வபாவமுடையவன்; ஆகையால் அவனுக்குத் தர்மத்தில் மாத்ரமே விருப்பம் இருக்குமன்றிக் காமத்தில் விருப்பம் இருக்காது; இங்ஙனம் மன்மத ஸங்கங்களில் மனப்பற்றில்லாத அவனுக்குப் பார்யையாகிய என்னால் ப்ரயோஜனம் நேராதல்லவா! ஒருவனிடத்தில் ப்ரீதி உண்டாகில் அவனைப் பார்த்துக்கொண்டேயிருந்தால்தான் அவனிடத்தில் அந்த ப்ரீதி என்றும் மாறாதிருக்கும்; அவனை வெகுநாள் பாராதிருப்பின் அவனிடத்தில் ப்ரீதி மாறிப்போய் விடும். ராமன் என்னைப் பாராதிருக்கின்றமையால் என்னிடத்தில் அவனுக்குள்ள ப்ரீதி மாறிப்போயிற்றோ, என்னவோ! பிறர்செய்த உபகாரத்தை மறக்குந் தன்மையுள்ள பாபாத்மாக்கள் மாத்ரமே அங்ஙனம் முதலில் நேரும் ப்ரீதியைப் பிரிவினை உண்டாகும்பொழுது பாழாக்குவார்களன்றி, ராமன் மாத்ரம் எவரிடத்திலாயினும் தனக்கு முதலில் உண்டான ப்ரீதியை என்றும் மறக்க மாட்டான. ஆகையால் அவனுக்கு என்றும் ப்ரீதி மாறாது. பெண்பிறப்பாகப் பிறந்து இங்ஙனம் கணவ

ளுகிய ராமனைப் பிரிந்து வருந்துகின்றேனே! நான் முன்னம் பாபங்களெவையேனுஞ் சிலவற்றைச் செய்தேனு! அல்லது இது என் தௌர்ப்பாக்யமோ! மஹானுபாவனும் அழியாத நன்னடத்தையுடையவனும் சூரனும் சத்ருக்களை யடக்குந் தன்மையனுமாகிய ராமனைப் பிரிந்து பிழைத்திருப்பதைக்காட்டிலும் ப்ராணன்களை விடுவதே எனக்கு மேலாயிருக்கின்றது. இல்லையாயின் காய் கிழங்குகளைத் தின்று அடவியில் உலாவிக்கொண்டிருக்கின்ற புருஷ திலர்களான அவ்வண்ணன் தம்பிகளிருவரும் துக்கத்தினுல் ஆயுத மெடுப்பதைத் துறந்துவிட்டார்களோ! இல்லையாயின், துஷ்டஸ்வபாவனுகிய இந்த ராக்ஷஸேஶ்வரன் ராவணன் சூரர்களும் அண்ணன் தம்பிகளுமாகிய ராம லக்ஷ்மணர்களிருவரையும் கபடஞ்செய்து கொன்றுவிட்டானே என்னவோ! காலம் இப்படி ஆய்விட்டதாகையால், முன்னம் அப்படியிருந்த நான் எல்லா விதத்திலும் ப்ராணன்களைவிட விரும்புகின்றேன். ஆனுல் இப்படிப்பட்ட மஹாதுக்கம் உண்டாயிருக்கும் பொழுதும் எனக்கு மரணம் ஏற்படாதிருக்கின்றதே. ப்ரியம் அப்ரியம் என்கிற இவ்விரண்டும் எவர்க்கு இல்லையோ, எவர் ப்ரியமென்று ஸந்தோஷிப்பதும் அப்ரியமென்று வருந்துவதும் செய்யார்களோ, அவர்கள் தன்யர்களல்லவா? மஹாதைர்யசாலிகளும் பாபத்தினின்று விடுபட்டவர்களும் அந்தக்கரணமென்னும் மனத்தை வென்றவர்களும் மஹாபாக்யமுடையவர்களுமாகிய முனிவர்களுக்குமாத்ரமே அந்நிலைமை உண்டாகுமன்றி மற்றவர்க்கு அது எப்படி உண்டாகும்? நம்மைப்போன்றவர்க்கு அத்தன்மை இல்லாமையால் அந்நிலைமை உண்டாகிறதில்லை; [1] அவ்விரண்டும் ஸம்பவிக்கின்றன. ப்ரியமாயிருக்கிற ஒன்றுல் துக்கம் உண்டாகாமல் ஸுகமே உண்டாகும்; அப்ரியமாயிருக்கிற ஒன்றுல் ஸுகம் உண்டாகாமல் துக்கமே உண்டாகும். அங்ஙனம் ஸுகதுக்கங்களை

1. ப்ரியம் அப்ரியம் என்கிற அவ்விரண்டும்.

விளைவிக்கிற ப்ரிய அப்ரியங்களிரண்டையும் துறந்திருக்கின்ற அம்மஹாநுபாவர்களை நமஸ்கரிக்கின்றேன். நானோ அப்படிப்பட்டவளல்லேன்; கேவலம் ப்ரியத்திலேயே மனம் வைத்தவள்; ஆகையால், ப்ரியத்திற்கே உரியவனும் எனக்கு அன்பனும் ஸ்வரூபந் தெரிந்தவனுமாகிய ராமனைப் பிரிந்து அப்ரியனும் பாபாத்மாவுமாகிய ராவணன்கையில் அகப்பட்டுப் பிழைத்திருக்கப்போகிறேன்; ப்ராணன்களை விடுகிறேன்' என்று ரோதனஞ் செய்தனள். இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

—: o :—

{ த்ரிஜடை தன் ஸ்வப்ன வ்ருத்தாந்தத்தை ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்குச் சொல்லுதல். }

பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸ ஸ்த்ரீகள், ஸீதை இங்ஙனம் சொல்லுகையில் மிகுதியுங் கோபத்தினால் மெய்ம்மறந்து அவர்களில் சிலர், அவள் ப்ராணன்களைவிட நிச்சயித்திருக்கும் விஷயத்தைப் பலிஷ்டனாகிய ராவணனுக்குச் சொல்லப் போயினர். அனந்தரம் பார்க்கப் பயங்கரமாயிருக்கின்ற அந்த ராக்ஷஸஸ்த்ரீகள் ஸீதையிடம் வந்து, மீளவும் பருஷமும் அனர்த்தமே பயனாகப்பெற்றதும் முன்பு கூறின பொருள்களே அடங்கினதுமான வார்த்தைகளைச் சொல்லினர்:—'ஸீதே! துஷ்ட ஸ்வபாவமுடையவளே! பாபநிச்சய முடையவளே! சாகிறேனென்று எவ்வளவு பாபத்திற்கு முயன்றனையோ? இதோ இன்றையத்தினமே இந்தக்ஷணமே ராக்ஷஸிகள் அனைவரும் இந்த உன் மாம்ஸத்தை ஸுகமாகப் பிடுங்கிச் சாப்பிடப் போகிறார்கள்' என்றனர். அதுவரையில் படுத்து நித்ரித்துக்கொண்டிருந்த கிழவியான ராக்ஷஸி

த்ரிஜடையென்பவள் அப்பொழுது துஷ்டர்களான அந்த ராக்ஷஸிகள் அங்ஙனம் ஸீதையை விரட்டிக் கொண்டிருக்கக்கண்டு அவர்களை நோக்கி இங்ஙனம் மொழிந்தனள்:— துஷ்ட ஸ்வபாவைகளே! ஜனகனுடைய அருமைக்குமாரத்தியும் தசரதனுடைய மருமகளுமாகிய ஸீதையைப் பக்ஷிக்கப்போகிறதில்லை; அதற்கு ப்ரதியாக உங்களையே நீங்கள் பக்ஷிப்பீர்களாக. ஏனென்கிறீர்களோ? நான் இப்பொழுது ராக்ஷஸர்களுக்கு நாசத்தையும் இப்பெண்மணியின் கணவனாகிய ராமனுக்கு க்ஷேமத்தையும் தெரிவிக்கும்படியான ஒரு ஸ்வப்னங் கண்டனன். அது பயங்கரமானது, அதை நினைத்துக்கொள்கையில். மயிர்க்கூச்சல் உண்டாகின்றது' என்றனள். த்ரிஜடை இங்ஙனஞ் சொல்லுகையில் இதுவரையில் கோபத்தினால் மெய்ம்மறந்திருந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளனைவரும் பயந்து அந்த த்ரிஜடையைப் பார்த்து 'நீ இன்றிரவு கண்ட கனவு எப்படிப்பட்டதோ, அதை எங்களுக்குச் சொல்வாய்' என்றனர். த்ரிஜடை அந்த ராக்ஷஸிகளின் முகத்தினின்று நழுவின வார்த்தையைக் கேட்டு, விடியற்காலத்தில் தான் கனவுகண்ட விஷயத்தை அவர்களுக்கு மொழிந்தனள். [1] 'ராமன் வெளுத்த பூமாலைகளையும் வெளுத்த வஸ்த்ரங்களையும் தரித்து யானையின் தந்தங்களால் செய்யப்பட்டதும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பதுமாகிய மேலான ஒரு பல்லக்கில் தான் ஏறிக்கொண்டு லக்ஷ்மணனோடு கூட இவ்விலங்கைக்கு வந்தனன். அந்தப் பல்லக்கில் ஆயிரம் ஹம்ஸங்கள்

---

1. ஆரோஹணங்கோவ்ருஷகுஞ்ஜராணாம் ப்ராஸாதசைலாக்ரவநஸ்பதீநாம்। விஷ்டாநுலேபோ ருதிதம் ம்ருதஞ்ச ஸ்வப்நேஷ்வகம்யாகமநஞ்ச தந்யம் (ஸ்வப்னங்களில் பசு, எருது யானை, உப்பரிகை, பர்வதத்தின் நுனி, வ்ருக்ஷம் இவற்றின்மேல் ஏறுதலும், அமேத்யத்தைப் பூசிக்கொள்ளுதலும், அழுதலும், மரணமும், புணரத்தகாத மடந்தையைப் புணர்தலும் சுபகரங்கள்') என்று ஸ்வப்ன சாஸ்த்ரம்.

பூட்டப்பட்டிருந்தன. அன்றியும், இந்த ஸீதை வெளுத்த வஸ்த்ரந்தரித்து ஸமுத்ரஞ் சூழ்ந்த ஒரு வெள்ளி மலையின்மேல் ஏறியிருப்பதாகவும், மற்றும் காந்தி ஸூர்யனைச் சேர்வதுபோல் ஸீதை ராமனுடன் சேர்ந்ததாகவும் இப்பொழுது நான் ஸ்வப்னத்தில் கண்டனன் ராமன் தானும் லக்ஷ்மணனுமாக நான்கு தந்தங்கள் அமைந்த மலைபோன்ற ஒரு பெரிய யானையின்மேல் ஏறிக்கொண்டு ஸீதைக்காக வந்து உலாவக் கண்டேன். அனந்தரம் வெளுத்த பூமாலைகளையும் வெளுத்த வஸ்த்ரங்களையும் தரித்திருக்கிற அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களிருவரும் தமது தேஜஸ்ஸினால் விளக்கமுற்று ஸீதையினருகே வந்தனர். அனந்தரம் [1] அந்த வெள்ளிமலையின்மேல், ஸீதை, ராமன் ஏறப்பெற்றதும் ஆகாயத்தில் விளங்குவதுமாகிய அந்த யானையின் கழுத்தில் ஏறிக்கொண்டனன் அப்பால் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஸீதை, பர்த்தாவின் மடியிலிருந்து கிளம்பிக் கையினால் சந்த்ர ஸூர்யர்களைப் பரிசிக்கக் கண்டனன். அதன் பிறகு அக்குமாரர்களிருவரும் அகன்ற கண்களையுடைய ஸீதையும் ஏறப்பெற்ற அந்தக் கஜராஜம் ஆகாயத்தில் இவ்விலங்கைக்குமேல் இருக்கக் கண்டனன். ராமன் தன் பார்யையாகிய ஸீதையுடன், வெளுத்த எட்டெருதுகள் கட்டப்பெற்று விளங்குகிற தேரின் மேல் ஏறி இவ்விடம் வந்தனன். வீரனும் புருஷோத்தமனுமாகிய ராமன் ப்ராதாவன லக்ஷ்மணனோடும் பார்யையாகிய ஸீதையோடும் கூடி ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்ற திவ்யமான புஷ்பகவிமானத்தின் மேலேறி வடதிசையை நோக்கிப் போயினன். நான் இங்ஙனம் ஸ்வபனத்தில் விஷ்ணுதேவனோடொத்த

---

1. 'ததஸ்தஸ்ய நகஸ்யாக்ரே ஹ்யாகாசஸ்யஸ்ய தந்தி:' என்று மூலம். இதில் நான்காவது அக்ஷரம் (ஸ்ய) என்பது காயத்ரியின் பதின்மூன்றாவதக்ஷரமாகையால் பதின்மூன்றாவதாயிரம் ஆரம்பித்ததென்று தெரிகிறது.

பராக்ரமமுடைய ராமனை அவன் ப்ராதாவாகிய லக்ஷ்மணனோடும் பார்யையாகிய ஸீதையோடும் கண்டனன். ஸ்வர்க்கத்தைப் பாபிஷ்ட ஜனங்கள் ஸாதிக்க முடியாதாப்போல், மஹா பராக்ரமசாலியாகிய ராமனைத் தேவதைகளாவது அஸுரர்களாவது ராக்ஷஸர்களாவது மற்ற இதரர்களாவது எள்ளளவும் வெல்ல வல்லரல்லர். ராவணன் [1] கரவீர புஷ்பங்களால் தொடுத்த பூமாலையைத் தரித்துச் சரீரம் முழுவதும் எண்ணெயில் நனையப்பெற்றுச் சிவந்த வஸ்த்ரந்தரித்து எண்ணெயைப் பருகிக்கொண்டு மதித்துத் தரையிலிருக்கக் கண்டனன். அன்றியும், ராவணன் இப்பொழுது புஷ்பகவிமானத்தினின்று பூமியில் விழுந்து மொட்டைத் தலையுடன் கறுப்பு வஸ்த்ரந் தரித்து ஒரு பெண்பிள்ளையால் இழுக்கப்பட்டிருக்கக் கண்டனன். மேலும் அவன் சிவந்த பூமாலைகளை அணிந்து செஞ்சந்தனமும் பூசி எண்ணெயைப் பருகுவதும் சிரிப்பதுமாகி நர்த்தனஞ் செய்துகொண்டு மனத்தடுமாற்றத்துடன் இந்த்ரியங்கள் கலங்கப்பெற்றுக் கழுதைகள் பூட்டின ரதத்தின்மேலேறிப் போய்க்கொண்டிருந்தனன். மீளவும் அவன் கழுதைமேல் ஏறிக்கொண்டு தென்றிசையைப்பற்றிச் சீக்ரமாகப் போயினன். மீளவும் ராக்ஷஸேஶ்வரனாகிய ராவணன் பயத்தினால் மோஹித்துக் கழுதையினின்று தலைகீழாகத் தரையில் விழவுங் கண்டனன். அனந்தரம் அந்த ராவணன் சீக்ரமாக எழுந்து தழதழப்புடன் பயத்தினால் வருந்தி மயக்கத்தினால் அவயவங்கள் விலவிலக்கப் பைத்யம் பிடித்தவன்போல் திகம்பரனாகிப் பல துர்வாக்யங்களைப் பிதற்றிக்கொண்டு துர்க்கந்தம் நிறைந்ததும் ஸஹிக்க முடியாததும் பயத்தை விளைவிப்பதும் இருள் மூடியதும் நரகத்தை நிகர்த்ததும் சேறுபோன்றதுமான மலக்குவியலில் சீக்ரமாகப் புகுந்து அதில் மூழ்கினன். அன்றியும் சிவந்த வஸ்த்ரந் தரித்துச் சரீரம்

---

1. அலரிப்பூ.

முழுவதும் சேற்றைப் பூசிக்கொண்டிருக்கிற ஒரு கறுத்த பெண்பிள்ளை, ராவணனைக் கழுத்தில் கட்டித் தென்திசைக்கு இழுத்துக்கொண்டு போயினள். அங்கு ராக்ஷஸர்தலைவனாகிய கும்பகர்ணனும் இவ்வண்ணமே இருக்கக் கண்டனன். ராவணன் புதல்வர்கள் அனைவரும் சரீரம் எண்ணெயில் நனைந்திருக்கக் கண்டனன். ராவணன் பன்றியின்மேலும் இந்த்ரஜித்து முதலியின் மேலும், கும்பகர்ணன் ஒட்டையின்மேலும் ஏறிக் கொண்டு தென்திசைக்குப் போயினர். அவர்களில் விபீஷணன் ஒருவன்மாத்ரம் வெண் குடையுடன்கூடி வெளுத்த பூமாலைகள் தரித்து வெளுப்பு வஸ்த்ரம் உடுத்து வெண்சந்தனம் பூசிச் சங்க துந்துபி வாத்ய கோஷங்கள் முழங்கக் கூத்தும் பாட்டும் நடக்க நன்கு அலங்கரித்துக்கொண்டு பர்வதம்போன்றதும் மேக கர்ஜனம்போன்ற கர்ஜனமுடையதுமாகிய திவ்யமான ஒரு யானையின்மேல் ஏறி அதன்மேல் உட்கார்ந்திருக்கக் கண்டனன். மற்றும், அவன் தன் மந்த்ரிகள் நால்வருடன் விமானத்தின்மேல் வீற்றிருக்கக் கண்டனன். அன்றியும் அரக்கர்கள் எண்ணெயைப் பானஞ்செய்து கொண்டு சிவந்த பூமாலைகள் சூடிச் சிவந்த ஆடைகள் உடுத்துக் கூட்டங்கூடிப் பாடுவதும் வாத்யம் வாசிப்பதுமா யிருக்கக் கண்டனன். ரமணீயமான இந்த லங்கா நகரம் கோபுரங்களும் வெளிவாசற்படிகளும் இடிந்து யானை குதிரை தேர்களுடன் ஸமுத்ரத்தில் விழக்கண்டனன். ராவணன் பாதுகாத்துவருகின்ற இவ்விலங்கைமாநகரம், ராமனுடைய தூதனும் மஹா பலிஷ்டனுமான ஒரு வானரனால் கொளுத்தப்பட்டது. ராக்ஷஸஸ்த்ரீகள் எண்ணெயைப் பருகி மிகுதியும் நர்த்தனஞ் செய்வதுஞ் சிரிப்பதுமாகிப் பெருங்கோஷத் துடன், எரிந்து நீறாயிருக்கின்றமையால் பயங்கரமா யிருக்கின்ற லங்கையில் புகுந்தனர். கும்பகர்ணன் முதலிய ராக்ஷஸ ப்ரேஷ்டர்கள் அனைவரும் சிவந்த வஸ்த்ரங்களை உடுத்து கோமயமடுவில் ப்ரவேசித்தனர். நீங்கள் அப்புறம் தொலைந்து போவீர்களாக;

போகாதிருப்பீர்களாயின், நாசம் அடைவீர்களாக. ராமன் ஸீதையை விரைவில் பெறப்போகின்றனன். அவன் மிகுந்த கோபாவேச முடையவனாகையால் ராக்ஷஸர்கள் அனைவரோடுங்கூட உங்களைக் கொல்வான் ராமன் தனக்கு ப்ரியமாயிருப்பவளும் தன்னால் வெகுமதிக்கப்படுபவளும் அரண்யத்திற்குத் தன்னைப் பின்றொடர்ந்து வந்தவளுமாகிய தன் பார்யையை நிந்திக்கிலும் விரட்டிலும் எள்ளளவும் பொறுக்கமாட்டான். ஆகையால் கொடிய வாக்யங்கள் கூறுவதை நிறுத்துவீர்களாக; மொழிந்தது போதும். இனி நல்ல வார்த்தைகளையே மொழிவீர்களாக. ஸீதையை நமக்கு அபயங்கொடுக்கும்படி வேண்டிக்கொள்வோம். இதுவே எனக்கு இஷ்டமாயிருக்கின்றது. எவள் துக்கித்திருக்கையில் இப்படிப்பட்ட ஸ்வப்னம் காண்கிறதோ, அப்படிப்பட்ட இப்பெண்மணி பலவிதத்திலும் துயரங்களை யெல்லாந் துறந்து நிகரில்லாத ஸந்தோஷத்தை அடையப்போகின்றனள். 'நாம் அப்படி நிந்தித்தோமே, நம்மிடத்தில் இவளுக்குத் தயை உண்டாகுமா' என்று வெறுமனே சிந்தித்துக் கொண்டிருப்பதால் பயனென்ன? சங்கை வேண்டாம். இவள் உங்களால் விரட்டப்பட்டிருப்பினும் நீங்கள் இவளை வேண்டிக்கொள்வீர்களாக. இனிச் சீக்ரத்திலேயே ராமனால் ராக்ஷஸர்கள் அனைவர்க்கும் கோரமான பயம் நேருமாகையால் இப்பொழுதே ஸீதையை ப்ரார்த்தித்துக்கொள்வீர்களாக. ராக்ஷஸ ஸ்த்ரீகளே! ஜனகராஜன் புதல்வியாகிய இந்த ஸீதை, வணங்கி வேண்டிக்கொள்ளில் அருள்புரியுந் தன்மையள். ஆகையால் ராமனால் உங்களுக்கு நேரப்போகிற மஹாபயத்தினின்று ரக்ஷிப்பதற்கு இவள் வல்லவள். இவ்வளவேயன்றி அகன்ற கண்களையுடைய இந்த ஸீதையின் அவயவங்களில் துக்கத்தை விளைவிக்கிற ரேகைகள் முதலிய லக்ஷணங்களாவது விரூபமாவது எதுவும் கொஞ்சமும் எனக்குப் புலப்படவில்லை. ஆகையால் துக்கங்களுக்கு எவ்வளவுந் தகாதவளாகி,

விமானங்களில் திரிகிற தேவர்களின் திவ்ய போகங்களுக்குரியவளும் இங்ஙனம் ஸமஸ்த லக்ஷணங்களும் அமையப்பெற்றவளுமாகிய இந்த ஸீதாதேவியுடைய மேனியின் ஒளி சிறிது குறைந்திருப்பதொன்று மாத்ரமே துக்ககாரணமாயிருக்கின்றதென்று சங்கிக்கிறேன். ராக்ஷஸேஶ்வரனாகிய ராவணன் நாசமடைதலும், ராமனுக்கு ஜயமுண்டாதலும் ஆகிய ஸீதையின் அபீஷ்டம் சீக்ரத்திலேயே ஸித்திக்குமென்று நினைக்கிறேன். இந்த ஸ்வப்னம், இவள் பெரிய நல்வார்த்தையைக் கேட்கப்போகிறாளென்பதற்குச் சுபநிமித்தமாயிருக்கின்றது. மேலும், தாமரையிதழ்போல் அகன்ற இப்பெண்மணியின் இடக்கண் துடிப்பதாகத் தெரிகின்றது. இனிய ஸ்வபாவமுடைய இந்த ஸீதையின் ஒன்றான இடக்கையும் கொஞ்சம் மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்றதுபோன்று காரணமில்லாமலே துடிக்கின்றது. பெண்யானையின் துதிக்கைபோல் அழகாயிருப்பதும் நிகரற்றதுமான இப்பெண்மணியின் இடத்துடையும் துடித்துக்கொண்டு, ராமன் எதிரே வந்திருப்பதாகத் தெரிவிக்கின்றது. [1] பிங்களிகையென்னும் பக்ஷியும் மரத்தின் கிளைமேல்

---

1. இங்கு 'பக்ஷீச ஶாகாநிலய: ப்ரஹ்ருஷ்ட: புந:புநஶ்சோத்தம ஸாந்த்வவாதீ। ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந: புந: புநஶ்சோதய தீவஹ்ருஷ்ட:' என்று மூலம். (பக்ஷீ) சிறந்த இறகுகளையுடையது. இதனால் இறகுகளை உதறிக்கொண்டு ப்ரதக்ஷிணமாகத் திரிகின்றதென்று கருத்து. (ஶாகாநிலய:) மரத்தில் மிகுதியும் பச்சென்றிருக்கும் பாகத்தையே சாகையென்பது. ஆகையால் புஷ்பித்துக் காய்த்திருக்கும் கிளையில் ஸ்திரமாக உட்கார்ந்ததென்று கருத்து. ப்ரதக்ஷிணமாகத் திரிதல் பச்சென்ற கிளையின் மேல் உட்காருதல் ஆகிய இவை சுபஸூசகங்களென்று கருத்து. (ப்ரஹ்ருஷ்ட:) அதிலுள்ள பழங்களைத் தின்று ஸந்தோஷமுற்றிருப்பது. (புந:புநஶ்சோத்தமஸாந்த்வவாதீ) மேன்மேலும் நல்வார்த்தைகளைச் சொல்வதுபோன்றிராநின்றது. 'சோகிக்கவேண்டாம், இப்பொழுதே உன் பர்த்தா வருவான். இது சோகத்திற்கு

ஸமயமன்று' என்று சில நல்வார்த்தைகளைச் சொல்வதுபோல் புலப்படா நின்றது. (ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந:) நல்ல ஸ்வாகத வசனத்தை மொழிந்துகொண்டு. விரஹத்தினால் வருந்தினவளுக்கு ஸ்வாகதவசன முரைப்பது அவளது கணவனுக்கு அவ்விரஹத்தினால் உண்டான ஸந்தாபத்தின் மிகுதியைக் கூறுகையே யாகும். ஆகையால் உன் கணவனுக்கு ஸந்தாபம் உனக்குள்ளவளவு மாத்ரமேயன்று, மேலும் மிகுந்ததென்று சொல்வதுபோலிரா நின்றது. ஸ்வாகத வசனமாவது - நல்வர வென்னும் வார்த்தை. (புந:புநஸ்சோதயதீவ) ப்ரியன் வருவது நிச்சயமாயிருக்க மஞ்சனஞ்செய்து ஆபரணாதிகளை ஏன் அணியா திருக்கின்றாயென்று ஸீதையைத் தூண்டுவதுபோலிருக்கின்றது. (ஹ்ருஷ்ட:) மயிர்க்கூச்சலுடையதென்றபடி.

இதற்கு மற்றொரு பொருள்—இவ்விராமாயணம் உத்தம காவ்ய மல்லவா. வ்யங்க்யத்தை முக்கியமாக உடையதல்லவோ உத்தம காவ்யம். வ்யங்க்யமாவது மறைத்துச்சொல்லுங் கருத்து. இதையே உட்கருத்தென்றும் தாத்பர்யமென்றும் கூடார்த்த மென்றும் கூறுவர். அந்த வ்யங்க்யம் பதத்திலும் வாக்யத்திலும் ப்ரபந்தத்திலும் தோற்றுமாகையால் பதகதமென்றும் வாக்ய கதமென்றும் ப்ரபந்தகதமென்றும் மூன்றுவகைப்பட்டிருக்கும். இந்த ஸுந்தரகாண்டமென்னும் ப்ரபந்தத்தில்—அனுதிபகவத் ஸம்பந்தமுடைய சேதனனை உஜ்ஜீவிக்கச்செய்யும்பொருட்டு ஆசார்யன் செய்யும் முயற்சி வ்யங்க்யமாக ஏற்படுகின்றது. இவ்வர்த்தம் 'ததோ ராவண நீதாயா:' என்கிற இக்காண்டத்தின் முதல் ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அதெப்படி யெனில் :—

'ததோ ராவணநீதாயா: ஸீதாயா: ஸத்ருகர்ஸந:।
இயேஷ பதமந்வேஷ்டும் சாரணாசரிதே பதி'

இதனால் சிஷ்யனிருக்குமிடத்தைத் தேட விரும்புகிற குருவின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறது. (தத:) முத்ரைகொடுத்துப் பகவான் அனுமதி செய்தபின்பு, (முத்ரையாவது மோதிரமும்-

மேன்மேலும் மதுரமான மிருதியுஞ் சிறந்த நல்

சங்கு சக்ரம் முதலிய சிஹ்னமும்) (ஶத்ருகர்ஶநஃ) 'ஶ்ரீவத்ஸ்வங்யகாரஸ் ஸ்யாத் ருஶஸ்ஸ்தநத்ரோயகஃ। அங்யகார நிரோயித்வாத் மாருரித்யபியீயதே' என்று சொல்லுகிறபடியே அஜ்ஞானத்தைப் போக்குந் தன்மையனை குரு (சாரணாசரிதே பயி) சாரயந்தி ஆசாரயந்தி யர்மாநிதி சாரணாஃ பூர்வாசார்யாஃ) தர்மத்தை அனுஷ்டிக்கச் செய்யும் பூர்வாசார்யர்களைச் சாரணர்க ளென்கிறது. (தைஃ ஆசரிதேபயி) 'மஹாஜநோயேந மதஸ்ஸ பந்யாஃ' என்று சொல்லப்பட்ட ஸதாசாரமார்க்கத்தில், (ஸ்யிதஃ) என்று கூட்டிக்கொள்வது. இருப்பவனாகி, (ராவண நீதாயாஃ) (ராவயதி அஸத் ப்ரலாபாந் காரயதீதி ராவணஃ-அவிவேகஃ) அஸத்தான பிதற்றல்களை விளைவிக்கிற அவிவேகத்தை ராவண சப்தத்தினுல் சொல்லுகிறது. அவிவேகத்தினுல் தன் வழிவரும் படி செய்யப்பட்ட, (ஸீதாயாஃ) அனுதி பகவத் பாதந்த்ரனை சேதனனுடைய. ஸீதா சப்தத்தினுல் அயோனிஜத்வஞ் சொல்லு கையாலும் பாரதந்த்ர்யந் தோற்றுகையாலும் 'ஸ்த்ரீ ப்ராயமிதரத் ஸர்வம்' என்று சேதன வர்க்கத்திற்கு பகவதபேக்ஷயா ஸ்த்ரீத்வ முண்டாகையாலும் சேதனனைச் சொல்லுகிறது. (பதம்) ஸ்தானமாகிய ஸம்ஸார மண்டலத்தை, அல்லது — ஸாத்த்விக ஸம்பாஷணம் முதலிய சிஹ்னத்தை. 'விஷ்ணோஃ கடாக்ஷஞ் சா த்வேஷ ஆபிமுக்யஞ் ச ஸாத்த்விகைஃ। ஸம்பாஷணம் ஷடேதா நித்வாசார்ய ப்ராப்திஹேதவஃ' என்று ஸாத்த்விக ஸம்பாஷ ணத்தை ஆசார்யப்ராப்திக்கு ஹேதுவாகச் சொல்லிற்று. அல்லது —(பதம்) வ்யவஸாயத்தை. எந்தச் சேதனனுக்கு பகவத் ப்ராப்தி யில் அத்யவஸாயம் உளதென்று, (அந்வேஷ்டும்) தேடும்பொருட்டு. (இயேஷ) இச்சித்தனன். இதுவரையில் பதினோராயிரம் க்ரந்தங்கள் கடந்தன. இனிமேல் பன்னிரண்டாவதாயிரம் தொடங்குகிறது. இந்த ஶ்லோகத்தில் (வ) என்பது காயத்ரி யின் பன்னிரண்டாவதக்ஷரம்.

இக்காண்டத்தில் இலங்கையால் தேஹத்தை ஸூசிப்பிக் கிறது. இங்ஙனமே ஏகாக்ஷி முதலியவர்களால் இந்த்ரியங்களும், ராவண கும்பகர்ணர்களால் அஹங்கார மமகாரங்களும், இந்த்ர

வார்த்தையை மொழிந்துகொண்டு நல்ல பந்துவின்

---

ஜித்து முதலியவர்களால் காமக்ரோதாதிகளும் ஸூசிப்பிக்கப் படுகின்றன. தேஹத்தில் தகையப்பட்ட சேதனன் இலங்கையில் சிறையுண்ட ஸீதையைப்போன்றவன். அவனுக்கு பகவத் விஷய மான ஜ்ஞானத்தை உபதேசிக்கும் ஆசார்யன் ஹனுமானைப்போன் றவன். அப்படிப்பட்ட ஆசார்யலக்ஷணம் இந்த ஶ்லோகத்தால் அறிவிக்கப்படுகிறது. (பக்ஷீ) சிறைகளையுடையவன், சிறைகள் கமனத்திற்கு ஸாதனங்களாகையால் பக்ஷி ஶப்தம் இங்கு ஜ்ஞான கர்மங்களைச் சொல்லுகிறது. இது 'உபாப்யாமேவ பக்ஷாப்யாம் யதாவே பக்ஷிணாங் கதி:। ததைவ ஜ்ஞாநகர்மப்யாம் நியதா பரமா கதி:'(பக்ஷிகளுக்கு எப்படி இரண்டு இறகுகளாலேயே கமன சக்தி உண்டாகின்றதோ, அப்படியே புருஷனுக்கு ஜ்ஞானகர்மங்க ளிரண்டினாலேயே பரமகதி உண்டாகும்) என்று சொல்லப்பட் டிருக்கின்றது. ஆகையால்(பக்ஷீ) என்று ஜ்ஞானகர்மங்களுடையவ னென்கிறது. இங்கு ஜ்ஞானகர்மங்களை 'ஸ்ராஹ்மணா விவிதி ஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந' என்னும் ஶ்ருதியின் படி ஒன்றுக்கொன்று அங்காங்கிபாவம் உண்டாயிருக்கையால் இங்குச் சேர்த்துச் சொல்லப்பட்டன. ஆனால் 'ஆசிநோதிஹி ஶாஸ்த்ரார்த்தாநாசாரே ஸ்தாபயத்யபி। ஸ்வயமாசரதே யஸ்மாத் தஸ்மாதாசார்ய உச்யதே' (சாஸ்த்ரார்த்தங்களை ஆராய்ந்தறிதல் ஆசாரத்தில் பிறரை நிலைநிறுத்தல், தான் அனுஷ்டித்தல் ஆகிய இவைகளால் ஆசார்ய னெனப்படுகின்றான்) என்று ஆசார்ய ஶப்தார்த்தம் சொல்லப்பட்டது. (ஶாகாநிலய:) ஶாகா-வேத சாகைகளை, நிலய:-இருப்பிடமாகவுடையவன். வேதத்தில் மிகுந்த ஊக்கமுடையவன். வேதங்களை ஒதிவிடுதல் தோஷத்தை விளைக்குமென்று ஶ்ருதி 'அதீதமபியோ வேதம் விமுஞ்சதி நராதம:। ஸ்ரூணஹா ஸது விஜ்ஞேயோ வியோநிமபி கச்சதி' 'எவன் அத்யயனஞ்செய்த வேதத்தையுங்கூட விடுவானோ, அவன் மனிதர்களில் அதமனாகி ப்ரூணஹத்யாதோஷத்தை யுடையவனாவானென்று அறியத்தக்கவன். (மறு ஜன்மத்தில் பக்ஷி யோனியில் பிறப்பான்) என்று சிக்ஷையென்னும் வேதாங்கத்தில் சொல்லப்பட்டிருக்கையால் வேதங்களை விடாதவனென்றபடி.

வரவை எடுத்துரைப்பதுபோன்ற அழகிய கலகல

---

மற்றும் (நிஷ்ட:) என்கையால் வேதார்த்தங்களை ஸ்ரவண மநந நிதித்யாஸனங்களால் அனுஷ்டிப்பவனென்று பொருள். இதனுல் 'ஆசார்யோ வேதஸம்பந்நோ விஷ்ணு பக்தோ விமத்ஸர:| மந்த்ரஜ்ஞோ மந்த்ரபக்தச்ச ஸதா மந்த்ராஸ்ரயஸ் ஸுசி:| குருபக்தி ஸமாயுக்த: புராணஜ்ஞோ விசேஷத:| ஏவம்லக்ஷண ஸம்பந்நோ குருரித்யபிதீயதே' (வேதங்களை அறிந்தவனும், விஷ்ணுபக்தியுடையவனும், பிறர்நன்மையில் பொருமை யற்றவனும் மந்த்ரங்களை உணர்ந்தவனும், மந்த்ரங்களில் பக்தியுடையவனும், எப்பொழுதும் மந்த்ரமே கதியாயிருப்பவனும், தூய்மையுடையவனும், குருவினிடத்தில் மிகுந்த பக்தியுடையவனும், புராணங்களை ஆராய்ந்தறிந்தவனுமாகி இப்படிப்பட்ட லக்ஷணங்களுடையவன் ஆசார்யனென்று சொல்லப்படுவான்) என்று ஆசார்ய லக்ஷணஞ் சொல்லப்பட்டது. (ப்ரஹ்ருஷ்ட:) எப்பொழுதும் ஸந்தோஷமுற்ற மனமுடையவன். இதனுல் எப்பொழுதும் அனுகூலத் தருந்தவனென்று சொல்லப்பட்டது. அங்ஙனம் 'ஆஹ்லாதஸீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந்| ஸதாபர குணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபி:'(ஸந்தோஷத்தினுலுண்டான குளிர்ந்த கண்ணீருடையவனுகி மேனி முழுவதும் மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்று எப்பொழுதும் உத்தம குணங்களுடையவனுமாகிய மஹானுபாவன் ஸமஸ்த ப்ராணிகளாலும் கண்குளிரக் காணத்தகுந்தவன்) என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (புந:புநஸ் சோத்தமஸாந்த்வவாதீ) உத்தமனென்கிறது 'உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:' என்று சொல்லப்பட்ட பரமாத்மாவை. பரமாத்மாவைக் குறித்த நல்வார்த்தையைச் சிஷ்யனுக்குச் சொல்வான் உத்தமஸாந்த்வவாதி. 'த்வம்மேஹம் மே குதஸ்தத் ததபி குத இதம்வேதமூல ப்ராமாணுத்தச்சாநாதிஸித்தாதநுபவவிபவாத்தர்ஹி ஸாக்ரோச ஏவ| க்வாக்ரோச: கஸ்ய கீதாதிஷுமமவிதித: கோத்ர ஸாக்ஷீஸுதீஸ் ஸ்யாத் ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸஇதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத்த்வம்' என்ற பராசரபட்டோக்தியின்படி பகவத் விஷயமாகச் சேதனர் செய்யுங் கலஹத்தில் 'யமோ

சப்தஞ் செய்வதாகி அடிக்கடி ராமன் வருவானென்று ஸந்தோஷத்துடன் சொல்லுவது போலிருக்கின்றது' என்றனள். இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

வைவஸ்வதோராஜாயஸ்தவைஷ ஹ்ருதிஸ்தித:। தேந சேத்விவா தஸ்தே மாகங்காம் மாகுரூந்கம:' என்று நல்வார்த்தை சொல்லுந் தன்மையனென்றபடி (புந: புந:) பயிர்செய்பவன் ஒருகால் பலியாது போனமாத்ரத்தில் க்ருஷியை விடாமல் மேன்மேலும் அதைச் செய்துகொண்டு வருமாபோலே ஆசார்யன் தான் சொன்னதைச் சிஷ்யன் ஒருகால் கேளாமற்போயினும் உபதேசிப்பதைத் தவறாமல் அடிக்கடி உபதேசித்துக்கொண்டேயிருப்பானென்றபடி. இதனால் பகவானைக்காட்டிலும் ஆசார்யனுக்கு மேன்மை சொல்லப்பட்டது. பகவான் அர்ஜுனனுக்குக்கீதையை உபதேசித்து மீளவும் ஆஸ்வமேதிகபர்வத்தில் முன்பு உபதேசித்த அர்த்தத்தை மறந்து தன்னை வினவுகையில், 'நநமஸ்ரத்தயா நோஉவித்னர்மேயாஸ்சாவி பாண்டவ' (உனக்கு வாஸ்தவமாக ஸ்ரத்தை இல்லை. துர்புத்தியும் உண்டாயிருக்கிறது) என்று இத்யாதிகளால் சொல்லமாட்டேனென்றானல்லவா, (ஸனஸ்வாமதாம்) ஸன-நன்றாக. ஸம்ப்ரதாய விச்சேதமில்லாதபடி, (ஸ்வ—ஆமதாம்) ஆசார்ய பரம்பரையில் தனக்கு வந்த, (வாசம்) அஷ்டாக்ஷரம் முதலிய மந்த்ரராஜ ரூபமான வாக்யத்தை. (உதீரயாந:) நிர்ஹேதுக தயையால் சொல்லிக்கொண்டு. இதனால் 'ஆசார்யாணாம ஸாவஸாவித்யாஹமவத்த: என்கிறபடி குருபரம்பரை அனுஸந்திக்கத்தக்கதென்று தெரிவிக்கப்பட்டது. (புந:புநஸ்சோதய தீவ ஹ்ருஷ்ட:) உபதேசித்த அர்த்தத்தை அனுஷ்டிக்கும் பொருட்டுச் சோதனையை அறிவிக்கின்றனன். (சோதனை-விதிவாக்யம்) இல்லையாயின் உபதேசம் வீணாய்விடும். ஆனதுபற்றியே 'ஸ்வாலித்யே ஸாஸிதாரம்' (சிஷ்யன் தவறுவானாயின் சிக்ஷிக்குந் தன்மையனாயிருக்கவேண்டும்) என்றார்கள். (ஹ்ருஷ்ட:) ஸந்தோஷமுற்றவன். இதனால் சிஷ்யனைச் சிக்ஷித்தல் ஆசார்யனுக்கு ஸ்வப்ரயோஜனமென்று சொல்லப்பட்டது. தனிஸ்லோகி.

ராக்ஷஸிகளின் உபத்ரவத்தைப் பொறுக்க முடியாமல் ஸீதை சிம்சுபாவ்ருக்ஷத்தி னருகே சென்று ஜடையைக் கழுத்தில் உரியாகப் போகட்டுக்கொள்ளுதலும், சுபசகுனங்கள் தோன்றுதலும்.

மனத்திற்கினியனான ராமனுடைய விரஹத்தினா லும் அப்ரியமான பல விஷயங்களைக் காண்கையாலும் மனவருத்தமுற்றிருக்கின்ற அந்த ஸீதை, ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் மொழிந்த அநிஷ்டவார்த்தை யைக் கேட்டு வருந்தி, அரண்யத்தினிடையில் ஸிம்ஹத் தின்கையில் அகப்பட்ட பெண்யானைபோல் மிகுதியும் பயமுற்றனள்; இயற்கையாகவே பயப்படுந் தன்மை யுடையவள்; அதனுடன்கூட ராக்ஷஸ ஸ்த்ரீகளினிடை யில் அகப்பட்டுப் பருஷவசனங்களைச் சொல்லி ராவண னால் மிகுதியும் விரட்டப்பட்டு, நிர்மானுஷ்யமான அரண்யத்தின் நடுவில் விடப்பட்ட இளங்கன்னிகை போல் புலம்பத் தொடங்கினள். 'நான் இப்படி நாற் புறத்திலும் ராக்ஷஸிகளால் விரட்டப்பட்டவளாயிருந் தும் ப்ராணன்களை விடமுடியாமல் புண்யமற்றவளாகி நொடிப்பொழுதாயினும் நிந்தைக்கிடமாகப் பிழைத் திருக்கின்றேனே! ஆகையால், அகாலத்தில் மரணம் நேராதென்று உலகத்தார் சொல்லும் பழமொழி, அப்பா! ஸத்யமாயிருக்கின்றதே! என் ஹ்ருதயம் ஸுகம் சிறிதுமின்றி மிகுதியும் துக்கங்களால் நிறைந் திருக்கின்றதே. இப்படிப்பட்ட அவஸ்தை அடைந்தும் இது வஜ்ரத்தினால் அடிக்கப்பட்ட பர்வதசிகரம்போல் ஆயிரஞ் சுக்கலாய்ப் பிளவாதிருக்கின்றதே! ஆகையால் இது மிகுதியும் உரப்பானது. இது ஸத்யமே. மனத் திற்கு இனிதாகாத காட்சியுடைய இந்த ராவணன் என்னை எவ்விதத்திலும் கொல்ல ஸித்தமாயிருக்கின்ற னன். அதுவும் துர்மரணமே ஆகின்றது. நானாகவே ப்ராணன்களை விடுவது துர்மரணமாயினும் துஷ்ட ராக்ஷஸனால் மரணமடைதலைக்காட்டிலும் இது மேலாகையால் நானாகவே ப்ராணன்களை விடுவதில்

வாஸ்தவமாகப் பிசகொன்றும் புலப்படு 'ப்ராணன்களை எப்படியாயினும் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமாகையால் ராவணனை அனுஸரித்தாயினும் அதை நிறுத்திக்கொண்டு தோஷமில்லாதிருக்க லாகாதா?' என்றால் ப்ராஹ்மணன் வேதமந்த்ரத்தைச் சூத்ரனுக்குச் சொல்லக்கூடாதாப்போல், ராமனது ஸொத்தான இந்த என்மனத்தை நான் ராவணனுக்கு எவ்விதத்திலும் கொடுக்கமாட்டேன். விரைவில் இரண்டு மாதங்களுக்குள் லோகநாதனாகிய ராமன் இவ்விடம் வாராதிருப்பானாயின், கர்ப்பத்தினின்று வெளியில் வராத சிசுவை அம்பட்டன் வெளிப்படுத்து வதற்குத் துண்டந் துண்டமாகத் துண்டிப்பதுபோல், பூஜைக்கிடமாகாத ராவணன், என்னைக் கூரான ஆயுதங்களால் துண்டந் துண்டமாகத் துண்டிப்பான். இது நிஜம். வெகுகாலமாக வருந்துகின்ற எனக்கு இனி என் வதத்திற்குக் கெடுவாயிருக்கிற இவ்விரண்டு மாதங்களும் முடியப்போகின்றன; இது என்ன துக்கம்? இந்த துக்கம், ராஜ விஷயத்தில் அபராதஞ் செய்ததற்காகக் கட்டுண்டு விடிந்தவுடனே கொலைக்கு ஸித்தமாயிருக்கின்ற திருடனுக்குண்டாகும் துக்கம் போலவே, ஐயோ! எனக்கு ஸமீபித்து வருமல்லவா! ஐயோ! ராமா! ஆ லக்ஷ்மணா! ஆ ஸுமித்ரே! ஐயோ! அன்னையே! ராமனைப் பெற்றதாயே! கௌஸல்யே! அற்பபாக்யமுடைய நான், மஹா ஸமுத்ரத்தில் சுழல் காற்றில் அகப்பட்டு வருந்துகிற ஓடம்போல், இதோ ஆபத்தில் மூழ்குகின்றேனே! இரண்டு ஸிம்ஹங்க ளாவது இரண்டு எருதுகளாவது இடி விழுந்து சாவதுபோல், பலிஷ்டர்களும் ராஜகுமாரர்களுமான அந்த ராமலக்ஷ்மணர்கள், ம்ருக ரூபந்தரித்த அந்த ராக்ஷஸ ஜந்துவால், என்னைப்பற்றி ஹிம்ஸிக்கப் பட்டிருப்பார்கள்; இது வாஸ்தவம். அப்பொழுது அந்த யமனே மானுருவந்தரிந்து அற்பபாக்யமுடைய எனக்கு ஆசையை விளைத்திருப்பான்; இது நிச்சயம். ஆகையால் விவேகமின்றி என் கணவனை ராமரை

அவன் தம்பி லக்ஷ்மணனையும் போவீர்களென்றனன். ஐயோ! ராமா! ஸத்யவ்ரதா! முழந்தாள் வரையிலும் நீண்ட பாஹு தண்டங்களுடையவனே! பூர்ணசந்த்ரன் போன்ற முகம் உடையவனே! ஆ! ப்ராணி ஸமூஹங்களுக்கெல்லாம் ஹிதனும் ப்ரியனுமாயிருப்பவனே! இப்பொழுது நான் ராக்ஷஸர் கையில் அகப்பட்டுச் சாவதை அறியாயல்லவா! கணவனைக் காட்டிலும் மற்றொரு தெய்வம் உளதென்றறியேன்; ராவணன் சொன்ன பருஷவசனங்களையும் ராக்ஷஸ ஸ்த்ரீகள் மொழிந்த வசவுகளையும் விரட்டல்களையும், ராமனது மதுர வசனங்களைக் கேட்கலாமென்னும் குதூஹலத்தினால் இவ்வளவு நாளாய்ப் பொறுத்திருந்தனன்! உன் மடியில் உட்காரும் போகம் ஒரு காலத்திலாயினும் நிறைவேறுமற் போகுமா என்னும் ஆசையால் தரையே படுக்கையாகப் பெற்று ராவணனை நீறுசெய்ய வல்லவளாயினும் என்னை ரக்ஷிக்கவேண்டுவது உன் தர்மமேயாயிருக்க எனக்கு என்ன? என்று இந்தத் தர்மத்திலேயே நியமந் தவறுதிருக்கின்றவள்; பதிவ்ரதையாயிருப்பவள்; இப்படி வேறொரு தெய்வமறியாதிருக்கை பொறுமை தரையில் படுக்கை தர்மத்தில் நியதி பாதிவ்ரத்யம் ஆகிய இவையெல்லாம் எனக்கு ராமஸமாகமத்தை நிறைவேற்றிக்கொடாமையால், மனுஷ்யர்களில் க்ருதக்னர்க்குச் செய்த உபகாரம்போல் வீணாய் விட்டனவே! இது வீணாகாததாயினும் இங்ஙனம் பயன்படாது போனமை என் தௌர்ப்பாக்யமே. நான் இவ்வளவு காலமாக உன்னைப் பிரிந்து உன்னைக் காணவும் நேராமல் வருந்தி இளைத்து நிறம் மாறி மீளவும் உன்னுடன் கூடுவோமென்னும் ஆசைக்கு எள்ளளவும் அவகாசமின்றி யிருக்கிறேனாகையால், நான் இதுவரையில் ஆசரித்த தர்மமும் வீணாயிற்று; என் பாதிவ்ரத்யமும் பயன்படாமற்போயிற்று; இவ்வளவு காலம் இங்ஙனம் ஶ்ரமப்படாமல் ராவணன் அபஹரித்தபொழுதே ப்ராணன்களை விட்டிருப்பேனாயின், இவ்வளவு கஷ்டம் நேராதிருக்கும். நீ உன் தந்தையின் ஆஜ்ஞையை

நியமத்துடன் நிறைவேற்றி வ்ரதம் முடிந்தபின்பு வனத்தினின்று மீண்டு அயோத்யைக்குச் சென்று கருத்திட்டேறப்பெற்று எள்ளளவும் வனவாஸ பயமின்றி அகன்ற கண்களையுடைய மடந்தையர் மணிகளுடன் க்ரீடித்துக்கொண்டிருப்பாயென்று நினைக்கிறேன். ராமா! நான்மாத்ரம் உன்னிடத்தில் அனுராகமுடையவளாகிக் கடைசியில் நாசமடைவதற்கே உன்னிடத்தில் என் மனத்தை நிலைநிறுத்தி வீணாக உபவாஸமிருந்து நியமத்தை அவலம்பித்துக் கடைசியில் சீ! நிந்தைக்கிடமான இந்தப் பாழும் ப்ராணன்களை விடுகின்றேனே! ஆகையால் நான் அற்பபாக்யமுடையவள். அங்ஙனம் துக்கங்களால் மனக்களிப்பற்றிருக்கிற நான் இப்பொழுது விஷத்தின்றுவது கூரான ஆயுதத்தினால் அறுத்துக்கொண்டாவது சீக்ரம் ப்ராணன்களை விடலாமேன்றால், இந்த ராக்ஷஸன் வீட்டில் எனக்கு விஷத்தையாவது ஆயுதத்தையாவது கொடுப்பவன் எவனும் இல்லையே!' என்று புலம்பினள். இங்ஙனம் அந்த ஸீதாதேவி பலவாறு புலம்பி ஸர்வ ப்ரகாரத்தாலும் ராமனையே மனத்தில் த்யானித்துக்கொண்டு கிடுகிடுவென்று நடுக்கமுற்று வாய் உலரப்பெற்றுப் புஷ்பித்திருக்கின்ற [1] அம்மேலான சிம்சுபாவ்ருக்ஷத்தின்கீழ் வந்தனள். அனந்தரம் அந்த ஸீதை சோகத்தினால் பரிதபித்துப் பலவாறு சிந்தித்துத் தலைப்பின்னலைக் கையில் பிடித்துக்கொண்டு 'இதனால் உரிபோகட்டுக்கொண்டு ப்ராணன்களைத் துறந்து விரைவில் யமலோகம் போகிறேன்' என்று நினைத்தனள். ஸமஸ்த அவயவங்களும் ம்ருதுவாயிருக்கப்பெற்ற அப்பெண்மணி, இங்ஙனம் மரணம் அடைவதாக நிச்சயித்து அம்மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு நின்றிருந்தனள். அப்பொழுது ராமனையும் லக்ஷ்மணனையும் நினைத்துக் கொண்டே, 'அப்படிப்பட்ட பராக்ரமசாலிகள்

---

1. முன்பு இருபத்து நான்காவது ஸர்க்கத்தில் 'அந்தச் சிம்சுபா வ்ருக்ஷத்தினருகே சென்றனள்' என்று அந்த வ்ருக்ஷத்தினருகே

இருந்தும் எனக்கு இப்படிப்பட்ட துர்த்தசை ஆயிற்று' என்று வருந்தித் தன் புண்யமான குலத்தை நினைத்து 'இப்படிப்பட்ட புண்யவான்களின் வம்சத்தில் பிறந்தும் எனக்குப் பாபிஷ்டமாகிய இந்தத் துர்மரணம் நேர்ந்ததே' யென்று பரிதபிக்கின்ற அந்தச் சுபாங்கியாகிய ஸீதைக்குச் சுபஸூசகங்களும் தைர்யங்கொடுப்பவைகளும் லோகப்ரஸித்தங்களும் இதுவரையில் பலவாறு பரீக்ஷித்துப் பார்க்கையில் பயன்படைப்பவைகளாக அனுபவ ஸித்தங்களுமான சகுனங்கள் பலவும் அப்பொழுது புலப்பட்டன. இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஸீதைக்குச் சுபசகுனங்கள் புலப்படுதல்.

• 1 அங்ஙனம் இவ்வளவு அவ்வளவென்னமுடியாத மனவருத்தத்துடன்கூடி மனக்களிப்பற்று ராமனைப்

---

வந்ததாகச் சொல்லப்பட்டது. இங்கு அம்மரத்தினடியில் வந்ததாகச் சொல்லப்படுகிறது. இருபத்தைந்தாம் ஸர்க்கத்தில் 'அச்சிம்சுபா வ்ருக்ஷத்தினருகில் புஷ்பித்துப் படர்ந்திருக்கிற அசோகமரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு' என்கிற இடத்திலும் அடிக் குறிப்பில் இதைப்பற்றி விசாரித்தெழுதியிருக்கிறோம். ஸீதை இருந்த இடம் அசோகமரத்தடி. அது ஹனுமானிருந்த சிம்சுபா வ்ருக்ஷத்திற்கருகில் இருப்பதாகத் தெரிகிறது.

1 இங்கு 'தயாகதாந் தாஂ வ்யயிதாமநிந்திதாஂவ்யபேதஹர்ஷாம் பரிதீநமாநஸாம் | ஶுபாம் நிமித்தாநி ஶுபாநி பேஜிரே நரம்ஶ்ரியா ஜுஷ்டமிவோபஜீவிந:' என்பது மூலம் (தயாகதாம்) 'ரஹஸ்யஞ்ச ப்ரகாஶஞ்ச' என்கிறபடியே ஸீதாராமவ்ருத்தாந்தமெல்லாம் உள்ளதை உள்ளபடி ஸாக்ஷாத்கரித்த வால்மீகி பகவானுக்கும் இப்படிப்பட்டதென்று அளவிடமுடியாத வருத்த

பிரிந்திருக்குந் தசையில் இருக்கவேண்டிய நியமத்தின் படி நடக்கின்றமையால் ஒரு தோஷமுமின்றி இதற்கு

முடையவள். (தாம்) தர்மிஸ்வரூபத்தைக்காட்டிலும் மிகுந்த அதிசயமேது மில்லாதவள். கேவல தர்மிஸ்வரூபம் மாத்ரமே மிகுந்திருக்கப் பெற்றவளென்று கருத்து. (வ்யயிதாம்) துக்கித்திருப்பவள் இதுவரையில் சொன்னதெல்லாம் தர்மஸ்வரூப மாத்ரமே. இனிமேல்தான் வ்யஸனங்கள் நேரப்போகின்றன வென்று நினைத்திருப்பவளென்றபடி 'ஸமா த்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே। புஞ்ஜாநாமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ' என்று அயோத்யையில் பன்னிரண்டு வர்ஷங்கள் அனுபவித்த போகங்களெல்லாம் வீணே ஆயின. கடைசியில் துக்கத்தையிட்டே நிரூபிக்கவேண்டியவளாயின வென்று கருத்து. போகமென்பது எள்ளளவுமில்லாதபடி பிழைப்பெல்லாம் ஒரே துக்கமாயிற்றென்னும்படி மிகுதியும் துக்கித்திருப்பவள். (அநிந்திதாம்) ர்மவிரஹத்தில் எப்படி இருக்கவேண்டுமோ, அப்படியே இருக்கிறாளாகையால் நிந்தைக்கிடமாகாதவள். (வ்யபேதஹர்ஷாம்) முன்பு ஸந்தோஷம் இவளிடத்தில் இருந்து போயிற்றென்று அறியமுடியாதபடி துக்கமயமாயிருப்பவளென்று (வி-அப) என்னும் இவ்விரண்டு உபஸர்க்கங்களால் தோற்றுகிறது. (பரிதீநமாநஸாம்) தீனமான மனமுடையவள். இங்கு (பரி) என்னும் உபஸர்க்கத்தினால்-ஸந்தோஷம் நேரினும் அதற்கு மனம் ஆஶ்ரயமாக நேராதென்று தெரிகின்றது. (ஶுபாந்) குணதிகனான புருஷனைக் குறித்த விரஹத்தினால் விளைந்த விகாரமாகையால் அத்தசைக்கே ஆலத்திவழிக்கும்படி அழகாயிருக்கை. குணதிகவிஷயமான விரஹவிகாரமும் அதிரமணீயமாயிருக்குமாகையால் அப்படிப்பட்டதசையால் ப்ரகாசிப்பவளென்றுகருத்து. (நிமித்தாநி ஶுபாநி பேஜிரே) சகுனங்கள் அவள் விஷயத்தில் சுபத்தை அறிவித்து ஸத்தை பெற்றன. (நரம் ஶ்ரியா ஜுஷ்டமிவோபஜீவிநः) வேண்டியவர் லக்ஷ்மீகடாக்ஷமுடையவன் விஷயத்தில் கிஞ்சித்கரித்துத் தம் ப்ரயோஜனத்தைப் பெறுவார். இந்தச் சகுனங்களே ஸாக்ஷாத் லக்ஷ்மீ விஷயத்திலேயே கிஞ்சித்கரித்துச் சகுனங்களுக்குள் மேன்மை பெற்றனவென்று கருத்து.

முன்னமும் ஒருகாலத்திலும் ஸந்தோஷப்படாதவள் போல் புலப்படுகின்றவளும், ஸந்தோஷம் உண்டாயினும் அதை அநுபவிக்க முடியாதபடி மிகவும் வருந்தின மனத்துடன் இருக்கின்றவளுமாகிய அம்மங்கல ஸ்வபாவையை, ஸம்பத்துடையவனை ப்ருத்யர்கள் அடைவதுபோல், சுபஸூசகங்களான சகுனங்கள் அடைந்தன. சுபலக்ஷணங்கள் பொருந்தி வணங்கின இமைமயிர்களின் வரிசை அமையப்பெற்றுக் கருவிழியில் கறுத்துச் சுற்றிலும் வெளுத்து விசாலமாகிக் கடைகளிற் சிவந்த அந்த ஸீதையின் இடக்கண்ணானது, மீனால் அசைக்கப்பட்டுச் சலிக்கின்ற தாமரைப்பூபோல் துடித்தது. அழகியதும் மேன்மையுற்றதும் பருத்திருப்பதும் திரண்டதும் மேலான காரகிற் சந்தனத்திற்குரியதும் புருஷஶ்ரேஷ்டனும் அன்பனுமாகிய ராமனால் அணைக்கப்பட்டதுமாகிய அப்பெண்மணியின் இடபுஜம் துடித்தது. ஒன்றோடொன்று மிகுதியும் பொருந்தி ப்ரகாசிப்பனவாகிய அம்மடந்தையர்மணியின் துடைகளிரண்டில் மேலான யானையின் துதிக்கையை நிகர்த்துப் பருத்து மிகவும் அழகான இடத்துடையிருதியும் துடித்துக்கொண்டு ராமன் எதிரே இருக்கிறானென்று தெரிவித்தது. வெளுத்த கண்களையுடையவளும் உருண்டு மாதுளையின் முத்தை நிகர்த்துச் சிகரம்போன்ற பற்களுடையவளும் அவயவங்களெல்லாம் அழகாய் விளங்கப்பெற்றவளுமாகிய அம்மாதரசியின் பொன்னிறமுடையதும் கொஞ்சம் தூள்படிந்திருப்பதும் அழகியதுமான வஸ்த்ரமானது கொஞ்சம் நழுவிற்று. அழகிய புருவங்களையுடைய அப்பெண்மணி, இதுவரையில் பல தடவைகளில் பலிப்பனவாகப் பரீக்ஷித்து நிச்சயிக்கப்பட்ட இந்தச் சகுனங்களையும் மற்றும் பல சுபசகுனங்களையும் கண்டு, உடனே ராமனது வரவைக் குறித்து ஸமாசாரம் வருமென்று மனத்தெளிவுபெற்று, காற்றிலும் வெயிலிலும் அடிபட்டு வாடித் தெரியாமல் மறைந்திருந்த விதை மழைபெய்தவுடன் மீளவும் முளைத்து

வெளிக்கிளம்பிக் களிப்புறுவதுபோல் மிகுதியும் ஸந்தோஷமுற்றனள். இவ்வளவேயன்றிக் கோவைப்பழம் போன்ற உதடும் அழகான கண்களும் புருவங்களும் முன்னெற்றி மயிர்களும் விளங்கப்பெற்று வணங்கின இமைமயிர்களோடுகூடி மிகுதியும் வெளுத்து நிர்மலமான பற்களையுடையதுமான ஸீதையின் முகம் ராஹுவின் முகத்தினின்று விடுபட்ட சந்த்ரபிம்பம்போல் ப்ரகாசித்தது. மேன்மைக்கிடமான அம்மடந்தையர் மணி, துக்கத்தைத் துறந்து சோம்பலைப் போக்கிப் பரிதாபத்தைத் தொலைத்து ஸந்தோஷத்தினுல் மனம் மலரப்பெற்று, ப்ரகாசிக்கின்ற முகத்தினுல், சுக்லபக்ஷ ராத்ரி சந்த்ரனுல் ப்ரகாசிப்பதுபோல் ப்ரகாசித்தனள். இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் ஸீதையை ஆஶ்வாஸப்படுத்த முதலில் ராமகுண கீர்த்தனஞ்செய்ய வேண்டுமென்று நிச்சயித்தல்.

மிகுந்த பராக்ரமமுடையவனுகி அந்தச் சிம்சுபாவ்ருக்ஷத்தில் இளைப்பாறியிருக்கிற ஹனுமான் ஸீதையின் வ்ருத்தாந்தத்தையும் த்ரிஜடை சொன்ன ஸ்வப்ன வ்ருத்தாந்தத்தையும் ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதையை விரட்டின வார்த்தைகளையும் இவையெல்லாவற்றையும் உள்ளபடி செவியுற்றனன். அனந்தரம் அந்த ஹனுமான் நந்தன வனத்திலிருக்கின்ற தேவதையைப்போல் அசோகவனிகையிலிருக்கின்ற அந்த ஸீதாதேவியைப் பார்த்துக்கொண்டே இங்ஙனம் பலவாறு சிந்திக்கத் தொடங்கினன். 'வானரர்கள் ஆயிரமாயிரமாகவும் பதினுயிரம் பதினுயிரமாகவும் சேர்ந்து, திசைகளெல்லாவற்றிலும் எவளைத் தேடுகின்றனரோ, அவளை இவ்விடத்தில் கண்டுபிடித்தனன். நான் மிகவும் மன

ஊக்கத்துடன் பகைவனது சக்தியைத் தெரிந்து கொண்டு எவர்க்குந் தெரியாதிருக்குமாறு லங்கை முழுமையுந் திரிந்து இவையெல்லாவற்றையும் அறிந்து கொண்டனன். ராக்ஷஸர்களின் விசேஷத்தை ஆராய்ந்தறிந்தனன்; இந்தப் பட்டணத்தையும் நன்கு சுற்றிப் பார்த்தனன்; ராக்ஷஸாதிபதியான இந்த ராவணனது ப்ரபாவத்தையும் அறிந்தனன். அபாரமஹிமையுடையவனும் ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் தயைசெய்யுந் தன்மையனுமாகிய அந்த ராமனது பத்னியும் கணவனைக் காணப் பெருவிருப்பமுற்றவளுமான இப்பெண் மணியை ராம வ்ருத்தாந்தங்களைச் சொல்லி ஸமாதானப்படுத்துவது யுக்தம். இவள் இதுவரையில் என்றும் துக்கத்தை அநுபவித்தவளல்லள்; அப்படிப்பட்டவள் இப்பொழுது அளவில்லாத துக்கத்தில் ஆழ்ந்து மிகுதியும் தடுமாற்றமுற்றுத் துக்கத்தின் முடிவு காணுமல் பரிதபிக்கின்றனள். பூர்ணசந்த்ரன் போன்ற முகமுடைய இம்மடந்தையை ராமவ்ருத்தாந்தத்தினால் ஸமாதானப்படுத்துகின்றனன். இங்ஙனம் துக்கத்தினால் மனங்கலங்கிப் பரிதபிக்கின்ற இம்மடந்தையை ஸமாதானப்படுத்தாமலே ராமனிடம் போவேனுயின், அங்ஙனம் போதல் தோஷங்களுக்கிடமேயாகும். நான் இவளை ஸமாதானப்படுத்தாமலே போவேனுயின், பின்பு கீர்த்திமதியாகிய இந்த ராஜகுமாரத்தி ஸீதை தன்னைக் காப்பாற்றுந் திக்கு எவருமில்லாமல் ப்ராணன்களை விடுவாள். பூர்ணசந்த்ரன்போன்ற முகமுடையவனும் மஹாபாஹுவுமாகிய அந்த ராமன் ஸீதையைப் பார்க்கவேண்டுமென்று மிகுதியும் குதூஹலமுடையவனுகையால், அவனுக்கு நான் ஸீதையின் ஸமாசாரத்தைச் சொல்லி அவஶ்யம் ஸமாதானம் விளைவிப்பது யுக்தம். ஆகையால் ஸீதையுடன் எப்படியாயினும் வார்த்தை சொல்லாமல் தீராது. ராக்ஷஸ ஸ்த்ரீகளோ ஏமாறுமல் காத்திருக்கின்றனர். இவர்கள் எதிரில் ஸீதையுடன் பேசுவது யுக்தமன்று. இப்படியிருக்கின்றதே! ஸீதையுடன் எப்படி வார்த்தை சொல்லி

அவளை ஸமாதானப்படுத்த முடியும்? வார்த்தை சொல்லாமற்போவதும் கூடாது. வார்த்தை சொல்லவும் ஸாத்யப்படவில்லை. இங்ஙனம் ஸங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டிருக்கிறேன். இந்த ராத்ரியின் மிகுதி கடப்பதற்குமுன்னமே ஸமாதானப்படுத்தாதிருப்பேனாயின் இப்பெண்மணி ப்ராணன்களை விடுவாள். இதற்கு எவ்விதத்திலும் ஸந்தேஹமில்லை. நான் இப்பொழுது [1] ஸுமத்யமையான ஸீதையுடன் பேசாமல் திரும்பிப் போவேனாயின், ராமன், 'ஸீதை எனக்கென்ன மொழிந்தனள்?' என்று என்னை வினவுவானாயின், அவனுக்கு நான் என்னென்று மறுமொழி கூறுவேன்? நான் இங்கிருந்து விரைவாக ராமனிடஞ்சென்று 'ஸீதையுடன் நான் பேசவில்லை. ஆகையால் அவளும் என்னிடம் ஒரு ஸமாசாரமும் சொல்லியனுப்பவில்லை' என்று அவனிடம் கூறுவேனாயின், அவன் கோபித்துக் கொடிய பார்வைகளால் என்னைத் தஹிக்கினும் தஹித்துவிடுவான். நான் இப்பெண்மணியுடன் பேசாமலே சென்று ராமனுக்காக என் ப்ரபுவாகிய ஸுக்ரீவனைத் தூண்டி இவ்விடம் அழைத்துக்கொண்டுவரினும், இந்த ஸீதை அதுவரையிலும் இப்படிப்பட்ட துக்கத்துடன் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்க மாட்டாளாகையால் ஸுக்ரீவன் ஸேனையுடன் கூடி இவ்விடம் வருதலும் வீணாகும். நான் இங்கேயே பத்ரமாக இருந்து, ராக்ஷஸ ஸ்த்ரீகள் மன ஊக்கந் தவிர்ந்தாவது அப்புறம் தொலைந்தாவது அவகாசம் உண்டாகையில், உடனே மிகுந்த பரிதாபத்துடன் வருந்துகின்ற இப்பெண்மணியை, இவர்கள் கேளாதிருக்கும்படி மெதுவாக ஸமாதானப்படுத்துகின்றனன். நான் மிகுதியும் ஸூக்ஷ்மமான தேஹம் பூண்டிருக்கின்றவன்; அதிலும் விசேஷித்து வானரன். ஆகையால் என்னை இந்த ராக்ஷஸஸ்த்ரீகள் கண்டுபிடிக்க வல்லரல்லர். அன்றியும் இவற்றிற்கு அனுகூலமாக மனிதர்கள் பேசுவதுபோல்

1. ஸுமத்யமை—அழகிய இடையுடையவள்.

ஸம்ஸ்க்ருத பாஷையை அவலம்பித்துப் பேசுகிறேன். அதுவும் இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்குத் தெரியாது. ஆனால் நான் ப்ராஹ்மணனைப்போல் ஸம்ஸ்க்ருதபாஷையில் பேசுவேனாயின், ஸீதை' 'குரங்கு எங்கே? பேசுவது எங்கே? அதிலும் விசேஷித்து ஸம்ஸ்க்ருதபாஷை பேசுவது எங்கே?' என்று ஸந்தேஹித்து என்னை ராவணனாக ப்ரமித்துப் பயப்படுவாள். ஆயினும் பொருளடக்கமுடைய மனுஷ்ய வாக்யத்தை அவலம்பித்தே பேசியாகவேண்டும். இல்லையாயின், மற்றெவ்விதத்திலும் நிந்தைக்கிடமல்லாத இந்த ஸீதையை ஸமாதானப்படுத்த முடியாது. இந்த ஸீதை, நான் வானரனாயிருப்பதையும் மனுஷ்யரைப்போல் பேசுவதையுங் கண்டு, முன்பு இப்படிப்பட்ட ராக்ஷஸவேஷங்களைப் பார்த்துப் பயந்திருப்பவளாகையால் மேலும் இருமடங்காகப் பயமுறுவாள். அனந்தரம், சிறந்த மனமுடையவளும் அகன்ற கண்களை யுடையவளுமாகிய இந்த ஸீதை, ராவணன் காமரூபியென்பதை அறிந்தவளாகையால், என் ரீதியைப் பார்த்தவுடனே பயந்து கெட்டியாகக் கூச்சலிடுவாள். ஸீதை கூச்சலிடுகையில், இந்த ராக்ஷஸஸ்த்ரீகள் அனைவரும் உடனே குவியல் கூடி நானாவித ஆயுதங்களைக் கொண்டு பயங்கரமாக ம்ருத்யுவைப்போல் என்மேல் எதிர்த்துவருவார்கள். அனந்தரம் விகாரமான முகமுடைய இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் என்னைச் சுற்றிக்கொண்டு பலமுள்ளவரையிலும் என்னைக் கொல்லவாவது பிடித்துக்கொள்ளவாவது ப்ரயத்னஞ் செய்வார்கள். அவர்கள், சிறந்த மரங்களின் பெரிய கிளைகளையும் சிறிய கிளைகளையும் அடிமரங்களையும் எடுத்துக்கொண்டு நாற்புறங்களிலும் நான் ஓடிக்கொண்டிருக்கையில் என்னைக்கண்டு பயத்தினால் சங்கித்தவராவார்கள். ராக்ஷஸிகள், வனத்தில் திரிகின்ற என்னுடைய உருவத்தையும் பார்த்துப் பயத்தினால் தழதழத்து முகம் விலவிலத்து விகாரமாயிருக்கப்பெறுவார்கள். அதன்பிறகு, ராக்ஷஸிகள், ராக்ஷஸர் தலைவனான ராவணனது க்ருஹத்தில்

காவலாக ஏற்படுத்தியிருக்கும் ராக்ஷஸர்களை அழைப்பார்கள். அவ்வரக்கர்களும் சூலம் சக்தி கத்தி முதலிய பலவித ஆயுதங்களைக் கைகளில் ஏந்தி வேகத்துடன் காண்பேர்களுக்கு மிகவும் பயத்தை விளைவித்துக்கொண்டு இவ்விடம் வந்து யுத்தத்திற்குத் தலைப்படுவார்கள். அந்த ராக்ஷஸர்கள் என்னை நாற்புறத்திலும் சுற்றிக்கொண்டு தடுக்கையில், நான் அவரது ஸைன்யங்களை அடித்துக்கொண்டிருந்து இளைப்புறுவேனாகையால், அவர்களைக் கடந்து மஹாஸமுத்ரத்தைத்தாண்டி அக்கரை சேரமாட்டேன். விரைவில் கார்யஞ் செய்யுந்தன்மையுள்ள ராக்ஷஸர் பலர் ஆகாயத்தில் நான் ஸமுத்ரந் தாண்டும்பொழுது ஆகாயத்திற் கிளம்பி என்னைப் பிடித்துக்கொள்ளினும் பிடித்துக்கொள்வார்கள். அப்பொழுது இந்த ஸீதைக்கு ராமன் சொல்லியனுப்பின வ்ருத்தாந்தம் தெரியாமற்போகும்; நானும் ராக்ஷஸர் கையில் அகப்பட்டுக்கொள்வேன். ராக்ஷஸர்களுக்கு எப்பொழுதும் ப்ராணிகளை ஹிம்ஸிப்பதிலேயே அபிருசியாகையால் அவர்கள் இந்த ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைக் கொன்றாலும் கொன்றுவிடுவார்கள். ஆகையால் ராமனும் ஸுக்ரீவனும் முயன்றிருக்கிற இந்தக் கார்யமெல்லாம் கெட்டுப்போய்விடும். மற்ற எவர்க்கும் வழி காணமுடியாததும் பல ராக்ஷஸர்கள் நாற்புறங்களிலும் காவலாயிருக்கப்பெற்றதும் சுற்றிலும் ஸமுத்ரத்தால் சூழப்பட்டு எவர்க்குந் தெரியாமல் ரஹஸ்யமாயிருப்பதுமாகிய இவ்விடத்தில் ஸீதை இருக்கின்றனள். நான் யுத்தத்தில் ராக்ஷஸர்களால் மரணம் அடையினும், பிடிபடினும், மீளவும் ராமனுக்குஸஹாயமாகி ஸீதையைத்தேடி அவளிருக்குமிடத்தை அறிவிக்கையாகிற இந்தக்கார்யத்தை ஸாதிப்பவன் மற்றெவனும் எனக்குப் புலப்படவில்லை. நான் யுத்தத்தில் சாவேனாயின், பின்பு நூறுயோஜனை விஸ்தாரமுடைய இம்மஹா ஸமுத்ரத்தைத் தாண்டவல்ல வானரன் மற்றெவனும் எவ்வளவு ஆலோசிக்கினும் எனக்குப் புலப்படவில்லை. நான், ராக்ஷஸர்கள்

ஆயிரமாயிரமாய் வரினும் கொல்ல வல்லவனே; ஆயினும் அங்ஙனம் யுத்தத்தில் ஶ்ரமப்பட்டபின்பு மஹாஸமுத்ரத்தைத் தாண்டி அக்கரை சேரவல்லனல்லேன். யுத்தத்தில் ஜயமே உண்டாகுமென்று நிச்சயிக்க முடியாது; அபஜயமே உண்டாயினும் உண்டாகக் கூடும். இங்ஙனம் ஸந்தேஹத்திற்கிடமான கார்யஞ் செய்தல் எனக்கு இஷ்டமன்று. அறிஞனாயிருப்பவன் எவன், இப்படி ஸந்தேஹத்துடன் கூடின கார்யத்தை முன்பின் விசாரியாமல் செய்வான்? எவனுஞ் செய்யான். நான் ஸீதையோடு வார்த்தைசொல்லாமலே திரும்பிப் போவேனாயின், அவள் தன்னைக்காக்குந் திக்கின்றி ப்ராணன்களை விடுவாள். ஸீதையோடு நான் பேசலாமென்னினும் இப்பொழுது சொன்னபடி மஹாதோஷம் ஸம்பவிக்கும். நிறைவேற ஸித்தமாயிருக்குங் கார்யங்கள் அவிவேகிகளான தூதர்களிடம் சேருமாயின், அவை எந்தத்தேசத்திற்கு எந்தக்காலத்திற்கு எப்படி நடத்தவேண்டுமோ, அங்ஙனம் நடத்தப்படமாட்டாவாகையால் அந்தத் தேசகாலங்களை அவற்றிற்கு விரோதிகளானதுபற்றி ஸூர்யோதயத்தில் இருள் நசிப்பதுபோல் நசித்துப்போம். ப்ரபுவாயிருப்பவன் மந்த்ரிகளோடு கூடிக் கார்யாகார்யங்களைப் பிடித்து நன்கு ஆலோசித்து இங்ஙனஞ் செய்யவேண்டுமென்று ஒருவண்ணம் நிச்சயிக்கினும் அவிவேகியான தூதனிடம் அதை ஒப்புவிப்பானாயின், அது சிறிதும் பயன்படாமற்போகும். அப்படிப்பட்ட தூதர்கள் தமக்கு எதுவுந் தெரியாமற்போயினும் தம்மைப் பண்டிதராக நினைத்து அஹங்காரமுற்றுக் கார்யங்களைக் கெடுத்து விடுவார்கள். ஸ்வாமிகார்யம் எப்படி கெடாமலிருக்குமோ, எனக்கு விவேகமில்லாமை எப்படி நேராதிருக்குமோ, ஸமுத்ரத்தைத் தாண்டினது எப்படி வீணாகாதிருக்குமோ, அங்ஙனஞ் செய்யவேண்டும். அவ்விதம் யாது? நான் எப்படி பேசினால் ஸீதை என் வார்த்தையைக் கேட்பாளோ? கேட்டும் பயமுறாதிருப்பாளோ என்று மிகுதியும் ஆலோசித்து ஹனுமான் மிகுந்த

மதியுடையவனாகையால் அப்பொழுது செய்யவேண்டிய தைப்பற்றி இங்ஙனமென்று மனத்தில் நிச்சயித்துக் கொண்டனன். 'நான் இவளுக்குப் பந்துவாயிருப்பவனும் எவர்க்குங் கெடுதியை விளைக்காத கார்யங்களைச் செய்யுந் தன்மையனுமாகிய ராமனை முதலில் எடுத்துரைக்கின்றனன். அப்பொழுது அந்த ஸீதையின் மனம் தனக்குப் பந்துவான ராமனிடத்திலேயே மிகுதியும் பற்றியிருப்பதாகையால், அவனைக் குறித்த அவ்வார்த்தைகளைக்கேட்டு இவள் பயப்படாதிருப்பாள். இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்தவர்கள் அனைவரிலும் மேலாகி ஸ்வரூபமறிந்தவனுமாகிய ராமன் ஸீதைக்குச் சொல்லும்படி மொழிந்த தர்ம யுக்தங்களான சுபவசனங்களை மெல்லமெல்லச் செவியிற் படுத்திக்கொண்டு, இங்ஙனம் மதுரவசனங்களால் அந்த ராமனது வார்த்தைகளை யெல்லாம் கேட்பிக்கின்றனன். எங்ஙனம் மொழிந்தால் இப்பெண்மணி என் வார்த்தைகளில் ஆதரம் வைத்து விஸ்வாஸமடைவாளோ, அப்படியே எல்லாவற்றையும் செய்து முடிக்கிறேன்' என்று நிச்சயித்துக்கொண்டனன். மஹானுபாவனாகிய அந்த ஹனுமான் மரத்தினுடைய கிளையின் நடுவில் இருந்து லோகநாதனாகிய ராமனுடைய பத்னியான ஸீதையைப் பார்த்துக்கொண்டே இனிதும் வீணுகாததுமான வாக்யங்களை இங்ஙனம் பலவாறு சொல்லத் தொடங்கினன். முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

—••◆◀ { ஹனுமான் ராம வ்ருத்தாந்தங்களைக் கூறுதலும், ஸீதை தலையெடுத்துப் பார்த்தலும். }

மஹாகபியான ஹனுமான் இங்ஙனம் பலவிதமாகச் சிந்தித்து ஸீதையினருகில் அவளுக்குமாத்ரம் செவியிற்படும்படி இனிய வாக்யங்களை மொழிந்தனன்:—

'ரத கஜ துரகங்கள் நிறைந்த தசரதனென்னும் ஒரு மன்னவன் இருந்தனன். அவன் புண்யங்களையே செய்யும் ஸ்வபாவமுடையவன். அவனுக்குக் கபடமென்பது சிறிதும் கிடையாது. அன்றியும் அம்மன்னவன் தானங்களாலும் பராக்ரமத்தினாலும் பெரும் புகழ்பெற்றிருந்தனன். அவன் குணங்களில் ராஜரிஷிகள் அனைவரினும் மிகுதியும் மேன்மையுற்றவன்; தவத்தினால் ரிஷிகளை நிகர்த்தவன். சக்ரவர்த்திவம்சத்தில் பிறந்தவன்; பலத்தில் தேவேந்த்ரனுக் கொப்பானவன்; எந்த ஜந்துவுக்கும் ஹிம்ஸை செய்யாதிருப்பதில் விருப்பமுடையவன். அற்பத்தனம் அவனிடத்தில் சிறிதும் புலப்படாது. அன்றியும் அவன் மிகுந்த கருணையுடையவன்; உண்மையான பராக்ரமமுடையவன்; இக்ஷ்வாகுவம்சத்திற்கெல்லாம் முக்யனாகி மிகுந்த ஸம்பத்தும் அமைந்து ஆஸ்ரிதர்களுக்குச் செல்வத்தை வளர்க்குந் தன்மையனுமாயிருப்பான். மேலும் அவன் ஸமஸ்த ராஜலக்ஷணங்களும் அமைந்து மேனியின் ஒளி மிகுதியும் விளங்கப் பெற்றிருப்பான். அவன் ஸமஸ்த மன்னவர்களினும் மேலாகி, நான்கு நுனிகளையுடைய பூமண்டலம் முழுவதிலும் புகழ்பெற்று ப்ரஜைகளுக்கெல்லாம் ஸௌக்யத்தை விளைவித்துத் தானும் ஸுகங்களை அனுபவித்துக்கொண்டிருந்தனன். அவனுக்கு மூத்தகுமாரன் ராமனென்றொருவன் உளன். அவன் சந்த்ரபிம்பம் போன்ற முகமுடையவன்; எல்லா விசேஷங்களும் அறிந்தவன்; வில்லாளிகளனைவரினும் மேலானவன். அவன் தசரதனுக்கு மிகுதியும் அன்பிற்கிடமானவன். அந்த ராமன், தன் க்ஷத்ரியவர்ணத்திற்கு விதிக்கப் பட்ட தர்மத்தை ரக்ஷிக்குந்தன்மையன்; தன் தர்மத்தை ரக்ஷிப்பதுபோலவே தன் ஜனங்களின் தர்மங்களையும் ரக்ஷிக்கும் ஸ்வபாவமுடையவன்; அப்படியே ஸமஸ்த ப்ராணிகளுடைய தர்மத்தையும் ரக்ஷிப்பவன்; சத்ருக்களைத் தபிக்கச்செய்பவன். வீரனாகிய ராமன் வயது சென்றவனும் ஸத்யஸந்தனுமாகிய அந்தத் தந்தையின் வார்த்தையைத் தவிர்க்கமுடியாமல் தன் பார்யையும்

தம்பியும் பின்றொடர்ந்துவரப் பெற்று அடவிக்குச் சென்றனன். அவன், அம்மஹாரண்யத்தில் வேட்டை யாடும்பொழுது சூரர்களும் காமரூபிகளுமான ராக்ஷஸர் பலரையும் அவலீலையாகக் கொன்றனன். ராவணன், ஜனஸ்தானத்திலுள்ள ஸமஸ்த ராக்ஷஸர்களும் கரனும் தூஷணனும் ராமனால் அடிபட்டதைக் கேட்டு, அதன்மேல் கோபமுற்று ராமனை அழகிய மாயா ம்ருகத்தினால் மோசஞ்செய்து ஸீதையை அபஹரித் துக் கொண்டுபோயினன். அந்த ராமன் நிந்தைக்கிட மாகாதவளும் தன் பத்னியுமாகிய அந்த ஸீதாதேவியை வனத்தில் தேடிக்கொண்டுபோகையில், அங்கு ஸுக் ரீவனென்னும் வானரனைக் கண்டு அவனுடன் ஸ்னேஹம் பண்ணிக்கொண்டனன். அனந்தரம் பகைவ ரது பட்டணங்களை வெல்லும் மஹா பலிஷ்டனாகிய அந்த ராமன் வாலி யென்னும் வானரனைக்கொன்று அவனுக்குள்ள வானர ராஜ்யத்தை ஸுக்ரீவனுக்குக் கொடுத்தனன். அனந்தரம் ஸுக்ரீவன் ஆஜ்ஞைசெய் கையில், காமரூபிகளான வானரர்கள் அனேகமாயிரம் பேர் எல்லாத் திசைகளிலும் அந்த ஸீதாதேவியைத் தேடுகின்றனர். நான் அகன்ற கண்களையுடைய இப் பெண்மணிக்காகவே ஸம்பாதியின் வசனப்படி நூறு யோஜனை விஸ்தாரமுடைய ஸமுத்ரத்தை வேகமாகத் தாண்டிவந்தனன். ஸீதை, எப்படிப்பட்ட தேஹமும் வர்ணமும் காந்தியும் உடையவளென்று ராமன் நிச்ச யித்துச் சொல்லக்கேட்டேனோ, அவையெல்லாம் இப் பெண்மணிக்கு உண்டாயிருக்கின்றன வாகையால் ராமன் சொன்ன அந்த ஸீதை இதோ எனக்கு அகப் பட்டனள்' என்று இதுவரையில் இவ்வண்ணம் அவ் வானர ப்ரேஷ்டன் மொழிந்து பிறகு மௌனமாயிருந்த னன். ஸீதையும் அவன் சொன்னதை யெல்லாங்கேட்டு 'இப்பொழுது இங்கு இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்பவன் யாவன்?' என்று மிகுதியும் ஆச்சர்ய முற்றனள். அனந்தரம் நுனிகளில் வளைந்து சுறுத்து நிகுநிகென்ற நுண்ணிய தலைமயிர்களையுடைய அப்பெண்

மணி பயப்படுந் தன்மையளாகையால் பயத்துடன் உரிபோகட்டுக் கொள்ளும்பொருட்டுத் தலைமயிர்களால் சுற்றப்பட்டிருப்பதுபற்றி மயிர்களால் மறைந் திருக்கிற முகத்தை உயரத்தூக்கிச் சிம்சுபாவ்ருக்ஷத் தைக் கண்டனள். ஸீதை அவ்வானரன் சொன்ன வார்த்தையைக்கேட்டு எல்லாத் திசைகளையும் விதிசை களையும் பார்த்து (எவரையும் காணுமல்) ஸர்வ ப்ரகாரத்தாலும் ராமனிடத்தில் மனத்தை நிறுத்தி த்யானித்துக்கொண்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்த னள். [1] அப்பெண்மணி அந்த வ்ருக்ஷத்தின் பக்கத்தில் குறுக்கிலும் மேல் ஆகாயத்திலும் கீழ் பூமியிலும் தேடிப்பார்த்துக்கொண்டே, வானரேஶ்வரனுன

1. இங்கு 'ஸா திர்யகூர்த்வம் ச ததாப்யதஸ்தாந் நிரீக்ஷமாணா தமசிந்த்யபுத்திம்| ததர்ஸ பிங்காதிபதேரமாத்யம் வாதாத்மஜம் ஸூர்யமிவோதயஸ்தம்' என்று மூலம் (ஸா) அந்த ஸீதாதேவி (திர்யக் ஊர்த்வம் அதஸ்தாச்ச) பக்கத்தையும் ஆகா யத்தையும் பூமியையும், (அவேக்ஷமாணு) பார்த்துக்கொண்டு, (அதஸ்தாத்) என்ற இதனுல்—எப்படி பூமியைப் பிளந்து மேற் கிளம்பிவந்து ஒருவன் ராம நாமங்களைக் கீர்த்தனஞ் செய்ய வல்லனல்லனே, அப்படியே மற்றைத் திசைகளினின்றும் இவ் விலங்கையில் புகுந்து ராமநாம கீர்த்தனஞ் செய்பவனைக் காண விரகில்லையென்று தோற்றுகிறது. ஒருகால் சேராதவற்றையும் சேர்ப்பிக்க வல்லவனுகிய ராமனது ஸாமர்த்யத்தினுல் ஒருவன் வரக்கூடுமாயின் அப்பொழுது பூமியினின்றும் கிளம்பி வரக்கூடு மென்று பூமியையும் உற்றுப் பார்த்தாளென்று கருத்து. ப்ரஹ்லா தன் விஷயத்தில் ஸ்தம்பத்தினின்று தோற்றினுற்போல் நம் விஷயத்தில் பூமியினின்று ஒருவனைத் தோற்றுவிக்கக் கூடு மென்று நினைத்திருக்கிருள். அல்லது-சிம்சுபாவ்ருக்ஷத்தின் பக்கத்திலும் மேலும் கீழும் என்றுஞ் சொல்லலாகும். (தம் அசிந் த்யபுத்திம் ததர்ஸ) இவ்வளவு அவ்வளவென்று அளவிடக்கூடாத புத்தியுடைய அவனைக் கண்டனள். அவன் தேஹத்தைக் காண் பதற்குமுன்பு அவள் மனம் இங்ஙனம் அளவிட்டு நினைத்திருந்தது. எப்படியெனில்-இவ்விலங்கையில் புகுந்து இவ்வந்தப்புரத்தின்

ஸுக்ரீவனுடைய மந்த்ரியும் வாயுகுமாரனும் அள விடக் கூடாத புத்தியுடைவனுமாகிய ஹநுமான் உதய பர்வதத்திலுள்ள ஸூர்யன்போல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கக் கண்டனள். முப்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ஸீதை ஹநுமான் சொன்ன ராமவ்ருத் தாந்தத்தைக் கேட்டு அது ஸ்வப்னமோ என்று ப்ரமித்து மீளவும் அது ஸத்யமா யிருக்கும்படி தேவதைகளை ப்ரார்த்தித்தல்}

அனந்தரம் அந்த ஸீதாதேவி வ்ருக்ஷத்தினுடைய கிளையின் நடுவிலிருக்கிற ஹநுமானை ஸாமான்யமாகக்

---

உத்யானவனத்தில் ப்ரவேசிக்கையால் இவன் மிகுதியும் வல்லவன் என்பதே. அவன் தேஹத்தைப் பார்த்தபின்பு 'இவன் புத்தி அள விட முடியாதது' என்றறிந்தனளென்று கருத்து. (பிங்காதிப தேரமாத்யம்) ஸ்வரவிசேஷத்தினுல்—இவன் வானரன்; அதிலும் ஸ்வதந்த்ரனல்லன்; தன் ஜாதியிற் சேர்ந்த ஒரு ராஜனுக்கு மந்த்ரியாயிருப்பவன். அந்த ராஜகார்யம் இவன்கையில் இருக் கிறது' என்று நிச்சயித்தனள். (வாதாத்மஜம்) ராமனுக்கு ப்ராண தாரகமான எனக்கு ப்ராணதாரகனுயிருக்கையால் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ப்ராணதாரகனுயிருப்பதுபற்றி இவன் ஸர்வர்க் கும் ஜீவனஹேதுவான வாயுவின் புத்ரனுயிருப்பானென்று நிச்ச யித்தனள். (ஸூர்யமிவோதயஸ்யம்) ஸூரஸ்ய ஸம்பந்தீ ஸூர்யஃ ஸூரனென்றால் ஸூர்யன், அவனுடையவன் ஸூர்யன்-அதாவது அருணன். ஸூர்யன் உதிப்பதை அறி விப்பவனுகி உதயபர்வதத்திலிருக்கிற அருணனைப்போல், ராம திவாகரனென்று சொல்லப்பட்ட ராமனுகிற ஸூர்யனுடைய உதயத்தை அறிவித்துக்கொண்டு வ்ருக்ஷத்தின் மேலிருப்பவ னென்று பொருள்.



2207. உரிபோட்டுக்கொண்ட ஸீதை ராமகுண கதையைக் தலையெடுத்து ஹனுமானைப் பார்த்தல்.

கண்டு, உடனே பயத்தால் மனம் கலங்கப்பெற்று, அவனை நன்ருகப் பார்க்கையில், அங்கு வெளுத்த வஸ்த்ரந்தரித்து மின்னற்குவியல்போல் பொன்வர்ண முடையவனும் இனிய உரைகளை உரைப்பவனும் புஷ்பித்த அசோக புஷ்பங்களின் குவியலை நிகர்த்த காந்தியுடையவனும் மேலான பொன்னிறம் அமைந்த கண்கள் பொருந்தி வணக்கத்துடனிருக்கின்றவனுமாகிய ஒரு வானரனைக் கண்டனள். அனந்தரம் ஸீதை மிகுதியும் ஆச்சர்யம் அடைந்து, தனக்குள் 'அப்பா! இவ்வானரத்தின் உருவம் எவ்வளவு பயங்கரமாயிருக்கின்றது. இது அணுகமுடியாதது, பார்க்கவுங் கூடாதது. இப்படிப்பட்டது எங்கிருந்து வந்ததோ?' என்று நினைத்து மீளவும் துக்கத்தினுல் ஒன்றுந் தோற்றப்பெரு திருந்தனள். ஸீதை பயத்தினுல் மெய்ம்மறந்து துக்கத்தினுல் பரிதபித்து 'ராமா! ராமா! லக்ஷ்மணு!' என்று புலம்பிக்கொண்டு கேட்போர்களுக்குக் கருணை உண்டாகும்படி பலவாறு மிகுதியும் கதறினள். அனந்தரம் ஸீதை, ராக்ஷஸ ஸ்த்ரீகள் கேட்டு இது என்னென்று விசாரிப்பார்களென்று பயந்து மெதுவான குரலுடன் துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் மெல்லவே பற்பலவாறு புலம்பினள். அந்த ஸீதை வணக்கத்துடன் தனக்கருகாக மரத்தின் மேலிருக்கின்ற வானர திலகனுகிய அந்த ஹனுமானைப் பார்த்து 'இவ்விலங்கை எங்கே? ராம வ்ருத்தாந்தஞ் சொல்பவன் எங்கே? ஆகையால் இது ஸ்வப்னமேயன்றி மற்றென்று மன்று' என்று நினைத்தனள். அந்த ஸீதை இங்குமங்கும் பார்த்துக்கொண்டு, கோணலான பெரிய முகமுடையவனும் வானரர்தலைவனுன ஸுக்ரீவனது கட்டளையின்படி நடப்பவனும் அவ்வானர ராஜனது மந்த்ரியும் புத்திமான்கள் அனைவரிலும் மேன்மையுற்றவனும் வாயுகுமாரனுமாகிய ஹனுமானை, அனுகூலனு யிருப்பானே என்று மீளவும் கண்டனள். அவள் அந்த ஹனுமானைப் பார்த்தவுடனே விகாரமான அவ்வானர வேஷங்கண்டதற்கு மிகுதியும் மூர்ச்சித்து ப்ராணன் போனவள்போல் ப்ரஜ்ஞை

தப்பியிருந்தனள். அனந்தரம் அவ்விசாலநேத்ரை வெகு நேரங்கழித்து மூர்ச்சை தெளிந்து மீளவும் இவ்வாறு சிந்தித்தனள். நான் இப்பொழுது ஸ்வப்னத்தில் விகாரமான குரங்கைக் கண்டனன். சாஸ்த்ரங்கள் பலவற்றிலும் ஸ்வப்னத்தில் குரங்கைக் காணலாகாதென்று நிஷேதித்திருக்கின்றது. கண்டவர்களுக்குக் கஷ்டங்கள் நேரிடும். ஆகையால் ராமாதிகளுக்கு என்ன கஷ்டம் வந்ததோ! ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் என் தந்தை ஜனக மஹா ராஜருக்கும் மங்களம் உண்டாகுமாக. இது ஸ்வப்னங்கூட அன்று. தூங்கினாலன்றோ ஸ்வப்னங்காண்பது. நான் சோகத்தினாலும் துக்கத்தினாலும் பீடிக்கப்பட்டிருக்கிறேனே. எனக்கு நித்ரை என்பது நேரவே ப்ரஸக்தி இல்லையே. ஸுகத்தினால் நித்ரை உண்டாகுமேயென்னில் பூர்ண சந்த்ரன்போன்ற முகமுடைய அந்த ராமனைப் பிரிந்திருக்கிற எனக்கு ஸுகம் உண்டாக ப்ரஸக்தியே இல்லையல்லவா? நான் எப்பொழுதும் 'ராமா! ராமா'! என்று ராமனையே புத்தியில் த்யானிப்பதும் ராமனையே வாயாற் சொல்லுவதுமா யிருக்கின்றனன். அங்ஙனம் த்யானிப்பதற்கும் சொல்வதற்கும் தகுந்தாற்போல் ராமனது கதையைக் கேட்கின்றனன். அந்தக் கதையின் பொருளையே நேரில் காண்கிறாப்போல் இங்ஙனம் காண்கின்றேனன்றி வேறில்லை. ஏனெனில் நான் ராமனைப் பிரிந்தது முதல் அவனது விரஹத்தினால் விளைந்த மன்மத பாதையால் மிகுதியும் வருத்தப்பட்டு என் மனமெல்லாம் அவனிடத்திலேயே நிலைநிறுத்தி அவனையே எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டிருக்கிறேனாகையால், நான் மனத்தில் சிந்திப்பதுபோலவே என் கண்களுக்குப் புலப்படுகின்றது; என் செவிகளுக்கும் அங்ஙனமே கேட்கின்றது. இவ்வளவேயன்றி இது வாஸ்தவமன்று. இதோ ராம நாமங்களைச் சொல்பவனொருவனைக் காண்கின்றேனே, ராமனைக் குறித்து என் மனத்தில் மிகுதியும் வளர்ந்து வருகின்ற மனோரதமே எனக்கு இங்ஙனம் தோற்றும்படி மாறியிருக்கலா

மென்று சிந்திக்கின்றனன். ஆயினும் புத்தியால் விசாரித்துப் பார்த்தால்மாத்ரம் இது மனோரதமன்றென்று தோற்றுகிறது. ஏனெனில் — அம்மனோரதத்திற்கு உருவங்கிடையாது. ஆகையால் அது இங்ஙனம் மாறித் தோற்றுவதற்கு அவகாசமில்லை. வெறுமனே மனத்திற்கு மாத்ரம் கேட்கும்படி தோற்றக்கூடும். இவ்வானர உருவமோ எனக்கு மிகுதியும் ஸ்பஷ்டமாகத் தோற்றுகின்றது. மேலும், இவன் எனக்குச் சொல்லும் பொழுது இவனது கண்ட ஸ்வரமும் செவியிற்படுகின்றது. ஆகையால் இவ்வானரன் எவனோ? வாஸ்தவமாகவே இவ்விடம் வந்து, எனக்குத் தெரியவேண்டுமென்று புலப்பட்டு இங்ஙனம் மொழிந்தானேயன்றி மற்றொன்றும் இல்லை. தேவேந்த்ரனுக்கும் ப்ருஹஸ்பதிக்கும் ப்ரஹ்மதேவனுக்கும் அக்னிக்கும் நமஸ்காரஞ் செய்கிறேன். என் முன்னே இவ்வானரன் மொழிந்த வார்த்தைகளெல்லாம் சொன்னபடியே ஸத்யமாயிருக்குமாக, மற்றொரு ஸ்வப்னம் முதலியவை ஆகாதிருக்குமாக' என்றனள். முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ஹனுமான் ஸீதையை நீ யாரென்று வினவுதலும், ஸீதை தன் வ்ருத்தாந்தத்தைக் கூறுதலும். }

பவழம்போல் சிவந்த முகமுடையவனும் மஹாபராக்ரமசாலியும் வாயுகுமாரனுமாகிய ஹனுமான் அந்த வ்ருக்ஷத்தினின்று கீழே இழிந்து ஸீதையின் துரவஸ்தையைக் கண்டவனாகையால் தீனனாகி வணக்கத்தினால் சரீரம் வணங்கப்பெற்று நமஸ்காரஞ்செய்து சிறிது அருகே சென்று சிரஸ்ஸில் கைகூப்பிக்கொண்டு [illegible]தையைக் கண்டு இனிய உரையுடன்

மொழிந்தனன்:— 'தாமரையிதழ்போன்ற கண்களை யுடைய மாதரசே! அழுக்கடைந்து கலுங்கின பட்டு வஸ்த்ரந் தரித்து மரத்தின் கிளையைப் பிடித்துக் கொண்டு நின்றிருக்கின்றனை. [1] அநிந்திதே! நீ யார்? அலைமோதுகையால் வெண்டாமரை இதழ்களில்படிந்த நீர் பெருகுவதுபோல், ஆநந்தபாஷ்பங்களுக்குத்தகுந்த உன் கண்களினின்று துக்கநீர் பெருகுகின்றதே! இது ஏன்? எவனுடைய குலம் பாழாகைக்கு? எதை மனத்தில் நினைத்து நீ இங்ஙனம் வருந்துகின்றனை? மங்கல ஸ்வபாவமுடையவளே! நீ தேவகன்னிகையா? அஸுர வனிதையா? நாகரமணியா? கந்தர்வ காந்தையா? ராக்ஷஸஸ்த்ரீயா? யக்ஷதருணியா? கிந்நரநாரியா? இவர்களில் யாவள்? அழகிய முகமுடையவளே! நீ ருத்ரகணங்களிற் சேர்ந்தவளா? வாயுக்களிற் சேர்ந்த வளா? வஸுக்களிற் சேர்ந்தவளா? யாவள்? [2] வராரோஹே! நீ தேவதை யென்று எனக்குத் தோற்று கின்றது. நீ சந்த்ரனைப் பிரிந்து தேவலோகத்தை விட்டுப் பூமிக்கு வந்த ஜ்யோதிர்மணியும் ஸகல கல்யாணகுண ஸம்பன்னையுமான ரோஹிணியா என்ன? கல்யாணீ! நீ யார்? தோஷங்களொன்றுமில்லாத உன் கண்களின் ஸௌந்தர்யமே ஸௌந்தர்யம்! நீ யார்? கறுத்த கண்களையுடையவளே! மங்கலஸ்வபாவையே! நீ கோபத்தினாலாவது தெரியாமையாலாவது பர்த்தா வான வஸிஷ்டரைக் கோபிக்கச் செய்து ஸ்வர்க்கத்தி னின்று புறப்பட்டு வந்த அருந்ததி அல்லையா? சிறுத் தழகிய இடையுடையவளே! இந்த லோகத்தைவிட்டுப் பரலோகம் போன புதல்வனையோ, தந்தையையோ, அண்ணனையோ, தம்பியையோ, கணவனையோ குறித்து வருந்துகின்றாயென்று தோன்றுகிறது. அங்ஙனம் லோகாந்தரஞ் சென்ற உன் புதல்வன் யாவன்? புத்ரனல்லாமல் தந்தையாயின், அவன் எவன்?

---

1. நிந்தைக்கிடமாகாதவளே!
2. சிறந்த இடையின் பின்புறமுடையவளே!

ஸஹோதரனாயின், அவன் எவன்? அல்லது உன் பர்த்தாவாயின், அவன் எவன்? அழுவதனாலும் பெருமூச்செறிகையாலும் பூமியை நன்கு தொட்டுக்கொண்டிருப்பதனாலும் ராஜலக்ஷணங்கள் நிச்சயமாக ஏற்படுகையாலும் நீ தேவதா ஸ்த்ரீயல்லையென்று நினைக்கிறேன். ஆகையால் நீ ராஜஸ்த்ரீயாயிருக்கவேண்டும். ஸ்தனம் முதலிய உன் அவயவங்களின் நிர்மையையும் மங்களகரமான ஸாமுத்ரிக லக்ஷணங்களையும் பார்க்கையில், நீ ஒரு மஹாராஜனது பட்டமஹிஷி, ராஜகுமாரத்தியென்று எனக்குத் தோற்றுகின்றது நீ, ராவணன் பலாத்காரமாகப் பறித்துக்கொண்டு வந்த ஸீதாதேவியாயிருப்பின், அவ்விஷயத்தை நான் அறிய விரும்புகின்றேன். உனக்குச் சுபம் உண்டாகுமாக. அதை எனக்குச் சொல்லவேண்டும். உன் தைன்யமும் மனுஷ்ய ஸ்த்ரீகளுக்கு, நேரிடக்கூடாத உன் ஸௌந்தர்யமும் தவத்தோடு கூடின உன் வேஷமும் இருப்பதைக் கண்டால் நீ ராமனது பார்யை யென்பதற்கு ஸந்தேஹமே இல்லை. இது நிச்சயம்' என்றனன். அந்த ஸீதை, ஹனுமான் மொழிந்ததைக் கேட்டு, ராம ஸங்கீர்த்தனங் கேட்டமையால் மனக்களிப்புற்று மரத்தின் கீழிருக்கிற ஹனுமானைப் பார்த்து, 'நான் பூமண்டலத்தில் ராஜஸிம்ஹர்கள் அனைவரிலும் முக்யனும் ஸ்வரூபஜ்ஞனுமாகிய தசரத மஹாராஜனுக்கு மருமகள். அம்மஹாராஜன் பகைவரது ஸைன்யங்களைப் பறந்தோடச் செய்பவன், (இப்படிப்பட்ட பகைவனிருக்கும் பொழுது அவன் இல்லாமற்போயினனே!) மஹானுபாவனும் விதேஹாதிபதியுமாகிய ஜனகமஹாராஜன் புதல்வி. நான் ஸீதையென்னும் பெயருடையவள். நான் புத்தி ஸம்பன்னனாகிய ராமனது பார்யை. நான் மணம் புரிந்தபின்பு அந்தத் தசரதனது க்ருஹத்தில் பன்னிரண்டு ஸம்வத்ஸரங்கள் இடைவிடாமல் மனுஷ்ய போகங்களை அனுபவித்துக்கொண்டு ஹாரம் சந்தனம் முதலிய ஸமஸ்த அபீஷ்ட பதார்த்தங்களும் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்று விளக்கமுற்றிருந்தனன். அனந்

தரம் பதின்மூன்றாவது ஸம்வத்ஸரத்தில் தசரதமஹா ராஜர் உபாத்யாயரான வஸிஷ்டருடன்கூடி இக்ஷ்வாகு குல நந்தனாகிய ஸ்ரீராமசந்த்ரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய முயன்றனர். அங்ஙனம் அவர் ஸ்ரீராமபட்டாபி ஷேகத்திற்காக ஸம்பாரங்களைச் சேர்த்துக்கொண் டிருக்கையில், அவரது பார்யை கைகேயியென்பவள் தன் பர்த்தாவைப் பார்த்து 'ராமனுக்குப் பட்டாபி ஷேகம் நடக்குமாயின், தினந்தோறும் எப்படிப்பட்ட போஜனம் அளிப்பினும் தின்னேன்; எப்படிப்பட்ட பானகம் கொடுப்பினும் குடியேன்; இனி என்றும் தீர்த்தபானஞ் செய்யேன், அன்னமும் தின்னேன். இந்தப் பட்டாபிஷேகமே என் ப்ராணன்களுக்கு முடிவு. ராஜஶ்ரேஷ்டனே! நீர் முன்னம் எனக்கு ப்ரீதியுடன் வரங்கொடுத்ததாகச் சொன்னீரே; அவ்வார்த்தையை வீண்செய்யலாகாதென்றிருப்பீராயின், ராமன் இப் பொழுது அரண்யம் போவானாக' என்றனள். அம் மன்னவர் கைகேயிக்குத் தான்வரங்கொடுத்திருந்ததை நினைத்து, அவ்வரத்திற்காக அவள் ராமனை அடவிக்கு அனுப்பும்படி உரைத்த அப்ரியமும் க்ரூரமுமான வார்த்தையைக் கேட்டு ஸத்யவாதியாகையால் சொல் தவறமாட்டாமல் ஒன்றுந் தோற்றப் பெறாதிருந்தனர். அனந்தரம் வயது சென்ற அம்மன்னவர் ஸத்யத்தையும் தர்மத்தையும் தவறாமல் நடத்துந் தன்மையராகையால் பெரும்புகழுடைய தன் மூத்தகுமாரனாகிய ராமனைப் பார்த்து ரோதனஞ் செய்துகொண்டே தான் அவனுக் குக்கொடுத்ததாக ப்ரதிஜ்ஞை செய்த ராஜ்யத்தை மீளவும் தனக்குக் கொடுக்கும்படி யாசித்தனர். ஸ்ரீமானாகிய அந்த ராமன் பட்டாபிஷேகத்தைக் காட்டிலும் தனக்கு மிகுதியும் ப்ரியமான பித்ருவாக் யத்தை மனப்பூர்வமாக 'அப்படியே' என்று அங்கீ கரித்தனன். ஸத்ய பராக்ரமனான ராமன் ஒருவர்க்குக் கொடுப்பானேயன்றி ப்ராண ஸங்கடம் நேரினும் ஒருவ ரிடம் கைநீட்டி வாங்க மாட்டான். ப்ராணன் போகும் படியான ஆபத்து நேரிடினும் ஒருவர்க்கு அப்ரியமான

வார்த்தையைச் சிறிதும் மொழியமாட்டான். அப்பெரும் புகழன் தான் உடுத்திருந்த விலையுயர்ந்த வஸ்த்ரங்களைத் துறந்து மரவுரிகளை உடுத்து மனத்திலுங்கூட ராஜ்ய விருப்பமின்றித் துறந்து வனம்போகத் தொடங்கி என்னைத் தன் தாயான கௌஸல்யையிடம் இருக்கும்படி நியோகித்தனன். அங்ஙனம் நியமிக்கையில், நான் வனத்தில் ராமனுடன் ஸஞ்சரிப்பவளாகி அவனுக்கு முன்னமே விரைவாக ப்ரயாணமாய்ப் புறப்பட்டனன். ஏனெனில் — ஸ்வர்க்கத்தில் வஸிக்க நேரினும் ராமன் இல்லையாயின் அதுவுங்கூட எனக்கு ருசிக்காது. 1 ஸுமித்ரையின் வயிறு குளிரப் பிறந்து மித்ரர்களுக்கெல்லாம் ஆநந்தம் விளைவிப்பவனும் ராம கைங்கர்யமென்னும் மஹாபாக்யமுடையவனுமாகிய லக்ஷ்மணன் அண்ணனுக்கு முன்னமே அவனைப் பின்றொடரமுயன்று மரவுரி உடுத்துப் பல ஆபரணங்கள் அணிந்தாற்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். அங்ஙனம் நாங்கள் மூவரும் ராஜாஜ்ஞையைச்

---

1. இங்கு 'ப்ராகேவது மஹாபாகஸ் ஸௌமித்ரிர்மித்ரநந்தந:। பூர்வஜஸ்யாநுயாத்ரார்தே த்ருமசீரைரலங்க்ருத:' என்று மூலம். (ப்ராகேவ) ராமனுக்கு முன்னமே. ராமனுக்குப்பின்பே லக்ஷ்மணன் மரவுரி முதலியவற்றை அங்கீகரித்தானாயினும், அவனது விரைவின் மிகுதியைத் தோற்றுவிக்கும்பொருட்டு முன்னமே அவற்றை அங்கீகரித்தானென்று சொல்லப்பட்டது. (மஹாபாக:) 'அஹம்ஸர்வங்கரிஷ்யாமி' 'நான் எல்லாவற்றையுஞ் செய்கிறேன்', என்ற தன் ப்ரதிஜ்ஞையின்படி ஸமஸ்த கைங்கர்யங்களையும் செய்யும்படி அபிஷேகத்திற்கு விக்னம் உண்டாயிற்றல்லவா. அப்படிப்பட்ட விக்னத்தை விளைவிக்கும்படியான பாக்யத்தோடு கூடினவன். (ஸௌமித்ரி:) 'ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய' (நீ ராமனோடு வனவாஸஞ் செய்வதற்கே என்னிடத்தில் பிறந்தாய்) என்னும்படி ஸுமித்ரையின் கர்ப்பத்தில் பிறந்தவன். (மித்ரநந்த:) ஸர்வவித கைங்கர்யங்களும் செய்பவனென்று அனுகூலர்களால் ஸந்தோஷிக்கத் தகுந்தவன். இப்படிப்பட்ட லக்ஷ்மணன் (பூர்வஜஸ்யாநுயாத்ரார்தே த்ருமசீரைரலங்க்ருத:)

சிரஸில் வஹித்துத் திடமான நியமத்துடன் புறப்பட்டு இதுவரையில் என்றும் பாராததும் புகக்கூடாததுமான ஓர் அடவியில் ப்ரவேசித்தனம். அபார தேஜஸ்வியாகிய ராமன் தண்டகாரண்யத்திலிருக்கும்பொழுது அவன் பார்யையாகிய என்னைத் துர்ப்புத்தியும் ராக்ஷஸனுமாகிய ராவணன் அபஹரித்துக் கொண்டு வந்தனன்; நான் ப்ராணன்களோடிருக்க இரண்டு மாதங்களே கெடுவிட்டிருக்குன்றனன். ஆகையால் அவ்விரண்டுமாதத்திற்குமேல் நான் ப்ராணன்களை இழக்கவேண்டும்' என்றனள். முப்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.



ஸீதை ஹனுமானை ராவணனென்று ஸந்தேஹிக்க, ஹனுமான் ராமகுணங்களைச் சொல்லி ஸந்தேஹந் தீர்த்தல்.

வானர யூதநாதனாகிய ஹனுமான் துக்கத்தின் மேல் துக்கம் உண்டாகப் பெற்று வருந்துகின்ற ஸீதாதேவியின் வார்த்தையைக் கேட்டு அவளுக்கு இனிய மறுமொழி கூறினன் :— 'தேவி! நான் ராமனது ஆஜ்ஞையால் தூதனாகி உன்னிடம் வந்தேன். வைதேஹி! ராமன் க்ஷேமமாயிருக்கின்றனன்; தன் க்ஷேமத்தை உன்னுடன் சொல்லவுஞ் சொல்லினன். தேவி! ப்ரஹ்மாஸ்த்ரத்தையும் வேதங்களையும் அறிந்து வேதவித்துக்கள் அனைவரிலும் மேலாகித் தசரதன்பெற்ற குமாரனாகிய ராமன் உன்னுடன் தன் க்ஷேமத்தைச் சொல்லச் சொல்லினன்.

---

அண்ணனைப் பின்றொடர்ந்து போவதற்காக மரவுரிகளால் அலங்கரிக்கப்பட்டனன். மரவுரி அலங்காரமாகாதுபோயினும் ராம கைங்கர்யத்திற்கு அனுரூபமாயிருக்கையால் லக்ஷ்மணனுக்கு அலங்காரமாயிருந்ததென்று கருத்து.

உன் பர்த்தாவான ராமனுக்கு ப்ரியனும் அவனை அநுஸரித்திருக்கும் மஹாதேஜஸ்வியுமாகிய லக்ஷ்மணனும் சோகத்தினால் மிகுதியும் பரிதாபமுடையனாகி உனக்குத் தலை வணங்கி நமஸ்காரஞ் செய்தான்' என்றனன். அம்மாஹாநுபாவையான ஸீதாதேவி புருஷஸ்ரேஷ்டர்களான அந்த ராமலக்ஷ்மணர்களின் குசலத்தைக் கேட்டு ப்ரீதியால் சரீரம் முழுவதிலும் மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்று ஹநுமானைப் பார்த்து, 'மனுஷ்யன் பிழைத்திருப்பானாயின், நூறாண்டு கழிந்த பின்னாயினும் தவறாமல் ஆநந்தம் பெறுவான்' என்று உலகத்தில் புகழ்பெற்ற இப்பழமொழி என் விஷயத்தில் ஸத்யமாகத் தோற்றுகின்றதே! ஆச்சர்யம் என்றனள். ராமனிடத்தினின்று வந்த அந்த ஹநுமான் விஷயமாக அந்த ஸீதைக்கு [1] அற்புதப்ரீதி உண்டாயிற்று. அங்ஙனம் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் ஸந்தேஹத்தை விட்டு நம்பிக்கையோடு ஸல்லாபஞ் செய்தனர். வானரக்கூட்டத்தலைவனாகிய ஹநுமான் அங்ஙனம் துக்கத்தினால் இளையாகி அந்த ஸீதை மொழிந்த அவ்வார்த்தையைக் கேட்டு மெதுவாக அம்மாது சிரோமணியின் அருகிற் சென்றனன். அந்த ஹநுமான் எவ்வளவுக்கெவ்வளவு அந்த ஸீதையின் அருகிற் சென்றானோ, அவ்வளவுக்கவ்வளவு அவள், 'ராவணனே இவ்வேஷத்துடன் வந்தானோ என்னவோ?' என்று அவன்மேல் ஸந்தேஹங் கொண்டனள். அவள் 'ஐயோ! இவன்முன்னே நான் ஏதேதோ மொழிந்தனனே! இங்ஙனம் மொழியக்கூடுமோ? இது அநுசிதமாயிற்றே! சீ! முன்பின் பாராமல் இங்ஙனம் மொழிந்தேனே! ஆ! ராவணனே மாறுருவம் பூண்டு வந்திருக்கின்றான்' என்று சிந்தித்தனள். சோகத்தினால் இளைத்திருக்கின்ற அப்பெண்மணி ஒரு தோஷமுமில்லாத அவயவங்களையுடைய அந்த ஸுந்தரி அவ்வசோக வ்ருக்ஷத்தின் கிளையை விட்டு அங்குத் தரையில் உட்கார்ந்தனள்.

---

1 அற்புத ப்ரீதி—ஆச்சர்யமான ப்ரீதி.

மிகுந்த பாஹுபலமுடைய ஹனுமானும் துக்கத்தினால் பீடிக்கப்பட்டுப் பயத்தினால் ஒன்றுந் தெரியாமல் தடுமாறுகின்ற அந்த ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைப் பார்த்து வந்தனஞ் செய்தனன். அப்பெண்மணி பயத்தினால் மிகுதியும் மனங்கலங்கப் பெற்று அவனை மீளவும் பாராமலே இருந்தனள். சந்த்ரன் போன்ற முகமுடைய அந்த வைதேஹி அங்ஙனம் தனக்கு வந்தனஞ் செய்கின்ற அந்த ஹனுமானைப் பார்த்து மிகுதியும் பெருமூச்செறிந்து இனிய குரலுடன் அவ்வானரனைக் குறித்து 'ராவணன் இயற்கையாகவே மாயையுடையவன். முன்பு அங்ஙனம் வந்து என்னை இவ்வளவு செய்தனன். இப்பொழுது அந்தராவணனே நீயாகி மாயையைக் கைப்பற்றி மீளவும் பரிதாபத்தை விளைவிக்கின்றனையோ? அங்ஙனம் எனக்குப் பரிதாபம் விளைப்பது உனக்கு எள்ளளவும் நல்லதன்று. தனக்கு எப்பொழுதுமுள்ள உருவத்தை விட்டு ஸந்யாஸி உருவந்தரித்து ஜனஸ்தானத்தில் எனக்குப் புலப்பட்ட அந்த ராவணனே நீ. ராக்ஷஸா! நீ நினைத்த வடிவந் தரிக்கவல்லவன். நான் உபவாஸத்தினால் இளைத்திருக்கின்றனன். இவ்வளவிலே மிகுதியும் வருந்தியிருக்கின்றனன்; இப்படிப்பட்ட என்னை மீளவும் மேன்மேலும் வருத்துகின்றனையே. இது உனக்கு நல்லதன்று; அல்லது நான் இப்பொழுது ஸந்தேஹித்தேனே; இது இப்படி அன்று; இங்ஙனம் சங்கிப்பது யுக்தமன்று. ஏனெனில் உன்னைப் பார்க்கும் பொழுது என் மனத்தில் ஸந்தோஷம் உண்டாகின்றது. நீ ராமதூதனாகவே வந்திருப்பது நிஜமாயின், உனக்குச் சுபம் உண்டாகுமாக. வானர ச்ரேஷ்டனே! ராமகதைகள் எனக்கு ப்ரியமாயிருப்பவை. ஆகையால் உன்னை வினவுகின்றேன். வானரோத்தமா! என் ப்ரியனாகிய ராமனது குணங்களை எனக்குச் சொல்வாயாக. நல்லியற்கை யுடையவனே! ஜலப்ரவாஹம் ஆற்றின் கரையைக் கரைப்பதுபோல் நீ என்மனத்தைக் கரைக்கின்றனை. ராமனிடத்தினின்று வெகுகாலமாக அப

ஹரிக்கப்பட்டு இங்ஙனமிருக்கின்ற நான் இப்பொழுது ஸ்வப்னத்தினால் ராமன் அனுப்பின ஒரு வானரனை யாவது பார்க்கிறேனல்லவா. ஆ! ஸ்வப்னம் எவ்வளவு ஸுகமாயிருக்கின்றது. இங்ஙனம் ஸ்வப்னத்திலாயி னும் பராக்ரமம் மிகுந்த வீரனாகிய ராமனையும் லக்ஷ்மணனையும் காண்பேனாயின், நான் வருந்தமாட் டேன். ஸ்வப்னமும் கூட என்மேல் ராமனைப் போல் த்வேஷமுடையதாயிருக்கின்றதே. என்ன செய்வேன். எனக்கு இது ஸ்வப்னமாகத் தோற்ற வில்லை. ஏனெ னில், ஸ்வப்னத்தில் குரங்கைக் கண்டால் க்ஷேமம் சிறிதும் உண்டாகாது. எனக்கோ இப்பொழுது க்ஷேமம் உண்டாயிருக்கின்றது. எப்பொழுதும் இடை வீடின்றி ராமனது க்ஷேமவார்த்தையைக் கேட்க வேண்டுமென்று மிகுதியும் விருப்பமுற்றுச் சிந்தித்துக் கொண்டிருக்கின்றேனே! அந்தச் சிந்தை இவ்வுருவ மாகப் பரிணமித்து எனக்கு ப்ரமத்தை விளைவிக் கின்றதோ! அல்லது உபவாஸத்தினால் எனது தாதுக்க ளெல்லாம் கலங்கியிருக்கையால் வாததாதுவின் விகாரத்தினால் இங்ஙனம் தோற்றுகின்றதோ! அல்லது பைத்யத்தினால் உண்டான ப்ரமமோ இது! அல்லது கானலிற்போல் ஒன்றிருக்கையில் மற்றொன்றாகப் புலப்படுகிறதா என்ன? அல்லது இது பைத்யத்தினால் விளைந்த தன்று; பைத்யமாயின் மதிமயக்கம் உண்டாகு மல்லவா! எனக்கு மதிமயக்கம் இல்லையே! மற்றதும் அன்று. ஏனெனில் நான் என்னையும் இவ்வானரனையும் நன்கு உணர்கின்றேனே' என்றனள். இங்ஙனம் ஸீதை அனேக விதமாக 'மோஹாதிகளா? ராவணனா? அன்று?' என்ற இப்பக்ஷங்களின் பலாபலங்களை நன்கு பர்யாலோசனை செய்து ராக்ஷஸர் காமரூபிகளாயிருப் பதை நினைத்து அந்த ஹனுமானை ராக்ஷஸேச்வர னாகிய ராவணனாகவே நினைத்தனள். அப்பொழுது சிறுத்த இடையுடைய அந்த ஜனகராஜன் புதல்வி யாகிய ஸீதை அங்ஙனம் நினைத்து அதன்மேல் அவ் வானரனுடன் எதுவும் பேசாதிருந்தனள். வாயுகுமார

னான ஹனுமான் ஸீதை மனத்தில் நினைத்த அபிப்ராயத்தை அறிந்து செவிக்கினிய சொற்களைச் சொல்லி அவளுக்கு அப்பொழுது மிகுதியும் ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டு ‘ராமன் தேஜஸ்ஸினால் ஸூர்யன் போல் மிகுதியும் ப்ரகாசிப்பவன்; சந்த்ரனைப்போல் ஸமஸ்த லோகங்களின் மனத்திற்கும் இனியனாயிருப்பவன்; குபேரனைப்போல் ஸமஸ்த லோகங்களுக்கும் ராஜாதி ராஜனாயிருப்பவன்; மஹாவிஷ்ணுவைப்போல் மிகுதியும் பராக்ரமமுடையவன்; பெரும் புகழுடையவன்; தேவர்களில் தலைமையுள்ள ப்ருஹஸ்பதியைப் போல் ஸத்யவாதி; மதுரமாகப் பேசுந்தன்மையன். மேலும், அவன் தகுந்த விஷயங்களில் மாத்ரமே கோபத்தைக் காட்டுவான். அவனது கோபம் வீணாகாதது; கோபம் விளைத்தவனைக் கொன்றேதீருவான்; உலகத்தில் அனைவர்க்கும் அவன் மேலானவன்; அன்றியும் மஹாரதன். உலகமெல்லாம் எந்த மஹானுபாவனது புஜங்களின் நிழலைப் பற்றியிருக்கின்றதோ, அப்படிப்பட்ட ராமனை மானுருவத்தினால் ஆஸ்ரமத்தினின்று அப்புறம் போகச் செய்து அவனில்லாத பொழுது உன்னைப் பறித்துக்கொண்டு வந்த ராவணனுக்கு நேரப்போகிற பயனைக் காண்பாயாக. இனி ஸ்வல்ப காலத்திற்குள்ளாகவே கோபத்தினால், எரிகின்ற அக்னிபோல் விளங்கும் பாணங்களை எய்து எந்தப்பராக்ரமசாலி யுத்தத்தில் ராவணனைக்கொல்லப் போகிறானோ’ அந்த ராமனால் அனுப்பப்பட்டுத் தூதனாகி உன்னிடம் வந்திருக்கின்றனன். ராமன் உன்னைப் பிரிந்து துக்கத்தினால் பரிதபித்து உன் க்ஷேமத்தை விசாரிக்கச் சொல்லினன். மஹாதேஜஸ்வியும் மஹா பாஹுவும் ஸுமித்ரைக்கு ஆநந்தம் விளைப்பவனுமாகிய லக்ஷ்மணனும், உனக்கு நமஸ்காரஞ்செய்து உன்க்ஷேமத்தை விசாரிக்கச் சொல்லினன். தேவீ! ராமனுக்கு நண்பனும் வானரஸ்ரேஷ்டர்களுக்கெல்லாம் அரசனுமாகிய ஸுக்ரீவனென்னும் வானரனும் உன்க்ஷேமத்தை விசாரிக்கச் சொல்லினன்.

ராமனும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் தினந்தோறும் உன்னையே நினைத்துக்கொண்டிருக்கின்றனர். ஸீதே! நீ இங்ஙனம் ராக்ஷஸர்கையில் அகப்பட்டும் பாக்ய மஹிமையால் ப்ராணனோடிருக்கிறாயன்றி வேறில்லை. நீ ராமனையும் மஹாபலனாகிய லக்ஷ்மணனையும் பலகோடி வானரர்களால் சூழப்பட்ட மஹாதேஜஸ்வியான ஸுக்ரீவனையும் சீக்ரத்திலேயே பார்க்கப் போகின்றனை. நான் ஸுக்ரீவனுக்கு மந்த்ரி; ஹனுமானென்னும் வானரன்; மஹா ஸமுத்ரத்தைத் தாண்டி லங்காபுரியில் புகுந்து வந்தனன். நான் பராக்ரமத்தைக் கைப்பற்றித் துராத்மாவாகிய ராவணன் தலைமேல் அடியிட்டு உன்னைக் காண்பதற்காக இவ்விடம் வந்தனன் தேவீ! நீ என்னை எப்படிப்பட்டவனாக ப்ரமிக்கின்றனையோ, அப்படிப்பட்டவனல்லேன். இந்த சங்கையை விடுவாயாக. நான் மொழியும் வார்த்தையில் நம்பிக்கை வைப்பாயாக' என்றனன். முப்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

(ஸீதை ராமனது அவயவ லக்ஷணங்களை வினவ, ஹனுமான் அவற்றைக்கூறி அவளை ஸமாதானப்படுத்துதல்.) ।

ஸீதை, அங்ஙனம் வானரதிலகனாகிய ஹனுமான் மொழிந்த ராமகதையைக் கேட்டவுடனே, இனிய உரைகளுடன் ஸமாதானப்படுத்திக்கொண்டு இங்ஙனம் மொழிந்தனள்:—'எவ்விடத்தில் உனக்கு ராமனோடு [1] ஸமாகம் சேர்ந்தது? லக்ஷ்மணனை எப்படி அறிவாய்? வானரர்களுக்கும் நரர்களுக்கும் (மனிதர்களுக்கும்) சேர்த்தி எவ்வண்ணம் சேர்ந்தது? வானரோத்தமா!

1. சேர்த்தி.

ராமனது லக்ஷணங்கள் எவையோ, லக்ஷ்மணனுடைய லக்ஷணங்கள் எவையோ, அவற்றை மீளவும் எனக்கு ஸவிஸ்தரமாக மொழிவாய். அவைகளைக் கேட்பேனாயின் எனக்கு மனவருத்தம் மேலெழாதிருக்கும். அந்த ராமனது அவயவங்களின் தீர்மை எப்படியிருக்கும்? உருவம எபபடிபபடடது? துடைகள் எப்படி இருக்கும்? கைகள் எப்படியிருக்கும்? எனக்குச் சொல்வாயாக. லக்ஷ்மணனுடைய அவயவ ஸந்நிவேசமும் உருவமும் கைகால் முதலிய அவயவங்களும் எப்படிப்பட்டவை? அதையும் எனக்குச் சொல்வாயாக' என்று வினவினள். ஸீதை இங்ஙனம் வினவுகையில், வாயுகுமாரனாகிய அந்த ஹனுமான் உடனே ராமனது 'ரூபரேகாதிகளை உள்ளபடியே மொழியத் தொடங்கித் 'தாமரை யிதழ் போன்ற கண்களையுடையவளே! ஸீதே! நீ எனது பாக்ய வசத்தினால், உன்பர்த்தாவான ராமனுடையவும் லக்ஷ்மணனுடையவும் அவயவ ஸந்நிவேசத்தைத் தெரிந்து கொண்டு நன்றாக வினவுகின்றனை. ஆ! ஆ! எனக்கு ராமலக்ஷ்மணர்களைக் கீர்த்தனஞ் செய்யும்படியான பாக்யம் கிடைத்ததே! அகன்ற கண்களையுடையவளே! நான் ராமனிடத்தில் எந்த அடையாளங்களைக் கண்டேனோ; லக்ஷ்மணனிடத்தில் எந்த எந்த அடையாளங்களைக் கண்டேனோ; அவற்றையெல்லாம் சொல்லுகிறேன் கேள். [1] ஜனக ராஜன் புதல்வியே! ராமன் ஸர்வாங்கஸுந்தரன்; தாமரை யிதழ்போன்ற கண்களையுடையவன்; ஸமஸ்த ஜனங்களின் மனத்தை

---

1. இங்கு 'ராமஃ கமலபத்ராக்ஷஃ ஸர்வஸத்த்வமநோஹரஃ| ரூபதாக்ஷிண்யஸம்பந்நஃ ப்ரஸூதோ ஜநகாத்மஜே' என்று மூலம். (ராமஃ) ஸர்வாங்கஸுந்தரன். (கமலபத்ராக்ஷஃ) ப்ரவாஹத்தில் நீந்திப் போகின்றவனை அதன் சுழி அப்புறம் போகவொட்டாமல் இழுத்து அமுக்கிவிடுவதுபோல், ராமனது காந்தி ப்ரவாஹத்தில் நீந்திக்கொண்டிருக்கையால் அதன் சுழிபோல் இழுத்து அமுக்கிவிடும்படியான நேத்ர சோபையுடையவனென்று கருத்து. அந்த நயன ஸௌந்தர்யத்தில் ஈடுபடுவது ஸர்வஜந்து

யும இழுக்குந்தன்மையன்; ஸௌந்தர்யமும் தா யாதி குணங்களும் நிரம்பப்பிறந்தவன்; தேஜஸ்ஸில் ஸூர்யனைப் போன்றவன்; பொறுமையில் பூமியை நிகர்த்தவன்; புத்தியில் ப்ருஹஸ்பதிக் கொப்பானவன்; கீர்த்தியில் தேவேந்த்ரனோ டொத்தவன். மேலும், அவன் ப்ராணிலோகத்தையெல்லாம் பாதுகாக்குந் தன்மையன்; விசேஷித்துத் தன் பந்து ஜனங்களை ரக்ஷிப்பவன்; வர்ணாச்ரம தர்மங்களை நிலைநிறுத்துகை யாகிற தன் க்ஷத்ரிய ஜாதிக்குத் தகுந்த வ்ருத்தி யைப் பாதுகாப்பவன்; ஸாதாரணமாக ஸமஸ்த தர்மத் தையும் பாதுகாப்பவன்; சத்ருக்களைத் தபிக்கச்செய்ப வன். பாமினீ! ராமன் உலகத்திலுள்ள நான்கு வர்ணங்

---

ஸாதாரணமென்கிறான். (ஸர்வஸத்த்வமநோஹர:) ஸமஸ்த ஜந்துக்களின் மனங்களை தன் ஸௌந்தர்யத்தினால் இழுக்குந் தன்மையன். அந்த நயன ஸௌந்தர்யம் மனிதர்களுக்கு மாத்ரமே யன்று, திர்யக் ஜாதியாகையால் கிளையினின்று கிளைக்குத் தாண்டுகொலிடுந் தன்மையுள்ள என்னைப்போன்றவன் மனத்தையுங் கூட, விசேஷமறியாத என் மனத்தையுங்கூட இழுக்கின்றது. ஆகையால் இது ஸர்வஜனமனோஹரமாயிருப்பது. (ரூபதாக்ஷிண்ய ஸம்பந்ந:) ரூபம். இது திவ்யமங்கல விக்ரஹ குணங்களை யெல் லாங் காட்டுகிறது. தாக்ஷிண்யம் - இது ஆத்ம குணங்களை எல்லாங் காட்டுகிறது. திருமேனியின் ஸௌந்தர்யாதி குணங்க ளும் திவ்யாத்ம ஸ்வரூபத்தைப் பற்றின தாக்ஷிண்யாதி குணங்க ளும் குறைவற்றிருக்கப் பெற்றவன். (ஸம்பந்ந: ப்ரஸூத:) குறை வறப் பிறந்தவன். இவையெல்லாம் இடையில் ஏறிட்டுக்கொண் டவையல்ல; பிறப்போடுகூடவே விளைந்தவை யென்று கருத்து. மிகுதியும் சிறந்தவனாகச் சொல்லுகின்றனையே! இப்படிப்பட்ட வன் மற்றொருவன் உளனோ? இல்லையா? என்னில் :—சொல்லு கின்றனன்—ஜனகாத்மஜே) ஜனகராஜன் புதல்வியாகிய நீ யொருத்தியே அப்படிப்பட்டவளாக ப்ரஸித்தி பெற்றிருக்கிரு யன்றிப் புருஷர்களில் அப்படிப்பட்டவன் எவனும் இல்லையென்று கருத்து.

களையும் பாதுகாப்பவன்; மேலும் உலகத்தில் உள்ள அந்தந்த மர்யாதைகளைத் தான் அனுஷ்டிப்பது மாத்ரமேயன்றி ப்ரஜைகளைக் கொண்டும் அனுஷ்டிக்கச் செய்பவன். அவன் மிகுதியும் காந்தி விளங்கப் பெற்றவன்; ஸத்புருஷர்களால் மிகுதியும் பூஜிக்கப் பட்டவன்; [1] ப்ரஹ்மசர்ய வ்ரதத்தில் தவறாமல் நிலை நிற்பவன்; ஸாதுஜனங்களுக்கு வேண்டிய உபகாரங்களை யெல்லாம் அறிந்தவன்; ஐஹிகாமுஷ்மிகமான கர்ம கதிகளை அறிந்தவன். அன்றியும், அவன் ஆந்வீக்ஷகி த்ரயி வார்த்தை தண்டநீதி என்னும் ராஜ வித்யைகள் நான்கிலும் நன்கு சிக்ஷிக்கப்பட்டவன்; ப்ராஹ்மணர் களைப் பணியுந்தன்மையன்; எல்லா வித்யைகளையும் மனத்தில் நிலைநிறுத்திக்கொண்டிருப்பவன்; ஸதாசார முடையவன். பெரியோரிடத்தில் வணக்கமுடையவனே யன்றிப் பகைவரைப் பறந்தோடச் செய்பவன். அவன் யஜுர்வேதத்தை நன்றாக ஓதி வேதவித்துக்களால் மிகுதியும் பூஜிக்கப்பட்டிருப்பவன். தனுர் வேதத்தி லும் மற்றவேதங்களிலும் வேதாங்கங்களிலும் அவன் பண்டிதன். தேவீ! ராமன் பெருந்தோள்களும் நீண்ட புஜதண்டங்களும் உடையவன். அவனது கண்டம் சங் கம்போன்றிருக்கும். அவனது முகம் மிகுதியும் அழகா யிருக்கும். அவனுடைய தோளெலும்புகள் மறைந் திருக்கும்; கடைக்கண்கள் சிவந்தழகாயிருக்கும். தேவீ! ராமன் ஸகலஜனங்களுக்கும் ப்ரஸித்தமானவன். அவனுடைய கண்டஸ்வரம் துந்துபிசப்தம்போல் கம்பீரமாயிருக்கும். அவன் நிகுநிகென்ற மேனியின் வர்ணமுடையவன். அவனது பராக்ரமம் மிகுதியும் பெருமையுற்றது. அவன் மிகக் குள்ளமும் மிக உயரமு மில்லாமல் ஸமமான சரீரப்ரமாணமுடையவன். அவனுடைய அவயவங்களெல்லாம் ஒன்றோடொன்று

---

1. க்ருஹஸ்தனுகிய இவன் ப்ரஹ்மசர்ய வ்ரதத்தில் நிலை நிற்கையாவது ருதுகாலந்தவிர மற்ற காலங்களில் ஸ்த்ரீ ஸங்கத்தை விட்டிருக்கை.

ஏற்றக்குறைவுகளின்றி ஸமமாக வயதின் சீர்மையால் நன்கு பிரிவினையுற்றிருக்கும் அவன் கருத்த மேனியின் வர்ணமுடையவன். அவனுடைய மார்பு மணிக்கட்டு முட்டி என்னும் இம்மூன்றும் வலிவாயிருக்கும். அவனது புருவங்கள் வ்ருஷணங்கள் புஜங்கள் ஆகிய மூன்றும் நீண்டிருக்கும். மயிர்நுனிகளும் வ்ருஷணங்களும் முழந்தாள்களும் ஒன்றோடொன்று ஸமமாயிருக்கும்; உதரம் நாபி உரம் ஆகிய இம்மூன்றும் உயர்ந்திருக்கும்; கண்களின் கடைகள் நகங்கள் ஹஸ்தபாதங்கள் ஆகிய மூன்றும் சிவந்திருக்கும்; பாதரேகைகள் தலைமயிர்கள் [1] லிங்கமணி ஆகிய மூன்றும் சிகுசிகுப்புற்றிருக்கும்; கண்டஸ்வரம் நடை நாபி ஆகிய மூன்றும் என்றும் கம்பீரமாயிருக்கும். அவன் உதரத்திலும் கண்டத்திலும் மூன்று ரேகைகள் உண்டாகப் பெற்றவன். அவனது ஸ்தனங்கள், ஸ்தனங்களின் நுனிகள், பாதரேகைகள் ஆகிய மூன்றும் பள்ளமாயிருக்கும்; கண்டம் லிங்கம் பின்புறம்கணைக்களால் ஆகியநான்கும் குட்டையாயிருக்கும். அவனது சிரஸ்ஸு மூன்று சுழிகளுடன் கூடி ஒரு வகையாக உருண்டு குடையின் உருவம்போன்ற உருவம் பொருந்தி அகன்று அழகாயிருக்கும். அவன் கட்டைவிரலடியில் நான்கு ரேகைகள் உண்டாகப்பெற்றவன்; நெற்றி உள்ளங்கால் உள்ளங்கை ஆகிய இவற்றில் நான்கு ரேகைகளுடையவன். அவன் நான்கு முழம் அளவுடையவன்; (தொண்ணூற்றாறங்குல அளவுடையவன்.) அவனது புஜங்களும் முழந்தாள்களும் துடைகளும் கணைக்கால்களும் ஒன்றோடொன்று ஸமமாயிருக்கும். அவனுடைய புருவங்களும் மூக்குரந்த்ரங்களும் கண்களும் செவிகளும் உதடுகளும் ஸ்தனங்களின் நுனிகளும் முழங்கைகளும் மணிக்கட்டுகளும் முழந்தாள்களும் வ்ருஷணங்களும் இடுப்புகளும் கைகளும் கால்களும் குதிகால்களும் ஸமமாயிருக்கும். அவன் கோரைப்பல்போன்ற நான்கு பற்களை யுடைய

---

1. லிங்கமணி—ஆண்குறியின் நுனியிலுள்ள உள்பாகம்.

வன். அவன் ஸிம்ஹம்போலவும் பெரும் புலிபோலவும் யானைபோலவும் எருதுபோலவும் கம்பீரமான நடையுடையவன். அவன் கோவைப் பழம்போல் சிவந்தழகான உதடுகளும் சதைபிடித்துப் பருத்த ஹனுக்களும் (தவடைகளும்) நீண்டுயர்ந்த மூக்கும் உடையவன். அவனுடைய கண்களும் பல்வரிசையும் மேனியின் சர்மமும் பாதங்களும் தலைமயிர்களும் நிகுநிகுப்புற்றிருக்கும். அவனது மூதுகும் மேனியும் கைகால் விரல்களும் கைகளும் மூக்கும் கண்களும் காதுகளும் [1] லிங்கமும் ஆகிய இவ்வெட்டும் நீண்டிருக்கும். ராமனது முகமும் கண்களும் வாயும் நாக்கும் உதடும் தவடையும் ஸ்தனங்களும் நகங்களும் கைகளும் கால்களும் தாமரை புஷ்பம்போலிருக்கும். அவனது தலையும் நெற்றியும் செவிகளும் கண்டமும் மார்பும் ஹ்ருதயமும் வயிறும் கைகளும் கால்களும் பின்புறமும் பெரியனவாயிருக்கும். அவன் தேஜஸ்ஸிலும் யசஸ்ஸிலும் ஸம்பத்திலும் நாற்புறத்திலும் ப்ரஸித்தி பெற்றவன். அவனது பல்வரிசையும் கண்களும் வெளுத்திருக்கும். அவனுடைய கக்ஷமும் வயிறும் மார்பும் மூக்கும் தோள்களும் நெற்றியும் உயர்ந்திருக்கும். அவனது விரல்கணுக்களும் தலைமயிர்களும் உடம்பு மயிர்களும் நகங்களும் சர்மமும் லிங்கமும் தாடிமீசைகளும் த்ருஷ்டியும் புத்தியும் ஸூக்ஷ்மமாயிருக்கும். அந்த ராகவன் பூர்வாஹ்ண மத்யாஹ்ன அபராஹ்ணங்களென்னும் மூன்று காலங்களிலும் வரிசையாகத் தர்ம அர்த்த காமங்களை அநுஷ்டிக்குந் தன்மையன். அன்றியும், அவன் ஸத்ய தர்மங்களில் நிலைநின்றவன்; செல்வப்பெருக்குடையவன்; எப்பொழுதும் தனம் முதலியவற்றை ஸம்பாதித்து அவைகளை யாசகர்களுக்குக் கொடுத்துக் கொண்டிருப்பவன், அந்தந்த தேச காலங்களுடைய

---

1. இங்கு-லிங்கத்திற்கு நீளமாவது-நேராயிருக்கை. இல்லையாயின், கீழ்-'குட்டையாயிருக்கும்' என்பதோடு விரோதம் வரும். ஸாமுத்ரிக சாஸ்த்ரங்களுக்கும் பொருந்தாது.

பேதங்களை அறிந்தவன்; ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ப்ரியமாகவே பேசுந் தன்மையன். அந்த ராமனுக்கு உடன்பிறந்தவனும் [1] இருதாய்க் குமாரனும் தோல்வி யடையாதவனுமாகிய லக்ஷ்மணன் அனுராகத்திலும் ரூபத்திலும் மற்ற குணங்களிலும் ராமனைப்போலவே யிருப்பான். புருஷச்ரேஷ்டர்களான அந்த ராம லக்ஷ்மணர்களிருவரும் உன்னைப்பார்க்க விரும்பிப் பூமி முழுமையும் தேடிக்கொண்டு வருகையில் எங்க ளோடு கலந்தனர். அந்த ராமலக்ஷ்மணர்கள் அங்ஙனம் உன்னைத் தேடுவதற்காகவே பூமியெல்லாந் திரிந்து கொண்டு சென்று இனிய காட்சியுடைய ஸுக்ரீவ னென்னும் ஒரு வானரபதியைக் கண்டனர். அவன் தனது அண்ணனால் ராஜ்யத்தினின்று துரத்தப்பட்டு அந்த ப்ராதாவின் பயத்தினால் பீடிக்கப்பட்டவனாகி ருச்யமூக பர்வதத்தில் பல வ்ருக்ஷங்கள் அடர்ந்திருக் கிற நடுப்ரதேசத்தில் இருந்தனன். நாங்கள் தனது அண்ணனால் ராஜ்யத்தினின்று துரத்தப்பட்ட ஸத்ய ஸந்தனும் வானராதிபதியுமான அந்த ஸுக்ரீவனுக் குப் பணிவிடை செய்துகொண்டிருந்தனம். அனந்தரம் மரவுரி உடுத்து மேலான வில்லைத் தரித்த அந்த ராம லக்ஷ்மணர்கள் ருச்யமூகபர்வதத்தில் அழகான அந்த ப்ரதேசத்திற்கு வந்தனர். வானரதிலகனாகிய ஸுக்ரீவன், வில்லாளிகளான அந்தப் புருஷசிகாமணிக ளிருவரையும் பார்த்துப் பயத்தினால் விஷயம் இன்ன தென்று தெரியப்பெறாமல், தன்னைக் கொல்லும் பொருட்டு வாலி அனுப்பினானோ? என்னவோ? என்று நினைத்து அந்தப் பர்வதசிகரத்தின்மேல் கிளம்பிப் போயினன். அனந்தரம் அவ்வானரச்ரேஷ்டன் அந்தப் பர்வதசிகரத்தில் நிலைநின்று அந்த ராமலக்ஷ்மணர்க ளிடம் என்னையே விரைவாக அனுப்பினான். நான் ஸுக்ரீ

1. ஸுமித்ரையின் புத்ரனாகிய லக்ஷ்மணனுக்கு இருதாய்க் குமாரனாயிருத்தல், பிறந்தது முதல் ராமனைப்போல் கௌஸல்யை யால் போஷிக்கப்பட்டதுபற்றி யென்றுணர்க.

வன் சொன்னபடி, புருஷச்ரேஷ்டர்களும் ருபலக்ஷண ஸம்பன்னர்களுமான அந்த ப்ரபுக்களின் ஸமீபஞ் சென்று கைகளைக் குவித்துக்கொண்டு நின்றனன். நான் அந்தப் புருஷஸிம்ஹர்களின் வ்ருத்தாந்தத்தை உள்ளபடி அறிந்துகொண்டு அவர்களுக்கும் எமது வ்ருத்தாந்தத்தை உள்ளபடி அறிவிக்க அவர்களும் அதை அறிந்துகொண்டு ஸந்தோஷிக்கையில், இருவரையும் தோளின்மேல் ஏற்றிக்கொண்டு ஸுக்ரீவனிருக்குமிடத்திற்கு வந்தனன். பிறகு நான் மஹானுபாவனாகிய ஸுக்ரீவனுக்கு அந்த ராமலக்ஷ்மணர்களின் ஸங்கதியை உள்ளபடி அறிவித்தனன். அந்த ராமனும் ஸுக்ரீவனும் ஒருவர்க்கொருவர் வார்த்தை சொல்லிக்கொண்டவுடனே அவ்விருவர்க்கும் ஒருவர் மேல் ஒருவர்க்கு மிகுதியும் ப்ரீதி உண்டாயிற்று. அனந்தரம் அவ்வானரநாதனும் நரநாதனும் இருவரும் பரஸ்பரம் ப்ரீதி அடைந்து தமக்கு அதுவரையில் நடந்த வ்ருத்தாந்தங்களைச் சொல்லிக்கொண்டு ஒருவர்க்கொருவர் ஸமாதானமுற்றவராயினர். அதன்மேல் ஸுக்ரீவன் மஹாபராக்ரமசாலியாகிய தனது அண்ணன் வாலியால் ஸ்த்ரீநிமித்தமாக அவமதிக்கப் பட்டிருப்பதை லக்ஷ்மணாக்ரஜனாகிய ராமன்கண்டு வாலி வதஞ்செய்வதாக ப்ரதிஜ்ஞைகளைச்செய்து அவனை ஆச்வாஸப்படுத்தினன். அனந்தரம் லக்ஷ்மணன், நீ புலப்படாது போனதையும், அதனால் எவர்க்கும் கெடுதியை விளைக்காத கார்யங்களை ஆசரிக்குந்தன்மையுள்ள ராமன் துக்கத்திற்காளாயிருப்பதையும், வானரர்தலைவ்னான ஸுக்ரீவனுக்குத் தெரிவித்தனன். வானரேச்வரனும் லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையைக் கேட்டவுடனே, 'என்னைப்போல் என் ஸ்னேஹிதனான ராமனுக்குங்கூட இப்படிப்பட்ட மஹா துக்கம் நேர்ந்ததா!' என்று ராஹுவால் பிடிக்கப்பட்ட ஸூர்யனைப் போல் அப்பொழுது மிகுதியும் ஒளிமழுங்கப்பெற்றனன். அனந்தரம், ராக்ஷஸன் உன்னைக் கொண்டு போகும்பொழுது நீ உன் அவயவங்களில் ப்ரகா

சித்துக் கொண்டிருந்த சில ஆபரணங்களைக் கழற்றித் தரையில் போகட்டனையே! அவற்றையெல்லாம் வானர யூதபதிகள் கொண்டுவந்து மிகுதியும் ஸந்தோஷத்துடன் ராமனுக்குக் காண்பித்தனர்; அன்றி உன் போக்கிடம் அவர்க்குத் தெரியாதாகையால் அதை மொழிந்திலர். அவ்வாபரணங்கள் முன்பு ஆகாயத்தினின்று கலகலவென்று சப்தித்துக்கொண்டு விழுந்து சிதறும்பொழுது அவற்றை நானே எடுத்துக்கொண்டு வந்தனன். அவற்றை ஸுக்ரீவன் ராமனுக்குக் கொடுக்கையில், அவன் அவற்றைக் கண்டு துக்கத்தினால் ப்ரஜ்ஞை தவறப்பெற்று மூர்ச்சை அடைந்தனன். தேவதைகளைப்போல் ப்ரகாசிக்கின்ற உன் கணவனாகிய அந்த ராமன் பார்க்க இனிதான அந்த ஆபரணங்களை மடிமேலிட்டுக்கொண்டு பலவாறு புலம்பினன். ராமன் அடிக்கடி அவ்வாபரணங்களைப் பார்த்து ரோதனஞ்செய்து பரிதபித்துக்கொண்டிருந்தனன். அங்ஙனம் அவ்வாபரணங்கள் கண்ணில் பட்ட மாத்ரத்திலேயே ராமனது துக்காக்னியை மேன்மேலும் மேற்கிளப்பின. அம்மஹானுபாவன் ராமன் துக்கத்தினால் பீடிக்கப்பட்டு வெகுநேரம் தரையில் விழுந்து மோஹித்துக்கிடந்தனன். அனந்தரம் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் நானும் பலவகை வாக்கியங்களைச் சொல்லித் தேற்றி மீளவும் எத்தனையோ வருத்தத்துடன் தெளிவுபெற்று எழுந்திருக்கச் செய்தனம். மஹாபாஹுவாகிய ராமன் லக்ஷ்மணனும் தானுமாக அவ்வாபரணங்களைப் பலவாறு கண்ணுற்று ஸுக்ரீவனுக்குக் காண்பித்து, அனந்தரம் ஸுக்ரீவன் கையில் கொடுத்தனன். மேன்மைக்கிடமாயிருப்பவளே! ராமன் நீ புலப்படாமையால், அக்னிபர்வதம் பெரும் ஜ்வாலையுடன் எரிகின்ற அக்னியால் தபிப்பதுபோல், நித்யமும் பரிதபிக்கின்றனன். உன் நிமித்தமாக நித்திரையில்லாமையும் துக்கமும் சிந்தையும், அக்னிகள் அக்னிக்ருஹத்தை எரிப்பதுபோல் மஹானுபாவனாகிய ராமனை எரிக்கின்றன. ராமன் நீ புலப்படவில்லை

யென்னும் துக்கத்தினால், பெரிய பூகம்பத்தினால் மஹா பர்வதம் நடுங்குவதுபோல், மிகுதியும் நடுங்குகின்றனன். ராஜகுமாரத்தி! உன்னைக் காண நேராமையால், ராமன் மிகுதியும் ரமணீயமான அரண்யங்களிலும் நதிகளிலும் மலையருவிகளிலும் திரிந்துகொண்டேயிருப்பினும் எள்ளளவும் மனக்களிப்புறுகிறதில்லை. ஜானகி! புருஷதிலகனாகிய அந்த ராமன், இனிச் சீக்ரத்திலேயே ராவணனை அவனது நண்பர்களோடும் பந்துக்களோடும் கொன்று உன்னை அடையப் போகின்றனன். அப்பொழுது ராமஸுக்ரீவர்களிருவரும் சேர்ந்து, ராமன் வாலியைக் கொல்வதாகவும், ஸுக்ரீவன் உன்னைத் தேடுவதாகவும் ப்ரதிஜ்ஞை செய்துகொண்டனர். அனந்தரம் வீரர்களும் செல்வக்குமாரர்களுமான அந்த ராம லக்ஷ்மணர்களிருவரும் கிஷ்கிந்தைக்குச் சென்று எங்கும் ப்ரஸித்திபெற்ற வானரேச்வரனாகிய வாலியை யுத்தத்தில் முடித்துவிட்டனர். அப்பால் ராமன் பராக்ரமத்தினால் யுத்தத்தில் வாலியைக் கொன்று ஸமஸ்தமான [1] பல்லூக வானர ஸமூஹங்களுக்கும் ஸுக்ரீவனைப் பதியாகச் செய்தனன். தேவீ! ராமஸுக்ரீவர்களுக்கு இவ்வண்ணம் [2] ஸமாகமம் உண்டாயிற்று. நான் ஹனுமானென்பவன். அந்த ராம ஸுக்ரீவர்களின் கட்டளைப்படி தூதனாகி இவ்விடம் வந்தேனென்றறிவாயாக. அங்ஙனம் ஸுக்ரீவன் தன் ராஜ்யத்தைப் பெற்று மஹா பலிஷ்டர்களான வானர யூதபதிகளனைவரையும் வரவழைத்து உன்னைத் தேடும் பொருட்டுப் பத்துத்திசைகளுக்கும் போக அனுப்பினன். மஹாதேஜஸ்வியும் வானர ராஜனுமாகிய ஸுக்ரீவனது ஆஜ்ஞையைச் சிரஸில் வஹித்துப் பெரிய மலைகள்போன்ற வானரர்கள் உன்னைத் தேடும் பொருட்டுப் பூமியின் நாற்புறத்திலும் ப்ரயாணமாய்ப் போயினர். பிறகு நாங்களும் மற்றுமுள்ளவருமாக எல்லோரும் ஸுக்ரீவனது ஆஜ்ஞைக்குப் பயந்து,

1. பல்லூகம்-கரடி. 2. சேர்த்தி.

உன்னைத் தேடிக்கொண்டு பூமிமுழுமையும் திரிகின்றனம். அதில் ஸ்ரீமானும் மஹா பலிஷ்டனும் வானரஸிம்ஹனும் வாலிகுமாரனுமாகிய அங்கதன் ஸைன்யத்தில் மூன்றிலொரு பாகத்துடன் கூடிப் புறப்பட்டனன். அங்ஙனம் நாங்கள் உன்னைத் தேடிக்கொண்டு சென்று பர்வதஸ்ரேஷ்டமாகிய விந்த்யபர்வதத்தில் ஒரு பிலத்தில் எவர்க்கும் காணமுடியாமல் அகப்பட்டுக்கொண்டு மீளவும் வெளிவர வழிதெரியாமல் மிகுதியும் வருந்திக் கொண்டிருக்கையில் பலநாட்கள் கழிந்தன. அங்ஙனம் அவ்வளவுகாலம் அதில் அகப்பட்டுக்கொண்ட நாங்கள் கார்யத்தை நிறைவேற்றவல்லோமென்கிற ஆசை எள்ளளவும் இல்லாமல் போகையாலும் கெடுகாலம் கடந்தமையாலும் திரும்பிப் போனோமாயின் கபிராஜனாகிய ஸுக்ரீவனால் தண்டனை நேருமென்னும் பயத்தினால் ப்ராணன்களைவிட நிச்சயித்துக்கொண்டனம். நாங்கள் புகக்கூடாத அரண்யங்களிலும் பர்வதங்களிலும் மலையருவிகளிலும் திரிந்து தேடியும், தேவியார் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க நேராமல் திரும்பி வந்தோமாயின் ஸுக்ரீவனால் மரணமே நேருமாகையால் அங்கேயே ப்ராணன்களைவிட நிச்சயித்துக் கொண்டனம். ஸீதே! அனந்தரம் அங்கதன், ப்ராயோபவேசஞ்செய்தவானரஸ்ரேஷ்டர்களனைவரையும் பார்த்து, துக்கஸமுத்ரத்தில் மிகுதியும் மூழ்கி, நீ புலப்படாமையையும் வாலி மரணம் அடைந்ததையும் நாங்கள் ப்ராயோபவேசஞ் செய்தமையையும் ஜடாயு லோகாந்தரஞ் சென்றதையும் இவையெல்லாவற்றையுஞ் சொல்லிப் புலம்பினன். எங்கள் ப்ரபுவான ஸுக்ரீவன் ‘மாதத்திற்குமேல் வராதிருப்பவரைக் கொன்றுவிடுவேன்’ என்று செய்திருக்கிற ஆஜ்ஞையால் ப்ராணன்களின்மேல் ஆசையற்றவராகி அவற்றைவிட விரும்புகின்ற எமக்குக் கார்யஸித்தியின் பொருட்டுத்தான் வந்தானோ என்னும்படி வீர்யசாலியான பெரிய பக்ஷீந்த்ரனொருவன் அவ்விடம் வந்தனன். அவன் கழுகுராஜனாகிய ஜடாயுவுக்கு உடன்பிறந்தவன். அந்தக்

கழுகுராஜன் ஸம்பாதியென்னும் பேருடையவன். அவன் தன் தம்பியாகிய ஜடாயு முடிந்ததைக் கேட்டுக் கோபமுற்று எங்களைக்குறித்து 'வானரோத்தமர்களே! என் தம்பியான ஜடாயுவை எவன் கொன்றனன்? எவ்விடத்தில் விழத்தள்ளினன்? நீங்கள் இந்தச் சங்கதியைச் சொல்ல விரும்புகின்றேன்' என்றனன். அங்கதன் அவனைப் பார்த்து ஜனஸ்தானத்தில் உன் நிமித்தமாகப் பயங்கரமான உருவமுடைய ராவணன் ஜடாயுவைக் கோரமாகக் கொன்ற வ்ருத்தாந்தத்தை நடந்தபடியே மொழிந்தனன். அழகிய இடையின் பின்புறமுடையவளே! அருணனது புதல்வனுகிய அந்த ஸம்பாதி ஜடாயுவின் வதத்தைக் கேட்டு வருந்தி நீ ராவணக்ருஹத்தில் இருப்பதாக எங்களுக்குச் சொல்லினன். ஸம்பாதி ஸந்தோஷம் வளருமாறு மொழிந்த அவ்வார்த்தையைக் கேட்டு அங்கதன் முதலான நாங்களெல்லோரும் மிகுதியும் மனக்களிப்புற்று விரைவாக அங்கிருந்து ப்ராயணமாய்ப் புறப்பட்டனம். பிறகு வானரர்களெல்லோரும் உன்னைப் பார்க்க மிக விருப்பங் கொண்டு மேனியெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகும்படி ஸந்தோஷம் அடைந்து விந்த்ய பர்வதத்தினின்று புறப்பட்டு ஸமுத்ரத்தின் வடகரைக்கு வந்து சேர்ந்தனர். அங்ஙனம் அங்கதன் முதலிய அவர்களெல்லோரும் உன்னைப் பார்க்கவேண்டுமென்னுங் குதூஹலத்தினுல் ஸமுத்ரக்கரை சேர்ந்து ஸமுத்ரத்தைப் பார்த்துப் பயந்து மீளவுஞ் சிந்திக்கத்தொடங்கினர். அனந்தரம் அவ்வாறு ஸமுத்ரத்தைக் கண்டு வருந்துகின்ற அவ் வானர ஸைன்யத்தைக்கண்டு நான் தீவ்ரமான அவர்களது பயத்தைப் போக்கி நூறு யோஜனை தூரமுள்ள ஸமுத்ரத்தைத் தாண்டி வந்தனன். ராக்ஷஸர் நிறைந்த இவ்விலங்கையுள் ராத்ரிவேளையில் ப்ரவேசிக்கவும் ப்ரவேசித்தனன். ராவணனையுங்கூடப் பார்த்தனன். துக்கஸாகரத்தில் மிதக்கின்ற உன்னையுங் கண்டனன். நிந்தைக்கிடமாகாதவளே! தேவி! இந்த வ்ருத்தாந்தத்தை யெல்லாம் நடந்தபடியே உனக்குச்

சொல்லினன். ராமனால் அனுப்பப்பட்டு வந்த தூதனே யன்றி வேறொருவனல்லேன். ஆகையால் என்னுடன் பேசுவாயாக. தேவீ! நான் ராமனுக்காக முயன்று உன் நிமித்தமாக இவ்விடம் வந்திருக்கின்றனன்; ஸுக்ரீவனுக்கு மந்த்ரி; வாயுவின் குமாரன். நீ நினைத்தபடி மாயாவியல்லேனென்றுணர்வாயாக. ஆயுதம் பிடித்தவரனைவரிலும் மேலான உன் பர்த்தா ககுத்ஸ்தகுலதிலகன் ராமன் க்ஷேமமாயிருக்கின்றனன். சுபலக்ஷணங்கள் பொருந்தின லக்ஷ்மணனும் தமையனாகிய ராமனுக்குச் சுச்ரூஷை செய்துகொண்டு க்ஷேமமாயிருக்கின்றனன். பராக்ரமம் மிகுந்தவனும் உன் கணவனுமாகிய அந்த ராமனது ஹிதத்தில் மனவூக்கமுற்று ஸுக்ரீவனது ஆஜ்ஞையின்படி நானொருவனே இவ்விடம் வந்தனன். நான் நீ போன வழியைத் தேடவிரும்பி ஸஹாயமின்றிக்காமரூபியாகித் திரிந்துகொண்டு இந்தத் தென்திசைக்குவந்து சேர்ந்தனன். என்பாக்யவசத்தினால், நீ அகப்படாமையால் துக்கித்துக்கொண்டிருக்கிற வானர ஸைன்யத்திற்கு உன்னைக் கண்ட ஸங்கதியைச்சொல்லி அவரது வருத்தத்தைப் போக்கடிப்பவனாயினன். என் பாக்ய வசத்தினால் ஸமுத்ரத்தைத் தாண்டி இவ்வளவு தூரம் வந்தது வீணாகாமல் ஸபலமாயிற்று. என் பாக்யவசத்தினால், இங்ஙனம் உன்னைப் பார்க்க நேர்ந்தமையாலுண்டான பெருங்கீர்த்தியைப் பெறப்போகின்றனன். மஹா வீர்யனாகிய ராமன் இனிச் சீக்ரத்திலேயே ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனையும் அவனது நண்பர்களையும் பந்துக்களையும் கொன்று உன்னை அடையப்போகின்றனன். நான் வாயுகுமாரன். 'வானரனாயிருக்கின்றனை, வாயுகுமாரன் எப்படி' என்கிறாயோ? வைதேஹீ! பர்வதங்களெல்லாவற்றிலும் சிறந்த மால்யவானென்னும் பர்வதம் ஒன்றுளது. கேஸரியென்னும் வானரன் அதை விட்டுக் கோகர்ணமென்னும் பர்வதத்திற்குப் போயினன். அம்மஹாகபியே என் தந்தை. அவன் அங்குத் தேவரிஷிகளால் தூண்டப்பட்டுப் புண்யமான ஸமுத்ர

த்ரத்தில் சம்பஸாதனனென்னும் ராக்ஷஸனைக் கொன்றனன். மைதிலீ! அங்ஙனம் கேஸரி கோகர்ணத்திற்குப் போயிருக்கும்பொழுது, நான் அவனது பார்யையிடத்தில் வாயுதேவனால் பிறந்தனன். நான் செய்த கார்யத்தினாலேயே எனக்கு உலகத்தில் ஹனுமானென்னும் பெயர் விளைந்தது. வைதேஹீ! உனக்கு நம்பிக்கை உண்டாகும்பொருட்டு உன் பர்த்தாவான ராமனது குணங்களை மொழிந்தனன். பாபமற்றவளே! ராமன் சீக்ரத்திலேயே உன்னை இங்கிருந்து அழைத்துக்கொண்டு போவான்' என்றனன். அங்ஙனம் சோகத்தினால் பரிதபிக்கின்ற ஸீதைக்கு ஹனுமான் இங்ஙனம் தகுந்த காரணங்களால் நம்பிக்கையை விளைவிக்கையில் அம்மடந்தையர்மணி அவன் மொழிந்த அடையாளங்கள் அமைந்திருக்கையால் அவனை ராமதூதனாகவே நம்பினள். அனந்தரம் ஜானகி நிகரில்லாத ஸந்தோஷம் அடைந்து, அந்த ஸந்தோஷத்தின் மிகுதியால் வணங்கின கண்ணிமை மயிர்களினின்று ஆநந்த பாஷ்பங்களைப் பெருக்கினள். அங்ஙனம் ஸந்தோஷத்தினால் மிகவும் அழகாயிருப்பதும் கடைகளில் சிவந்து நடுவில் வெளுத்து முழுவதும் அகன்று விளங்கும் கண்களோடு கூடியதுமான அந்த விசாலாக்ஷியின் முகம் ராஹுவிடத்தினின்று விடுபட்ட சந்த்ரன்போல் ப்ரகாசித்தது. அவள் ஹனுமானை ஸ்பஷ்டமாக வானரனேயன்றி மற்றொரு மாயாவியல்லனென்று நினைத்துக்கொண்டனள். அனந்தரம் ஹனுமான் இனிய காட்சியுடைய ஸீதையைப் பார்த்து 'மைதிலீ! இந்த வ்ருத்தாந்தமெல்லாம் உனக்கு மொழிந்தனன். இனி ஸமாதானம் அடைவாயாக. நான் இப்பொழுது என்ன செய்யவேண்டும்? உன்னிஷ்டம் எப்படியிருக்கின்றது? விரைவில் ஆஜ்ஞையிடுவாயாக. நான் திரும்பிப்போகின்றனன். மைதிலீ! மஹர்ஷிகளின் தூண்டுதலால் கபிவீரனாகிய கேஸரி யுத்தத்தில் சம்பஸாதனனென்னும் அஸுரனைக் கொல்லுகையில், அங்ஙனம் அவனைக் கொன்ற உப

காரத்தினால் நான் வாயுவால் அவனுக்குப் பிறந்தனன். ப்ரபாவத்தினால் அவ்வாயுவைப்போன்றவன்; வானரன்' என்றனன். முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

1 { ஹனுமான் ஸீதைக்கு ராமன் பெயருடைய மோதிரத்தைக் கொடுத்து ஸமாதானப்படுத்துதல். }

மஹா பராக்ரமசாலியும் வாயுதேவனது குமாரனுமாகிய ஹனுமான் ஸீதைக்கு நம்பிக்கையை விளைவிப்பதற்காக மீளவும் விநய வாக்யங்களைச் சொல்லிக்கொண்டு அம்மஹானுபாவையைப் பார்த்து 'மஹாபாக்யமுடையவளே! நான் வானரனேயன்றி, ராக்ஷஸனல்லேன். நான் புத்தியிற் சிறந்த ராமனுடைய தூதன். தேவி! இதோ ராமனது நாமம் எழுதப்பெற்ற இம்மோதிரம் கொண்டு வந்திருக்கின்றனன், காண்பாயாக. மஹானுபாவனாகிய அந்த ராமன் உனக்கு நம்பிக்கை உண்டாகும்பொருட்டுக் கொடுக்கையில் எடுத்துக்கொண்டு வந்தனன். இனி மனஸ் ஸமாதானம் பெறுவாயாக. உனக்கு மங்களம் உண்டாகுமாக. உன்னுடைய துக்க பலன்களெல்லாம் தொலைந்தன' என்றனன்.[1] அந்த ஜானகி தன் ப்ராணேச்வரனது ஹஸ்த பூஷணமான அம்மோதிரத்தை வாங்கிக்கொண்டு பலவாறு உற்றுப் பார்த்துத் தன் கணவனாகிய

1. இங்கு 'க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணாஸா ஹர்த்து: கரவிபூஷணம்। பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதாऽபவத்' என்று மூலம். (க்ருஹீத்வா) தேசாந்தரத்தினின்று வந்த பந்துவைக் கண்டவுடன் கையால் பிடிப்பதுபோல் தானே கையிற்கொண்டனள். (ப்ரேக்ஷமாணா) பார்த்துக்கொண்டு. இங்கு நிகழ்காலத்தினால்-அதன் மேல் வைத்த கண்ணை வாங்காதிருந்தனளென்று

அந்த ராமனை அடைந்தாற்போல் ஸந்தோஷம் அடைந்தனள். மிகுந்த ஸந்தோஷத்தினுல் மிகவும் அழகாயிருப்பதும் கடைகளிற் சிவந்து நடுவில் வெளுத்து முழுவதும் அகன்று விளங்கும் கண்களோடு கூடினதுமான அவ்விசாலாக்ஷியின் முகம், ராஹுவினின்று விடுபட்ட சந்த்ரன்போல் ப்ரகாசித்தது. அனந்தரம் அப்பெண்மணி கணவனது வ்ருத்தாந்தத்தைக் கேட்டதற்கு மிகுதியும் ஸந்தோஷமுற்று மேனியெல்லாம் மயிர்க்கூச்சலடைந்து சிறிது வெட்கித்து உடனே ஸந்தோஷத்துடன் அம்மஹாகபியை ஆதரத்துடன் வெகுமதித்துப் புகழ்ந்தனள்; 'வானரோத்தமா! நீ யொருவனே ராக்ஷஸரது வாஸஸ்தானமான இவ்விடத்தைக் கண்டுபிடித்து

---

தோற்றுவிக்கப்பட்டது. (ஸா) முன்பு ஹனுமானை ராவணனுகச் சங்கித்த அந்த ஸீதை சங்கையால் பாராதிருந்தனள். இப்பொழுது ராமனிடத்தினின்று வந்தவனென்று நிச்சயம் உண்டானபின்பு மிகுந்த ப்ரீதியுடன் கண்ணிமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தனள். (ஹர்த்து:காவிஷ்ஷணம்) விவாஹகாலத்தில் தன் ஹஸ்தத்தினுல் ஸ்பர்சிக்கப்பட்ட ஆபரணமென்று நினைவுக்கு வந்தது. (காவிஷ்ஷணம்) என்ற இதனுல்—முன்பு ஒரு ஸமயத்தில் ஸீதைக்குப் போகாதிசயத்தினுல் ப்ரணயகோபம் உண்டாயிருந்தது. அப்பொழுது ஒருவர்க்கொருவர் பார்வை பேச்சு முதலியவை இல்லாத ஸ்திதியில் வார்த்தை சொல்லவேண்டுமென்னும் விருப்பம் உண்டாயிற்றன்றி ப்ரணயகோபம் வார்த்தை சொல்லவொட்டாமல் மௌனமாயிருக்கச் செய்தது. அப்பொழுது ராமன் அங்குலீயகத்தை (மோதிரத்தை)ப் பூமியில் நழுவவிட்டனன். அப்பொழுது அந்த வ்யாஜத்தினுல் ஸீதை 'மோதிரம் நழுவிற்று' என்று மொழிந்தவுடனே ப்ரணயகோபம் தெளிந்து அவர்க்கு மீளவும் ஒருவர்க்கொருவர் ஸம்ஶ்லேஷம் (ஆலிங்கனம்) முதலியது உண்டாயிற்று. இங்ஙனம் தம்மிருவர்க்கும் ஸம்ஶ்லேஷத்தை விளைத்த அம்மோதிரத்தைப் பார்த்தாலைப்போல் அடைந்தனள். அங்குலீயகத்தைப் பார்த்தவுடனே கணவனது ஹஸ்தத்தை

இதைப் பொருள் செய்யாமல் புகுந்தனை. உன் பராக்ரமத்தையும் உன் ஸாமர்த்யத்தையும் உன் புத்திபலத்தையும் என்னென்று மொழிவேன்! நீயே பராக்ரமசாலி! நீயே ஸமர்த்தன்! நீயே மிகுந்த ப்ரஜ்ஞையுடையவன்! மகரமீன்களுக்கிருப்பிடமான ஸமுத்ரம் நூறுயோஜனை விஸ்தாரமுடையது. அப்படிப்பட்ட மஹா ஸமுத்ரத்தைக் குளப்படிபோல் நினைத்துத் தாண்டினையே! உன் பராக்ரமம் எவ்வளவு புகழத் தக்கது! வானர திலகா! ஸமஸ்த ப்ராணிகளுக்கும் பயங்கரனாகிய ராவணனிடத்தில் உனக்குப் பயத்தைக் காணேன்; சிறிது பரபரப்பையாயினும் காணேன்; ஆகையால் நீ ஸாதாரணமான குரங்காக எனக்குத் தோற்றவில்லை. கபிஸ்ரேஷ்டனே! ஆத்மஜ்ஞானியாகிய ராமனால் அனுப்பப்பட்டு வந்தவனாகையால் என்னோடு வார்த்தை சொல்லத் தகுந்தவனாயிருக்கின்றனை. ஆகையால் வார்த்தை சொல்லக்கூடும். எவர்க்கும் எதிரிடக் கூடாத ராமன் மிகுந்த மதியுடையவனாகையால் எவனையாயினும் பராக்ரமத்தை அறியாமல் அன்றியும் பல விதங்களில் பரீக்ஷைசெய்யாமல் எங்கும் அனுப்ப மாட்டான். அதிலும் விசேஷித்து என்னிடத்திற்கு அப்படிப்பட்டவனை எள்ளளவும் அனுப்ப முயல மாட்டான். அப்படிப்பட்ட ராமன் உன்னை அனுப்பினபடியால் நீ ஸாமான்யனன்றென்று தெரிகின்றது. என் பாக்யத்தினால், தர்மஸ்வபாவனும் ஸத்யஸந்தனுமாகிய

---

நினைத்தனள். அதை நினைத்ததனால் புஜத்தையும் அதன்மூலமாய் ராமனது திவ்யமங்கல விக்ரஹத்தையும் இங்ஙனம் பாவனாப்ரகர்ஷத்தினால் ராமன் எதிரிலிருப்பதாகவும் நினைத்து அணைத்தனள். மஹர்ஷி, ஸீதை தாயென்னும் புத்தியால், மாத்ரு ஸம்போகவர்ணனங் கூடாதாகையால் 'அணைத்தாள்' என்று சொல்லாமல் 'ஸம்ப்ராப்தா' என்றனர். (ஜாநகீ) சோக ஹர்ஷங்களால் வருத்தப்படத்தகாத குலத்தில் பிறந்த ஸீதை, (முதிதாஸவத்) இவள் இப்பொழுது ஸந்தோஷமுற்றனள், இனி என்படுவாளோ என்கிறார் மஹர்ஷி.

ராமனும் மஹாதேஜஸ்வியும் ஸௌமித்ரையின் ஆநந்தத்தை வளரச்செய்பவனுமாகிய லக்ஷ்மணனும் க்ஷேமமாயிருக்கின்றனர்.[1] ககுத்ஸ்தகுலாலங்காரனான ராமன் க்ஷேமமாயிருப்பானாயின், தன் ப்ரியையான பார்யையை ராக்ஷஸன் கொண்டுபோனதற்குக் கோபமுற்று ப்ரளயகாலாக்னிபோல் கிளம்பி ஸமுத்ரத்தால் சூழப்பட்ட பூமண்டலத்தையெல்லாம் ஏன் கொளுத்தாதிருக்கின்றனன்? வல்லவனாயின் தஹிக்கமாட்டானா?

---

1. இங்கு 'குஶலீ யதி காகுத்ஸ்த்ய: கிந்நு ஸாகரமேகலாம்| மஹீந்தஹதி கோபேந யுகாந்தாக்நிரிவோத்தித:' என்று மூலம். (காகுத்ஸ்த்ய:) இந்த்ரன் முதலிய பிறர்க்கு உண்டான பரிபவத்தைப் பொறுக்கமுடியாத ககுத்ஸ்தகுலத்தில் பிறந்தவன். இதனால் பிறர் பரிபவத்தையே பரிஹரிக்கவேண்டுமென்றித் தம் பரிபவத்தையன் றென்றிருக்கிறார் என்?' என்கிறாள். (ஸாகரமேகலாம் மஹீம்) ஸமுத்ரங்களை அரைநாண்மாலையாகவுடைய பூமியை. ஸமுத்ரங்களால் சூழப்பட்ட பூமண்டலத்தையெல்லாம் (கிந்நுதஹதி) தஹிக்கிறார் என்ன? (ஸாகரமேகலாம்) என்று பூமிக்கு விசேஷணமிடுகையால் த்ரவத்ரவ்யமாகிய ஸமுத்ரத்திற்கு ஒரு பாணமும் கடினத்ரவ்யமான பூமிக்கு ஒரு பாணமும் ப்ரயோகிக்கத் தாமதஞ் செய்யவேண்டுமோ? ஸமுத்ர ஜலத்தையே எண்ணெயாகக் கொண்டு பூமியைக் கொளுத்தவல்லவனல்லவா? என்று கருத்து. அல்லது—பூதேவி தன் பத்னியாகையால் அவளுக்கு ஸமுத்ரம் ஆடையாகையால் அதை அவளுக்கு ஸுரக்ஷிதமாயிருக்குமாறு பாதுகாத்து வருகிறார் என்னென்று கருத்து. பூமிக்கு இம்மர்யாதை அறுதியாயிருக்க அதை எப்படி தஹிக்கக் கூடுமென்னச் சொல்லுகிறாள். (யுகாந்தாக்நிரிவோத்தித: கோபேந) மர்யாதையெல்லாம் அவரது கடைக்கண் சிவக்குமளவே. கடைக்கண் சிவக்கிலோ அம்மர்யாதையொன்றுந் தக்காதென்கிறாள். (கிந்நஸாகரமேகலாம்) என்று பாடமானபோது-ராமன் க்ஷேமமாயிருப்பானாயின் பூமியை ஏன் தஹிக்காதிருக்கின்றனன்? சக்தனாயின் தஹிப்பானே! தஹியாதிருக்கிறானாகையால் அசக்தனா

ராமனும் லக்ஷ்மணனும் இருவரும் தேவதைகளையும் அடக்க வல்லவர்களே! ஆனால் என் துக்கங்களுக்கு மாத்ரமே முடிவில்லை! ஆனதுபற்றியே அவர்கள் தமது சக்தியைக் காட்டாதிருக்கின்றனர். ராமன் என்னை நினைத்துக்கொண்டு துக்கத்தினால் இளைக்காதிருக்கிறானல்லவா? மேலும் என்னைக் குறித்து எப்பொழுதும் பரிதபியாதிருக்கிறானல்லவா? அப்புருஷோத்தமன் அங்ஙனம் வருந்தாமல் என்னைப் பெறுதற்கு மேற் செய்யவேண்டிய கார்யங்களைச் செய்கின்றானா? அந்த ராஜகுமாரன் தைன்ய மில்லாதிருக்கின்றானா? தடுமாற்றமுற்றுக் கார்யங்களில் தெளிவு தவறாதிருக்கின்றானா? வெறுமனே இராமல் புருஷன் செய்ய வேண்டிய ப்ரயத்னங்களைச் செய்கின்றானா? அப்பாந்தபன் ஸ்னேஹிதரிடத்தில் நன்மனமுடையவனாகி ஸாமம் தானம் என்னும் இரண்டு உபாயங்களையே நடத்திக் கொண்டிருக்கிறானா? சத்ருக்களிடத்தில் ஜயத்தை விரும்பி, தான பேத தண்டங்களென்னும் மூன்று உபாயங்களை உபயோகப்படுத்துகிறானா? ராமன் நண்பர்களைப் பெறுகின்றானா? அவர்க்கு வேண்டும் உபகாரங்களைச் செய்கின்றானா? தானும் அந்த நண்பர்களால் அடையப்படுகிறானா? அவர்களால் தனக்கு வேண்டிய உபகாரங்களைப் பெறுகின்றானா? ராமன் நல்ல மித்ரர்களை முன்னிட்டுக்கொண்டு விளக்கமுறுகின்றானா? அம்மித்ரர்களும் அவனை முக்யமாகப் புரஸ்கரிக்கின்றனரா? அந்த ராஜகுமாரன் தேவதைகளை அனுக்ரஹிக்கும்படி ப்ரார்த்திக்கின்றானா? ராமன் வெறுமனே இராமல் புருஷப்ரயத்னங்களைச் செய்துகொண்டு தெய்வத்தின் ஆனுகூல்யத்தைப் பெறுகின்றானா? இங்ஙனம் நான் தூரத்திலிருக்கையால் ராமனுக்கு என்னிடத்தில் ஸ்னேஹம் மாறாதிருக்கின்றதா? வானரோத்தமா! அவன் இந்த துக்கத்தினின்று என்னைக் கரையேற்றுவானல்லவா? ராமன் எப்பொழுதும் ஸுகங்களையே அனுபவிக்கத் தகுந்தவன்; மிகுதியும் ஸுகுமாரன்; அப்படிப்பட்ட ராமன் இப்பொழுது

இப்படிப்பட்ட மஹாதுக்கத்தை அடைந்து இளைப்புற்றிருக்கின்றானோ? கௌஸல்யை ஸுமித்ரை பரதன் இவர்களின் க்ஷேம ஸமாசாரம் அப்பொழுதைக்கப்பொழுது செவியிற் பட்டுக்கொண்டிருக்கின்றதா? என் விஷயமாக ராமன் துக்கப்படுவதால் மேன்மைப் படுத்துவதற்குரியனாயிருக்கின்றானோ? என் கார்யத்தை மறந்து வேறுகார்யங்களில் மனந்தாழப் பெற்றிருக்கின்றானோ? என்னை இந்த ஆபத்தினின்று கரையேற்றுவானோ! பரதன் உடன் பிறந்தவரிடத்தில் மிகுதியும் ப்ரீதி யுடையவனாகையால், எனக்காக மந்த்ரிகளால் காக்கப்பட்ட பயங்கரமான ஒரு அக்ஷௌஹிணி ஸைன்யத்தை அனுப்புவானோ? செல்வப் பெருக்குடையவனும் வானரர் தலைவனுமாகிய ஸுக்ரீவன், தந்தங்களும் நகங்களுமே ஆயுதமாகப்பெற்ற வானர வீரர்களால் சூழப்பட்டு எனக்காக இவ்விடம் வருவானோ? சூரனும் சஸ்த்ர அஸ்த்ரங்களில் ஸமர்த்தனும் ஸுமித்ரைக்கு ஆனந்தத்தை வளரச்செய்பவனுமாகிய லக்ஷ்மணன் இவ்விடம் வந்து பாணஸமூஹங்களைப் பரப்பி ராக்ஷஸர்களை வேருடன் அறுத்து முடிப்பானோ? யுத்தத்தில் கண்கள் மின்மினுக்கும்படி தகதகவென்று ஜ்வலிப்பதும் பயங்கரமுமாகிய அஸ்த்ரத்தினால் ராவணன் தனது நண்பர்களோடு முடிவதை இனி ஸ்வல்பகாலத்திலேயே நான் காணப்பெறுவேனோ? ஸ்வர்ணத்தை நிகர்த்த நிறமுடையதும் தாமரைமலர் போன்ற வாஸனையுடையதுமாகிய அந்த ராமனது முகம் என்னைப்பிரிந்து அந்தச் சோகத்தினால் வருந்தி, ஜலமெல்லாம் உலர்ந்த பின்பு வெயில் படுதலால் வாடி வதங்கின தாமரைமலர்போல் வாடாதிருக்கின்றதா? எவன் தர்மத்தை உத்தேசித்து ராஜ்யத்தை இழந்த பொழுதும் தான் அடவியில் திரியும்பொழுதும் அதி ஸுகுமாரியான என்னை வெறுங்கால் நடையாக நடத்தி அடவியில் அழைத்துக்கொண்டு போகும் பொழுதும் சிறிதாயினும் சிந்தையையாவது பயத்தையாவது துக்கத்தையாவது அடையாதிருந்தானோ;

அப்படிப்பட்ட மஹாதீரன் ராமன், இப்பொழுது என்னைப் பிரிந்தபொழுதும் மனத்தில் தைர்யத்தை விடாதிருக்கின்ருனு? ராமனைப் பிரிந்தும் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்கிறேனே' என்று சிந்திக்க வேண்டாம். [1] இந்த ராமனுக்குத் தாயிடத்திலும்

---

1. இங்கு 'நசாஸ்ய மாதா நபிதா நசாந்யஸ் ஸ்நேஹாத் விஶிஷ்டோஸ்தி மயா ஸமோவா। தாவத்த்வஹம் தூத ஜிஜீவி ஷேயம் யாவத் ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய' என்று மூலம். இந்த ஶ்லோகத்தில் ஸீதை ப்ரணயகோபத்திஞல் சொன்னதாக ஓரர்த்தமும் உண்டு. ப்ரணய ரோஷத்தில்-ஸீதை 'ராமன்மேல் பிசகேயன்றி என்மேல் பிசகில்லை' என்று மொழிய ஹனுமான் நாம் மாத்ரம் ஸரியாக நடந்தோமோ? ராமனைப் பிரிந்த உத்தர க்ஷணத்தில் ப்ராணன்களை விடவில்லையன்ரு! அவனைப் பிரிந்தும் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்கலாகுமா' என்று மனத்தில் நினைப்பானென்று சங்கித்துச் சொல்லுகின்றனள். (அஸ்ய) இந்த ராமனுக்கு (மாதா பிதா) தாயும் தந்தையும். (அந்யஶ்ச) மற்றைப் பந்து எவனும். (ஸ்நேஹாத் விஶிஷ்டஃ) ஸ்னேஹத்திஞல் மேற்பட்டவன். ராமனுக்கு என்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தைக்காட்டிலும் அதிகமான ஸ்னேஹத்திற் கிடமாயிருப்பவன். (ந) இல்லை. (மயா ஸமோவாந) எனக்கு நிகரானவனும் இல்லை. என்னிடத்தில் செய்யும் ஸ்னேஹத்தவ்வளவு ஸ்னேஹத்தையுங்கூட ராமனிடத்தில் பெற்றவன் இல்லையென்றபடி. உலகத்தில் எவனுக்கும் தாயென்றும் தந்தையென்றும் உடன்பிறந்தவனென்றும் இப்படி ஸ்னேஹம் வ்யாபித்திருப்பதுண்டு. ராமனுக்கோ தாய்முதலானவரிடத்தில் இப்படிப்பட்ட ஸ்னேஹம் உண்டாகாது. ஏனெனில் அந்த ஸ்னேஹமெல்லாம் என்மேல் திருப்பப்பட்டது. அவனுடைய ஸ்னேஹத்தையெல்லாம் நானே கொள்ளைகொண்டனன். ராமனுக்கு ஸ்னேஹமெல்லாம் என்னிடத்திலேயே நிலைநின்றிருப்பது பற்றியே 'நமாம்ஸம் ராகவோ பூங்க்தே' என்று போஜனத்தையும் 'அநித்ரஸ் ஸததம் ராமஃ' என்று தூக்கத்தையும் விட்டு ஸமுத்ரத்தில் அணைகட்டி என்னிடம் வருவான். தாஹத்திஞல் பாதைப்படுபவன் தண்ணீர்ப்பந்தலில் சென்று அங்குத் தண்ணீர்க்

தந்தையிடத்திலும் என்னிடத்திலுள்ள ஸ்நேஹத்தைக்காட்டிலும் மேலான ஸ்நேஹம் கிடையாது. அவனுடைய ஸ்நேஹத்திற்கெல்லாம் நானே இருப்பிடம். ஆகையால் இப்படிப்பட்ட ப்ரீதிக்கிடமான நான்

---

குடம் உடைந்திருக்கக் கண்டால் அவனுயிர் தக்காதாப்போல் ராமன் அவ்வளவு வருத்தப்பட்டுத் தன் துக்கமெல்லாம் தீரும்பொருட்டு என்னிடம் வந்தும் நான் மரணம் அடைந்திருப்பேனுயின் அதைக்கண்டு ஜீவிக்கமாட்டான். ஆகையால் அவனைப் பிரிந்தேனென்று நான் எங்ஙனம் ப்ராணன்களை விடக்கூடும்? (யாவத் ப்ரவ்ருத்திம ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய) ப்ரியன் என்னை அழைத்துக்கொண்டு போகும் வார்த்தையைக் கேட்கும்வரையிலும், (ஜிஜீவிஷேயம்) ஜீவித்திருக்க விரும்புகின்றேன். என் சரீரம் அவனுடையதாகையால் நான் அதை விடுதற்கு ஸ்வதந்த்ரையல்லேன். ஆகையால் அவன் வருமளவும் நான் அதைத் தரித்திருந்தேயாகவேண்டும். அவனுக்காக இதைத் தரித்திருக்கிறேனன்றி அவனை உபேக்ஷித்து எனக்காகவன்று. ஆகையால் அவனைப் பிரிந்தவுடனே ப்ராணன்களை விடாமல் வைத்துக்கொண்டிருத்தல் என் பிசகன்றென்று கருத்து. அவன் வரும்வரையில் நான் பிழைத்திருக்கவேண்டும். அவன் வந்தபின்பு பிழைத்திருப்பேனுயின் அப்பொழுது இங்ஙனம் வினவலாமென்று கருத்து. (தூத) இதுவரையில் 'வானர' என்றழைத்துக் கொண்டுவந்து இப்பொழுது (தூத) என்று அழைத்தல் ராமன்மேலுள்ள ப்ரணயரோஷம் அவனுடைய தூதன்வரையிலும் வ்யாபித்திருக்கையாலென்று தெரிகின்றது. ராமனுல் அனுப்பப்பட்டவனல்லவா நீ! அதுபற்றியே இங்ஙனம் என்மேல் தோஷத்தை ஏற்றுகின்றனையென்று ஸீதையின் ஸம்போதனத்திற்குத் தாத்பர்யம். ப்ரணயரோஷமில்லாமல் ஸாதாரணமான பக்ஷத்தில் (அஸ்ய) இந்த ராமனுக்கு. (மாதாச) தாயும் (பிதாச) தந்தையும் (அந்யஃ) மற்ற பந்துவும், (விஶிஷ்டஃ) என்னைக்காட்டிலும் மேற்பட்டவனுவது, (மயா ஸமோவா) எனக்கு ஸமமானவனுவது, (ந) இல்லை. எனக்கு அவனிடத்திலுள்ள ஸ்நேஹம் மற்றெவனிடத்திலும் இல்லையென்றபடி.

ப்ராணன்களை விடுவேனாயின், ராமன் எள்ளளவும் ஜீவித்திருக்கமாட்டாராகையால், என் ப்ராணநாதன் என்னைக் கொண்டுபோக ப்ரயத்னஞ்செய்யும் ஸமாசாரம் எனக்குத் தெரியும்வரையில், ராமதூதா! நான் பிழைத்திருக்க விரும்புகின்றேன்' என்றனள். [1] அத்தேவி இங்ஙனம் அவ்வானரஶ்ரேஷ்டனைப் பார்த்துப் பெரும் பொருளடங்கிய மதுரவசனங்களைப் பேசி,

---

ஆனதுபற்றியே (தாவத் த்வஹம் தூத ஜிஜீவிஷேயம் யாவத் ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய) ராமன் என்னை அழைத்துக் கொண்டுபோகும் வார்த்தையைக் கேட்கும்வரையில் பிழைத்திருக்க விரும்புகிறேன் என்று பொருள். அவனிடத்தில் எனக்குப் போல ஸ்னேஹம் எவர்க்கும் கிடையாது. இப்படிப்பட்டவனானதுபற்றியே அவன் வார்த்தையைக் கேட்கும் வரைக்குமே ஜீவித்திருக்க விரும்புகின்றேன். கேட்கமாட்டேனாயின் ப்ராணன்களையே விடுவேனென்று கருத்து.

1. இங்கு 'இதீவ தேவீ வசநம் மஹார்த்தம் தம்வாநரேந்த்ரம் மதுரார்த்தமுக்த்வா|ஶ்ரோதும் புநஸ்தஸ்ய வசோऽபிராமம் ராமார்த்த யுக்தம் விரராம ராமா' என்று மூலம். (இதீவ) இவ்விதமாக. ரிஷி பூர்வம் ப்ரணய கோபத்தினால் ஸீதை மொழிந்த சில வாக்யங்களை ஸ்பஷ்டமாகச் சொல்லி இப்பொழுது ப்ரணயதாராஸம்ரக்ஷணத்தில் பரிசயமில்லாதவராகையால் (இதீவ) என்று அதை ஸாமான்யமாகச் சொல்லிவிடுகிறார். (தேவீ) அந்தப்புரவ்ருத்தாந்தம் பிறர்க்குத் தெரியக்கூடியதன்றல்லவா? ஆகையால் (இதீவ) என்று மேலெழச் சொல்லிவிட்டாரென்று கருத்து. (வசநம் மஹார்த்தம்) பெரும் பொருளடங்கின வார்த்தையை. அந்தரங்கர்க்குங்கூடத் தெரியமுடியாத வார்த்தையை (தம் ப்ரதி) அந்த ராமன் விஷயமாக (வாநரேந்த்ரம்) வானரஶ்ரேஷ்டனான ஹனுமானை. ராமவிஷயத்தில் இவனைப்போல நிர்வாஹகனாயிருப்பவன் மற்றொரு வானரனில்லை. ஆகையால் வானரேந்த்ரனென்று கூறப்பட்டனன். ஸுக்ரீவனும் சேஷத்வ காஷ்டையுடையவனாகையால் வானரேந்த்ரனாவானன்றிப் பாரதந்த்ரிய காஷ்டையுடையவன் ஹனுமானே யாகையால் வானரேந்த்ர

உடனே ராமனைப்பற்றினதாகையால் மிகுதியும் மனத்திற்கினிதான அவன் சொல்லும் உத்தரத்தைக் கேட்க விரும்பி அதற்கு அவகாசங்கொடுப்பதற்காகத் தான்

---

னெனப்பட்டானென்று தெரிகிறது. அவ்வசனம் (மதுரார்த்தம்) மதுரமான விஷயமுடையது. இதை எனக்குச் செய்யமுடியாதென்று விடத்தாமன்றென்று கருத்து, (உக்த்வா) மொழிந்து. ஹநுமானும் அவன் ப்ரபுவும் ஸுகமாகயிருக்கிறார்கள். எனக்கன்றோ பிழைப்பு, ஸந்தேஹமா யிருக்கின்றது என்னும் வார்த்தையைச் சொல்லி, (ஸ்ரோதும் புநஸ்தஸ்ய வசோஉபி ராமம்) மநோஹரமான அவனது வார்த்தையை மீளவும் கேட்க விரும்பி மரணமடைந்தவரையுங்கூட மீளவும் பிழைப்பிக்கச் செய்யுந்திறமை இவன் வார்த்தைகளுக்கு உளதென்று நிச்சயித்துத் தன்னால் கண்டிக்கப்பட்ட பக்ஷத்தை மீளவும் தலையெடுக்கச் செய்யவல்ல வாக்யஸமூஹத்தைக் கேட்க விரும்பி, (ராமார்த்தயுக்தம்) ராமப்ரயோஜனத்துடன் கூடின அவ்வார்த்தையைக் கேட்க விரும்பி, (விராம) மௌனமாயிருந்தனள். வெகுநேரம் தானும் பேசினள். ஸ்வாமியின்வார்த்தையைச் சொல்லும்பொழுது நடுவில் பேசுவது யுக்தமன்றாகையால் வெறுமனேயிருந்து ஸ்வாமியின் வார்த்தைக்கு இடங்கொடுத்தனள். (ராமா) மனத்திற்கினியளாயிருப்பவள், ராமன் தூதனை அனுப்பினானேயன்றி இப்படிப்பட்ட அவஸ்தையிலும் அவளது அழகைக் கண்குளிரக் காணப்பெற்றிலனே யென்று கருத்து. அன்றியே—(இதீவ) ப்ரணய தாரையிலுள்ள விஷயமெல்லாம் சொல்லமுடியாதாகையால் (இதீவ) இவ்வண்ணம்போல் என்று ஸாமான்யமாக அனுவர்த்தித்தார் மஹர்ஷி. (தேவி) தேவிக்கு வல்லபனைக் குறித்த ப்ரேமாதிசய வ்யவஹாரம் வெளியார்க்குத் தெரியாதல்லவா? (வசனம் மஹார்த்தம்) கேவலம் வெளியார்க்கு மாத்ரமேயன்று; அதை, உபதேசிக்கிற எம்மைப்போன்றவர்க்கும் தெரியக்கூடாதது. (தம வாநரேந்த்ரம்)அந்த ப்ரஸித்தனான வானரஸ்ரேஷ்டனை, சேஷத்வகாஷ்டையில் அபிஷேகம் பெற்று வானரேந்த்ரனாகிய ஸுக்ரீவனைக் காட்டிலும் பாரதந்த்ரிய காஷ்டையில் அபிஷேகம் பெற்ற இவனே மேற்பட்டவனாகையால் வானரேந்த்ரனென்று சொல்லப்பட்ட

பேசுவதை நிறுத்தி மௌனமாயிருந்தனள். பயங்கர பராக்ரமனாகிய ஹநுமான், ஸீதை மொழிந்த வார்த்தையைக் கேட்டுச் சிரஸில் அஞ்சலி செய்து அப்பெண்மணியைப் பார்த்துத் 'தாமரையிதழ்போன்ற கண்களையுடைய உன்னைப்போன்ற ஸுந்தரியையுங்கூட ராமன் விட்டு நிற்பானா? ஆனதுபற்றியே, சசி அனுஹ்லாதனிடமிருப்பதை அறியாமையால் இந்த்ரன் அவளைக்கொண்டு போகாததுபோல், உன்னை அழைத்துக்கொண்டு போகாதிருக்கின்றனன். அனுஹ்லாதனிட மிருப்பதை அறிந்தபின்பு இந்த்ரன் அந்தச் சசீதேவியை அழைத்துக்கொண்டு போனதுபோல், நான் போய்ச் சொன்னவுடனே தான்வந்து உன்னைக் கொண்டுபோவான். என்னால் உன் ஸங்கதியைக் கேட்டவுடனே ராமன் வானரர்களும் கரடிகளும் நிறைந்த மஹா ஸைன்யத்தைக் கூடவே திரட்டிக்கொண்டு வேகமாக இவ்விடம் வருவான். ஸமுத்ரம் கலக்கமுடியாத

---

னஞ். இப்படிப்பட்ட அவஸ்தையில் ஸீதாதேவியின் முகத்தைப் பார்த்து இங்ஙனம்பேசுவது ஸுக்ரீவனுக்கு லபிக்கவில்லையன்றோ? இப்படிப்பட்டதை லபித்த ஹநுமானுக்கு (உத்வா) ஹநுமானுக்கும் அவனது ஸ்வாமியான ராம ஸுக்ரீவாதிகளுக்கும் உஜ்ஜீவனத்தைச் செய்வதான பெரும் பொருளைச் சொல்லி, (ஶ்ரோதும் புநஸ்தஸ்ய வசோஉபிராமம்) ஸத்தை யழியப்பெற்ற எனக்கு ஸ்வரூப ஸத்தை விளைத்தவனாகையால் ப்ராணனில்லாதவனையுங்கூட இவன் பிழைப்பிக்கவல்லவன். என்னைப்போலவே ஸத்தையற்றிருக்கிற ராமனையும் ஸத்தை பெற்றவனாகச் செய்யவும் சொல்லவும் வல்லவனாகிய ஹநுமானுடைய வசனத்தைக் கேட்கவேண்டுமென்று விரும்பி, (அபிராம) தான் பலவாறு மொழிந்து பேசிக்கொண்டிருக்கும்வரையில் அவன் மறுமொழி கூறமுடியாதாகையால் அவனுக்கு அவகாசங்கொடுத்தனள். (ராமா) அழகாயிருப்பவள். இவள் வார்த்தையின் அழகை ஒருவர் மூலமாய்க் கேட்கவேண்டுமேயன்றித் தானே நேரில் நன்றாக அனுபவிக்க ராமனுக்கு நேராமற் போயிற்றே யென்று ரிஷி வருத்தப்படுகிறார்.

படி அகாதமாயினும் அதையுங்கூட ராமன் பாணங்களால் அசையாதிருக்கச்செய்து கடந்துவந்து இவ்விலங்கையில் ராக்ஷஸஸமூகமெல்லாம் ஒய்ந்து பறந்தோடும்படிக்குச் செய்யப்போகின்றனன். அப்பொழுது ராமனுக்கு வழிநடுவில் ம்ருத்யுவாவது தேவதைகளாவது அஸுரர்களாவது தடைசெய்வார்களாயின் ராமன் அவர்களையுங்கூட வதித்துவிடுவானே! இனி ராக்ஷஸர்களைக் கொல்வதுபற்றிச் சொல்லவேண்டுமோ? பூஜிக்கத்தகுந்தவளே! ராமன் உன்னைக் காணுதிருக்கின்றமையால் துக்கஸாகரத்தில் மூழ்கி ஸிம்ஹத்தினுல் பிடிக்கப்பட்ட யானைபோல் எள்ளளவும் ஸுகத்தை அடையாதிருக்கின்றனன். தேவீ! அழகிய கண்களுடையதும் ஆனது பற்றியே பார்க்கப் பதிஞயிரங்கண்கள் வேண்டும்படி அழகாயிருப்பதும் கோவைப்பழம்போன்ற அதரம் பொருந்தியதும் ஸுந்தரமான குண்டலங்களால் ப்ரகாசிப்பதும் பூர்ணசந்த்ரன் உதித்தாற்போல் விளங்குவதுமான ராமனது முகத்தை நீ நிஜமாகக் காணப்போகிருயென்று. தேவீ! எனது ஜீவனஸ்தானங்களாகிய மலயம் விந்த்யம் மேரு மந்த்ரம் தர்த்துரம் ஆகிய பர்வதங்கள்மேலும் எனக்கு ஆஹாரமாகிய கந்தமூலபலங்கள்மேலும் ஆணையிடுகின்றனன். வைதேஹி! நீ இனி, சீக்ரத்திலேயே [1] நாகப்ருஷ்டத்தின் நுனியில் உட்கார்ந்திருக்கின்றதேவேந்த்ரனைப்போல்ப்ரஸ்ரவண பர்வதத்தில் உட்கார்ந்திருக்கின்ற ராமனைக் காணப்போகிருய். உன்னைப் பிரிந்த வருத்தத்தினுல் ராமன் மாம்ஸம் தின்கிறதில்லை; மதுபானமுஞ் செய்கிறதில்லை. அவன் ப்ரதிதினமும் ஸாயங்காலத்தில் ஒருதடவை வானப்ரஸ்தர்களுக்கு யோக்யங்களாக விதிக்கப்பட்ட [2] வன்யங்களான காய்கிழங்குகளைச்சரீரதாரணத்திற்கு

1. நாகப்ருஷ்டமாவது இந்த்ரனுக்கு அஸாதாரணமாயிருப்பதான ஸ்வர்க்கத்தின் ஸ்தான விசேஷம்.

2. வன்யம் வனத்தில் உண்டானது.

மே புஜிக்கின்றனன். ராமனது மனமெல்லாம் உன்னிடத்திலேயே லயித்திருக்கின்றமையால் அவன் தேஹத்தினின்று காட்டீக்களையாவது கொசுக்களையாவது புழுக்களையாவது ஸர்ப்பங்களையாவது அப்புறம் போகும்படி ஓட்டுகிறதில்லை; அவை தன்மேலேறுவதை அறியுந்திறமையுமற்ற மனமுடையவனாயிருக்கின்றனன். ராமன் நீ இல்லாமையைப்பற்றி மன்மத பாதையில் அகப்பட்டு எப்பொழுதும் உன்னையே த்யானிப்பதும் எப்பொழுதும் உன்னைப் பற்றியே சோகிப்பதுமாகி மற்றொன்றையுஞ் சிந்திக்க நேராதிருக்கின்றனன். அந்தப் புருஷதிலகனாகிய ராமன் உன் துக்கத்தினால் எப்பொழுதும் நித்ரை செய்யாதிருக்கின்றனன். எப்பொழுதாயினும் சிறிது நித்ரைபோவானாயின் ஸீதே யென்று மதுரமான உரையை மொழிந்துகொண்டே எழுந்திருப்பான். அவன் பழத்தையாவது புஷ்பத்தையாவது மற்றும் மனோஹரமான பதார்த்தம் எதையாயினும் காண்பானாயின் அப்பொழுதே உன்னை நினைத்துப் பெருமூச்செறிந்துகொண்டு 'ஆ! ப்ராண நாயகி!' என்று பலவாறு உன்னைப் பேசுவான். தேவீ! தந்தையின் ஆஜ்ஞையால் வனவாஸ வ்ரதந் தரித்திருக்கும் மஹானுபாவனும் ராஜகுமாரனுமாகிய ராமன் எப்பொழுதும் உன்னையே நினைத்துக்கொண்டு பரிதாபமுற்று எப்பொழுதும் ஸீதேயென்று உன் பேரையே சொல்லிக்கொண்டு உன்னைப் பெறுதற்குவேண்டிய ப்ரயத்னங்களைச் செய்வதே கார்யமாயிருக்கிறான்' என்றனன். விதேஹராஜன் புதல்வியாகிய அந்த ஸீதை, ராமன் ப்ராணன்களோடிருக்கிறானோ? இல்லையோ? என்று தான் மனத்திற் கொண்டிருந்த சோகத்தை, ஹனுமான் ராமகதையைச் சொல்லக் கேட்டுத் துறந்தனளேயன்றி ராமனைப்பிரிந்திருக்கையால், அவனுக்குத் தன் விரஹத்தினால் உண்டான அவ்வளவு சோகத்தைத் தானும் அடைந்தவளாயினள். ஆதலால், சரத்காலத்தின் ஆரம்பத்தில் சந்த்ரன் மேகத்தில் சிறிது மறைவ

னும் சிறிது ப்ரகாசிப்பதுமாயிருக்கப்பெற்ற ராத்ரி போல், முகத்தில் ஸந்தோஷமும் வ்யஸனமும் தோன்றப்பெற்றவளாயிருந்தனள். முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸீதை ராவணனிட்ட கெடுவைக் கூறுதலும், ஹநுமான் தன் தோள்மேலேறிக் கொண்டு ராமனிடம் வருவாயென்ன, ஸீதை ராமனே ராவணனைக் கொன்று கொண்டுபோவது யுக்தமென்றுரைத்தலும்.

பூர்ணசந்த்ரன்போன்ற முகமுடைய ஸீதை ஹநுமான் மொழிந்த அவ்வார்த்தையைக் கேட்டு அவ்வானரோத்தமனை நோக்கி, தர்மார்த்தங்கள் பொருந்தின வசனங்களை மொழியத்தொடங்கி 'வானரோத்தமா! எப்பொழுதும் ராமன் என்னையே மனத்தில் நினைத்துக் கொண்டிருக்கிறானென்னும் ஸந்தோஷ வார்த்தையையும் எப்பொழுதும் என்னைக்குறித்து வருத்தமே கதியாயிருக்கிறான்' என்னும் துக்ககரமான வார்த்தையையும் மொழிகின்றனை. ஆகையால் நீ மொழிந்த வார்த்தைகள் அம்ருதம் போன்றவைகளும் விஷங் கலந்தவைகளுமாயிருக்கின்றன. ராமனைப் பிரிந்தமை என் ஸொந்த புத்தியாலுண்டானதன்று. மிகுதியும் விஸ்தீர்ணமான ஐஶ்வர்யம் வரும்பொழுதும் மிகுதியும் பயங்கரமான வ்யஸனம் நேர்ந்தபொழுதும் புருஷன் எள்ளளவும் ஸ்வதந்த்ரனல்லன். தெய்வம் அவனைக் கயிற்றால் கட்டினாற்போல்பிடித்து இழுத்துக்கொண்டு போகின்றது. வானரோத்தமா! ப்ராணிகளுக்குத் தெய்வத்தைத் தடுக்க ஸாத்யமன்று. இது நிச்சயம். லக்ஷ்மணனும் நானும் ராமனும் மூவரும் மஹா

வ்யஸனங்களால் மோஹிக்கப்பட்டிருக்கின்றனம்; காண்பாய். ஸமுத்ரத்தில் ஓடம் முறிந்துபோகையில், ஜல ப்ரவாஹத்தில் விழுந்து நீந்தி நீந்தி இளைப்புற்றவன் போல் துக்க ஸமுத்ரத்தில் விழுந்து அலைகின்ற ராமன் எப்பொழுது அதைக்கடந்து கரைசேரப்போகின்றனன்? என் பதியாகிய ராமன் ராக்ஷஸர்களையெல்லாங் கொன்று ராவணனையும் வதித்து இவ்விலங்கை முழுவதையும் நிர்மூலமாகச்செய்து என்னை எப்பொழுது காணப்போகின்றனன்? இந்த ஸம்வத்ஸரமென்னும் கெடு கடப்பதற்கு முன்னமே இவ்விடத்திற்கு விரைவாக வரவேண்டுமென்று ராமனுக்குச் சொல்வாயாக. ஏனெனில்—அது வரைக்குமே என் ப்ராணன் தக்கும். அதன் பிறகு ராவணன் என்னைக் கொன்றுவிடப் போகிறான். வானரேஶ்வரனே! கொடுந்தன்மையுள்ள ராவணன் எனக்கு ஏற்படுத்தியிருக்கும் ஸம்வத்ஸர காலமாகிற கெடுவில் பத்தாவது மாதம் நடந்து கொண்டிருக்கிறது. இனி இரண்டுமாதங்களே மிகுந்திருக்கின்றன. இதற்குள்ளேயே ராமன் இவ்விடத்திற்கு வரும்படி செய்யவேண்டும் ராவணன் தம்பி விபீஷணன் என்னை ராமனுக்குத் திருப்பிக்கொடுக்கும் விஷயத்தில் தன தண்ணனுக்கு எவ்வளவோ வருந்தப்பட்டு ஸமாதானஞ் சொல்லினான். அப்பொழுதும் அவனுக்கு அந்தப்புத்தி உண்டாகவில்லை. என்னை மீளவும் ராமனுக்குக் கொடுக்கும்படி ராவணன் எள்ளளவும் விருப்பமுற்றிருக்கின்றனன். ராவணன் காலத்தின் வசம் அகப்பட்டிருக்கிறனாகையால் அவனை யுத்தத்தில் கொண்டுபோக ம்ருத்யு (யமன்) தேடிக் கொண்டிருக்கின்றான். வானரா! விபீஷணனுடைய மூத்த பெண் அகலையென்பவள் தன் தாயால் அனுப்பப் பட்டு என்னிடம் வந்து இந்த ஸங்கதியையெல்லாம் மொழிந்தனள். வானர ஶ்ரேஷ்டனே! என் ப்ராண நாதனாகிய ராமன் என்னைச் சீக்ரத்திலேயே பெறப் போகின்றனன். இதற்கு எள்ளளவும் ஸந்தேஹமில்லை. ஏனெனில் இவ்விஷயத்தில் என் அந்தராத்மா (மனம்)

நிர்மலமாயிருக்கின்றது (தெளிந்திருக்கின்றது.) மேலும் ராமனிடத்தில் குணங்கள் பல உண்டு. வானரா! மிகுதியும் பெரிய கார்யங்களில் உத்ஸாஹமும் அப்படிப்பட்ட கார்யங்களைச் செய்தற்குரிய புருஷப்ரயத்னமும் பலமும் கொடுந்தன்மையில்லாமையும் செய்த உபகாரத்தை அறிந்து மறவாமையும் சௌர்யமும் சக்தியும் ஆக இக்குணங்களெல்லாம் ராமனிடம் இருக்கின்றன. ஜனஸ்தானத்தில் தம்பியுமில்லாமல் தானொருவனே பதினாலாயிரம் ராக்ஷஸர்களை முடித்த ராமனோடு அப்படிப்பட்ட மஹா வீரனோடு பகை வைத்துக்கொண்டிருப்பவன் எவன்தான் பயப்படாதிருப்பான்? புருஷலாமனாகிய ராமன் எத்தனை கஷ்டங்களானாலும் எள்ளளவும் சலிக்கமாட்டான். தேவேந்த்ரனுடைய ப்ரபாவம் சசீதேவிக்குத் தெரிவதுபோல், ராமனுடைய ப்ரபாவம் எனக்கே தெரியும். ஹனுமானே! சூரனாகிய ராமனென்னும் ஸூர்யன் பாண ஸமூஹங்களென்னுங் கிரணங்களைப் பரப்பி, சத்ருக்களாகிய ராக்ஷஸர்களென்னும் ஜலத்தைச் சோஷிக்கச் செய்வான்' என்றனள். இங்ஙனம் எதேதோ ஓயாமல் மொழிந்துகொண்டு ராமனைக் குறித்த சோகத்தினால் இளைத்துக் கண்கள் நிரம்ப நீர் ததும்பப்பெற்று வருந்துகின்ற அம்மடந்தையர்மணியைப் பார்த்து, ஹனுமான் மொழிந்தனன்:—'நான்போய் உன் வ்ருத்தாந்தத்தைச் சொன்னவுடனே ராமன் வானரர்களும் பல்லூகர்களும் திரள் திரளாக நிரம்பப்பெற்ற மஹா ஸைன்யத்தைக் கூடவே விரைவாக அழைத்துக்கொண்டுசீக்ரத்தில் இவ்விடத்திற்கு வருவான். அழகிற்சிறந்த முகமுடையவளே! சிந்தைக்கிட மில்லாதிருப்பவளே! இவ்வளவு சொல்லி என்? அப்படி இல்லையாயின் நீ படுகிற துக்கத்தை இப்பொழுதே போக்கடிக்கின்றனன்; ஒன்றும் வேண்டாம். நீ என் முதுகின்மேல் ஏறிக்கொள்வாயாக. உன்னை இப்பொழுதே ராமனிடம் கொண்டுபோகிறேன். உன்னை முதுகின் மேலிட்டுக்கொண்டே ஸமுத்ரத்தைத் தாண்டிப்போவேன்.

உன்னை எடுத்துக்கொண்டுபோக எனக்கு சக்தி உளதோ இல்லையோ என்று ஸந்தேஹப்படவேண்டாம். ராவணனோடு கூடிய இவ்விலங்கையை எடுத்துக் கொண்டுபோக எனக்குச் சக்தி உண்டே; இனி உன்னை எடுத்துக்கொண்டுபோவது எவ்வளவு? ஸீதே! அக்னி, ஹோமஞ்செய்த ஹவிஸ்ஸைத் தேவேந்த்ரனுக்குக் கொடுப்பதுபோல், நானிப்பொழுது உன்னைக்கொண்டு போய் ப்ரஸ்ரவண பர்வதத்திலிருக்கின்ற ராமனுக்குக் கொடுப்பேன். ஸீதே! லக்ஷ்மணனும் தானுமாக ராக்ஷஸ வதத்திற்கு முயன்றவனாகி அங்ஙனம் ராக்ஷஸ வதத்திற்கு ப்ரயத்னிக்கும் விஷ்ணு தேவனைப்போல் விளங்குகிற ராமனை இப்பொழுதே காண்பாய். உன்னைக் காண்பதற்கு நானாவித ப்ரயத்னங்கள் செய்துகொண்டு ஆஸ்ரமத்திலிருக்கின்ற அம்மஹா பலனை, நாகப்ருஷ்டமென்னும் ஸ்வர்க்கப்ரதேசத்தில் உட்கார்ந்திருக்கின்ற தேவேந்த்ரனைப்போல் விளங்குகிற ராமனை இப்பொழுதே காண்பாய்! மங்கல ஸ்வபாவமுடையவளே! தேவீ! என் முதுகின்மேல் ஏறுவாயாக; உபேக்ஷைசெய்ய வேண்டாம். ரோஹிணீ சந்த்ரனுடன் கூடுவதுபோல் ராமனுடன் கூட விரும்புவாயாக. நீ என் முதுகின்மேல் ஏறிக்கொண்டு ஆகாச மார்க்கத்தில் சந்த்ரனோடும் மஹா தேஜஸ்வியாகிய ஸூர்யனோடும் வார்த்தை சொல்வதுபோல் அனாயாஸமாகச் சென்று ஆகாயத்தையும் ஸமுத்ரத்தையும் தாண்டுவாயாக. அம்மே! உன்னை இவ்விடமிருந்து எடுத்துக்கொண்டு ப்ரயாணமாய்ப் புறப்பட்டவுடனே ராக்ஷஸர்கள் ஒருகால் என்னைப் பிடித்துக்கொள்வார்களென்று சங்கிக்கின்றனையோ? இவ்விலங்கையிலுள்ளவன் எவனாயினும் ஆகாயத்தில் என்னைப் பின்றொடர்ந்து என்னைப் போல் வர வல்லனல்லன். வைதேஹீ! நான் எப்படி ஸுகமாக ஸமுத்ரத்தைத் தாண்டி இவ்விடம் வந்தேனோ, அப்படியே வருத்தமின்றி உன்னை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்தில் திரும்பிப் போவேன்; ஸந்தேஹமில்லை. காண்பாய்' என்றனன்.

ஸீதையும், வானரதிலகனாகிய ஹநுமான் மொழிந்த அற்புதமான வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷத்தினால் சரீரம் முழுமையும் மயிர்க்கூச்சலுண்டாகப் பெற்று அவனைப் பார்த்து மொழிந்தனள்:—'கபியூதநாதா! ஹநுமானே! நீ வெகுதூரம் என்னை எடுத்துக் கொண்டுபோக விரும்புகின்றனையே! இதெப்படி? இதனாலேயே நீ ஸ்பஷ்டமாகக் குரங்கேயென்று நினைக்கின்றனன். வானரதிலகா! உன் தேஹமோ மிகுதியும் அற்பமாயிருக்கின்றது; இங்கிருந்து என் பர்த்தாவான ராமனிருக்குமிடத்திற்கு வெகு தூரமிருக்கின்றது. நீ அவ்விடத்திற்கு என்னைக் கொண்டுபோக விரும்புகின்றனையே! இதெப்படி? ஆச்சர்யமாயிருக்கின்றதே!' என்றனள். காந்தி மிகுந்த அந்த வாயுகுமாரன் ஹநுமான், ஸீதை இங்ஙனம் தன்னை மொழிந்ததைக் கேட்டுத் தனக்கு அங்ஙனம் புதிதாக நேர்ந்த அவமானத்தைக் குறித்துத் தனக்குள் தான் 'கறுத்த கண்களையுடைய இப்பெண்மணி என் பலத்தையாவது என் ப்ரபாவத்தையாவது சிறிதும் அறிந்தவளல்லள்; ஆனதுபற்றியே இங்ஙனம் மொழிந்தனள். ஆகையால் ஸீதை என் ரூபத்தைக் காண்பாளாக' என்று சிந்தித்தனன். பகைவரை ஒழிக்குந் திறமையுடைய அக்கபிஸத்தமன் ஹநுமான், அப்பொழுது அங்ஙனம் சிந்தித்து நிஜரூபத்தை அவளுக்குக் காண்பித்தனன். அவ்வானரஸ்ரேஷ்டன் புத்தியிற் சிறந்தவனாகையால் தன்மேனி வளர்தற்கு அநுகூலமாக [1] அம்மரத்தினின்று பூமியில் குதித்து ஸீதைக்கு நம்பிக்கையை விளைப்பதற்காகத் தன் தேஹத்தைப் பெருக்கத் தொடங்கினன். வானரோத்தமனாகிய அந்த ஹநுமான் அங்ஙனம் உயரவளர்ந்து மேரு பர்வதம்போலவும் மந்தர பர்வதம் போலவும் புலப்பட்டுக்கொண்டு ஜ்வலிக்கின்ற அக்னிபோல் ப்ரகாசிப்பவனாகி ஸீதையின் எதிரில் வ்ருக்ஷத்தினடியில்

---

1. இங்கு வளரும்பொருட்டு மரத்தினின்று கீழ் இழிந்ததாகத் தெரியவருகின்றது. இதைப்பற்றி முன்பு மரத்தினின்று



2250. ஹனுமான் ஸீதைக்குத் தன் ஸ்வரூபத்தைக் காட்டுதல்.

நின்றனன். அங்ஙனம் பர்வதம்போன்ற உருவத்துடன் கூடிச் சிவந்த முகமும் வஜ்ரம்போல் கடினமான கோரைப்பற்களும் நகங்களும் பொருந்திப் பயங்கரமாகப் புலப்படுகின்ற அம்மஹாபலன் ஹநுமான் ஸீதையைக் குறித்து இங்ஙனம் மொழிந்தனன்:— 'பர்வதங்களோடும் அரண்ய ப்ரதேசங்களோடும் உப்பரிகைகளோடும் கோட்டைகளோடும் பட்டணத்து வாசற்படிகளோடுங்கூடின இவ்விலங்கைமாநகரத்தையும், இதற்கு நாதனாகிய ராவணனோடுங்கூடப் பிடுங்கி எடுத்துக்கொண்டுபோக எனக்குச் சக்தி உளது. தேவி! ஆகையால் பயப்படவேண்டாம். புத்தியைத் திடப்படுத்திக்கொள்வாயாக. உபேக்ஷை செய்யவேண்டாம். ராமனையும் லக்ஷ்மணனையும் துக்கமற்றவராகச் செய்வாய்' என்றனன். தாமரையிதழ்போல் அகன்ற கண்களையுடைய அந்த ஜநகராஜன் புதல்வி ஸீதை, வாயுதேவனுக்கு ஔரஸ புத்ரனும் பயங்கரமான ஆகாரமுடையவனுமாகிய ஹநுமானைப்பார்த்து 'மஹாகபி! உன் தைர்யத்தையும் உன் பலத்தையும் நான் நன்கறிவேன். நீ வாயுதேவனைப்போல் மிக வேகமான நடையுடையவனென்றும் அக்னியைப்போல் அற்புதமான தேஜஸ்ஸுடையவனென்றும் எனக்கு நன்றாகத் தெரிகின்றது. வானரஶ்ரேஷ்டனே! இப்படிப்பட்ட உன்னைப்போன்றவனன்றி ஸாமாந்யனாகிய

---

இறங்கினனென்றால் — மரத்தின் நுனியிலிருந்து ஸீதையின் ஸமீபத்திலுள்ள கிளைக்கு இறங்கினனென்று தெரிகின்றது. இங்ஙனம் கோவிந்தராஜர். மரத்தின் கீழிருப்பவன் அங்கேயே வளரத்தொடங்கினால் அவ்வேகத்தில் மரத்தின் கிளைகள்முறிந்து ஸங்கதி ராக்ஷஸர்களுக்குத் தெரியவருமென்று நினைத்து மரத்தடியினின்று அப்புறஞ் சென்று வளர்ந்தானென்றுணர்க. இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர். இப்பக்ஷத்தில்—'ஸதஸ்மாத் பாதபாத் யிமாநவப்லுத்ய' என்னும் மூலத்திற்கு—அம்மரத்தடியினின்று அப்புறஞ் சென்று — என்று பொருள்கொள்ள வேண்டும்.

மற்றொருவன், தாண்ட முடியாத ஸமுத்ரத்தைத் தாண்டி இக்கரையாகிய இப்பூமிக்கு எவன் வந்து சேருவான்? நீ ராக்ஷஸர் கையில் அகப்படாமல் போக வல்லவனென்றும் என்னையும் எடுத்துக்கொண்டு போவாயென்றும் எனக்குத் தெரிகின்றது. ஆயினும் அம்மஹாநுபாவனுடைய கார்யம் இடையில் விக்னங்களால் தாமதப்படாமல் விரைவில் ஸித்திக்கும்படி ஆலோசிக்கவேண்டும். பாபமற்றவனே! கபிஸத்தமா! நான் உன்னோடு வருவது எள்ளளவும் யுக்தமன்று, ஏனெனில்—நீ வாயுவேகம்போன்ற வேகமுடையவன்; உன் வேகத்தினால் நான் ப்ரமித்து மோஹிப்பேன். நீ என்னை முதுகின்மேல் எடுத்துக்கொண்டு அதிவேகத்துடன் போய்க்கொண்டிருக்கையில், நான் ஸமுத்ரத்திற்குச் சிறிது ஸமீபத்தில் ஆகாயத்தில் போகும்பொழுது அந்த ஸமுத்ரத்தைக்கண்டு பயந்து உன் முதுகினின்று அதில் விழுவேன். அங்ஙனம் திமி மத்ஸ்யங்களும் முதலைகளும் ஸாதாரண மத்ஸ்யங்களும் நிறைந்திருக்கிற ஸமுத்ரத்தில் விழுந்தவுடனே உடம்பு தெரியாதிருக்கிற நான் சீக்ரமாக ஸமுத்ரத்திலுள்ள ஜலஜந்துக்களுக்கு மிகுதியும் மேலான ஆஹாரமாய் விடுவேன். கபிச்ரேஷ்டா! நீ சத்ருக்களை அழிக்குந் தன்மையனே. ஆயினும் உன்னோடுகூட நான்வர வல்லளல்லேன். ஏனெனில், எவனாயினும் தானொருவனாயிருந்தால் மாத்ரமன்றியே, ரக்ஷிக்கவேண்டிய மற்றொருபொருளுடன் இருப்பானாயின், அந்த ரக்ஷ்ய வஸ்துவைப்பற்றி அவனுக்கு ஆபத்து நேருமோ! என்னவோ என்று ஸந்தேஹப்பட வேண்டியதாய் வருகிறது. எவர்க்குமே யன்று; உன்னைப்போன்றவனுக்குங்கூட; நீ யொருவனேயன்றிப் பாதுகாக்க வேண்டியவளாகிய நானொருத்தி உன்னுடனிருப்பேனாயின், என்னைப் பாதுகாக்கும் விஷயமாக உனக்கு ஆபத்து நேரக்கூடுமென்று சங்கை உண்டாகின்றது. இதற்கு ஸந்தேஹமே இல்லை. எப்படியெனில்—நீ என்னைக்கொண்டு போவதைக் கண்டவுடனே துஷ்ட

ஸ்வபாவனுகிய ராவணனுடைய ஆஜ்ஞையால் பயங்கரமான பராக்ரமமுடைய ராக்ஷஸர்கள் பலர் உன்னைப் பின்தொடர்ந்து வருவார்கள். வீரனே! அங்ஙனம் சூரர்களான அந்த ராக்ஷஸர்கள் சூலாயுதங்களையும் இரும்புத் தடிகளையும் தரித்து உன்னைச் சுற்றிலுஞ் சூழ்ந்து கொள்வார்கள். அனந்தரம், நீ ஒருவனல்லையே; உனக்கு ரக்ஷிக்கவேண்டியவளாகிய நானொருத்தியும் கூட இருக்கையால் ஆபத்து ஸம்பவிக்குமென்னும் ஸந்தேஹம் உண்டாகின்றது. அந்த ராக்ஷஸர்கள் ஆயுத முடையவர்; பலர்; நீயோ ஒருவன்; ஆயுதமில்லாதவன். அங்ஙனம் அவர்கள் ஆகாயத்தில் உன்னைச் சுற்றிலுஞ் சூழ்ந்துகொள்கையில் உனக்கு யுத்தஞ் செய்யவும் என்னைப் பாதுகாக்கவும் எப்படி ஸாத்யப்படும்? கபிஸ்ரேஷ்டனே! நீ கொடுஞ்செயலர்களான ராக்ஷஸர்களுடன் யுத்தஞ் செய்துகொண்டிருக்கையில் நான் பயத்தினால் வருந்தி உன் முதுகினின்று கீழ்விழுவேன். வானரேந்த்ரா! நான் விழுவது அங்ஙனமிருக்க, பயங்கரர்களும் [1] மஹாகாயர்களும் பலிஷ்டர்களுமான ராக்ஷஸர்கள் யுத்தத்தில் உன்னை ஒருகால் எப்படியாவது ஜயிக்கிலும் ஜயிக்கக்கூடும். அல்லது ஒருகால் நீ தோல்வி அடையாமற்போயினும், அவர் முகமாகத் திரும்பி யுத்தஞ் செய்துகொண்டு பரவசனாயிருப்பாயாகையால் நான் விழுந்தவுடனே உனக்குத் தெரியாமலே பாபிஷ்டர்களான ராக்ஷஸர்கள் என்னை எடுத்துக்கொண்டு போவார்கள். அல்லது, உன் கையிலிருந்து என்னைப் பறித்துக்கொண்டு போவார்கள். அல்லது, என்னை ஹிம்ஸிக்கிலும் ஹிம்ஸிப்பார்கள். யுத்தத்தில் ஜயமே விளையுமென்றாவது அபஜயமே விளையுமென்றாவது நிச்சயத்தைக் காண்கிறிலோமல்லவா? ஆகையால் உனக்கு அபஜயம் நேரினும் நேரக்கூடும். அப்பொழுது அந்த ராக்ஷஸர்கள் உன் கையிலிருந்து என்னை இழுத்துக்கொண்டு போயினும் போவார்கள்; அல்லது வெட்டிப்போகடினும் போகடு

1. மஹாகாயர்—பெருஞ்சரீர முடையவர்.

வார்கள். நான் கீழ் விழாமற்போயினும் நீ அபஜயம் அடையாமற்போயினும், ராக்ஷஸர்கள் வெறும் விரட்டல்களாலேயே எனக்கு ப்ராண ஸந்தேஹத்தை விளைக்கினும் விளைக்கக்கூடும். அப்பொழுது, வானர திலகனே! நீ இவ்வளவு தூரம் பட்ட பாடெல்லாம் பயனற்றதே யாய்விடும். நீ யொருவனே ஸமஸ்த ராக்ஷஸர்களையும் முடிக்க வல்லவனே; ஆயினும் ராக்ஷஸர்கள் உன் கையாலேயே கொல்லப்படுவார்களாயின், ராமனது கீர்த்தி குறைந்துபோய்விடும். அப்படியில்லையாயின், ராக்ஷஸர்கள் என்னைக் கொண்டுபோய் அவ்வானரர்களாவது ராம லக்ஷ்மணர்களாவது எவ்விதத்திலும் அறியக்கூடாத ஏகாந்த ப்ரதேசத்தில் மறைத்துவைக்கினும் வைப்பார்கள். அனந்தரம் நீ எனக்காகத் தொடங்கின ப்ரயத்னமெல்லாம் வீணாய்விடும். ஆகையால் நீ அவ்விடஞ்சென்று என் ஸங்கதியை விண்ணப்பஞ்செய்து அந்த ராமனோடு கூட இவ்விடம் வருவாயாயின், எனக்கு மிகுதியும் மேன்மை உண்டாகும். மஹாபாஹுவே! மஹானுபாவனாகிய ராமனுடைய ப்ராணன்களும், அவன் தம்பிகளின் ப்ராணன்களும், உன் ராஜனாகிய ஸுக்ரீவனது பந்துக்களின் ப்ராணன்களும் இப்பொழுது என்னைப் பற்றி நின்றிருக்கின்றன. இப்படிப்பட்ட எனக்கு ப்ராணபயம் நேருமாயின் இத்தனைபேர்களின் ப்ராணன்களும் பாழாய்விடும். ராமலக்ஷ்மணர்களிருவரும் இதுவரைக்குமே என்னைக் குறித்துச் சோகத்தினாலும் பரிதாபத்தினாலும் இளைத்திருக்கின்றனர்; இனி எனக்கு ப்ராண அபாயம் ஏதேனும் விளையுமாயின், பிறகு என்னைப் பெறும் விருப்பத்தையும் துறந்து வானரர்களும் பல்லூகர்களும் தாமுமாக எல்லோரும் ப்ராணன்களை முதலிலே இழந்து விடுவார்கள். வானரபுங்கவா! நான் பர்த்தாவிடத்திலுள்ள பக்தியையே முக்யகாரணமாகக்கொண்டு ராமன் தவிர மற்றொரு புருஷனது சரீரத்தைத் தொடவேமாட்டேன். ஆனால் 'ராவணன் உன்னைத் தொடவில்லையா'

என்னில், அப்பொழுது எனக்கு எதுவுஞ் செய்யச் சக்தியில்லாமற்போயிற்று. என் ப்ராண நாதன் அருகில் இல்லாமற்போயினன்; நானும் துக்கத்தினால் மெய்ம் மறந்திருந்தேனாகையால் ராவணன் சரீரத்தில் அவன் செய்த பலாத்காரத்தினால் படவேண்டியதாய் வந்தது. அதற்கு என்ன செய்யலாகும்? ராமன் இவ்விடம் வந்து ராவணனைப் பந்துக்களோடுகூட வதித்து என்னை இவ்விடமிருந்து அழைத்துக்கொண்டு போவானாயின், அதுவே அவனுக்கு (ராமனுக்கு)த் தகுந்திருக்கும். யுத்தத்தில் பின்வாங்காமல் பகைவரை அடக்குந் திறமையுடைய மஹாதீரனாகிய ராமனது பராக்ர மங்கள் பலவற்றையும் நான் கேட்டிருக்கின்றனன்; பார்த்துமிருக்கின்றனன். தேவதைகளாவது கந்தர் வர்களாவது நாகர்களாவது ராக்ஷஸர்களாவது எவரும் யுத்தத்தில் ராமனுக்கு நிகரல்லர். பராக்ர மத்தில் மஹேந்த்ரனைப்போன்று மஹாபலிஷ்டனாகிய ராமன் விசித்ரமான தனுஸ்ஸைப் பிடித்து லக்ஷ்மண னுடன்கூடி, வாயுவால் தூண்டப்பட்டு மேற்கிளம்பி எரிகின்ற அக்னிபோல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கை யில், அவ்வீரனை எவன் எதிரிட்டுப் பொறுக்கவல்ல வன்? வானரோத்தம! யுத்தத்தில் மதித்த திக்கஜம் போல் நின்று பகைவரைப் புடசூர்ணஞ் செய்ய வல்லவ னும் ப்ரளயகால ஸூர்யன்போல் விளக்கமுற்று அந்த ஸூர்ய கிரணம்போன்ற பாணங்களை ப்ரயோகிப்பவனு மாகிய ராமன் லக்ஷ்மணனும் தானுமாக யுத்த பூமியில் வந்து கம்பீரமாக ப்ரகாசிக்கையில், அவனை எவன் பொறுக்க வல்லவன்? வானரோத்தமா! நீ என் பர்த்தா வான ராமனையும் லக்ஷ்மணனையும் வானர யூதபதிக ளனைவரையும் இவ்விடத்திற்குச் சீக்ரத்தில் அழைத்துக்கொண்டு வரவேண்டும். ராமனைக் குறித்து வெகுகாலமாக வருந்தி மனக்களிப்பற்றிருக்கின்ற

எனக்கு ஸந்தோஷத்தை விளைப்பாயாக' என்றனள்.
[1] முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் ஸீதையை ராமனுக்கு அடையாளங் கொடுக்கும்படி வேண்டுதலும் ஸீதை காகாஸுர வ்ருத்தாந்தத்தைச் சொல்லிச்சூடாமணியைக்கொடுத்தலும்.

அனந்தரம் அந்த வானரஸிம்ஹமாகிய ஹனுமான் ஸீதை மொழிந்த வார்த்தையைக் கேட்டுப் பேசவல்லவனுகையால் தர்மம் பொருந்தின அந்த வார்த்தைக்கு மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து அவளைப் பார்த்து, 'தேவீ! சுபமான காட்சியுடையவளே! நீ சொன்னது உன் ஸ்த்ரீஸ்வபாவமாகிய பயாதிகளுக்கும் உன்னைப் போன்ற பதிவ்ரதைகள் ஆசரிக்கவேண்டிய விநய வ்ருத்திகளுக்கும் பொருந்தியதும் மிக யுக்தமுமாயிருக்கின்றது. என் முதுகு விசாலமாயிருப்பினும் அதன் மேல் ஏறிக்கொண்டு நூறுயோஜனை நீளமுடையதும் மிகுதியும் அகன்றிருப்பதுமாகிய ஸமுத்ரத்தைத் தாண்டுவது ஸ்த்ரீயாகிய உனக்கு எவ்வளவும் ஸாத்யமன்றல்லவா? தேவீ! ஜனகராஜன் புதல்வியே! விநயம் மிகப்பெற்றவளே! நீ 'ராமன் தவிர மற்றொரு புருஷன் என்னைத் தொடலாகாது' என்று இரண்டாவது காரணம் சொல்லுகின்றனையே; அது அம்மஹானுபாவனது பத்னியாகிய உனக்குத் தகுந்திருக்கின்றது. தேவீ! நீ தவிர மற்றெவள் இப்படிப்பட்ட வார்த்தையை மொழிவாள்? தேவி! என்முன்னே நீ ராம விரஹத்தைப் பொறுக்கமுடியாமல் உயிரைவிட்டுக் கொள்வது முதலாக நடத்தின கார்யங்களையும், ராவணனை த்ருணீகாரஞ்செய்து மொழிந்த வார்த்தைகளையும் ஸமஸ்த வ்ருத்தாந்தங்களையும் ஒன்றுந்

1. இந்த ஸர்க்கத்தில்—பக்தியுடையவர் பகவத்ப்ராப்திக்காக உபாயாந்தரங்களைப் பற்றுவது ஸ்வரூப விருத்தமென்றும் பகவானே அதற்கு உபாயமென்றும் ஸீதை தனது ஆசாரத்தினுல் தெரிவித்தனள்.

தவருமல் ராமனுக்கு விண்ணப்பஞ்செய்வேன். தேவீ! உனக்குத் துயரத்தை விளைப்பனவாகிய காரணங்கள் பலவற்றையுங் கண்டு பல உபாயங்களால் ராமனுக்கு எப்படியாயினும் ப்ரியஞ்செய்யவேண்டுமென்று விரும்பி அந்த ஸ்னேஹத்தினுல் என் மனம் கலங்கி இங்ஙனம் மொழிந்தேனன்றி வேறில்லை. லங்கை புக முடியாதிருப்பதையும் மஹாஸமுத்ரம் தாண்டமுடியா திருப்பதையும் என்னுடைய திறமையையும் ஆலோசித்து இங்ஙனம் மொழிந்தேனன்றி வேறில்லை. நிந்தைக்கிடமாகாதவளே! நீ என்னோடுகூட வருதற்கு ஸம்மதிக்கமாட்டாயாயின், நான் வந்து உன்னைக் கண்டது ராமனுக்குத் தெரியும்படி ஏதேனுமோர் அடையாளங் கொடுப்பாயாக. அதைப்பற்றி ராமன் தெரிந்து கொள்வானல்லவா?' என்றனன். தேவகன்னிகை போன்ற அந்த ஸீதை ஹனுமான் இங்ஙனம் மொழிந்தது கேட்டு, உடனே அடையாளங் கொடுப்பவளாகித் தன் கணவனோடு ஏகாந்தத்தில் நடந்த ஒரு வ்ருத்தாந்தம் நினைவுக்கு வரக் கண்ணீர் தடுக்கையால் அக்ஷரங்கள் தடைபட மெல்லமெல்ல, அவ்வானரனைக் குறித்து மொழிந்தனள் :—'முன்பு, சித்ரகூட பர்வதத்தின் ஈசான்ய திக்கில் (வடகிழக்கு மூலையில்) உள்ள தாழ்வரையில் மந்தாகினியினருகில் ஸித்தர்களடுத்திருப்பதும் காய்கிழங்குகளும் ஜலமும் ஏராளமாயிருக்கப்பெற்றதுமாகிய ஒரு ப்ரதேசத்தில் அங்குள்ள தாபஸாச்ரமங்களில் நான் வஸித்திருக்கும்பொழுது ஒன்று நடந்தது. இது மிகுதியும் மேலான அடையாளம். இதை இதோ உனக்குச் சொல்லுகின்றனன். நீ இதை என் ப்ரியனுகிய ராமனுக்குச் சொல்வாயாக. நான் அங்கு நானாவித புஷ்பங்களின் மேலான வாஸனைகள் கமழப்பெற்ற உபவன ஸமூஹங்களில் விளையாடிப் புழுக்கத்தால் நனைந்து [1] உன் மடியில்

---

1. இங்கு ஸீதை ராமனையே முன்னிலையாக்கிச் சொல்லுகிருளாகையால் 'உன் மடியில்' என்கிருள். இங்ஙனம் மேலும் கண்டு கொள்க.

அப்பொழுது என் ஸ்தனங்கள் பிறப்பட்டுப் புண்ணு யிருப்பது கண்டு, க்ருஷ்ணஸர்ப்பம்போல் சினந்து நெடுமூச்செறிந்துகொண்டு 'யானையின் துதிக்கைகள் போன்ற துடைகளை யுடையவளே! எவன் ஸ்தனங்களி னிடையில் இங்ஙனம் புண்செய்தனன்? எவன் கோபித்துக்கொண்டிருக்கிற ஐந்து தலைப்பாம்புடன் இங்ஙனம் விளையாடுகின்றனன்?' என்று வினவினன். அவன் நாற்புறமும் பார்த்து உடனே குருதியால் நனைந்த நகங்களுடன் என் முன்னே யிருக்கின்ற அந்தக் காகத்தைக் கண்டனன்.[1] அக்காகம் இந்த்ர னுடைய பிள்ளையாம்; பறக்குமவைகளில் மேலாயிருப் பது. அது அப்பொழுது பூமிக்கு வந்திருந்தது. அது சீக்ரமாகப் பறக்கும் விஷயத்தில் வாயுதேவனுக்கொப் பானது. அனந்தரம் மஹாபாஹுவும் புத்திசாலிகளில் மேன்மையுற்றவனுமாகிய ராமன் கோபத்தினால் கண்கள் சுழலப்பெற்று, அதைக் கொல்லவேண்டு மென்னும் கொடும் புத்திகொண்டு தன் தர்ப்பா ஸனத்தினின்று ஒரு தர்ப்பத்தை எடுத்து அதை ப்ராஹ்மாஸ்த்ர மந்த்ரத்தினால் அபிமந்த்ரித்தனன். அதுவும் எரிகின்ற ப்ரளயகாலாக்னிபோல் அந்தக் காகத்திற்கெதிரில் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. அந்த ராமன் அங்ஙனம் ஜ்வலிக்கின்ற அந்தத் தர்ப் பத்தை அக்காகத்தின்மேல் எய்தனன். அனந்தரம் அந்தத் தர்ப்பம் அங்ஙனம் எரிந்துகொண்டே ஆகா யத்தில் அந்தக் காகத்தைத் துரத்திக்கொண்டு போயிற்று. அங்ஙனம் அது பின்றொடர்ந்து துரத்து கையில், அப்பொழுது காகம் ஓரிட மென்பதில்லாமல் பலவகை இடங்களுக்கு ஓடிப்போயிற்று. அது தன்னை

---

1. இங்கு இந்த்ர புத்ரனாகிய ஜயந்தன் வாயஸ உருவந் தரித்து வந்தானென்பர் சிலர். சிலர் இவன் இந்த்ரனுக்கு வேறொரு புதல்வனென்பர். இந்த்ர புத்ரனென்பதை, ராமன் இவனை ரக்ஷித்த பின்பு ஸீதைக்குத் தெரிவிக்கையால் அவளும் இங்கு ஹனுமானுக்குத் தெரிவிக்கிறாளென்றுணர்க.

எவராயினும் காப்பாற்றுவாரா என்று காக்குந்
திசையை விரும்பி இந்த ப்ரபஞ்சம் முழுவதும்
ிந்தது. [1] அந்தக் காகத்தைத் தந்தையாகிய
்ரனும் தன்னால் பாதுகாக்க முடியாதென்று

1. இங்கு 'ஸபித்ராச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி:। த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் கத:' என்று மூலம். (ஸ:) அபராதிகளின் அபராதங்களைப் பகவான் பொறுக்கும்படி புருஷகாரஞ்செய்யும் ஸீதை விஷயத்திலேயே அபராதஞ் செய்து நன்கு வதிக்கத்தகுந்தவன், (ஸ:) பாகவதாபசாரஞ் செய்து 'நக்ஷமாமி' (எனது ஆஶ்ரிதர் விஷயத்தில் அபராதஞ்செய்தவர்களை நான் எள்ளளவும்பொறுக்கமாட்டேன்) என்ற ராமனது சபதத்திற்குட்பட்டவன். (ஸ:) 'நகைஸ்ஸருதிரை:' (ரக்தந் தோய்ந்த நகங்களோடு) என்னும்படி ஆருத அபராதத்துடன் உதிரக்கையனாயிருப்பவன். (ஸ:) இதற்கு முன்பெல்லாம் 'யதாந்தரகத:' என்று சந்து பொந்துகளில் மறைந்து க்ஷேமமாயிருந்து இப்பொழுது இப்படிப்பட்ட அபராதஞ் செய்தமையால் எங்கனும் ஒரு நிலையாகக் காலூன்றப்பெறாமல் ஓடத்தொடங்கி 'பவநஸ்ய கதௌ ஸம:' (சீக்ரமாகப் போவதில் வாயுதேவனுக் கொப்பானவன்) என்றபடியே ஆகாயத்தில் காற்றுப்போல் திரிந்துகொண்டிருப்பவன். (ஸ:) 'ஸந்யஶ்ச பித்ராச மவ ராகவ:' என்று நிருபாதிக பந்துவான ஈஶ்வரன் கைவிட்டமையால் ஸோபாதிக பந்துக்களுங்கூடக் கைவிடத்தகுந்தவன். அந்த ஸோபாதிக பந்துக்கள் கைவிட்டமைதானும் எப்படியென்னில்—(பித்ராச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி:) பந்துக்களென்றும் அல்லாதாரென்றும் பிரிவினையில்லாமல் எல்லோரும் கைவிட்டனர். பந்துக்களைச் சொல்லுகின்றனன் (பித்ராச பரித்யக்த:) தகப்பனாலுங்கூட விடப்பட்டனன். ப்ரஹ்மாஸ்த்ரம் பின்றொடர்ந்து வருகையில் பெற்ற தகப்பன் காப்பானோ என்று போனான். த்ரிலோகாதிபதியாகிய அவனும் கைவிட்டான். (பித்ரா) 'இந்த்ரோ மஹேந்த்ரஸ் ஸுரநாய கோவாத்ராதும் நஶக்தா யுதிராமவத்யம்' (ராமன் கொல்லும்படி நிச்சயித்தவனை ரக்ஷிப்பதற்குத் தேவாதிபதியான மஹேந்த்ரனுக்குங்கூட முடியாது) என்கிறபடியே இந்த்ரனும் வல்லமை

கைவிட்டனன். தேவதைகளும் கைவிட்டனர்.

---

யற்றுக் கைவிட்டனன். (பித்ரா பரித்யக்தஃ) ஹிதஞ்செய்பவனுகை யால் பிள்ளை செய்த அவிநயத்திற்கு இவன் இவ்வளவும் பட்டுத்தீர்ந்தால்தான் புத்தி வருமென்று கைவிட்டனன். (பித்ரா) முன்பு துர்வாஸரது சாபத்தினுல் ஐஶ்வர்யத்தைப் போக்கடித்துக்கொண்ட தனக்கு ஐஶ்வர்யத்தை விளைவித்தவள் அம்மஹானுபாவையாகையால் அந்த நன்றியால் அவளிடத்தில் அபராதஞ்செய்தவனை 'ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா' ஸமஸ்த லோகங்களுக்குந் (தந்தை) என்றும் 'தேவதேவோ ஹரிஃ பிதா' தேவதேவனுகிய விஷ்ணுவே எல்லோர்க்கும் தந்தை என்றும் சொல்லுகிறபடியே ஸமஸ்த லோகங்களுக்குந் தந்தை யாகிய ஈஶ்வரன் கைவிட்டமையால் இவனது தந்தையும் கை விட்டான். கைவிட்ட விதந்தானெப்படி யென்னில் (பரித்யக்தஃ) மேலுக்கு அங்ஙனம் விட்டானல்லன். புத்திபூர்வகமாகவே விட்டான். (பரித்யக்தஃ) இவனை மாத்ரமல்லாமல் இவனுடைய பார்யா புத்ராதிகளையுங்கூடக் கைவிட்டான். தந்தை ஹிதத்தை விரும்புமவனுகையால் இவனுடைய ஹிதத்தை உத்தேசித்து இங்ஙனம் கைவிட்டான். தாய் ப்ரியத்தையே விரும்புமவளாகை யால் அவள் என்ன செய்தாளென்னில் (ச) இங்குச் சகாரத்தால் அவளும் கைவிட்டாளென்று தெரிவிக்கப்பட்டது. அங்ஙனம் தாயும் ஏன் கைவிட்டாளென்னில்—'ஸீதா நாரீஜநஸ்யாஸ்ய யோகக்ஷேமம் விதாஸ்யதி' (ஸீதை இந்த ஸ்த்ரீ ஜனத்திற் கெல்லாம் யோகக்ஷேமத்தை நிறைவேற்ற வல்லவள்) என்கிற படியே பெண்ணுய்ப் பிறந்தோர்க்கெல்லாம் காப்பாகையால் அப்படிப்பட்ட அவள் விஷயத்தில் அபராதஞ் செய்தமைபற்றி இவனைக் கைவிட்டனள். (ச-மாத்ராச பரித்யக்தஃ) 'த்வம் மாதா ஸர்வலோகாநாம்' என்று ஸமஸ்த லோகங்களுக்கும் மாதாவான ஸீதாதேவி கைவிட்டமையால் இவனுடைய தாயும் கைவிட்ட னள். இங்ஙனம் பந்துக்கள் கைவிடுகையில்-அல்லாதார் எவரே னும் கைவிட்டார்களோ என்ன (ஸுரைஶ்ச) ஸஜாதீயர்களான தேவதைகளிடம்போக அவரும் கைவிட்டனர். அவர்கள் கைவிடுவ தேனென்னில் — 'கஸ்யவிஶ்யதி தேவாஶ்ச ஜாதரோஷஸ்ய

அங்ஙனமே மஹர்ஷிகளும் துறந்தனர். இங்ஙனம் அது

---

ஸம்யுகே' " (யுத்தத்தில் கோபித்திருக்கையில் தேவதைகளும் எவனிடத்தில் பயப்படுகிறார்களோ) என்கிறபடியே அவனது கண்கள் சிவக்கக் கண்டால் தேவதைகளும் பயப்படுவார்களாகையால் இவனைக் கைவிட்டனர். தனக்கு முன்பு தேவதாவஸ்தையில் ஸஜாதீயரான தேவதைகள் கைவிடினும் இப்பொழுது கைப்பற்றியிருக்கும் பக்ஷித்வாவஸ்தையில் ஸஜாதீயமான பக்ஷிகளும் கூடக் கைவிட்டனவா என்ன (ஸர்வைரபி ச) இந்தச் சகாரம் அவையுங் கைவிட்டனவென்று தெரிவிக்கிறது. ஏனெனில்—'பக்ஷிணோऽபி ப்ரயாசந்தே ஸர்வஸத்வாநுகம்பிநம்' என்று பக்ஷிகளுக்கும், ஸர்வபூதங்களிடத்திலும் தயை செய்யுந் தன்மையுள்ள ராமன் சரண்கொடுப்பவனாகையாலும் தம் குல நாயகனான கருடனுக்கு ஸ்வாமியாகையாலும் பக்ஷிகளுங்கூடக் கைவிட்டன. பக்ஷிகள் கைவிடினும் தயையே முக்யமாக உடைய ரிஷிகள் என்ன செய்தார்களென்னில்—(ஸ மஹர்ஷிபிஃ) தேவதைகள் கைவிட்டாற்போல் ரிஷிகளும் கைவிட்டனர். ஏனெனில்—ரிஷிகளாவார்-கண்டறியுந் திறமையுடையவர். மஹர்ஷிகள் வெகுதூரங் கண்டறியுந் திறமையுடையோர்களாகையால் அவர்கள் தமது ஆந்ருசம்ஸ்ய ஸ்வபாவத்திற்கு (தடையுடையரா யிருக்குந் தன்மைக்கு) ஏற்பட்டிருக்கிற எல்லை இவ்வளவென்று கண்டறிந்து கைவிட்டனர். 'நாம் தயைசெய்யும் ஸ்வபாவராயிருப்பது யுக்தமேயாயினும் அதற்கும் அளவில்லையோ? நமது சக்தியை அறிந்தல்லவோ நாம் தயைசெய்யவேண்டும். ஸர்வேச்வரனாகிய ராமன் தண்டிக்க நினைத்த இவன் திறத்தில் நாம் தயை செய்ய வல்லரல்லோம்' என்று தமது சக்தியைக் கண்டறிந்து கைவிட்டார்களென்று கருத்து. அன்றியே 'இவனை நாம் கைப்பற்றினோமாயின், இவனுடைய ஸஹவாஸதோஷத்தினால் நசித்துப்போவோம். நாம் விட்டோமாயின் வேறு திக்கில்லாமையால் ராமனே இவனை அங்கீகரிப்பான்' என்று நினைத்துக் கைவிட்டனர். (மஹர்ஷிபிஃ) 'யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டி தம் வித்யாதந்த்யரேதஸம்' (எவன் விஷ்ணுவை எப்பொழுதும் அவனைச் சண்டாலனென்றறிக) என்கிற

மூன்று லோகங்களிலும் சுற்றித்திரிந்து காக்கும்

படியே விஷ்ணு த்வேஷத்தைப்பற்றிச் சண்டாலனுகையாலும் 'சண்டாலः பக்ஷிணாம் காகः' என்கிறபடியே பக்ஷிகளில் காகம் சண்டாலனுகையாலும் சண்டாலன் நம்மிடத்திற்கு வரலாகா தென்று கைவிட்டனர். இங்ஙனம் மற்றொரு கதியுங் காணுமை யால் 'யானையைப் போக்கடித்துக்கொண்டவன் குடத்திலுந் தேடுவான்' என்னும் ந்யாயத்தின்படி திறந்த வாசல்களையுடைய வீடுகள் தோறும் நுழைந்து புறப்பட்டானென்கிறூர். (த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய) பூமி ஆகாயம் ஸ்வர்க்கம் என்கிற மூன்று லோகங்களிலும் திரிந்தனன். பூமியில் திரியும்பொழுது மஹாஷிகளும், ஆகாயத்தில் திரியும்பொழுது ஆகாயத்தில் ஸஞ்சரிக்கிற பக்ஷிகளும், ஸ்வர்க்கத்தில் திரியும்பொழுது மாதா பிதாக்களும், தேவதைகளும் கைவிட்டார்கள். (ஸம்பரிக்ரம்ய) ஒருதரம் நுழைந்து புறப்பட்டான். வீட்டிலுள்ளவர்க்குத் தெரியாதபடி கதவின் மூலைகளில் ஒளித்திருந்தான். அவர்க்கு ஒருகால் தயை உண்டாகாமற்போயினும் மற்றொருகாலாயினும் தயை உண்டாகுமோ வென்று அடிக்கடி போனுனென்றபடி. எல்லோரும் இவனை வெளியே போகத் துரத்திக் கதவை மூடிக் கொண்டார்களென்று கருத்து. அதற்குமேல் அவன் செய்த தென்னென்னில்-(தமேவ ஶரணம் கதः) தனக்கு ரக்ஷகராக நினைத்துத் தானடுக்கப்போனவர்களைக்காட்டிலும் கொல்லு முயன்ற ஈஶ்வரனுடைய முகமே குளிர்ந்திருக்கிறதென்று அவனையே சரணமடைந்தனன். (தமேவ) 'யதிவா ராவணஸ் ஸ்வயம்' என்று மஹாபராதி ஶிரோமணியான ராவணனும் வரின் ரக்ஷிப்பேனென்ற அவனையே சரணமடைந்தனன். (தமேவ) 'ஶரணாகதவத்ஸலः' என்று சரணாகதிக் கெல்லையானவனையே கைப்பற்றினன். சரணமல்லாதவர்களை யெல்லாம் அடுத்துத் திரிந்த வருத்தமெல்லாந் தீர ஸர்வலோக சரண்யனுன அவனையே பற்றினன். (ஶரணம் கதः) உபாயபுத்தியுடன் பற்றினனல்லன். கண்டவிடமெல்லாந் திரிந்துவந்தவனுகையால் கால் ஓய்ந்து ஒதுங்கி யிருக்க நிழலைத் தேடி வந்தனன். அப்படி வந்த இடம் 'நிவாஸ வ்ருக்ஷஸ்ஸாதூநாம்' என்கிறபடியே நிவாஸவ்ருக்ஷமா

கதியொன்றையுங் காணுமல் கடைசியில் அந்த ராமனையே சரணமடைந்தது. [1] ககுத்ஸ்த குலதிலகனுகிய ராமன் எப்படிப்பட்டவர்க்கும் சரணம் புகத் தகுந்தவனுகையால் தன் முன்னே தரையில் விழுந்து சரணம் அடைந்திருக்கிற அக்காகத்தைக் கண்டு அது கொல்லத்தகுந்ததாயிருப்பினும் தயையினுல் அதைக் காப்பாற்றினன். அது எத்தனை லோகங்கள் திரிந்தும் தர்ப்பத்தினின்று தப்புவித்துக்கொண்டு ஸுகித்திருக்க முடியாமையால் அந்த ராமனையே சரணம் அடைந்தது. அங்ஙனம் பரிதாபமுற்று வருத்தத்துடன் தன்னிடம் வருகின்ற காகத்தைக்கண்டு, அவன் 'இந்த ப்ராஹ்மாஸ்த்ரத்தை வீணுகும்படி திருப்பிக்

யிருந்ததென்று கருத்து. இதனுல் ஸர்வேஶ்வரன் ரக்ஷிப்பதற்கு முதலில் அபராதம் நிறைந்திருப்பதும் வேறுகதியில்லாமையும் சொல்லப்பட்டன. நீரக்கழிய அபராதஞ்செய்தவர்களும் வேறு கதியில்லாமல் தன்னையே திக்காகப் பற்றுவார்களாயின் ஈஶ்வரன் ரக்ஷிப்பானென்று கருத்து.

1. இங்கு 'ஸதம் நிபதிதம் பூமௌ ஶரண்யஶ் ஶரணுகதம்| வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்' என்று மூலம். (ஸ:) ரக்ஷிப்பதையே ஸ்வபாவமாகவுடைய அந்த ஸ்ரீராமன். (தம்) ப்ராதிகூல்யமே பணியாகப்போந்த அவனே. (பூமௌநிபதிதம்) தேவ ஜாதியாகையால் பூமியைத் தொடாதவனுயினும் பூமியில் விழுந்திருக்குமவனே. (பூமௌ) துஷ்டனுன புத்ரனைத் தந்தை சிக்ஷிக்கையில் அவன் தாய் காலில்விழுமாபோல் பூமியின்மேல் விழுந்திருக்குமவனே (ஶரண்யம்) ஸர்வ அவஸ்தைகளிலும் சரணமடையத் தகுந்தவன். (வதார்ஹமபி) ராமாபிப்ராயத்திலும் கொல்லத்தகுந்த காகாஸுரனே. (காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்) ககுத்ஸ்த குலத்திற்குத் தகுந்த ஸ்வபாவமாகிய க்ருபையால் அவனே ரக்ஷித்தனன். (க்ருபயா) நம்மைப் போன்றவர் செய்யத்தொடங்கின கார்யம் விக்னங்களால் நிறைவேருது. அப்படியே ஈஶ்வரன் செய்யத்தொடங்கின கார்யமும் க்ருபையால் நிறைவேறுமென்று கருத்து.

கொள்ள முடியாது. ஆகையால் இதற்கென்ன செய்ய லாம்? சொல்' என்றனன். அதன் மேல் அக்காகம் 'உன் பாணம் என் வலக்கண்ணை ஹிம்ஸிக்குமாக' என்றது. அனந்தரம் அந்தத் தர்ப்பம் அக்காகத்தின் வலக் கண்ணை ஹிம்ஸித்தது. அங்ஙனம் அது தன் வலக் கண்ணைக் கொடுத்து ப்ராணன்களைக் காப்பாற்றிக் கொண்டது. அதன் பிறகு அக்காகம் ராமனுக்கும், ஸ்வர்க்கத்திலிருக்கையால் முன்னமே தனக்கு நண்பனா யிருக்கிற தசரத மஹாராஜனுக்கும் நமஸ்காரஞ் செய்து, வீரனாகிய அந்த ராமனிடம் விடைபெற்றுக் கொண்டு தன் இருப்பிடத்திற்குப் போயிற்று. 'பூநாதனே! நீ முன்பு எனக்காகக் காகமென்கிற ஒரு ஸ்வல்ப ஜந்துவின்மேல் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோ கித்தனையே! அப்படிப்பட்ட நீ இப்பொழுது உன்னிட மிருந்து என்னை அபஹரித்துக் கொண்டுபோன மஹாபராதஞ் செய்தவனையும் பொருத்திருக்கின் றனையே! இது என்? [1] புருஷதிலகனே! அப்படி தயா நிதியென்று ப்ரஸித்திபெற்ற நீ வெறுமனே யிராமல்

---

1. இங்கு 'ஸ குருஷ்வ மஹோத்ஸாஹ: க்ருபாம் மயி நரர்ஷப। த்வயா நாதவதீ நாத ஹ்யநாதா இவ த்ருஶ்யதே। ஆந்ருஶம்ஸ்யம் பரோ தர்மஸ்த்வத்த ஏவ மயா ஶ்ருத:' என்று மூலம். (ஸ:) பிறருடைய துக்கத்தைக்கண்டு 'ந ஸஹாமஹே' (நாம் பொறுக்கமாட்டோம்) என்றுரைப்பவன். (மஹோத்ஸாஹ:) வெறுமனே சொல்லுவது மாத்ரமன்று. சொன்னபடி அதை அனுஷ்டானபர்யந்தமாகச் செய்யும் தன்மையுள்ள நீ, (மயி) மிகுதியும் துக்கித்திருக்கிற என்னிடத்தில், (க்ருபாம்) க்ருபையை-பிறர் துக்கங்கண்டு பொறுமையை வெளியிடத்தகும். (நரர்ஷப) நீ இங்ஙனஞ் செய்யாது போவாயாயின், உன்னுடைய புருஷோத்தமத்வத்திற்கே ஹானி உண்டாகும். ஆகையால் நீ சொன்ன வார்த்தையை அனுஷ்டான பர்யந்தமாக்கி என்னைப் பிழைப்பித்து உன் புருஷோத்தமத்வத்தைக் காப்பாற்றிக்கொள் வாயாகவென்று கருத்து. (த்வயா...த்ருஶ்யதே) நீ நாதனா யிருந்தும் நான் அநாதைபோல் புலப்படுகின்றேனே (ஆந்ருஶம்

மிகுந்த உத்ஸாஹங்கொண்டு என்மேல் தயை செய்வாயாக. நாதனே! உன்னைப்போன்றவன் எனக்கு நாதனுயிருந்தும் நான் அநாதைபோல் புலப்படுகின்றேனே! இங்ஙனம் இருப்பது யுக்தமா? தயை செய்வது பரமதர்மமென்று நீயே சொல்லக் கேட்டிருக்கின்றனன். இங்ஙனம் மொழிந்த நீயே தயை தப்பலாகுமா? நீ மஹா வீர்யசாலியென்றும் மிகுந்த உத்ஸாஹமுடையவனென்றும் மஹாபலிஷ்டனென்றும் நான் அறிவேன். உன் குணங்களுக்கு எல்லையில்லையென்றும், எப்படிப்

---

ஸ்யம் பரோயர்மஃ) பிறர் துக்கங்கண்டு பொறுதிருத்தல் பரமதர்மமன்றோ உனக்கு? அதாவது-ஓடக்காரன் யாத்ரை செல்பவர்களை ஓடமேறுவதற்கு முன்னமே கூலி கேட்போமாயின் அவர்கள் ஏறுவரோ மாட்டார்களோ என்று வெறுமனே இருந்து அவர்கள் ஏறினபின்பு கேட்டோமாஞல் தப்பாமல் கொடுப்பார்களென்று ஓடம் அசைந்த பின்பு கூலி கேட்பதுபோல் நீ என்னோடு புணர்வதற்கு முன்பு உனக்கு மிகுதியும் ப்ரியமான தர்மமெதுவென்று கேட்டால் சொல்லமாட்டாயென்று வெறுமனே யிருந்து புணரும்பொழுது அதைக் கேட்கையில் சொல்லாதிருக்க முடியாதாகையால் 'பிறர் துக்கம் கண்டால் பொறுக்க முடியாதிருத்தலே பரமதர்ம' மென்று என் அபிப்ராயம். 'அப்படியே என் ஸ்வபாவம்' என்று நீ ரஹஸ்யத்தை வெளியிட்டனை யென்று கருத்து. (த்வத்த ஏவ மீருதஃ) இங்ஙனம் நீயே சொல்லக்கேட்டனன். தூதன்மூலமாக வன்று. இங்ஙனம் மொழிந்தது எனக்குக் கேட்பித்தமாத்ரத்தோடு முடிந்ததேயன்றி அனுஷ்டானத்தில் வந்து முடியவில்லையே • யென்று ராமனை வினவுவாயென்று கருத்து. இங்ஙனம் ஸீதை வினவினதற்கும் ராமன் அங்ஙனம் மறுமொழி கூறினதற்கும் அபிப்ராயமென்னென்னில் ஸீதை 'இந்த நம் புணர்ச்சிக்குப் பிரிவு நேரிடுமாயின் என்செய்வேனென்னும் பயத்திஞல் விஞவினள். ராமனும் பிறர் துக்கத்திற்கும் பொறுத நான் ப்ரீதிக்கிடமான நீ என்னைப் பிரிந்து வருந்தும்படி ஒருகாலும் பார்த்திருக்கமாட்டேன்' என்று மறுமொழி கூறிஞனென்று கருத்து.

பட்ட ஸங்கடத்திலும் உன்மனம் கலக்கமுறாதென்றும் ஸமுத்ரம்போல் நீ கம்பீரனென்றும் எனக்குத் தெரியும். அன்றியும் ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட இப் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவென்றும் தேவேந்த்ரனை நிகர்த்தவனென்றும் நான் அறிந்திருப்பவளே. ராமன் இங்ஙனம் அஸ்த்ரங்களை அறிந்தவரனைவரிலும் சிறந்தவனாயினும் ஸத்ய ஸந்தனாயினும் மிகுந்த பலமுடையவனாயினும், என்னை இங்ஙனம் ஹிம்ஸிக்கின்ற ராக்ஷஸர்மேல் அஸ்த்ரத்தை ப்ரயோகியாதிருக்கின்றனன்; ஏனோ? நாகர்களாவது கந்தர்வகளாவது அஸுரர்களாவது தேவதைகளின் கூட்டங்களாவது யுத்தத்தில் ராமனது வேகத்தைத் தடுக்க வல்லரல்லர். மஹா வீர்யசாலியாகிய அந்த ராமனுக்கு என்னை அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று எள்ளளவாயினும் பரபரப்பு இருக்குமாயின், ராக்ஷஸர்களெல்லோரையும் கூரான பாணங்களால் ஏன் பாழ்செய்யாதிருக்கின்றனன்? லக்ஷ்மணனும் மஹாபலமுடையவன்; பகைவரைப் பரிதபிக்கச் செய்பவன்; அவனாயினும் அண்ணனிடம் அனுமதிபெற்று இவ்விடம் வந்து ஏன் என்னைப் பாதுகாக்காதிருக்கின்றனன்? வாயுவையும் அக்னியையும் நிகர்த்த ஒளியுடன் விளக்கமுற்றுத் தேவதைகளுக்கும் எதிரிடமுடியாத புருஷஶ்ரேஷ்டர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் இருவரும் ஒருவரையொருவர் விடாமல் கலந்திருப்பார்களாயின், என்னை ஏன் இங்ஙனம் உபேக்ஷிக்கின்றனர்? [1] அவ்விருவரும் பகைவரைப் பரிதபிக்கச் செய்பவராகையால் என் துக்கத்தைப் போக்க ஸமர்த்தர்களாயிருந்தும்

1. 'மமைவ து³ஷ்க்ருதம் கிஞ்சித் மஹத³ஸ்தி ந ஸம்ஶய꞉। ஸமர்தா²வபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ' என்று மூலம். இங்கு 'கிஞ்சித்' என்று பகவதபசாரத்தையும், 'மஹத்' என்று பாகவதாபசாரத்தையும் சொல்லுகிறதென்பர். 'கிந்த்வா மந்யத வைதே³ஹ꞉' என்று பெருமாளை அதிக்ஷேபித்தது பகவதபசாரமென்றும் இளைய பெருமாளை அதிக்ஷேபித்தது பாகவதாபசாரமென்றும் உணர்க.

என்னைப் பாராட்டாதிருக்கின்றனரோ! ஆகையால் இதற்கு நான் செய்த மஹாபாபமே எதோ ஒன்று காரணமாயிருக்கவேண்டும். ஸந்தேஹமில்லை' என்றனள். ஸீதை இங்ஙனம் கண்ணீர் பெருக்கிக்கொண்டு மன இரக்க முண்டாகுமாறு மொழிந்த வசனத்தை மஹாதேஜஸ்வியும் வாயுகுமாரனுமாகிய ஹனுமான் கேட்டு, உடனே அம்மானுபாவையைப் பார்த்து மொழிந்தனன்:—'தேவீ! உன்னைப் பிரிந்த துக்கத்தினால் ராமன் உடம்பு தெரியாமல் எல்லாவற்றிலும மனப் பற்றில்லா திருக்கின்றனன். இங்ஙனம் நான் ஸத்யத்தின்மேல் ஆணையிட்டுச் சொல்லுகின்றனன். ராமன் துக்கமுற்றவுடனே லக்ஷ்மணனும் பரிதபிக்கின்றனன். எப்படியோ அதிகஷ்டத்தின்மேல் உன்னைக் காண நேர்ந்ததே! இதற்கு நீ இப்பொழுது ஸந்தோஷிக்க வேண்டுமேயன்றி மனவருத்தப்படலாகாது. நிந்தைக்கிடமாகாதவளே! இனி இம் முஹூர்த்தத்திலேயே உன் துக்கங்களெல்லாம் தொலையக் காண்பாய். புருஷஸிம்ஹர்களும், மஹாபலர்களுமான அந்த ராஜகுமாரர்களிருவரும் உன்னைப் பார்க்கவேண்டுமென்று முயற்சி செய்கின்றார்களாகையால் இனிச் சீக்ரத்திலேயே லங்கையைப் பஸ்மஞ் செய்வார்கள். அகன்ற கண்களையுடையவளே! ராமன் கொடுந்தன்மையுள்ள ராவணனைப் பந்துக்களுடன் கொன்று உன்னைத் தன் பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டு போகப் போகின்றனன். ராமனுக்காவது மஹாபலமுடைய லக்ஷ்மணனுக்காவது தேஜஸ்வியாகிய ஸுக்ரீவனுக்காவது அங்குக் கூட்டங் கூடியிருக்கும் வானரர்களுக்காவது என்ன சொல்லவேண்டுமோ, அதைச் சொல்வாயாக' என்றனன். அவன் இங்ஙனம் மொழிந்தவுடனே தேவ கன்யகைபோன்ற அந்த ஸீதை சோகத்தினால் பரிதபித்து வானரோத்தமனான அந்த ஹனுமானைப் பார்த்து மொழிந்தனள்:— [1] நல்ல மனமுடைய

---

1. இங்கு 'கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மனஸ்விநீ। தம்மமார்யே ஸுகம் ப்ருச்ச ஶிரஸா சாபிவாதய'

கௌஸல்யை, லோகநாதனாகிய எவனைப் பெற்றாளோ,

---

என்று மூலம். உலகத்தில் ஸ்த்ரீகள் இஹபரலோகங்களில் தமக்கு ரக்ஷணம் உண்டாகும்பொருட்டுப் பிள்ளையைப் பெறுகின்றார்கள். என் மாமியார் அப்படியல்லள். (மநஸ்விநீ) பெரிய மனமுடையவளாகையால் தன் ரக்ஷணத்தை விரும்பாமல் பிறர்ஸம்ருத்தியையே விரும்பி (லோகஸார்த்தாரம் ஸுக்ஷேவ) ஸர்வலோக ரக்ஷகனான புத்ரன் எனக்குப் பிறக்கவேண்டுமென்னும் ஸங்கல்பத்துடன் வ்ரதங்களை அனுஷ்டித்து லோகோபகாரத்திற்காகப் பிள்ளையைப் பெற்றனள். கௌஸல்யை லோகரக்ஷகன் பிறக்கவேண்டுமென்ற ஸங்கல்பம் வ்யர்த்தமா? வ்யர்த்தமில்லையாயின், உலகத்தில் நான் சேர்ந்தவளல்லவா? ஆகையால் லோகரக்ஷகன் லோகத்தில் அடங்கின என்னை ஏன் ரக்ஷிக்கமாட்டான்? ஜலம் அருகேயிருக்கப் பெற்ற பயிர் பட்டுப்போவதுபோல், லோகரக்ஷகனாயிருப்பவனை ஸர்வாவஸ்தைகளிலும் அனுஸரித்திருக்கிற என் விஷயத்தில் கௌஸல்யையின் ஸங்கல்பம் ஏன் பயன்படவில்லையோ? (தம் மமார்யே) அவனை எனக்காக ஸுகம் விசாரிப்பாயாக. என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று நான் வேண்டலாகாது. அந்தச் சிந்தை அவனுடையதே! அது அவன் மனத்திலேயே இருக்கட்டும். ஆனால் ஏன்-அவன் என்னை ரக்ஷிக்க வரவில்லையென்று த்வரைப்படுகிறாயென்பாயாயின், த்வரைப்படுகை காலதாமதத்தைப் பொறுக்காமையைப் பற்றியேயன்றி ரக்ஷிப்பாயென்று வேண்டுவதற்கன்று. அவன் க்ஷேமமாயிருப்பானாயின், என் ரக்ஷணத்தில் குறை உண்டாகாது. ஆகையால் அவனுக்கு ஸுகத்தையே நாம் விரும்பவேண்டுவதும். ஆகையால் அவனுக்கு ஸுகமாவென்று நான் வினவினதாகச் சொல்வாய். (சிரஸாசாபி வாதய) அக்னிஸாக்ஷிகமாக என்னை ஸ்பர்சித்த கையால் என்னை ரக்ஷிக்கவேண்டும். ஆயினும் அப்படி ரக்ஷிக்கவில்லை. இனி லோகரக்ஷகனாகையால் லோகத்தோபாதியாயினும் ரக்ஷிப்பானாக. அதற்காக லோகத்தார் அவன் விஷயத்தில் என்ன செய்வார்களோ, அதை நானுங்கூடச் செய்யவேண்டுமல்லவா. ஆகையால் நீ எனக்காக அவனுக்குச் சிரத்தை வணக்கி வந்தனஞ்செய்வாயாக. நான் அவனுக்குத் தலை வணக்கி

அந்த ராமனை எனக்காக நீ க்ஷேமம் விசாரித்துத் தலைசாய்த்து நமஸ்கரிப்பாயாக. புஷ்பஹாரங்களும் போகத்ரவ்யங்களும் ஸமஸ்த ரத்னங்களும் உண்டு; உயர்ந்த மடந்தையர்களான காதலிகளும் உளர்; மிகுதியும் விஸ்தாரமுடைய பூமண்டல மனைத்தும் கிடைக்க அரிதான ஐச்வர்யமும்கூட உளது; இவை யெல்லாமிருந்தும், ஸுமித்ரையின் வயிறு குளிரப் பிறந்த நற்பிள்ளையாகிய லக்ஷ்மணன் எல்லாவற்றையும் துறந்து தந்தை தாய்களைப் பூஜித்து அவர்களை அருள் புரியச்செய்துகொண்டு ராமனைப் பின்றொடர்ந்து அரண்யத்திற்கு வந்தனன். அவன் தர்மஸ்வபாவனுகை யால் அண்ணனிடத்தில் பக்தியால் மேலான ஸுகத் தைத் துறந்து அரண்யத்தில் அண்ணனைக் காக்கும் பொருட்டுப் பின்றொடர்ந்தனன். மேலும் ஸிம்ஹம் போல் பருத்த தோள்களும் நீண்ட புஜதண்டங்களும் அமைந்து நன்மனத்துடன் கூடி இனிய காட்சியுடைய அந்த லக்ஷ்மணன் என்னைத் தாயைப்போல் பணிந்து பரிசர்யைகள் செய்துகொண்டு ராமனைத் தந்தை போல் நினைத்து நடந்து வருவான். ராவணன் என்னை அப்பொழுது அபஹரித்துக்கொண்டு போவதை வீர னுகிய அந்த லக்ஷ்மணன் அறியான்; அறிந்திருப்பானு யின், அப்பொழுதே அவனைக்கொன்று என்னை விடுவித்திருப்பானே! அவன் பெரியோர்களுக்கு எப்பொழுதும் பணிசெய்துகொண்டிருப்பான்; மிகுந்த ஒளியுடையவன்; ஸமர்த்தன்; அதிகம் பேசமாட்டான். அந்த ராஜகுமாரன் எல்லோர்க்கும் ப்ரியனும் மிகுதி யும் புகழத் தகுந்தவனுமாகிக் குணங்களில் என் மாமனு ராகிய தசரதமஹாராஜனைப்போன்றிருப்பான். அந்த ராமனுடைய தம்பி லக்ஷ்மணன் எனக்கு எப்பொழு தும் மிகுந்த ஸந்தோஷத்தை விளைவித்துக்கொண் டிருப்பான். அவ்வீரன் தன்னை ராமன் எந்தக்கார்

---

நமஸ்காரஞ் செய்தேனென்று சொல்லி அவனை அங்ஙனம் வந்திப் பாயாக.

யத்தை நிறைவேற்ற நியோகிப்பானே, அதைத் தவறாமல் நிறைவேற்றுவான். எவன் தனக்குத் தந்தையைப்போல் போஷணஞ்செய்துகொண்டிருக்கக் கண்டு ராமன், பூஜ்யரும் என் மாமனருமாகிய தன் தந்தை மரணம் அடைந்ததையுங்கூட நினையாதிருப்பானே அப்படிப்பட்ட லக்ஷ்மணனை எனக்காக க்ஷேமம் விசாரிப்பாயாக. அந்த லக்ஷ்மணன் ஸஹஜமாகவே ம்ருது ஸ்வபாவனாகி எப்பொழுதும் கபடமின்றி எந்தக் கார்யத்திலும் வல்லமை அமைந்து ராமனுக்கு மிகுதியும் ப்ரியனாயிருப்பான். வானரோத்தமா! ராமன் என் துக்கத்தை யெல்லாந் தீர்க்கும்படி இந்தக் கார்யத்தை நிறைவேற்ற நீயே ஏற்பாடுசெய்யவேண்டும். உன் ப்ரயத்னத்தினால்தான் ராமன் என்னை அழைத்துக்கொண்டு போகும் விஷயத்தில் முயற்சியுடையவனாவான். ஆகையால் இதற்காக நீ நன்றாக முயற்சிசெய்யவேண்டும். சூரனும் என் ப்ராணநாதனுமாகிய ராமனிடத்தில் நீ இந்த வார்த்தையை மாத்ரம் அடிக்கடி சொல்லவேண்டும். 'தசரதகுமாரா! நான் இனி ஒருமாதமே ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பேன். மாதத்திற்குமேல் எவ்வளவும் ஜீவித்திருக்கமாட்டேன். இங்ஙனம் ஸத்யத்தின்மேல் ஆணையிட்டு உனக்குச் சொல்லுகின்றனன். ராவணன் கெடுவிட்ட இரண்டு மாதங்கள் வரைக்குமே பொறுத்திருப்பேன். [1] வீரா! முன்பு இந்த்ரனது லக்ஷ்மி பாதாளம் புகுகையில், ஸ்ரீமஹாவிஷ்ணு தேவதைகளால் ப்ரார்த்திக்கப்பட்டு அதைக் கொண்டுவந்தாற்போல், பாபகர்மாவாகிய ராவணனால் வஞ்சனைசெய்து சிறையில் அடைக்கப்பட்டிருக்கிற என்னை விடுவித்து ரக்ஷிக்கவேண்டும் என்று மொழிந்தேனென்றுரைப்பாயாக' என்றனள். அனந்தரம் ஸீதை வஸ்த்ரத்தின் நுனியில் முடிந்திருக்கிற திவ்ய ஸுந்தரமான சூடாமணியை அவிழ்த்து எடுத்து

---

1. முன்பு வ்ருத்ராஸுரனை வதிக்கும்பொழுது தேவேந்த்ரனுக்கு ப்ரஹ்மஹத்யை உண்டாய் அதனால் ராஜ்யலக்ஷ்மி

'இதை ராமனுக்குக் கொடுப்பாயாக' என்று மொழிந்து ஹனுமானது கையில் கொடுத்தனள். அதன்பிறகு வீரனாகிய ஹனுமான் நிகரில்லாத ரத்ன ஶ்ரேஷ்டமாகிய அந்தச் சூடாமணியை வாங்கித் [1] தன் விரலில்

---

தொலைந்துபோகையில் பகவானாகிய நாராயணன் தேவதைகளும் தானுமாக அவ்விந்த்ரனைக்கொண்டு வைஷ்ணவமான அஶ்வமேத யாகஞ்செய்வித்துப் பாபமற்றவனாக்கி த்ரைலோக்யராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்வித்து அவனுக்கு முன்பிருந்த இந்த்ரலக்ஷ்மியை அழைத்தான். அப்பொழுது அசரீரவாக்கு 'அந்த லக்ஷ்மி, கவாக்ஷ தீர்த்தத்தில் இருக்கிறாள்' என்று மொழிகையில், அப்பொழுது அந்தத் தேவதேவனும் தேவதைகளும் அந்தத் தீர்த்தத்திற்குப் போயினர். அந்த லக்ஷ்மி அவர் வருவதைக் கண்டு பாதாளத்தில் புகுந்தனள். தேவதைகள் அவ்விடம் போக வல்லமையற்றிருக்கையில், மீளவும் அசரீரவாக்கு 'உங்களில் ஸமஸ்த லக்ஷணங்களும் அமைந்தவன் அந்த லக்ஷ்மியைக் கொண்டுவருவான்' என்று மொழிய, அவர்கள் அந்தப் புருஷோத்தமனை அங்ஙனஞ் செய்யும்படி வேண்டினர். அனந்தரம் அந்தத்தேவன் பாதாளத்தில் சென்று அங்கிருந்து அந்த லக்ஷ்மியை அழைத்துக்கொண்டுவந்து தேவதைகளும் தானுமாக இந்த்ரனுக்குக் கொடுத்தனன்' என்று ப்ராஹ்ம புராணம். மற்றுஞ்சிலர் மஹாபாரதத்தில் 'உசத்யனுடைய பார்யை யமுனையில் ஸ்நானஞ்செய்து கொண்டிருக்கையில் வருணன் அவளை அபஹரித்துக்கொண்டு பாதாளம் போயினனென்றும், உசத்யன் நாரதர் மூலமாகத் தன் பார்யையைக் கொடுக்கும்படி வருணனை ப்ரார்த்தித்தும் பெற்றிலனென்றும், அதற்கு அம்முனிவன் கோபித்து பாதாளஹ்ரதத்தை உலர்த்தி அவளைப் பெற்றனனென்றும் கூறப்பட்டிருக்கின்றது' அவளே கௌசிகி என்று சொல்வார்கள்.

1. விரலில் போகட்டுக்கொள்வது எப்படியெனில்- அப்பொழுது ஹனுமான் பெரிய உருவத்துடனில்லாமையால் அவன் கையும் பருமனில்லாதிருந்தது. ஆகையால் கைவிரலைச் சூடாமணியின் அடியில் தலை மயிரைக்கோக்கும் பொருட்டுள்ள சிறிய ரந்த்ரத்தில் கோத்துத்தரித்தனன். இதனால் ஸீதைக்குக்

போகட்டுக்கொண்டனன். ஏனெனில்—அப்பொழுது அந்த ஹநுமான் சிறிய சரீரத்துடனிருந்தமையால் அவன் கை பருமனில்லாதிருந்தது. அக்கபி வீரன் ரத்னஶ்ரேஷ்டமாகிய அந்தச் சூடாமணியை வாங்கிக் கொண்டு ஸீதா தேவிக்கு ப்ரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து விநயத்தினால் அங்கம் வணங்கப்பெற்று அவளது பார்ஶ்வத்தில் நின்றனன். அந்த ஹநுமான் ஸீதையைக்கண்ட ஸந்தோஷத்துடன் கூடி தேஹத்தினால் மாத்ரம் அங்கு நின்றிருந்தானேயன்றி மனத்தினால் ராமனிடம் போயிருந்தனன் அந்த ஹநுமான் அங்ஙனம் தன் ஸாமர்த்யத்தினால் ஸீதையைக்கண்டு அந்த ஜனகராஜன் புதல்வி தரித்திருந்த மணிஶ்ரேஷ்டமான அந்தச் சிறந்த சூடாமணியை வாங்கிக்கொண்டு, பெருங்காற்றில் அசைந்துகொண்டிருந்து அது ஓய்ந்தவுடன் ஸ்வஸ்தமாயிருக்கும் பர்வதம்போல் ஸீதையைக் காணமல் தடுமாற்றமுற்றிருந்து அவளைக் கண்டதனால் மனங்குதிரப்பெற்று மீளவும் ப்ரயாணமாய்ப் போக முயற்சிகொண்டனன். முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

காட்டின பெரிய உருவத்தைவிட்டு, லங்கையுள் புகும்பொழுதிருந்த சிறிய உருவத்தைப்பற்றி யிருந்தானென்று தெரிகின்றது:—இங்ஙனம் கோவிந்தராஜர். ஹநுமான் சிறிய உருவந்தரித்திருக்கையால் அவன் கைக்குச் சூடாமணி பிடிக்காதா என்னும் ப்ரஸக்தியில் கைக்குப் பிடிக்காமல் விரலுக்கே பிடித்ததென்று பொருளாகத் தெரிகின்றது. இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

{ ஸீதை ராம லக்ஷ்மணர்களும் வானரர்களும் ஸமுத்ரந் தாண்டுவதைப்பற்றி வினவ, ஹநுமான் ஸமாதானங் கூறுதல். }

ஸீதை அங்ஙனம் ஹநுமானுக்குச் சூடாமணியைக் கொடுத்து, உடனே அவனைப் பார்த்து, 'இவ்வடையாளம் ராமனுக்கு உள்ளபடி நன்றாகத் தெரிந்திருப்பது. வீரனாகிய அந்த ராமன் இம்மணியைப் பார்த்தவுடனே இது விவாஹகாலத்தில் என் தாய் எனக்குக் கொடுத்ததாகையால் என் தாயையும் அப்பொழுது தசரதமஹாராஜர் இருந்தாராகையால் அம்மஹாராஜரையும் அதை வாங்கிக்கொண்ட என்னையும் இங்ஙனம் எங்கள் மூவரையும் நினைத்துக்கொள்வான். வானரோத்தமா! நீ ராமனை எப்படியாயினும் உத்ஸாஹப்படுத்தவேண்டுமென்று மிகுதியும் உன்னைத் தூண்டுகின்றனன். இந்தக் கார்யத்தில் ப்ரயத்னப்படுவதற்காக இனிமேல் என்ன செய்யவேண்டுமோ, அதை ஆலோசிப்பாயாக. வானரோத்தமா! இந்தக் கார்யம் கூடும்படி ஏற்பாடு செய்யவேண்டிய பாரம் உன்னுடையது. ஹநுமானே! நீ எப்படியாயினும் ப்ரயத்னஞ்செய்து, என் துக்கம் தொலையுமாறு செய்வாயாக. அப்படிப்பட்ட மஹாபுத்தியையுடைய நீ ஆலோசித்து ப்ரயத்னஞ் செய்வாயாயின் அதனால் தவறாமல் என் துக்கம் தொலையும்' என்றனள். பயங்கர பராக்ரமனாகிய அவ்வாயுகுமாரன் ஹநுமான் ஸீதாதேவி மொழிந்ததற்கு 'அப்படியே செய்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்து அவளுக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து ப்ரயாணமாய்ப் போகத்தொடங்கினன். ஸீதை, வாயுகுமாரனாகிய அந்த ஹநுமான் ப்ரயாணமாய்ப் போவதைக் கண்டு கண்ணீரால் தடுக்கப்பட்டுத் தழுதழுத்த உரைகளுடன் இங்ஙனம் மொழிந்தனள்:- 'ஹநுமானே! ராமலக்ஷ்மணர்களிருவரையும் க்ஷேமம் விசாரிப்பாயாக. வானரோத்தமா! நீ ஸுக்ரீவனையும் அவனது மந்த்ரிகளையும் வயது சென்ற வானரர்களையும்

இன்னம் மற்றுமுள்ள எல்லோரையும் தர்மத்தின்படி க்ரமந்தவறாமல் க்ஷேமம் விசாரிப்பாயாக. மஹா பாஹுவாகிய அந்த ராமனுக்கு இந்த துக்கஸாகரத்தினின்று என்னைக் கரையேற்றுமாறு நீ மிகுதியுஞ் சொல்லவேண்டும். ஹனுமானே! ராமன் பெரும் புகழுடைமையால் தன் புகழைப்பற்றியாவது, பத்னியாகிய நான் திக்கற்று ப்ராணன்களைப் போக்கடித்துக் கொள்ளாமல் ஜீவித்திருக்கும்படி செய்யுமாறு நீ அவனுக்குச் சொல்லவேண்டும். கால விளம்பஞ் செய்தால் நான் பிழைத்திருக்க முடியாது. அங்ஙனம் நான் ப்ராணன்களை இழந்தபின்பு ராமன்வந்தும் ப்ரயோஜனம் இல்லை. ஆகையால் நான் பிழைத்திருக்கும் பொழுதே ராமன் வந்து என்னை இந்த ஆபத்தினின்று ரக்ஷித்து, ஸந்தோஷப்படுத்தும்படி நீ அவனுக்குச் சொல்லவேண்டும். இல்லையாயின் இத்தனை நாள் அவன் ஸம்பாதித்த புகழெல்லாம் பாழாய்விடுமென்று சொல்வாயாக. அங்ஙனம் சொல்லுகையில், அந்த வெறும் வார்த்தைக்கு மாத்ரமே உனக்கு நன்மை உண்டாகும். அந்தக் கேவல வார்த்தையால் நேரும் தர்மத்தைப் பெறுவாயாக. நீ தார்மிகனுகையால் ராமனுக்கும் எனக்கும் உண்டாயிருக்கிற துக்கத்தைப் பொறுக்க முடியாமல் 'உன்னை இப்பொழுதே ராமனுடன் கொண்டுபோய்ச் சேர்த்து விடுகிறேன்' என்றனை; அங்ஙனம் செயலால் தர்மம் பெறத் தேட வேண்டியதில்லை. அப்படிப்பட்ட தர்மத்தை ஒருசொல் சொன்ன மாத்ரத்தில் பெறலாம். எப்பொழுதும் நீ உத்ஸாஹத்தை மேன்மேலும் விளைக்கும்படியான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில், அவைகளைக் கேட்டுக்கேட்டு, ராமனுக்கு என்னைப் பெற வேண்டுமென்னும் பௌருஷம் மேன்மேலும் வளர்ந்து வரும். வீரனுகிய அந்த ராமன், நான் சொல்லியனுப்பின வார்த்தைகளை நீ அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கக் கேட்டே, என்னைப் பெறுதற்குப் பராக்ரமத்தை நிறைவேற்றவேண்டும் ப்ரயத்னத்தைத் தகுந்த

படி நன்ருகச் செய்வான்' என்றனள். வாயுகுமாரனுகிய ஹநுமான் ஸீதை மொழிந்த வார்த்தையைக் கேட்டு, சிரஸில் கைகூப்பிக்கொண்டு அவளைப் பார்த்து மொழிந்தனன்:—'ககுத்ஸ்த குலாலங்காரனுகிய ராமன் மேலான வானரர்களையும் கரடிகளையும் அழைத்துக் கொண்டு சீக்ரத்தில் இவ்விடம் வந்து யுத்தத்தில் சத்ருக்களை ஜயித்து உன் சோகத்தைப் போக்கடிப் பான். யுத்தத்தில் ராமன் பாணம் ப்ரயோகிக்கையில் அவனெதிரில் நிற்க உத்ஸாஹப்படுபவன் மனுஷ்யர்க ளிலாவது அஸுரர்களிலாவது தேவதைகளிலாவது எவனும் எனக்குப் புலப்படவில்லை. அவன் யுத்தத்தில் ஸூர்யனையாவது தேவேந்த்ரனையாவது யமனையாவது ஸாதாரணமாகவே லக்ஷ்யஞ் செய்யாமல் பொறுக்க வல்லவன். இனி விசேஷித்து உனக்காக ஜயிக்கவும் ஸமர்த்தனே யல்லவா? இது சொல்லவேண்டுமோ! ராமன் ஸமுத்ரத்தினுல் சூழப்பட்ட ஸமஸ்த பூமண்ட லத்தையும் பாதுகாக்கும்படியான உத்ஸாஹ முடைய வனுயிருக்கின்றனன். [1] ஜனகநந்தினி! உன் நிமித்தமாக ராமனுக்குத் தவருமல் ஜயம் உண்டாகும்' என்றனன். ஹநுமான் இங்ஙனம் யுக்திகள் அமைந்திருப்பதும் யதார்த்தமும் செவிக்கினியதுமாயிருக்குமாறு மொழிந்த அவ்வுரையைக் கேட்டு, ஸீதை அனந்தரம் அவனை மிகுதியும் வெகுமானித்து, இங்ஙனம் மொழிய வும் மொழிந்தனள். அனந்தரம் அவன் ப்ரயாணமாய்ப் போகத் தொடங்குகையில் அடிக்கடி அவனைப் பார்த்துக்கொண்டு பர்த்தாவுக்குத் தன்னிடமுள்ள ஸ்னேஹத்தை வெளிப்படுத்தும்படியான ஸம்மான வாக்யத்தை ஸ்னேஹத்துடன் மொழிந்தனள்:— 'வீரனே! சத்ருக்களை அழிப்பவனே! உனக்கு விருப்பம் உளதாயின், இங்கு ஏகாந்த ப்ரதேசத்தில் ஒருநாள் இருந்து இளைப்பாறி நாளையதினம் போகலாம். வான ரோத்தமா! இங்ஙனம் நீ இங்கு என் ஸமீபத்திலிருப் பாயாயின், எனக்கு இப்பொழுது நேர்ந்திருக்கும்

1. ஜனகராஜன் புதல்வியே!

மஹா துக்கத்திற்குச் சிறிது இடைவெளி உண்டாகும்; வானர ஸிம்ஹனே! நீ திரும்பி வருவதற்காக இப்பொழுது புறப்பட்டுப்போனவுடனே என் ப்ராணன்கள் தக்குவது ஸந்தேஹமே. இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. வானரனே! நான் முன்னமே துக்கித்திருப்பவள்; அந்த துக்கத்தைக்காட்டிலும் அதிகமான துக்கம் இப்பொழுது எனக்கு நேர்ந்திருக்கின்றது. மற்றும், நீ இவ்விடத்தினின்று புறப்பட்டுப் போனவுடனே நீ புலப்படாமையாலுண்டாகும் சோகம் என்னை எரிப்பதுபோல் மிகுதியும் பரிதாபத்தை அதிகப்படுத்தும். வீரனே! வானராதிபதி! உனக்கு ஸஹாயர்களான வானரர்களைக் குறித்தும் கரடிகளைக் குறித்தும் எனக்கு இங்ஙனம் ஒரு பெரிய ஸந்தேஹம் மூர்த்திகரித்து என்னெதிரில் நிற்கிறுப்போலிருக்கின்றது. அந்தக் கரடிகளின் ஸைன்யங்களாவது வானர ஸைன்யங்களாவது அந்த ராஜகுமாரர்களாவது தாண்டக்கூடாத இம்மஹா ஸமுத்ரத்தை எவ்வண்ணம் தாண்டப்போகிறார்கள்? ஏனெனில், இந்த ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்குக் கருடனுக்காவது வாயுதேவனுக்காவது உனக்காவது இம்மூவர்க்குமே சக்தி உளதன்றி மற்றெவர்க்கும் கிடையாது. வீரனே! ஆனதுபற்றி இங்ஙனம் செய்து நிறைவேற்றமுடியாத இக்கார்யத்தை நிறைவேற்றும் விஷயத்தில் இவ்விக்னத்திற்குப் பரிஹாரம் உனக்கு என்ன தோற்றுகின்றது? நீ கார்யத்தை நிறைவேற்றுவோரனைவரிலும் மேன்மையுற்றவனாகையால் எனக்கு அந்தப் பரிஹாரத்தை அறிவிப்பாயாக. ஹனுமானே! நீ பகைவரில் எப்படிப்பட்ட வீரர்களையும் அடக்குந் திறமையுடையவன். நீ யொருவனே ராவணாதிகளைக் கொன்று என்னை ராமனுடன் சேர்ப்பிக்கையாகிற இந்தக் கார்யத்தை யெல்லாம் ஸாதிக்கவல்லவன். ஆனால் அப்படி செய்வாயாயின் உன் ஸாமர்த்யத்தின் மிகுதி உனக்கு மாத்ரமே கீர்த்தியை விளைவிக்குமன்றி எனக்கன்று. ராமன் ஸம்பூர்ண ஸைன்யத்துடன் வந்து

யுத்தத்தில் ராவணனைக் கொன்று என்னை அழைத்துக் கொண்டு வெற்றியுடன் தன் பட்டணத்திற்குப் போவா ராயின், அதுவே எனக்குக் கீர்த்திகரமாயிருக்கும். சத்ரு ஸைன்யங்களை அழிக்கும் திறமையுடைய ராமன் லங்கா பட்டணம் முழுமையும் பாணங்களை நிரப்பி என்னைக் கொண்டுபோவானாயின், அதுவே ககுத்ஸ்த குலத்திற் பிறந்த அவனுக்குத் தகுதியாயிருக்கும். ஆகையால் யுத்தத்தில் மஹாசூரனாகிய அந்த மஹானு பாவன் ராமன் தனக்குத் தகுந்தபடி பராக்ரமத்தை நிறைவேற்றும்படி நீ செய்யவேண்டும்' என்றனள். ஹனுமான் பொருளடங்கியதும் ஒன்றோடொன்று நன்கு பொருந்தியதும் யுக்திகள் அமைந்திருப்பதுமாக வைதேஹி மொழிந்த அந்த வசனத்தைக் கேட்டு, இதுவரையில் தான் சொல்லாததும் சொல்ல வேண்டியதுமான வார்த்தையை மொழிந்தனன்:— 'தேவீ! வானர ஸைன்யங்களுக்கும் பல்லூக ஸைன்யங்களுக்கும் நாயகனும் வானரஶ்ரேஷ்டனும் பலிஷ்டனுமாகிய ஸுக்ரீவன் இந்தக் கார்யத்தை எப்படியாயினும் ஸாதிக்கவேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டிருக்கின்றனன். ஸீதே! அவன் இந்த ராக்ஷஸர்களனைவரையும் கொல்ல வல்லவன்; ஆகையால் பலவாயிரங்கோடி வானரர்கள் தன்னைச் சூழ்ந்து வரப்பெற்று, ராக்ஷஸர்களை முடிப்பதற்காகச் சீக்ரத்தில் இவ்விடம் வந்து சேருவான். பராக்ரம ஸம்பன்னர்களும் தைர்யசாலிகளும் மஹாபலிஷ்டர்க ளும் மனத்தோடொத்த வேகமுடையவர்களும் மிகுந்த கமன சக்தியுடையவர்களுமாகிய வானரர்கள் பலர் அவனது ஆஜ்ஞையைச் சிரஸில் வஹித்துக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் மேலும் கீழும் குறுக்காகவும் எவ்வகைத் தடையுமின்றித் திரிய வல்லவர். அவர்கள் அபாரதேஜஸ்விகளாகையால் எப்படிப்பட்ட பெரியகார்யங்களிலும் வருத்தமுறார் கள். மிகுந்த உத்ஸாஹமுடைய அவ்வானரர்கள் வாயுமார்க்கமாகிய ஆகாயத்தில்

ஸமுத்ரங்களோடும் பர்வதங்களோடுங்கூடின இப்பூ மண்டலத்தையெல்லாம் பலதடவை சுற்றியிருக்கின்றனர். ஸுக்ரீவனிடத்தில் என்னைக்காட்டிலும் மேற்பட்டவர்களும் என்னைப்போன்றவர்களுமான வானரர்கள் பலர் இருக்கின்றனரேயன்றி அவர்களில் என்னைக் காட்டிலும் குறைந்தவன் ஒருவனும் இல்லை உலகத்தில் ப்ரபுக்கள் எங்காயினும் சிறந்தவர்களை அனுப்பமாட்டார்கள்; கேவலமான அற்பஜனங்களையே அனுப்புவார்களல்லவா. எல்லோரிலும் கடையாகிய நானே ஸமுத்ரத்தைத் தாண்டி இவ்விடம் வந்தேனே; இனி மஹா பலசாலிகளான மற்றை அவ்வானரர்கள் வருவது பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆகையால் தேவீ! நீ பரிதாபப்படவேண்டாம்; இந்த மனவருத்தத்தைத் துறப்பாயாக. அந்த வானரயூதநாதர்கள் ஒரு முயற்சியிலேயே இந்த லங்கைமாநகருக்கு வந்து சேருவர். மஹாபலிஷ்டர்களும் புருஷஸிம்ஹர்களுமான அந்த ராமலக்ஷ்மணர்களும் என் முதுகின்மேல் ஏறிக் கொண்டு உதித்த சந்த்ரஸூர்யர்கள்போல் விளக்கமுற்று உன்னிடம்வந்து சேருவார்கள். அனந்தரம் வீரர்களும் புருஷஸிம்ஹர்களுமாகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் இருவருங்கூடி இவ்விடம் வந்து நானாவித பாணங்களை ப்ரயோகித்து இந்த லங்காபுரி முழுவதையும் பாழ்செய்யப்போகிறார்கள். அழகிய இடையின் பின்புறமுடையவளே! ரகுகுலாநந்தகரனாகிய ராமன், ராவணனையும் அவனது பந்துக்களையுங்கொன்று உன்னை அழைத்துக்கொண்டு தன் பட்டணமான அயோத்யைக்குப் போவான். ஆகையால் நீ ஸமாதானமுற்றிருப்பாயாக; உனக்கு நன்மையுண்டாகும். நீ நாட்களை எண்ணிக்கொண்டிருப்பாயாக. ராமன் சீக்ரத்திலேயே ஜ்வலிக்கின்ற அக்னிபோல் புலப்பட்டுக் கொண்டு இந்த லங்காபுரியை எரிக்கக் காண்பாய். ராக்ஷஸேந்த்ரனாகிய இந்த ராவணனும் அவன் புதல்வர்களும் மந்த்ரிகளும் பந்து ஜனங்களும் ஹதரான பின்பு (அடிபட்ட பின்பு), நீ ரோஹிணி சந்த்ரனுடன்

சேருவதுபோல், ராமனுடன் சேரப்போகிருய். தேவீ! மைதிலீ! இனி சீக்ரத்திலேயே சோகஸாகரத்தின் அக்கரையை அடையப்போகின்றனே; சீக்ரத்திலேயே உன் துக்கமெல்லாம் தொலையப்போகின்றது. ராமனுல், ராவணன் அடியுண்டு முடிவதைச் சீக்ரத்திலேயே காண்பாய்' என்றனன். வாயு குமாரனுகிய ஹநுமான் இங்ஙனம் ஸீதா தேவியை ஸமாதானப்படுத்தி, உடனே ப்ரயாணம் புறப்பட மனத்தில் நினைத்து, மீளவும் ஸீதையை நோக்கி மொழிந்தனன்:—'நீ சீக்ரத்தில், பகைவரை யடக்கும் பராக்ரமசாலியும் மிகுந்த மதியுடையவனுமாகிய அந்த ராமனும் வில்லாளிகளிற்சிறந்த லக்ஷ்மணனும் லங்காத்வாரத்தில் வந்திருப்பதைக் காண்பாய். நகங்களையும் கோரைப் பற்களையுமே ஆயுதமாக வுடையவர்களும் வீரர்களும் சிங்கம் புலி இவைகளோடொத்த பராக்ரமமுடையவர் களும் உருவத்தில் சிறந்த மத்தகஜங்கள்போல் ப்ரகா சிப்பவர்களுமாகிய வானரர்கள் சீக்ரத்திலேயே இவ்விடத்தில் திரள் திரளாகச் சேர்ந்திருப்பதைக் காண்பாய். பூஜிக்கத்தகுந்தவளே! நீ இனிச் சீக்ரத்தி லேயே பர்வதங்கள் போலும் பெரிய மேகங்கள் போலும் பெரிய வடிவத்துடன் விளங்குகிற வானர ஶ்ரேஷ்டர்கள் கூட்டங்கூடி லங்காமலய பர்வதத்தின் தாழ்வரைகளில் சேர்ந்து ஸிம்ஹநாதஞ் செய்யக் காண்பாய்! அந்த ராமன் பயங்கரமான மன்மத பாணத் தினுல் மர்மஸ்தானத்தில் அடிக்கப்பட்டு வருந்தி ஸிம்ஹத்தின் கையில் அகப்பட்டு வருந்துகிற யானை போல் இன்புறு திருக்கின்றனன். தேவீ! நீ இங்ஙனம் அநாதைபோல் ரோதனஞ் செய்யாதிருப்பாயாக; மனத்தில் களிப்பின்றிப் பரிதபித்துக்கொண்டிருக்க வேண்டாம். சசிதேவிக்குத் தேவேந்த்ரன்போல் உனக்கு நாதன் ராமன் இருக்கிறுனல்லவா? உலகத்தில் ராமனைக்காட்டிலும் மேற்பட்டவன் எவன் இருக்கின் றனன்? லக்ஷ்மணனைப்போன்றவன் எவன்? அக்னியை யும் வாயுவையும் நிகர்த்த அவ்வண்ணன் தம்பிக

ளிருவரும் உனக்கு அவலம்பமாயிருக்க, நீ ஏன் வருந்துகின்றனை? தேவீ! ராக்ஷஸக் கூட்டங்களுக்கு வாஸஸ்தானமாகி, ஆனதுபற்றியே பயங்கரமாயிருக்கின்ற இந்த ப்ரதேசத்தில் நீ இனி வெகுகாலம் வஸித்திருக்க மாட்டாய். உன் பர்த்தாவான ராமன் இனிச் சீக்ரத்திலேயே வருவான். நான் போய் ராமனுடன் சேரும் வரையில் பொறுத்திருப்பாயாக. நான் போனதும் உடனே அவனை அழைத்துக்கொண்டு வருகிறேன்' என்றனன். முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸீதை ராமனுக்கு மற்றோரடையாளங் கூறுவதும், ஹனுமான் ஸீதையிடம் விடைபெற்று மேல் கார்யத்தை ஆலோசித்தலும்.

தேவகன்யகைபோன்ற அந்த ஸீதாதேவி மஹானுபாவனும் வாயுகுமாரனுமாகிய ஹனுமான் மொழிந்த வார்த்தையைக் கேட்டுத் தனக்கு ஹிதமாக அந்த ஹனுமானை நோக்கிச் சொல்லினள்:—'ஹனுமானே! ப்ரிய ஸமாசாரங் கூறுகின்ற உன்னைக் காண்பதனால், பூமியில் முன்பு பாதிமுளைத்து மழையில்லாமையால் மேன்மேலும் முளைத்து வளரமுடியாமல் வாடின பயிர் மழைபெய்த பின்பு மீளவும் முளைத்து ஸந்தோஷிப்பது போல், எனக்குப் பாதிகார்யம் நிறைவேறிற்றென்று ஸந்தோஷிக்கின்றனன். [1] மையல் கொண்டிருப்பவளாகையால் இங்ஙனம் துக்கத்தினால் இளைக்கிறக்

1. 'யதாதம் புருஷவ்யாக்ரம்' இத்யாதி மூலம். இதின் விசேஷார்த்தம் திருவிருத்தம் (௫௬) ஆம்பாட்டின் வ்யாக்யானத்திலும் மற்றும் பகவத் விஷயத்திலும் கண்டுகொள்க.



2283. ஸீதை ஹனுமானிடம் சூடாமணியைக் கொடுத்தல்

அவயவங்களால் புருஷஶ்ரேஷ்டனாகிய அந்த ராமனை அணையசேரும்படி என்னிடம் தயைவைத்து நிறைவேற்றுவாயாக. மற்றும் வானர கணாதிபதி! ராமனுக்கு அடையாளங் கொடுப்பாயாக. ராமன் கோபங்கொண்டு காகத்தின்மேல் த்ருணத்தை விட்டு அதன் கண்ணொன்றைப் பேதித்த வ்ருத்தாந்தத்தை ஓரடையாளமாகச் சொன்னேனன்றே? இன்னம் மற்றோரடையாளமுஞ் சொல்லுகிறேன்' என்று ராமனைக் குறித்துச் சொல்பவளாகி, 'ஒருநாள் [1] என் கபோலத்தில் (கன்னத்தில்) திலகம் அழிந்து போகையில் நீ மனச்சிலையால் திலகத்தை இட்டனை. அதை நினைத்துக்கொள்வாயாயாக. ராமா! நீ மஹாவீர்யசாலி; தேவேந்த்ரனுக்கும் வருணனுக்கும் ஒப்பானவன். அப்படிப்பட்ட நீ ஸீதை ராவணனால் பறிக்கப்பட்டு இங்ஙனம் ராக்ஷஸர் நடுவில் இருக்கையில் எங்ஙனம் ஸம்மதித்திருக்கின்றனை? மிகுதியும் மேலான இந்தச் சூடாமணியை இப்படிப்பட்ட துக்ககாலத்திலும் ஜாக்ரதையுடன் காப்பாற்றிக்கொண்டிருந்தனன். பாபமற்றவனே! எனக்கு மிகுதியும் துக்கம் உண்டான பொழுது நான் இந்தச் சூடாமணியைப் பார்த்து உன்னைப் பார்த்தாற்போல் ஸந்தோஷம் அடைகின்றனன். மிகுந்த ஒளியுடையதும் ரத்னாகரமான ஸமுத்ரத்தில் பிறந்ததுமான இந்தச் சூடாமணியையுங்கூட உனக்காக இப்பொழுது அனுப்பிவிட்டேன். சிறிது ஸமாதானத்தை விளைப்பதாகிய இந்தச் சூடாமணியும்

---

1. இங்கு 'மநஶ்ஶிலாயாஸ் திலகோ கண்டபார்ஶ்வே நிவேஶித:| த்வாய ப்ராணஷ்டே திலகே தங்கில ஸ்மர்த்துமர்ஹஸி' என்று மூலம். 'ஒருநாள் என் கபோலத்தில் திலகம் கலைந்து போகையில் நீ மனஶ்ஶிலையைக் குழைத்து என் கபோலத்தில் ப்ரதிபலித்துத் திலகமாகத் தெரியும்படி என்னெதிரிலிருந்த குண்டுக் கல்லின்மேல் இட்டனை. அதை நினைத்துக்கொள்வாய்' என்று ஸீதை ராமனைக்குறித்துச் சொன்னாளென்றும் பொருள் கொள்க.

இல்லையாகையால் இனிச்சோகத்தினால் மிகுதியும் பேராசைகொண்ட நான் பிழைத்திருக்கப்போறேன். நான், பிழைத்திருப்பின் எப்படியாயினும் உன்னுடன் சேரலாமென்னுமாசையால் பொறுக்கமுடியாத துக்கத்தையும், பயங்கர உருவமுடைய இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஹ்ருதயம் விரியும்படி மொழிகிற துர்வாக்யங்களையும் பொறுத்துப் பிழைத்திருக்கின்றனன். நீ பகைவரை அழிக்குந் திறமையுடையவனே; இப்படிப்பட்ட நீ இருக்கிறாயல்லவா? என்று இனி நான் ஒருமாதம் வரைக்குமே ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பேன். ராஜகுமாரனே! மாதத்திற்குமேல் ஒரு நொடிப் பொழுதாயினும் உன்னை விட்டுப் பிழைத்திருக்கப் போறேன். ராக்ஷஸராஜனாகிய இந்த ராவணன் மிகுதியும் பயத்தை விளைவிப்பவன். என் விஷயத்தில் அவன் பார்வையும் ஸுகமாயில்லை; என் விஷயத்தில் அவனுடைய எண்ணமும் ஸுகமாயில்லை. மற்றும் நீயும் துக்கித்திருப்பதைக் கேட்டேன். இனி நான் மாதத்திற்குமேல் க்ஷணமாயினும் பிழைத்திருக்க மாட்டேன்' என்றனள். ஸீதை கண்ணீர் பெருக்கிக் கொண்டு இங்ஙனம் மன இரக்க முண்டாகும்படி உரைத்த வார்த்தையைக்கேட்டு, உடனே மஹா தேஜஸ்வியும் வாயுகுமாரனுமாகிய ஹனுமான் அவளைப் பார்த்து மொழிந்தனன் :—'ஸீதே! உன்சோகத்தினால் ராமன் ஒன்றுந்தோன்றப்பெறாமல் கார்யங்களில் கண்வையாதிருக்கின்றனன். இங்ஙனம் உனக்கு நம்பிக்கை உண்டாகும்பொருட்டு ஸத்யத்தின்மேல் ஆணையிடுகின்றனன். அங்ஙனம் ராமன் வருந்துவதைக் கண்டவுடனே லக்ஷ்மணனும் பரிதபிக்கின்றனன். எப்படியோ வெகுகஷ்டத்தின்மேல் நீ எனக்குப் புலப்பட்டனை; இப்பொழுது ஸந்தோஷிக்கவேண்டுங் காலமேயன்றித் துக்கிப்பது யுக்தமன்று. அழகிய கோபமுடையவளே! இனி, இம்முஹூர்த்தத்திலேயே உன் துக்கங்களெல்லாம் தொலையக் காண்பாய். பகைவரை அடக்கும் பராக்ரமசாலிகளும் புருஷஶ்ரேஷ்டர்க

ளும் ராஜகுமாரர்களுமான அந்த ராமலக்ஷ்மணர்க ளிருவரும் உன்னைப் பார்க்கவேண்டுமென்று உத்ஸாஹத்துடன்கூடி லங்கா பட்டணத்தைப் பஸ்மஞ் செய்யப்போகிறார்கள். அகன்ற கண்களையுடையவளே! ராமலக்ஷ்மணர்கள் யுத்தத்தில் க்ரூரனாகிய ராவணனை யும் அவனது பந்துக்களையுங் கொன்று உன்னைத் தமது அயோத்யாபுரத்திற்கு அழைத்துக்கொண்டு போகப்போகிறார்கள். நிந்தைக்கிடமாகாதவளே! இன்னம் எதை ராமன் அறிவானோ எது அவனுக்கு மிகுதியும் ஸந்தோஷம் விளைக்கவல்லதோ, அப்படிப் பட்ட தொன்றை மீளவும் நீ எனக்குக் கொடுக்க வேண்டும்' என்றனன். ஸீதை அந்த ஹநுமானைப் பார்த்து, 'வீரனான ஹநுமானே! நான் உனக்கு மிகுதி யும் மேலான அடையாளங் கொடுத்திருக்கின்றேனே; என் தலைமயிர்களுக்கு அலங்காரமான இச்சூடா மணி யைக் கண்டவுடனே ராமனுக்கு உன்வார்த்தையில் நம்பிக்கை உண்டாகும்' என்றனள். ஸ்ரீமானாகிய அந்த வானரஸத்தமன் ஹநுமான் மணிஸ்ரேஷ்டமாகிய அந்தச் சூடாமணியை வாங்கிக்கொண்டு ஸீதைக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து ப்ரயாணமாய்ப் போகத் தொடங்கினன். மீளவும் அந்த ஹநுமான் ஸமுத்ரத்தின் அக்கரை சேருவதற்கு ஆகாயத்தில் கிளம்ப உத்ஸாஹ முடையவனாகி, தேஹத்தை வளர்த்திக்கொண்டு மஹா வேகத்துடன் த்வரைப் பட்டுக்கொண்டிருக்கக் கண்டு, ஸீதை வருந்தி முகம் நிரம்பக் கண்ணீர் பெருகத் தழதழத்த உரைகளுடன் அவனைப் பார்த்து 'ஹநுமானே! ஸிம்ஹங்கள்போன்ற அண்ணன் தம்பிகளான அந்த ராம லக்ஷ்மணர்களுக் கும் ஸுக்ரீவனுக்கும் அவன் மந்த்ரிகளுக்கும் ஆகிய எல்லோர்க்கும் நான் க்ஷேமமாயிருப்பதைச் சொல்வா யாக. மஹா பாஹுவாகிய ராமன் இவ்விடம் வந்து இந்த துக்க ஸமுத்ரத்தினின்று என்னைக் கரை யேற்றும்படி நீ ராமனுக்குத் தகுந்த வார்த்தைகளால் சொல்லவேண்டும். வானரவீரனே! நீ ராமனிடம்

போனவுடனே நான் அனுபவிக்கின்ற இந்தக் கொடிய சோகவேகத்தையும் இங்ஙனம் ராக்ஷஸர்கள் என்னை விரட்டுவதையும் கேட்டதையெல்லாம் விவரமாக ராமனிடம் சொல்வாயாக. உனக்கு மார்க்கம் ஸுகமாயிருக்குமாக' என்றனள். அவ்வானரசிரேஷ்டன், அந்த ராஜகுமாரத்தியான ஸீதாதேவி மொழிந்த அடையாளங்களைப் பெற்று க்ருதார்த்தனாகி மனத்தில் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து 'இனிச் செய்ய வேண்டியது அற்பமே உள்ளது' என்று அறிந்து மனத்தில் வடதிசைக்குப் போக நினைவு கொண்டனன். நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஹனுமான் ஸீதையினிடம் அனுமதி பெற்று அசோகவனிகையை முறித்தல்.

ஸீதை இங்ஙனம் மேலான வாக்யங்களால் தன்னைக் கொண்டாடுகையில் ஹனுமான் அனந்தரம் ப்ரயாணமாய்ப் புறப்பட்டுப்போகத் தொடங்கி அந்த இடத்தினின்று அப்புறஞ்சென்று தனக்குள் சிந்தித்தனன் :—'ஸீதையைப் பார்க்கவேண்டுமென்றும் ராவணனிருப்பிடம் தெரியவேண்டுமென்றும் வந்தனன். அதில் முக்யம் ஸீதையைக் காண்பது. ஸீதையைக் காண்பது ஆயிற்று. இனி ராவணனுடைய ஹ்ருதயம் முதலியவை தெரியவேண்டிய ஸ்வல்ப கார்யமே மிகுந்திருக்கின்றது. இந்த மிகுந்த கார்யவிஷயமாக ஸாம தான பேதங்களென்கிற மூன்று உபாயங்களையும் கடந்து நான்காவதான தண்டோபாயமே ஸாதனமாகத் தோற்றுகின்றது. ஏனெனில்—துஷ்டர்களான ராக்ஷஸர்கள் நேராக நடப்பவரல்லர்; குத்ஸிதராகையால் அவரிடத்தில் ஸாமோபாயத்தை உபயோகப்படுத்துவதால்

ப்ரயோஜனம் ஒன்றும் விளையாது. தானமோ, மிகுதியும் தனமுடையவரிடத்தில் யுக்தமன்று. ராவணனோ மிகுந்த தனமுடையவன். பலத்தினால் கொழுத்திருக்கிற ஜனங்களைப் பேத உபாயத்தினால் வசப்படுத்துவது ஸாத்யமன்று. ராவணன் பலத்தினால் கொழுத்தவன். இனி தண்டோபாயமாகிய பராக்ரமமோ என்னில், அதுவே எனக்கு இவ்விஷயத்தில் ஸம்மதமாயிருக்கின்றது. இக்கார்யத்தை ஸாதிப்பதற்குப் பராக்ரமந் தவிர மற்றொருபாயமெதை நிச்சயித்துப் பார்க்கினும் பொருந்தாதிருக்கின்றது. இப்பொழுது நான் யுத்தத்தை நடத்தி ராக்ஷஸர்களில் சில மேலான வீரர்களைக் கொல்வேனாயின், மற்றை ராக்ஷஸர்கள் எப்படியோ ஒருவிதத்தில் கர்வத்தை யிழந்து சிறிது மென்மையைப் பெறுவார்கள். எவன் தன்னை ஒரு கார்யஞ் செய்யவேண்டுமென்று நியமித்தனுப்புகையில் அம்மேலான கார்யத்தை நிறைவேற்றி அதற்கு விரோதமில்லாதபடி வேறு கார்யங்கள் பலவற்றையும் நிறைவேற்றுவானோ, அவனே கார்யஞ் செய்யத் தகுந்தவன். முயன்ற கார்யம் ஸ்வல்பமாயினும் அதை ஏதோ ஒரு ஹேதுவைமாத்ரம் பிடித்து ஸாதிக்க ஸாத்யமன்று. இனி மஹா கார்யத்திற்குச் சொல்ல வேண்டுமோ? ஆகையால் ஸீதையைக் கண்ட மாத்ரத்தினால் பயன் யாது? எவன் ஒரு கார்யத்திற்குள்ள பல ஹேதுக்களைக் கொண்டு பலவகை உபாயங்களால் நிறைவேற்ற அறிவானோ, அவனே கார்யத்தை ஸாதிக்க வல்லவனன்றி மற்றவனல்லன். நான் இங்கேயே சத்ரு ராக்ஷஸர்களுக்கும் நம் வானரர்களுக்கும் யுத்தஞ் செய்வதிலுள்ள தாரதம்யங்களை உள்ளபடி அறிந்து, அதனால் சத்ருக்களின் பலாபலங்களை நிச்சயித்துக் கொண்டு, ஸுக்ரீவநகரமாகிய கிஷ்கிந்தைக்குப் போவேனாயின், அப்பொழுது என் ப்ரபு ஸீதையைக் கண்டு ராவணனிருப்பிடம் அறிந்து வருவாயென்று எனக்களித்த ஆஜ்ஞையைக் குறைவறச் செய்து முடித்தவனாவேன். அங்ஙனஞ் செய்யாமல் வெறுமனே

ஸீதையை மாத்ரங் கண்டுபோவேனுயின், ராக்ஷஸர்களின் பலாபலம் எப்படிப்பட்டதென்று ஸுக்ரீவன் வினவுவானுயின், என்னென்று பதிலுரைப்பேன்? இப்பொழுது ராக்ஷஸர்களுடன் பலாத்காரமாக யுத்தம் வைத்துக்கொள்ளவேண்டும். அப்படி யுத்தமாயினும் அனுயாஸமாக எப்படிநேருமோ, அப்படியேயன்றூ செய்யவேண்டும்! அங்ஙனஞ் செய்தாலன்றூ, அந்த ராவணன் தன்னுடையவர்களின் பலத்தையும் என் பலத்தையும நனகுதரிநதுகொளவான! அனநதரம நான் யுத்தத்தில் ராவணனையும் அவனது மந்த்ரி வர்க்கத்தையும் அவனது ஸேனுதிபதியையும் எதிர்த்து ஸீதையைக் குறித்து அவன் மனத்திலுள்ள நிச்சயத்தையும் அவன் பலத்தையும் ஸுகமாகத் தெரிந்துகொண்டு இங்கிருந்து புறப்பட்டுப்போவேன். இம் மேலான அசோகவனம் கொடுந்தன்மையுள்ள இந்த ராவணனுடையது. இது கண்களுக்கும் மனத்திற்கும் மிக இனிதாகி நானுவித வ்ருக்ஷங்களும் கொடிகளும் நிறைந்து நந்தவனம்போல் விளங்குகின்றது. அக்னி உலர்ந்த அடவியைக் கொளுத்துவதுபோல் இவ்வசோகவனத்தைத் த்வம்ஸஞ் செய்கிறேன். நான் இதை முறித்தவுடனே ராவணனுக்கு என்மேல் கோபம் உண்டாகும். அதன்மேல் ராக்ஷஸர்தலைவனுகிய ராவணன் குதிரைகளும் பெரியதேர்களும் யானைகளும் நிறைந்து த்ரிசூலங்களையும் காலாயஸமென்னும் இரும்பினுல் செய்யப்பட்ட பட்டஸமென்னும் ஆயுதங்களையும் தரித்த பெரும் ஸைன்யத்தை என்மேல் எதிர்க்க அனுப்புவான். அதற்கு பிறகு இது பெரிய யுத்தமாய் வந்து முடியும். (அவர்க்கும் எனக்கும் என்னிஷ்டப்படி மஹாயுத்தம் நடக்கும்). நான் எவர்க்கும் ஸஹிக்க முடியாத பராக்ரமத்தில் முயன்று கொடிய பராக்ரமசாலிகளான அந்த ராக்ஷஸர்களை எதிர்த்து யுத்தத்தில் ராவணன் அனுப்பின அந்த ஸைன்யத்தையெல்லாம் கொன்று பிறகு ஸுகமாகக் கிஷ்கிந்தைக்குப் போவேன்’ என்று ஆலோசித்தனன். அப்பால் பயங்கர

பராக்ரமனுகிய வாயுகுமாரன் ஹநுமான் கோபங் கொண்டு தன் துடைகளின் வேகத்தினுல் வாயுவைப் போல் வ்ருக்ஷங்களை விழத்தள்ள ஆரம்பித்தனன். அனந்தரம் அந்த ஹநுமான் வீரனுகையால் பக்ஷிகள் மதித்துக் கலகலவென்று கூவப்பெற்றதும் பலவகை வ்ருக்ஷங்களும் கொடிகளும் நிறைந்ததுமாகிய அவ்வந்தப்புர வனத்தை முறித்தனன். அங்ஙனம் வ்ருக்ஷங்கள் முறியவும் குளங்கள் இடியவும் க்ரீடா பர்வதங்களின் சிகரங்கள் சூர்ணமாகவும் செய்யப் பெற்ற அவ்வசோகவனம் பார்க்க மிகுதியும் இனிமை யற்றிருந்தது. இங்ஙனம் பலவகைப் பறவைகள் பயந்து கலகலவென்று கூவவும் குளங்கள் இடிந்து பாழாகவும் மரம் கொடி முதலியவற்றின் சிவந்தழகிய தளிர்கள் வாடி வதங்கவும்பெற்று வாடி வதங்கின மரங்களோடும் கொடிகளோடும் கூடிய அவ்வனம் காட்டுத் தீயால் கொளுத்தப்பட்டதுபோல் சிறிதும் விளக்கமுரு திருந்தது. அதிலுள்ள அந்தக் கொடிகள் தமக்கு ஆதாரமான கிளைகளினின்று விடுபட்டுச் சிதறி அல்லாட்டமுற்று, அவயவங்கள் விலவிலக்கப்பெற்ற பெண்மணிகள்போல் புலப்பட்டன. அதிலுள்ள லதாக்ருஹங்களும் (கொடிமாடங்களும்) சித்ர க்ருஹங்களும் பாழாகிப் பெரிய ஸர்ப்பங்களும் க்ரூர ம்ருகங்களும் பயந்து பறந்தோடவும் [1] சிலாக்ருஹங்க ளும் ஸாதாரண க்ருஹங்களும் பொடி பொடியாகவும் செய்யப்பெற்ற அம்மஹாவனம் அழகற்றிருந்தது. ராவணனது காந்தைகளுக்கு ஸமஸ்த போகங்களையும் வளரச்செய்துகொண்டு காப்பாகிக் கொடிகளின் ஸமூஹங்கள் யாதொரு கெடுதியுமின்றி மேன்மேலும் வளர்ந்து வரப்பெற்ற ராவணனுடைய அந்தப் புரோத் யானமான அழகிய அவ்வசோகவனம், ஹநுமான் பலாத்காரமாக முறிக்கையில் கொடி ஸமூஹங்களும் செடிசெட்டுக்களும் புதர் முதலிய ஸ்தானங்களும்

---

1. கற்களால் இயற்றப்பட்ட மாளிகைகள்.

மிகுதியும் பாழாகிச் சோகத்திற் கிடமாயிருந்தது. அம்மஹாகபி தனம் மிகுந்தவனும் மஹாமஹிமையுடையவனுமாகிய ராவணனது மனத்திற்கு மிகுதியும் பெரிய அப்ரியத்தைச் செய்து தானொருவனே ஸஹாயமின்றி மஹா பலசாலிகளான பல ராக்ஷஸர்களோடு யுத்தஞ் செய்ய விரும்பி மிகுந்த ஒளியுடன் ப்ரகாசித்துக்கொண்டு அவ்வனத்தின் வெளிவாசற்படியில் இருந்தனன். நாற்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ இதைக்கேட்ட ராவணன் கிங்கரரென்னும் ராக்ஷஸர்களை அனுப்புதலும், அவர்களை ஹனுமான் முடித்தலும். }

அனந்தரம் லங்கையிலிருப்பவர் அனைவரும் பக்ஷிகளின் த்வனிகளையும் வ்ருக்ஷங்கள் மளமளவென்று முறிந்து விழுகிற சப்தத்தையுங் கேட்டு, பயத்தினால் பரபரப்புற்றவராயினர். ம்ருகங்களும் பக்ஷிகளும் பயத்தினால் திக்ப்ரமம் பிடித்து மூலைக்கொன்றாகப் பயந்தோடிக் கூச்சலிட்டன. அப்பொழுது ராக்ஷஸர்களுக்கு க்ரூரமான அபசகுனங்கள் தோன்றின. பிறகு விகாரமான முகமுடைய ராக்ஷஸஸ்த்ரீகள் அந்த த்வனிக்குத் தூக்கம் விழித்து, அவ்வனம் முறிக்கப் பட்டிருப்பதையும் வீரனாகிய அம்மஹாவானரன் அங்கிருப்பதையும் கண்டனர். மஹாபாஹுவும் மஹாதீரனும் மஹாபலனுமாகிய அந்த ஹனுமான் அந்த ராக்ஷஸஸ்த்ரீகளைக்கண்டு அவர்க்கு பயங்கரமாயிருக்குமாறு மிகுதியும் பெரிய தேஹத்தைத் தரித்தனன். அனந்தரம் ராக்ஷஸஸ்த்ரீகள் மிகுதியும் பெரிய தேஹத்துடன் பர்வதம்போன்ற மஹாபலனான ஹனுமானைக் கண்டு ஸீதையை நோக்கி, 'இவன் யாவன்? பேரென்ன? எவனால் அனுப்பப்பட்டு வந்தனன்?

எங்கிருந்து வருகின்றனன்? இங்கு எது நிமித்தமாக வந்தனன்? உன்னோடு இவன் எப்படி ஸம்பாஷணஞ் செய்தனன்? அகன்ற கண்களையுடையவளே! ஸுந்தரீ! நீ பயப்படவேண்டாம் எமக்கு எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லவேண்டும். கறுத்த கடைக் கண்களையுடையவளே! உன்னோடு எதைக் குறித்து இவன் பேசினான்?' என்று வினவினர். அனந்தரம் ஸர்வாங்க ஸுந்தரியும் பதிவ்ரதாமணியுமாகிய அந்த ஸீதை அவர்களை நோக்கி 'ராக்ஷஸர்கள் பயங்கரமான நானாவித உருவங்களைத் தரிக்கவல்லவர்; அப்படிப்பட்டவர்களை அறிதற்கு எனக்கு எப்படிமுடியும்? பாம்பின் கால் பாம்புக்கே தெரியுமன்றி மற்றெவர்க்குந் தெரியாது; அங்ஙனமே நீங்களும் ராக்ஷஸர்களாகையால் ராக்ஷஸர்களின் ஸங்கதி உங்களுக்கே தெரியும். ஆகையால் இவன் எப்படிப்பட்டவனோ எந்தக்கார்யத்தை இவன் செய்வானோ அதெல்லாம் உங்களுக்கே தெரியும். இதில் ஸந்தேஹம் இல்லை. இவனைப் பார்த்து நானுங் கூடப் பயந்திருக்கின்றனன். இவன் எவனோ எனக்குத் தெரியவில்லை இவன் யாவனோ நீங்கள் எனக்கு மொழிவீராக. இவனைக் கண்டால் காமரூபியாகிய ராக்ஷஸனெனவனோ, இவ்வானரரூபந்தரித்து வந்தானென்று தோற்றுகிறது' [1] என்றனள். ஸீதை மொழிந்த வார்த்தையைக் கேட்டு ராக்ஷஸ ஸ்த்ரீகள் பயந்து அவ்வனத்தில் நாற்புறத்திலும் ஓடி மறைந்தனர். சிலர் ஸீதையைக் காக்கும்பொருட்டு அங்கேயே இருந்தனர். சிலர் இந்த வ்ருத்தாந்தத்தை ராவணனுக்குத் தெரிவிக்க ஓடிப்போயினர். விகாரமான

---

1. விவாஹகாலே ரதிஸம்ப்ரயோகே ப்ராணாத்யயே ஸர்வதநா பஹாரே மித்ரஸ்யசார்த்தே ப்யந்ருதம் வதேயு: பஞ்சாந்ருதாந்யா ஹுரபாதகாநி' என்னும் ப்ரமாணத்தின்படி ஸ்நேஹிதனை ரக்ஷிக்கும்பொருட்டுப் பொய்சொல்வது பாபமன்றாகையால் ஸீதை இங்கு ஹனுமான் விஷயத்தில் பொய் பேசினளென்று தெரிகிறது.

முகமுடைய ராக்ஷஸஸ்த்ரீகள் ராவணனிடஞ் சென்று விரூபனும் பயங்கரனுமாகிய அவ்வானரனைக் குறித்து இங்ஙனஞ் சொல்லத்தொடங்கி 'மஹாராஜனே! பயங்கர மான உருவமுடைய ஒரு வானரன், அபார பராக்ரம முடையவன், ஸீதையோடு ஸம்பாஷணஞ் செய்து அசோகவனிகையின் மத்யத்தில் இருக்கின்றனன். மான்கண்போன்ற கண்களையுடையவளும் ஜனகராஜன் புதல்வியுமாகிய ஸீதை பலவாறு வினவியும் அவ்வானர னது ஸங்கதியை எமக்குச் சொல்ல இஷ்டப்படாதிருக் கின்றனள். அவன் இந்த்ரனால் அனுப்பப்பட்ட தூதனோ யிருக்கக்கூடும்; அல்லது குபேரனுடைய தூதனோ? அப்படியுமில்லையாயின், ஒருகால் ராமன் ஸீதையைத் தேடவிரும்பி அனுப்பின தூதனாயிருப்பினும் இருக்க லாமோ? என்னவோ? எதுவும் தெரியவில்லை. பலவகை ம்ருகஸமூஹங்கள் நிறைந்து உன்மனத்திற்கு மிகுதி யும் இனிதான அந்தப்புரவனத்தை அற்புதமான உருவமுடைய அவ்வானரன் நாசஞ் செய்தனன். அவ்வந்தப்புரவனத்தில் அவன் பாழ்செய்யாத இடம் ஒன்றுமே இல்லை. ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை யிருக்கும் ப்ரதேசத்தை மாத்ரம் அவன் பாழ்செய்ய வில்லை. அவன் அவ்விடத்தைமாத்ரம் பாழ்செய்யாமை ஸீதையைக் காக்கும்பொருட்டோ, அல்லது இளைப் பினாலோ தெரியவில்லை. இல்லையாயின், அப்படிப்பட்ட வனுக்கு இளைப்பேது? அந்த ஸீதையைக் காக்கும் பொருட்டே அவன் அதை முறிக்கவில்லை. அழகான தளிர்களும் புஷ்பங்களும் அமைந்து விளக்கமுற்றிருந்த பெரிய சிம்சுபாவ்ருக்ஷம் ஒன்றுளதல்லவா? ஸீதை தான் அந்த வ்ருக்ஷத்தினருகே போயிருந்தாளாகையால் அவன் அந்த வ்ருக்ஷத்தையுங்கூட முறிக்கவில்லை. பயங்கரமான உருவமுடைய அவ்வானரன் ஸீதையுடன் பேசுவது அசோகவனத்தை முறிப்பது ஆகிய இவ் விரண்டு கார்யத்தையும் செய்தனன். நீயும் பயங்கரனா கையால் அவனுக்கு நீ இப்பொழுது கொடிய தண்டனையை விதிக்கும்படி ஆஜ்ஞை செய்யவேண்டும்.

ராக்ஷஸகணாதிபதி ப்ராணன்களில் விருப்பமுடையவன் எவன் நீ மனத்தில் அங்கீகரித்திருக்கிற ஸீதையுடன் பேசுவான்? எவனும் பேசமாட்டானே! இவ்வானர னுக்கோ, ப்ராணன்கள் தக்கப்போகிறதை யல்லவாதை யால்தான் பேசினான்' என்றனர். ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் ராக்ஷஸிகள் மொழிந்த வார்த்தையைக் கேட்டு மிகுதியும் கோபமுற்றுக் கண்களைச் சுழற்றிக் கொண்டு ஹோமஞ் செய்யப்பட்ட அக்னிபோல் ஜ்வலித்தனன். எரிகிற இரண்டு தீபங்களினின்று ஜ்வாலைகளோடு கூடின எண்ணெய்த்துளிகள் தரை யில் விழுவதுபோல் கோபித்திருக்கிற அந்த ராவண னுடைய கண்களிரண்டினின்று நெருப்புப் பொறிக ளோடு கூடின கண்ணீர்த் துளிகள் விழுந்தன. அனந் தரம் மஹாதேஜஸ்வியாகிய ராவணன், பலத்தில் தனக்கு நிகராகிச் சூரர்களான கிங்கரர்களென்னும் ராக்ஷஸர்களுக்கு, ஹனுமானை அடக்கும்படி ஆஜ்ஞை செய்தனன். மஹாபலிஷ்டர்களான அந்தக் கிங்கரர்க ளென்னும் ராக்ஷஸர் எண்பதினாயிரம் பேர் இருந்தனர். அங்ஙனம் பெருவயிறும் பெருங் கோரைகளும் அமைந்து பயங்கர உருவமுடையவர்களும் மஹாபல சாலிகளுமான அந்த ராக்ஷஸர்களனைவரும் இரும்புச் சம்மட்டிகளையும் இரும்புத் தடிகளையும் கையில்தரித்து யுத்தத்தில் மன விருப்பங்கொண்டு ஹனுமானைப் பிடிக்க முயன்று அந்த க்ருஹத்தினின்று வெளிப்பட்டு வந்தனர். அவர்கள் அவ்வனத்தின் வெளிவாசற்படியில் யுத்தத்திற்கு ஸந்நத்தனாயிருக்கிற அந்தக் கபீந்த்ர னைக்கிட்டி மஹா வேகத்துடன் விட்டில்கள் அக்னி மேல் எதிர்ப்பதுபோல் அவ்வானரன்மேல் எதிர்த்த னர். அவர்கள் அவ்வானரோத்தமனை விசித்ரமான கதைகளாலும் பொன்னலங்காரங்களையுடைய இரும் புத்தடிகளாலும் ஸூர்யன்போல் தகதகவென்று விளங்குகின்ற பாணங்களாலும் அடித்தனர். மற்றும், அவர் இரும்புத் தடிகளையும் பட்டஸங்களையும் சூலங் களையும் ஈட்டிகளையும் வல்லயங்களையும் சக்தி ஆயுதங்

களையும் தரித்து திடமென்று ஹநுமானுக்கு முன்னே வந்து சூழ்ந்து நின்றனர். மஹாதேஜஸ்வியாகிய ஹநுமான் அப்பொழுதுண்டான ஸந்தோஷத்தினால் மிகுதியும் ஒளி விளங்கப்பெற்றுப் பர்வதம்போல் அசையாமல் வாலைத் தரையில் அடித்து மிகுந்த த்வனியுடன் கர்ஜித்தனன். வாயுகுமாரனாகிய அந்த ஹநுமான் தேஹத்தை மிகுதியும் பெரிதாகச் செய்து கொண்டு லங்கை முழுவதும் சப்தம் நிரம்பும்படி கெட்டியாகப் புஜங்களைத் தட்டினன். அவன் அங்ஙனம் புஜங்களைத் தட்டுதலாலுண்டான பெரிய சப்தமானது மலைச்சாரல்களில் ப்ரதித்வனிகளைக் கிளப்பி அவற்றுடன் பரவுகையில், ஆகாயத்தில் திரியும் பக்ஷிகள் பயந்து பூமியில் விழுந்தன. அன்றியும் அந்த ஹநுமான் பெருந்த்வனியுடன் 'மஹாபலனாகிய ராமன் எல்லாரினும் மேன்மையுற்றிருக்கின்றனன். மஹாபலனான லக்ஷ்மணனும் மேலாய் விளங்குகின்றனன். எங்கள் ராஜனாகிய ஸுக்ரீவனும் வாலிவதாதிகளை நடத்தி ராமனால் பாதுகாக்கப்பட்டு எல்லாரிலும் மேலாயிருக்கின்றனன். நான், எப்படிப்பட்ட கார்யங்களையும் வருத்தமின்றி நிறைவேற்றவல்ல கோஸல தேசாதிபதியான ராமனுக்குத் தாஸன்; ஹநுமானென்னும் பேருடையவன்; சத்ருஸைன்யங்களை அழிப்பவன்; வாயுதேவனது புதல்வன்; கற்களையும் மரங்களையுங் கொண்டு பலவிதங்களில் யுத்தஞ் செய்யவல்ல மஹாபலனாகிய எனக்கு யுத்தத்தில் இந்த ராவணனைப்போன்ற ஆயிரம் ராவணர்களும் எதிரன்று. நான் இந்த ராக்ஷஸர்களெல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே இவர்களைப் பொருள்செய்யாமல் இந்த லங்காபுரம் முழுவதையும் கலக்கி ஸீதையை நமஸ்கரித்து மனக்கருத்தீடேறப்பெற்று ராமனிடம் போகப் போகிறேன்' என்று இறைச்சலிட்டனன். அக்கிங்கரர்கள் அந்த ஹநுமான் செய்த மஹாத்வனிக்குப் பயந்து அப்பொழுது ஸந்த்யாகால மேகம்போல் மிகுதியும் உயர்ந்து சிவந்த வர்ணத்துடன் ஜ்வலிக்கின்ற மஹா

காயனாகிய ஹநுமானைக் கண்டனர். அனந்தரம் அந்த ராக்ஷஸர்கள் தமது ப்ரபுவின் நியோகத்திற்குட்பட்டவ ராகையால் பயத்தைவிட்டு அவனைச் சீக்ரத்தில் அணுகுவதற்கு முடியாமல் ஆங்காங்கு தூரத்தி லிருந்து பயங்கரமான பலவகை ஆயுதங்களால் அந்தக் கபீந்த்ரனை அடித்தனர். அனந்தரம் மஹாபலனாகிய ஹநுமான் தன்னை நாற்புறத்திலும் சூரர்களான அந்த ராக்ஷஸர்கள் சுற்றிக்கொள்கையில் தோரணத்வாரத்தி லிருக்கும் பயங்கரமான இரும்புத்தடியின் அருகே போயினன். அவன் அந்த இரும்புத்தடியை எடுத்துக் கொண்டு அவ்வரக்கர்களை அடித்துக் கொன்றனன். வீரனாகிய அந்த ஹநுமான், கருடன் ஜ்வலிக்கின்ற ஸர்ப்பத்தை எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் திரிவது போல் ப்ரகாசிக்கின்ற அவ்விரும்புத் தடியைப் பிடித் துக் கொண்டு ஆகாயத்தில் விளையாடினன். பராக்ரம சாலியாகிய அவ்வாயுகுமாரன் வீரர்களான அந்தக் கிங்கரர்களென்னும் ராக்ஷஸர்களைக் கொன்று மீளவும் யுத்தத்தை விரும்பி, அந்தத் தோரணத்வாரத்தை அடைந்திருந்தனன். அனந்தரம் அங்கிருந்து பயத்தி னால் தப்பித்துக்கொண்டு ஓடிப்போன ராக்ஷஸர்கள் சிலர் கிங்கரர்களனைவரும் முடிந்தார்களென்று ராவண னுக்குத் தெரிவித்தனர். அந்த ராக்ஷஸ ராஜன் கிங்கரர் களும் அவர்களைப் பின்றொடர்ந்த ஸைன்யமும் மடிந்த தைக் கேட்டுக் கோபத்தினால் கண்களைச் சுழற்றிக் கொண்டு பராக்ரமத்தில் எதிரின்றி யுத்தத்தில் வெல்ல முடியாது விளங்குகிற ப்ரஹஸ்த குமாரனை ஹநுமான் மேல் எதிர்க்கும்படி ஆஜ்ஞாபித்தனன். நாற்பத்திரண் டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 { ஹநுமான் சைத்ய ப்ராஸாதத்தையும் அதிலுள்ள ராக்ஷஸர்களையும் த்வம்ஸஞ்செய்தல்.

அந்த ஹநுமான் இங்ஙனம் கிங்கரர்களைக் கொன்று, பிறகு தனக்குள் ஆலோசிக்கத்தொடங்கி, 'நான் அசோகவனத்தை முறித்தனன்; அன்றி ராக்ஷஸர்களுக்கு தேவாலயமான இவ்வுப்பரிகையை முறிக்காமற் போயினன். ஆகையால் மிகுதியும் உயர்ந்து நீண்டிருப்பதும் பயங்கரமாகப் புலப்படுவது மாகிய இந்த தேவாலயத்தையும் முறித்து த்வம்ஸஞ் செய்கிறேன்' என்று ஆலோசித்து, அவன் தன் பலத்தைக் காட்டும்பொருட்டு அவ்வுத்யான வனத்தின் வெளிவாசற்படியினின்று கிளம்பி மேரு சிகரம்போல் மிகுதியும் உயர்ந்திருக்கிற தேவால யத்தின்மேல் ஏறினன். வானரஶ்ரேஷ்டனும் வாயு குமாரனுமாகிய அவ்வானரயூதபதி பர்வதம்போல் விளங்குகிற அவ்வுப்பரிகையின் மேலேறி மஹா தேஜஸ்வியாகையால் [1] மற்றொரு ஸூர்யனோ என்னும் படி திகழ்வுற்றிருந்தனன். ஹநுமான் எவர்க்கும் எதிர்த்து ஆக்ரமிக்க முடியாததும் சிறப்புடையது மாகிய அந்த தேவாலயத்தை ஆக்ரமித்துக் காந்தி யால் மிகுதியும் விளக்கமுற்றுப் பாரியாத்ரபர்வதம் போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். அனந்தரம் அந்த வாயுகுமாரன் தன் ப்ரபாவத்தினால் மிகுதியும் பெரிய தேஹத்தைத் தரித்து லங்கைமுழுமையும் சப்தம் நிரம்புமாறு கம்பீரமாகப் புஜங்களைத் தட்டினன். ஹநுமான், செவிகளுக்குப் பயங்கரமாகச் செய்கிற அப்பெருஞ்சப்தத்தினால் பக்ஷிகள் ஆகாயத்தி னின்று பூமியில் விழுந்தன; அந்த தேவாலயத்தைக் காத்திருந்த ராக்ஷஸர்களும் மூர்ச்சித்தனர். ஹநு மான் 'ஸமஸ்த அஸ்த்ரங்களையும் உணர்ந்த ராமன்

1. இதனால்-ஸூர்ய உதயமானதாகத் தெரிகிறது.

யாவரிலும் மேலாயிருப்பானாக. மஹாபலனாகிய லக்ஷ்மணனும் அனைவரிலும் மேன்மையுற்றிருப்பானாக. ராமன் வாலிவதாதி கார்யங்களைச் செய்து தன்னைப் பாதுகாத்து வரப்பெற்ற எங்கள் ராஜனாகிய ஸுக்ரீவனும், எல்லாரிலும் மேலாயிருப்பானாக. நான் எப்படிப் பட்ட கார்யங்களையும் அனாயாஸமாக நிறைவேற்றவல்ல கோஸலதேசாதி நாதனாகிய ராமனுக்குத் தாஸன்; ஹனுமானென்னும் பேருடையவன்; பகைவரது ஸைன்யங்களைப் பறந்தோடச் செய்பவன்; வாயுதேவனது குமாரன்; கற்களையும் மரங்களையுங்கொண்டு ராக்ஷஸர்களை யுத்தத்தில் அடிக்கவல்ல எனக்கு இந்த ராவணனைப்போன்ற ஆயிரம் ராவணர்களும் எதிராக மாட்டார்கள். இந்த ராக்ஷஸர்கள் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இவர்களைப் பொருள்செய்யாமல் இந்த லங்காபுரத்தை யெல்லாம் கலக்கி ஸீதாதேவிக்கு நமஸ்காரஞ் செய்து மனக் கருத்து ஈடேறப்பெற்று ராமனிடம் போகப்போகிறேன்' என்று உரக்கக் கோஷித்தனன். இங்ஙனம் விமானத்தின்மேல் இருக்கின்ற அவ்வானரயூதபதி ஹனுமான், தேவாலயத்திலிருக்கின்ற ராக்ஷஸர்களுக்குத் தெரியச் சொல்லி, அந்த ராக்ஷஸர்களுக்குப் பயம் உண்டாகும்படி பயங்கரமான த்வனியுடன் கர்ஜித்தனன். அந்த மஹாத்வனியைக் கேட்டு, தேவாலயத்தைக் காக்கும் ராக்ஷஸர்கள் நூறுபேர்களும் நானாவித பாணங்களையும் ஈட்டிகளையும் கத்திகளையும் கோடாலிகளையும் எடுத்துக்கொண்டு ஹனுமான் மேல் எதிர்த்துப்போயினர். மஹாசரீரர்களான அந்த ராக்ஷஸர்கள் நானாவிதமான ஆயுதங்களை ப்ரயோகித்துக்கொண்டு அந்த வாயுகுமாரனான ஹனுமானைச் சுற்றிக்கொண்டனர். அவர்கள் நானாவிதமான கதைகளாலும் பொன்னலங்காரங்களையுடைய இரும்புத் தடிகளாலும் ஸூர்யன்போல் தகதகவென்று ஜ்வலிக்கின்ற பாணங்களாலும் அந்த வானரஶ்ரேஷ்டனை அடித்தனர். அப்பொழுது வானரதிலகனாகிய அந்த

ஹனுமானைச் சுற்றித் திரிகின்ற அந்த ராக்ஷஸர்களின் பெருங்கூட்டமானது கங்காஜலத்தில் அகன்று சுழலுகின்ற பெருஞ் சுழிபோல் ப்ரகாசித்தது. அனந்தரம், வாயுகுமாரனாகிய ஹனுமான் கோபித்து, பயங்கரமான உருவந் தரித்தனன். மஹா பலனாகிய அந்த வாயுகுமாரன் ஹனுமான் அப்பெரிய தேவாலயத்தின் உப்பரிகைமேல் ஸ்வர்ணாலங்காரங்களால் விளங்குகிற ஸ்தம்பத்தை வேகமாகப் பிடுங்கி வஜ்ராயுதம்போன்ற அந்த ஸ்தம்பத்தைப் பலவாறு சுழற்றினன். அங்ஙனம் அவன் அதைச் சுழற்றுகையில் அது மற்ற ஸ்தம்பங்களோடுறைகையால் நெருப்பு உண்டாயிற்று. அதனால் அந்த உப்பரிகையெல்லாம் எரிந்து போயிற்று. அனந்தரம் ஸ்ரீமானாகிய அந்த வானரயூதநாதன் ஹனுமான், அந்த உப்பரிகை எரிவதைக் கண்டு உத்ஸாஹமுற்று, அந்த ஸ்தம்பத்தினால், இந்த்ரன் வஜ்ராயுதத்தினால் அஸுரர்களை அடிப்பதுபோல் அந்த ராக்ஷஸர்கள் நூறுபேர்களையும் அடித்துக் கொன்று ஆகாயத்தில் நின்றுகொண்டு இங்ஙனம் மொழிந்தனன்:—'மஹாதீரர்களும் மஹாபலிஷ்டர்களுமாகிய என்னைப்போன்ற பல்லாயிரம் வானரோத்தமர்கள் ஸுக்ரீவவசத்தில் உண்டு. அவர்கள் இப்பொழுது ஸீதையைத் தேடும்படி அவனால் அனுப்பப்பட்டிருக்கின்றனர். நாங்களேயன்றி மற்றும் பல வானரர்கள் இங்ஙனம் பூமியெல்லாம் ஸீதையைத் தேடிக்கொண்டு திரிகின்றனர். அவர்களில் சிலர் பத்து யானை பலமுடையவர்; சிலர் நூறுயானை பலமுடையவர்; சிலர் ஆயிரம் யானை பலமுடையவர்; அங்கு மற்றுஞ் சிலர் ஓகமென்னுங் கணக்குடைய யானைகளின் பலமுடையவர்கள்; சிலர் வாயுவைப்போன்ற பலமுடையவர்; மற்ற வானரயூதபதிகளின் பலத்திற்கு இவ்வளவவ்வளவென்று அளவே இல்லை. ஸுக்ரீவன் பற்களையும் நகங்களையுமே ஆயுதங்களாகவுடைய இப்படிப்பட்ட வானரர்கள் தன்னை நூறு பதினாயிரம் லக்ஷம் கோடிக்கணக்கில் சூழ்ந்து வரப்பெற்று உங்க

ளெல்லோரையும் முடிப்பவனாகி இவ்விடம் வரப் போகின்றனன். நீங்கள், மஹானுபாவனும் இக்ஷ்வாகு குலநாதனுமாகிய ராமனோடு வைரம் வைத்துக் கொண்டீர்கள்; ஆகையால் இனி இந்த லங்காபுரம் இல்லை; நீங்களும் இல்லை; ராவணனும் இல்லை; எல்லாம் பாழாயிற்றென்றே நிச்சயித்துக்கொள்ளுங்கள்' என்றனன். நாற்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் ஜம்புமாலியை முடித்தல்.

ராக்ஷஸேஶ்வரனாகிய ராவணனால் ஆஜ்ஞாபிக்கப் பட்ட ப்ரஹஸ்த குமாரனாகிய மஹா பலமுடைய ஜம்புமாலியென்பவன் ஹனுமானோடு யுத்தஞ்செய்யப் புறப்பட்டனன். அவன் மிகுதியும் பெரிய கோரைப்பற்களுடையவன்; அவன் வில்லைத் தரித்துச் சிவந்த பூமாலையைக் கழுத்தில் அணிந்து சிவப்பு வஸ்த்ரம் தரித்துச் செவிகளில் அழகான குண்டலங்கள் விளங்கப்பெற்றுப் பெரிய சரீரமும் உருண்ட கண்களும் அமைந்து பயங்கரனும் யுத்தத்தில் எவர்க்கும் வெல்லமுடியாதவனுமாயிருந்தனன். மற்றும் அவன் இந்த்ர தனுஸ்ஸுபோல் புலப்படுவதும் நல்ல பாணங்களை தொடுக்கத் தகுந்ததுமாகிய பெரிய தனுஸ்ஸை ஏந்தி, இடி இடிப்பதுபோல் பெருந்த்வனி உண்டாகும்படி நாணை வேகத்துடன் ஒலிப்பித்துக்கொண்டு புறப்பட்டனன். அங்ஙனம் அவன் நாணை இழுத்து ஒலிக்கச்செய்கையில் தனுஸ்ஸில் உண்டான மஹா கோஷம் திசைகளிலும் திசைகளின் மூலைகளிலும் கீழும் மேலும் விரைவில் நிரம்பிற்று. மஹாவேகமுடைய அந்த ஹனுமான், கழுதைகள் பூட்டப்பெற்ற ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு அந்த ஜம்புமாலி வருவதைக் கண்டு, மீளவும் யுத்தம் நேரிட்டதென்று ஸந்தோஷம் அடைந்தனன்; ஸிம்ஹநாதமுஞ்

செய்தனன். மஹாபாஹுவாகிய ஜம்புமாலி, அந்தத் தோரண வாசற்படியின் மேல்கொடுங்கையிலிருக்கின்ற மஹாகபியான ஹனுமானைக் கூரான பாணங்களால் அடித்தனன். மற்றும் அவன் ஹனுமானுடைய முகத்தில் ஓர் அர்த்த சந்த்ர பாணத்தையும் சிரஸ்ஸில் ஒரு [1] கர்ணி பாணத்தையும் புஜங்களில் பத்து நாராச பாணங்களையும் ப்ரயோகித்தனன். அந்த ஹனுமானுடைய முகம் இயற்கையாகவே சிவந்திருப்பது; மேலும் அப்பொழுது பாணத்தினால் அடிக்கப்பட்டு ரக்தம் பெருகப்பெற்று, சரத்ருதுவில் ஸூர்ய கிரணங்கள் பட்டு மலர்ந்த செந்தாமரைபோல் ப்ரகாசித்தது. இயற்கையாகவே சிவந்து ரக்தம் பெருகுகையால் மிகுதியும் சிவந்திருக்கிற அந்த ஹனுமானுடைய முகம் ஆகாயத்தில் செஞ்சந்தனத் துளிகளால் நனைந்த செந்தாமரைபோல் ப்ரகாசித்தது. இங்ஙனம் அந்த ராக்ஷஸனது பாணங்களால் அடிக்கப்பட்ட அம்மஹாகபி கோபமுற்றனன். அனந்தரம் அந்த ஹனுமான் தன் பார்ஶ்வத்திலிருக்கின்ற விசாலமான ஒரு பெருங் கல்லைக் கண்டனன். அம்மஹாபலன் வேகத்துடன் அந்தக் கல்லைப் பெயர்த்துத் தன் பலமுள்ளவளவும் சுழற்றி ஜம்புமாலியின்மேல் போகட்டனன். அந்த ராக்ஷஸன் அதற்குக் கோபித்து, பத்து பாணங்களைத் தொடுத்து அந்தக் கல்லைப் பிளந்தனன். அனந்தரம் கொடிய பராக்ரமமுடைய அவ்வீரன் ஹனுமான் தான் கல்லைப்போகட்டது வீணானதைக் கண்டு, ஒரு பெரிய ஸாலவ்ருக்ஷத்தைப் பிடுங்கிக் கிருகிருவென்று சுழற்றினன். அந்த ஸாலவ்ருக்ஷத்தைச் சுழற்றுகின்ற அம்மஹாபலனை ஹனுமானைக் கண்டு ஜம்புமாலி தானும் மஹாபலனாகையால் அவன்மேல் மிகுதியும் பல பாணங்களை ப்ரயோகித்தனன். அவன் நான்கு பாணங்களால் அந்த ஸால வ்ருக்ஷத்தைப் பிளந்து அவ்வானரனைப் புஜத்தில் ஐந்து பாணங்களாலும் மார்பில் ஒரு

---

1. கர்ணி பாணம்—காதுள்ள பாணம்.

பாணத்தாலும் ஸ்தனங்களினிடையில் பத்து பாணங்களாலும் அடித்தனன். அந்த ஹனுமான் தன் தேஹமெல்லாம் பாணங்கள் நிறைந்திருக்கக்கண்டு மிகுதியும் கோபமுற்று முன்பு கிங்கரர்களைக் கொன்ற அந்த இரும்புத் தடியையே எடுத்துக்கொண்டு வேகமாகச் சுழற்றினன். அளவில்லாத வேகமும் மிகுந்த பலமும் பொருந்தின அந்த ஹனுமான் இங்ஙனம் மஹா வேகத்துடன் அவ்விரும்புத்தடியைச் சுழற்றி ஜம்புமாலியின் அகன்ற மார்பில் போகட்டனன். அனந்தரம் அந்த அடியால் அங்கு அவ்வரக்கனுடைய தலையாவது கைகளாவது முழங்கால்களாவது வில்லாவது தேராவது தேரில் பூட்டியிருந்த கழுதைகளாவது பாணங்களாவது ஒன்றும் புலப்படவில்லை. அங்ஙனம் ஹனுமான் மிகுதியும் வேகமாக அடிக்கையில் மஹாபலனுகிய அந்த ஜம்புமாலி அடிக்கப்பட்டுத் தன் உடம்பிலுள்ள ஆபரணங்களெல்லாம் பொடியாகப்பெற்றுத் தரையில் விழுந்தனன். அனந்தரம் ராக்ஷஸேஸ்வரனுகிய ராவணன் மஹாபலரான கிங்கரர்கள் முடிந்தது மாத்ரமேயன்றி ஜம்புமாலியும் மாண்டதைக் கேட்டுக் கோபத்தினுல் கண்கள் மிகுதியும் சிவக்கப்பெற்றுச் சினந்தனன். அந்த ராக்ஷஸேஸ்வரன் மஹாபலனுன ப்ரஹஸ்தகுமாரன் முடிந்தவுடனே கோபத்தினுல் சிவந்த கண்களைச் சுழற்றிக்கொண்டு மிகுந்த வீர்யமும் மஹாபராக்ரமமும் பொருந்திய மந்த்ரிகுமாரர்களை ஹனுமான்மேல் எதிர்த்துப் போக ஆஜ்ஞாபித்தனன்.

நாற்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஹனுமான் மந்த்ரிகுமாரர்களெழுவரையும் முடித்தல்.

அனந்தரம் ராக்ஷஸேச்வரனாகிய ராவணன் ஆஜ்ஞாபிக்கையில் மஹாபலிஷ்டர்களான மந்த்ரிகுமாரர்கள் எழுவரும் அக்னிபோல் ப்ரகாசித்துக்கொண்டு பெரிய ஸைந்யம் சூழ்ந்து வரப்பெற்று, தனுஸ்ஸுக்களைத் தரித்து அந்த க்ருஹத்தினின்று புறப்பட்டனர். அவர்கள் அஸ்த்ரங்களில் கைதேர்ந்தவர்களானவரிலும் அஸ்த்ரங்களையுணர்ந்தவரெல்லோரிலும் மேன்மையுற்றவராகையால் ஒருவர்க்கொருவர் பொறாமையுற்று நான் முன்னே நான் முன்னேயென்று ஒருவர்க்கு முன்னே ஒருவர் கார்யஞ்செய்ய விரும்பி ஒவ்வொருவரும் தாமே ஹனுமானை ஜயிக்கவேண்டுமென்று மன விருப்பங்கொண்டிருந்தனர். அவர்கள் ஸ்வர்ணரேகைகளால் அலங்கரிக்கப்பட்ட தந்தமது சிஹ்னங்களான பெருத்துள்ள த்வஜங்களோடும் மற்றும் ஸாதாரண டக்கயங்களோடும் கூடிக் குதிரைகள் பூட்டப்பெற்று மேகம்போல த்வனிசெய்கின்ற மஹாரதங்களில் ஏறிக்கொண்டு உருக்கியழுக்கெடுத்த உயர்ந்த தங்கத்தினால் செய்யப்பட்ட விசித்ரங்களான விற்களையேந்தி அபார பராக்ரமமுடையவராகி நாணையிழுத்துச் சப்தஞ்செய்துகொண்டு மிகுதியும் ஸந்தோஷத்துடன் கர்ஜிக்கின்ற மேகங்கள்போன்று வெளிப்பட்டனர். அப்பொழுது அவரது தாய்மார்களும் பந்துக்களும் நண்பர்களும் ஹனுமானால் கிங்கரர்கள் அடிபட்டதைக் கேட்டு அப்படிப்பட்ட ஹனுமான்மேல் எதிர்க்க இவர்களும் போகின்றார்களே யென்று மிகுதியும் சோகத்தினால் தழதழத்து நின்றனர். மேலான பொற் பூஷணங்களை அணிந்து அவ்வீரர்கள் நான் முன்னே நான் முன்னே யென்று ஒருவன் மேலொருவன் உறைந்துகொண்டு தோரணத்வாரத்தில் யுத்தத்திற்கு ஸித்தமாயிருக்கின்ற ஹனுமான்மேல் எதிர்த்துப்போயினர். அந்த ராக்ஷஸர்கள் எழுவரும்

ரதத்தின் த்வனி மேகத்வனிபோல் விளங்கவும் பாணங்கள் வர்ஷதாரைகள்போல் திகழவும் பெற்று மழைபெய்கிற மேகங்கள்போல் உலாவினர். அதன் மேல் ஹனுமான் அந்த பாணவர்ஷங்களில் மூழ்கி மழையில் மறைந்த மேலான பர்வத ராஜம்போல் உருவந் தெரியாதிருந்தனன். அந்த ஹனுமான் அதி வேகத்துடன் திரிபவனுகையால் வீரர்களான அந்த ராக்ஷஸர்களின் பாணங்கள் தன்மேல் விழவொட்டாம லும் அவரது ரதத்தின் வேகம் தன்னைப் பிடிக்க வொட்டாமலும் சித்ரகதிகளைச் செய்து தப்புவித்துக் கொண்டு அவ்விரண்டையும் வீண்செய்து நிர்மலமான ஆகாயத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தனன். அவ் வீரன் ஆகாயத்தில் தனுஸ்ஸைத் தரித்த அந்த ராக்ஷஸ வீரர்களோடு யுத்தக்ரீடைசெய்துகொண்டு இந்த்ர தனுஸ்ஸுடன் கூடின மேகங்களோடு விளை யாடுகிற வல்லமையுள்ள வாயுதேவன்போல் விளக்க முற்றிருந்தனன். வீர்யம் மிகுந்த அந்த ஹனுமான் பயங்கரமாகக் கர்ஜித்து அம்மஹாஸைன்யத்தை யெல்லாம் விரட்டிக்கொண்டு அந்த ராக்ஷஸர்களை முடிக்க த்வரைப்பட்டனன். அவன் பகைவரைப் பரிதபிக்கச் செய்பவனுகையால் அந்த ராக்ஷஸர்களில் சிலரை உள்ளங்கையால் அறைந்தடித்தனன்; சிலரைக் காலால் விழத்தள்ளினான்; சிலரை முஷ்டிகளால் அடித்தனன்; மற்றுஞ் சிலரை நகங்களால் பிளந்த னன். அக்கபிகுஞ்ஜரன் சில ராக்ஷஸர்களை மார்பினுல் மோதி அடித்தனன்; மற்றுஞ் சிலரைத் தொடைகளால் அடித்து முடித்தனன். அவன் செய்த கர்ஜனையைப் பொறுக்கமுடியாமல் சிலர் அங்கேயே தரையில் வீழ்ந்தனர். அனந்தரம் அந்த ராக்ஷஸர்கள் உருமாய்ந்து தரையில் விழுந்தவுடனே மிகுந்த ஸைன்யமெல்லாம் பயத்தினுல் வருந்தி மூலைக் கொன்றாகத் திசைகளில் ஓடிப்போயிற்று. யானைகள் விகாரசப்தத்துடன் வீறிட்டன; குதிரைகள் தரையில் விழுந்தன. ஏர்க்கால்களும் த்வஜங்களும் குடைகளும்

முறியப்பெற்ற ரதங்களால் பூமி முழுவதும் நிறைந்திருந்தது. அனந்தரம் வழிகளில் பெருகி வருகின்ற ரக்தங்கள் ஆறுகளாய்ப் புலப்பட்டன. அப்பொழுது லங்கையெல்லாம் நாநாவித சப்தங்களால் ப்ரதித்வனி உண்டாகப்பெற்றிருந்தது. மஹாபலிஷ்டனும் ப்ரசண்ட பராக்ரமனுமாகிய அவ்வீரன் ஹநுமான் மிகுதியும் பலத்தினால் கொழுத்திருந்த அந்த ராக்ஷஸர்களைக் கொன்று, இன்னம் மற்றை ராக்ஷஸர்களோடு யுத்தஞ்செய்ய விரும்பி அவ்வனத்தின் வெளிவாசற்படிக்கே போயிருந்தனன். நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஹநுமான் விரூபாக்ஷன் முதலிய ஸேநாதிபதிகளைவரை முடித்தல்.

மஹாநுபாவனாகிய ஹநுமான் மந்த்ரிகுமாரர்களைக்கொன்ற வ்ருத்தாந்தத்தை அறிந்து ராவணன் மனத்தில் சங்கித்து அது பிறர்க்குத் தெரியாதிருக்குமாறு ஆகாரத்தை மறைத்துக்கொண்டு நல்ல ஆலோசனை செய்தனன். அந்த ராவணன், விரூபாக்ஷன் யூபாக்ஷன் துர்த்தரன் ப்ரகஸன் பாஸகர்ணன் என்று ப்ரஸித்தர்களும் வீரர்களும் நீதிசாஸ்த்ர பண்டிதர்களும் யுத்தத்தில் வாயுதேவனைப்போல் மஹாவேகமுடையவர்களும் ஸைன்யத்தின் முன் நின்று நிர்வஹிக்கவல்லவர்களும் ஹநுமானைப்பிடிக்கப் பரபரப்புற்றவர்களுமான ஸேநாபதிகளைவரைக் கண்டு 'ஸைன்யத்தின்முன் நின்று நிர்வஹிக்கவல்ல ஸேநாதிபதிகளே! நீங்களெல்லோரும் பெரிய ஸைன்யத்தைக் கூட்டிக்கொண்டு ரதகஜ துரகங்களோடு புறப்பட்டுப் போவீர்களாக. அவ்வானரனைத் தண்டித்தே தீரவேண்டும்' என்று ஆஜ்ஞாபித்தனன். அன்றியும் அவன் அவர்களை

நோக்கி மேல் வருமாறு மொழிந்தனன் :—'நீங்கள் அவ்வானரனிடஞ் சென்று ஏமாறுதலின்றி ப்ரயத்னஞ் செய்யவேண்டும். மேலும் தேசகாலங்களுக்கு விருத்தமான கார்யம் செய்யலாகாது. அவன் செய்யுங் கார்யங்களைப்பற்றி ஆலோசிக்கையில் எனக்கு வானரனென்று தோற்றவில்லை. எல்லாவிதத்திலும் பார்க்கையில், அவன் மிகுந்த பலமுடைய பெரும் பூதமேயன்றி வேறன்று. ஒருகால் இந்த்ரனோ? அல்லது மற்ற எவரோ? தவஞ் செய்து அந்தத் தவமஹிமையால் நம்மைக் கொல்லும்பொருட்டு இப்பூதத்தைப் படைத்திருக்கலாம். முன்பு நானும் நீங்களுமாக எல்லோருங் கூடி நாகர்களையும் யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் தேவதைகளையும் அஸுரர்களையும் மஹர்ஷிகளையும் பிடித்திருக்கின்றனம். ஆகையால் அவர்கள் நமக்கு ஏதேனும் கெடுதி செய்யவேண்டுவது அவஸ்யமே. அந்தக் கெடுதியே இது. இதற்கு ஸந்தேஹமில்லை. பலாத்காரமாக அவனைப் பிடித்துக்கொள்வீர்களாக. [1] அவ்வானரன் தைர்யத்துடன் பராக்ரமத்தை நிறைவேற்றுபவனாகையால் நீங்கள் அவனை அவமதிக்கலாகாது. நான் முன்பு, வாலி ஸுக்ரீவன் மஹாபலிஷ்டனாகிய ஜாம்பவான் வானர ஸேனாதிபதியான நீலன் இவர்களையும் மற்றும் த்விவிதன் முதலிய மஹா பராக்ரமசாலிகளாகிய வானரர்களையும் பார்த்திருக்கின்றனன். அவர்களுக்கு இப்படிப்பட்ட பயங்கரமான வேகமும் தேஜஸ்ஸும் பராக்ரமமும் புத்தியும் பலமும் உத்ஸாஹமும் நினைத்த வடிவந் தரிக்கிற சக்தியும் இல்லை. ஏதோ ஒரு பெரும் பூதம் இங்ஙனம் கபிரூபந் தரித்து வந்திருப்பதாகத் தெரிந்துகொள்வீர்களாக.

---

1. இங்கு 'நாவமாந்யோ ஸவஷீஷிஸ்ச ஹரிர்யீரபராக்ரம:' என்று மூலம். இங்கு 'யீரபராக்ரம:' என்கிறவிடத்தில் 'யீ' என்பது காயத்ரியின் பதினோலாவது அக்ஷரமாகையால் பதின்மூன்றாயிரம் ஸ்லோகங்கள் கடந்து பதினோன்காவதாயிரம் தொடங்குகிறதாகத் தெரிகிறது.

பெரிய ப்ரயத்னஞ்செய்து அதை எப்படியாயினும் நிக்ரஹிக்கவேண்டும். இந்த்ரனும் தேவதைகளும் அஸுரர்களும் மனுஷ்யர்களும் கூடிய மூன்று லோகங்களும் ஒருமித்துவரினும் யுத்த பூமியில் உங்களெதிரில் நிற்கவல்லவையல்ல; வாஸ்தவமே. ஆயினும் யுத்தத்தில் ஜயம் நேருவது நிலையன்றே. ஆகையால் நீதியறிந்தவன் எவனேனும் யுத்தத்தில் ஜயத்தை விரும்புவானாயின் முக்யமாக ப்ரயத்னப்பட்டுத் தன்னைத் தான் காப்பாற்றிக் கொள்வது அவஶ்யம். ஆகையால் நீங்கள் ஜாக்ரதையுடன் இருக்கவேண்டும்' என்றனன். அவர்களெல்லோரும் ஸ்வாமியின் ஆஜ்ஞையைச் சிரஸில் வஹித்து மஹா தேஜஸ்விகளாகையால் அக்னிபோல் விளக்கமுற்று மிகுந்த வேகமுடையவர்களாகி ரதங்களோடும் மதித்த யானைகளோடும் மஹாவேகமுடைய குதிரைகளோடும் கூரான பலவகை ஆயுதங்களோடும் கூடிப் பலங்களெல்லாம் ஸம்ருத்தமா யிருக்கப்பெற்றுக் கிளம்பினர். அனந்தரம் அவ்வீரர்கள் அவ்வசோக வனத்தின் வெளிவாசற்படியில் உதிக்கின்ற ஸூர்யன் போல் விளக்கமுற்றுத் தன் தேஜோ விசேஷத்தினால் ஸூர்யனே என்னும்படி ப்ரகாசிப்பவனும் மிகுந்த உத்ஸாஹமும் திடமான நெஞ்சுறுதியும் அளவில்லாத பலமும் மஹாபுத்தியும் மஹாவேகமும் மஹாசக்தியும் அமைந்த அம்மஹாகபியாகிய ஹனுமானைக்கண்டனர். அங்ஙனம் அவனைக் கண்டவுடனே அந்த ராக்ஷஸர்களனைவரும் அவனை எல்லாத்திசைகளிலும் சுற்றிக் கொண்டு நின்று பயங்கரமான அந்தந்த ஆயுதங்களைக் கொண்டு அவ்வவ்விடங்களினின்று மேல் விழுந்து யுத்தஞ் செய்யத் தொடங்கினர். துர்த்தரன் க்ரூரங்களும் கூராயிருப்பவைகளும் சிறந்த இரும்பினால் செய்யப்பட்டவைகளும் நுனியில் பொன்வர்ணமான ரேகைகள் உண்டாகப் பெற்றவைகளுமாகிய ஐந்து பாணங்களை ஹனுமானுடைய தலைமேல் கருநெய்தலின் இதழ்களை எய்வதுபோல் எய்தனன். அவ்வைந்து பாணங்களால் சிரஸ்ஸில் அடிக்கப்பட்ட அவ்வானர

ரோத்தமன் பத்துத் திசைகளிலும் ப்ரதித்வனி உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு ஆகாயத்தில் கிளம்பினன். அனந்தரம் வீரனாகிய துர்த்தரன் மஹாபலனாகையால் தனுஸ்ஸில் நாணையேற்றிட்டு ரதத்தின் மேல் ஏறிக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பி, கூரான பாணங்களை நூறுநூறாக இறைத்துக்கொண்டு எதிர்த்தனன். சரத்ருதுவில் மழைபெய்யும் மேகத்தைக் காற்று ஸுகமாகத் தடுப்பதுபோல், ஹனுமான் ஆகாயத்தில் பாணவர்ஷங்களைப் பெய்கின்ற அந்த துர்த்தரனைத் தன் வேகத்தினால் தன்னை அணுகாதிருக்குமாறு தடுத்தனன். அனந்தரம் அந்தத் துர்த்தரன் தன்னைப் பிடிக்கையில் வாயுகுமாரனான ஹனுமான் சரீரத்தை அதிகமாக வளர்த்திக்கொண்டு வேகத்துடன் மஹா யுத்தஞ் செய்தனன். அந்த ஹனுமான் மிகுந்த வேகத்தை ஏற்றுக்கொண்டு திடீலென்று தூரத்தில் கிளம்பிப் பர்வதத்தின்மேல் இடி விழுவதுபோல், துர்த்தரனுடைய ரதத்தின்மேல் குதித்தனன். அப்பால் அந்த துர்த்தரன் எட்டுக் குதிரைகளும் மடிந்து இருசும் ஏர்க்காலும் முறிந்து பாழான ரதத்தை விட்டு மரணம் அடைந்து பூமியில் விழுந்தனன். அங்ஙனம் அவன் தரையில் விழுந்ததைக் கண்டு எதிர்க்க முடியாதவராகிப் பகைவரை அடக்குந் திறமையுள்ள விரூபாக்ஷ யூபாக்ஷர்கள் கோபம் ஜ்வலிக்க ஆகாயத்தில் கிளம்பினர். இங்ஙனம் அவ்விருவரும் திடீலென்று கிளம்பி நிர்மலமான ஆகாயத்திலிருக்கின்ற மஹாபாஹுவாகிய ஹனுமானது மார்பில் இரும்புத் தடிகளால் அடித்தனர். மஹாபலனாகிய அந்த ஹனுமான் கருடனைப்போன்ற பராக்ரமமுடையவனாகையால், அவ்விருவரும் மிகுந்த வேகமுடையவராயினும் அவரது வேகத்தையும் அடக்கி மீளவும் பூமியில் இழிந்தனன். வாயுகுமாரனாகிய அந்த வானர வீரன் ஒரு மராமரத்தினருகிற் சென்று அதைப்பிடுங்கி அதனால் வீரர்களான அந்த ராக்ஷஸர்களிருவரையுங் கொன்றனன். அனந்தரம் துர்த்தரன் விரூபாக்ஷன்

யூபாக்ஷன ஆகிய அம்மூவரும பலிஷ்டனாகிய அவ
வானரனால் அடிப்பட்டுமுடிந்ததை அறிந்து மிகுதியும்
வேகமுடைய ப்ரகஸனென்பவன் ஹநுமான்மேல்
பலாத்காரமாக எதிர்த்து வந்தனன். வீர்யசாலியாகிய
பாஸகர்ணனும் மிகவும் கோபமுற்றுச் சூலத்தை
எடுத்துக்கொண்டு மிகுந்த புகழுடையவனும் வானர
ஸ்ரேஷ்டனுமாகிய அந்த ஹநுமான்மேல் ஒரு பக்கத்
தில் எதிர்த்து வந்தனன். ப்ரகஸன் கூரான நுனி
யுடைய பட்டஸத்தைக் கொண்டு அவ்வானர வீரனோடு
யுத்தஞ் செய்தனன். ராக்ஷஸஸ்ரேஷ்டனான பாஸகர்ண
னும் சூலத்தைக் கொண்டு அவ்வானரோத்தமனோடு
யுத்தஞ் செய்தனன். அந்த ஹநுமான் தன்னை அங்ங
னம் அவ்விருவரும் அவயங்களெல்லாவற்றிலும் அடிக்
கையில் கோபித்து ரக்தத்தில் நனைந்த மயிர்களை
யுடையவனாகிச் சிவந்த கிரணங்களோடு கூடின பால
ஸூர்யன்போல் ப்ரகாசித்தனன். வீரனாகிய அவ்வானர
குஞ்ஜரன் பிறகு ம்ருகங்களோடும் ஸர்ப்பங்களோடும்
வ்ருக்ஷங்களோடுங் கூடின ஒரு பர்வத சிகரத்தைப்
பிடுங்கி அதனால் அந்த ராக்ஷஸரிருவரையுங் கொன்ற
னன். அங்ஙனம் அந்த ஸேனாதிபதிகளைவரும் முடிகை
யில் பின்பு ஹநுமான் மிகுந்திருக்கின்ற ஸேனையையும்
நாசஞ் செய்தனன். அக்கபிவரன் குதிரைகளால்
குதிரைகளையும் யானைகளால் யானைகளையும் காலாட்க
ளால் காலாட்களையும் ரதங்களால் ரதங்களையும்
அடித்து இந்த்ரன் அஸுர ஸைன்யத்தை அழிப்பது
போல் அந்த ஸைன்யத்தையெல்லாம் அழித்தனன்.
செத்து வீழ்ந்திருக்கிற யானைகளாலும் குதிரைக
ளாலும் இருசு முறிந்த மஹாரதங்களாலும் அடிபட்டு
வீழ்ந்த ராக்ஷஸர்களாலும் பூமி முழுவதும் நாற்புறத்
திலும் நிறைந்திருக்கையால் அங்குள்ள வழியெல்லாம்
போகமுடியாமல் தடைபட்டிருந்தது. வீரனாகிய அந்த
ஹநுமான் வீரர்களான அந்த ஸேனாதிபதிகளைவரை
யும் அவரது ஸேனைகளையும் வாஹனங்களையும் கொன்று
மீளவும் அந்தத் தோரணவாசற்படியை அடைந்து

ப்ரஜைகளை ஸம்ஹாரஞ் செய்த பின்பு வ்யாபாரமில்லாமல் வெறுமனே யிருக்கின்ற யமனைப்போல் வ்யாபாரமற்று வெறுமனே யிருந்தனன். நாற்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் அக்ஷகுமாரனைக் கொல்லுதல்.

ஸேனாதிபதிகளைவரும் தமது ஸைன்யங்களோடும் வாஹனங்களோடும் ஹனுமானால் முடிக்கப்பட்டதை ராஜனாகிய ராவணன் அறிந்து, எப்பொழுதும் யுத்தங்களில் கொழுத்தவனும் யுத்தமென்றால் பின்வாங்காமல் இதோ போகிறேனென்று பெருவிருப்பத்துடன் ஸித்த ஸந்நாஹனா யிருப்பவனுமாகிய தன் குமாரன் அக்ஷன் முன்னே இருக்கையில் அவன் மேல் கண்வைத்தனன். மிகுந்த ப்ரதாபமுடைய அந்த அக்ஷகுமாரன் அந்த ராவணன் அங்ஙனம் கண்வைத்த மாத்ரத்தினால் தூண்டப்பட்டவனாகி ஸ்வர்ணரேகைகளால் அற்புதமாயிருக்கிற தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு ப்ராஹ்மணோத்தமர்கள் நெய்யை விட்டு வளரச் செய்கையில் ஜ்வாலைகள் மேற்கிளம்பப்பெற்ற அக்னிபோல் ஸபையினின்று திடீலென்று பரபரப்புடன் எழுந்தனன். அனந்தரம் வீர்யசாலியாகிய அந்த ராக்ஷஸஶ்ரேஷ்டன் பாலஸூர்யன்போல் ப்ரகாசிப்பதும் உருக்கியழுக்கெடுத்த மேலான தங்கத்தை நிரம்பவும் அமைத்து முழுவதும் அலங்கரிக்கப்பட்டதுமாகிய ஒரு பெரிய ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு அம்மஹாவானரனைக் குறித்துப் போயினன். அவ்வக்ஷகுமாரன் பல தவங்களை அனுஷ்டித்து அந்த ரதத்தைப் பெற்றனன். அது மிகுதியும் மேலான தங்கத்தினால் விளக்கமுற்று ஸாதாரண டக்கயங்களும் ரத்னங்களால் இழைக்கப்பட்ட பிருதுள்ள டக்கயங்களும் அமைந்து மனோவேக

மூடைய மேலான எட்டுக் குதிரைகள் நன்கு பூட்டப் பெற்றிருந்தது. அதைத் தேவதைகளுக்காவது அஸுரர்களுக்காவது எதிர்க்க முடியாது. அது தடையின்றி எங்கும் ஸஞ்சரிப்பதும் ஸூர்யன்போல் தகதகவென்று ப்ரகாசிப்பதும் ஆகாயத்தில் திரிவதுமாயிருந்தது. அப்பொழுது அது யுத்தத்திற்கு ஸித்தமாகப் புறப்பட்டதாகையால் அம்பறுத்தூணிகளும் எட்டுக் கத்திகளும் வைக்கப்பெற்று மணிகள் கட்டி அழகாயிருந்தது. அதில் அவ்வவ்விடங்களில் சக்தி தோமரங்களென்கிற ஆயுதங்கள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. மற்றும் அதில் பாணங்கள் தனுஸ்ஸுக்கள் கவசம் முதலிய யுத்தத்திற்கு வேண்டிய கருவிகளெல்லாம் குறைவற ப்ரகாசித்துக்கொண்டிருந்தன. அன்றியும் அதில் சந்த்ரனையும் ஸூர்யனையும் நிகர்த்த ஒளியுடைய பொற் சங்கிலிகள் கட்டப்பட்டிருந்தன. மற்றும், அது சில இடங்களில் சந்த்ரன்போல் வெளுத்தும் சில இடங்களில் ஸூர்யனைப்போல் பொன்வர்ணமாகவும் விளங்கிற்று. அது ஆகாயத்தில் ஸூர்யனைப்போல் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும். இப்படிப்பட்ட அந்த ரதத்தில் இந்த்ரனைப்போன்ற பராக்ரமசாலியாகிய அவ்வக்ஷகுமாரன் ஏறிக்கொண்டு உடனே புறப்பட்டனன். அவன் ஸமஸ்த ஸைன்யங்களோடுங்கூடி அவற்றிலுள்ள குதிரைகளின் கனைப்புகளாலும் யானைகளின் ஙீங்காரங்களாலும் பெரும்பெரிய ரதங்களின் த்வனிகளாலும் ஆகாயத்தையும் பர்வதங்களோடு கூடின பூமியையும் நிரம்பச்செய்துகொண்டு, அசோகவனத்தின் வெளிவாசற்படியில் உட்கார்ந்திருக்கின்ற ஸமர்த்தனுகிய அந்த ஹனுமானைக் கிட்டினன். ஸிம்ஹம்போல் கம்பீரமான த்ருஷ்டியுடைய அவ்வக்ஷகுமாரன் ப்ராணிகளை நாசஞ்செய்ய முயன்ற ப்ரளய காலாக்னிபோல் புலப்பட்டுக்கொண்டு அந்த ஹனுமானிடஞ் சென்று அவனுடைய உருவத்தையும் யுத்த ஸந்நாஹத்துடனிருக்கிற கொழுப்பையும் கண்டு

ஆச்சர்யமும் பரபரப்பும் உண்டாகப்பெற்று 'இவன் மஹாவீரன்' என்னும் கௌரவத்ருஷ்டியுடன் கண்டனன். மஹாபலிஷ்டனாகிய அந்த ராஜகுமாரன் அக்ஷன் மஹானுபாவனாகிய அவ்வானர ஶ்ரேஷ்டனுடைய வேகத்தையும் அவன் பகைவரிடத்தில் காட்டுகிற பராக்ரமத்தையும் தன் பலத்தையும் இவ்வளவென்று நிர்ணயித்துக்கொண்டு வஸந்தருதுவில் ஸூர்யன் வளர்ந்து வருவதுபோல் தேஜோ விசேஷத்துடன் வளரலாயினன். அங்ஙனம் அவ்வக்ஷன் யுத்தத்தின்பொருட்டு உறுதியாகக் காலூன்றி நின்று, ஹனுமானுடைய பராக்ரமம் மிகுதியும் அளவிறந்ததென்றும் அவனை யுத்தத்தில் தடுப்பது கஷ்டமென்றும் அறிந்து கோபங் கொண்டு மனத்தில் ஊக்கம் மிகப்பெற்றுக் கூர்மையான மூன்று பாணங்களை எய்து அந்தக் கபிவீரனை யுத்தத்திற்குத் தூண்டினன். அனந்தரம் அக்ஷன், அவ்வானரன் பராக்ரமாதிகளால் கர்வித்திருப்பவனென்றும், அவன் எப்படிப்பட்ட ஶ்ரமத்தையும் பொருள்செய்யாமல் அதிலாகவத்துடன் பகைவரை அடக்குவதில் ஸமர்த்தனென்றும் நன்றாகத் தெரிந்துகொண்டு தானும் அப்படிப்பட்ட வீரனானமையால் மனத்தில் மிகுதியும் கர்விஷ்டனாகிக் கையில் பாணத்தையும் தனுஸ்ஸையும் ஏந்தி அந்த ஹனுமான் மேல் தான் யுத்தத்திற்கு வந்திருப்பதை அறிவிக்கும்படியான த்ருஷ்டியை விட்டனன். அனந்தரம் பொற்பதகங்களோடு கூடின தோள்வளைகளையும் அழகான குண்டலங்களையும் தரித்திருக்கின்ற அவ்வக்ஷகுமாரன் ப்ரசண்டபராக்ரமத்துடன் விரைந்து ஹனுமான்மேல் எதிர்க்கத் தலைப்பட்டனன். அப்பொழுது அவ்விருவரும் போராடுவது எங்கும் நிகரற்றதாகி, தேவாஸுரர்களுக்கும் பரபரப்பைக் கொடுப்பதாயிருந்தது. அவ்வானரனுக்கும் அக்ஷகுமாரனுக்கும் யுத்தம் நடக்கும்பொழுது பூமி சப்தம் செய்தது; ஸூர்யன் வெயில்காயவில்லை; வாயுவும் வீசவில்லை; பர்வதமும் நடுக்கமுற்றது; ஆகாயமும் கர்ஜித்தது;

ஸமுத்ரம் கலக்கமுற்றது. அனந்தரம் வீரனுகிய அந்த அக்ஷகுமாரன் குறிவைப்பதையும் பாணம் தொடுப்பதையும் ப்ரயோகிப்பதையும் நன்கறிந்தவனுகையால், நல்லமுகமுடையவைகளும் இறகுகள் கட்டப்பெற்றவைகளும் பொற்பிடியுடையவைகளும் விஷம் பூசின நுனியுடையவைகளும் ஆனதுபற்றியே ஸர்ப்பம் போன்றவைகளுமாகிய மூன்று பாணங்களை அவ்வானரனுடைய சிரஸ்ஸில் ப்ரயோகித்தனன். அங்ஙனம் அம்மூன்று பாணங்கள் ஒன்ருகச் சிரஸ்ஸில் பொற்றுகையில், அந்த ஹனுமான் பெருகி வருகின்ற ரக்தத்தினுல் உருட்சியான கண்கள் நனையப்பெற்று அப்பொழுது உதித்த ஸூர்யன்போல் சிவந்து ஜ்வலித்துக்கொண்டு, சிவந்த கிரணங்கள்போல் பாணங்கள் சிரஸ்ஸில் ப்ரகாசிக்கையால் கிரணஸமூஹத்தோடுகூடின ஸூர்யன் போல் ப்ரகாசித்தனன். அனந்தரம் வானரராஜனுகிய ஸுக்ரீவனுடைய மந்த்ரிகளனைவரிலும் மேன்மையுற்ற அந்த ஹனுமான், ராக்ஷஸ ராஜனுகிய ராவணனது குமாரர்களில் சிறந்த அவ்வக்ஷன் கம்பீரமான நானுவித ஆயுதங்களையும் விசித்ரமான தனுஸ்ஸையும் ஒலிப்பித்துக்கொண்டு யுத்தத்திற்குத் தலைப்படுவதைக் கண்டு தானும் மஹாசூரனுகையால் ஸந்தோஷம் அடைந்து யுத்தத்திற்கு முயன்று தேஹத்தை வளரச் செய்துகொண்டனன். அப்பொழுது அந்த ஹனுமான் பூமியின் மத்யத்திலுள்ள மந்தர பர்வதத்தின் சிகரத்திற்கு வந்திருக்கிற மத்யாஹ்ன ஸூர்யன்போல் மிகுதியும் உக்ரஸ்வரூபனுகி மஹா கோபத்துடன் கூடி, பலத்தையும் வீர்யத்தையும் வஹித்து, கோபத்தினுல் சிவந்து அக்னிபோல் விளங்குகிற கண்களின் ஜ்வாலைகளால் அக்ஷகுமாரனையும் அவனது ஸைன்யங்களையும் வாஹனங்களையும் கொளுத்திவிடுபவன் போல் கண்ணுற்றனன். அனந்தரம் யுத்தத்தில் தனுஸ்ஸை இந்த்ர தனுஸ்ஸாகவும் பாணங்களை மழையாகவும் பெற்று மேகம்போல் ப்ரகாசிக்கின்ற அந்த ராக்ஷஸன், மேகம் பெரிய பர்வதத்தின்மேல் மழை பெய்வது

போல் பர்வதம்போன்ற அவ்வானரோத்தமன்மேல் அதிவேகத்துடன் பாணங்களை ப்ரயோகித்தனன். அனந்தரம் யுத்தத்தில் ப்ரசண்ட பராக்ரமனாகிய அவ் வக்ஷகுமாரன் தேஜஸ்ஸும் பலமும் வீர்யமும் மேன் மேலும் வளர்ந்துவரப்பெற்றிருப்பதைக் கண்டு ஹனு மான் மேகத்தை நிகர்த்த பராக்ரம முடையவனாகை யால் அதற்குத் தானும் ஸந்தோஷித்து அந்த ஸந்தோஷத்தினால் ஸிம்ஹநாதஞ் செய்தனன். அவ்வக்ஷன் பாலனாகையால் ஹனுமானுடைய அளவை அறியாமல் யுத்தத்தில் பராக்ரமத்தினால் கர்வித்துக் கோபத்துடன் மிகுதியும் வளர்ந்து ரக்தம்போல் கண்கள் சிவக்கப்பெற்று, யானை, தன்னை விழுத் தள்ளும்பொருட்டுப் புற்களால் மூடப்பட்ட பெருங் கிணற்றின் மேல் தெரியாமல் போவதுபோல், யுத்தத் தில் நிகரில்லாத அவ்வானர வீரன்மேல் எதிர்த்தனன். அவ்வக்ஷன் பலாத்காரமாக பாணங்களைத் தொடுக்கை யில் மேககர்ஜனம் போன்ற த்வனியுடைய அந்த ஹனுமான் அந்த பாணங்கள் படுவதற்கு உரக்க இரைச்சலிட்டு அனந்தரம் புஜங்களையும் துடைகளையும் உதறிக்கொண்டு பயங்கரமான காட்சியுடையவனாகி வேகமாக ஆகாயத்தில் கிளம்பினன். மஹா பலனும் ராக்ஷஸச்ரேஷ்டனுமாகிய அவ்வக்ஷகுமாரன் மிகுந்த ப்ரதாப முடையவனும் அதிரதர்களனைவரிலும் மேன்மையுற்றவனுமாகையால் மேகம் பர்வதத்தின் மேல் கல்மழை பெய்வதுபோல் ஆகாயத்தில் கிளம்பு கின்ற அந்த ஹனுமான்மேல் பாணங்களை அள வின்றித் தொடுத்துக்கொண்டு ரதத்தோடுகூடவே தானும் எதிர்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினன். வீரனாகிய அந்த ஹனுமான் யுத்தத்தில் கொடிய பராக்ரமத்துடன் விளக்கமுற்று மனோவேகத்துடன் பாணங்களின் இடையில் வாயுவைப்போல் திரிந்து கொண்டு லாகவத்தினால் அவ்வக்ஷகுமாரனது பாணங்கள் தன்மேல் படவொட்டாமல் தடுத்துக் கொண்டு வாயுதேவன் திரியும் மார்க்கமாகிய ஆகா

றில் திரிந்தனன். இங்ஙனம அவ்வக்ஷன் தனுஸ்ஸைத் தரித்து யுத்தத்திற்கு முயன்று பலவகை நுனிகளையுடைய மேலான பாணங்களை அளவின்றி ப்ரயோகித்து ஆகாயத்தை யெல்லாம் மறைக்கையில், வாயுகுமாரனாகிய ஹனுமான் அவனைக் கௌரவ த்ருஷ்டியுடன் பார்த்து ஸந்தோஷித்து உடனே ‘இப்படிப்பட்டவனை எப்படி வதிப்பேன்’ என்று சிந்திக்கத்தொடங்கினான். அனந்தரம் வீரனும் மஹா தீரனுமாகிய அவ்வக்ஷகுமாரன் பாணங்களை ப்ரயோகித்து அந்த ஹனுமானுடைய மார்பைப் பிளக்கையில், மஹா புஜனாகிய அக்கபிவரன் அதற்கு உரக்க இரைச்சலிட்டு அந்தந்த கார்ய விசேஷங்களின் ஸ்வரூபத்தை உணர்ந்தவனாகையால் அந்தப் பகைவனை ஆக்ரமித்து யுத்தத்தில் ஜயிப்பதைப்பற்றித் தனக்குள் இங்ஙனம் சிந்தித்தனன்:—‘இவன் மஹாபலன்; பால ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்றனன். பாலனாயினும் மஹா பலமுடையவனாகிப் பெரியோன்போல் கைதீர்ந்து பெரிய கார்யத்தைச் செய்கின்றனன். மற்றும், ஸமஸ்த யுத்ததந்த்ரங்களும் தெரிந்து விளங்குகின்றனன்; இப்படிப்பட்ட இவனைக்கொல்ல எனக்குப் புத்தி உண்டாக வில்லை. இவ்வளவு மாத்ரமே அன்று; இவன் மஹானுபாவன்; பராக்ரமத்தில் மிகுதியும் பெரியவன்; யுத்தங்களில் மனவூக்கமுடையவன்; கஷ்டங்களைப் பொறுக்குந் தன்மையன். யுத்தகார்யங்களில் இவனது மேன்மை மிகுதியும் வளர்ந்து வருகின்றதாகையால், இவனை நாகர்களும் யக்ஷர்களும் தேவதைகளும் முனிவர்களும் பூஜித்துக்கொண்டிருப்பார்கள். இதற்கு ஸந்தேஹமில்லை. இவன் பராக்ரமத்தினாலும் உத்ஸாஹத்தினாலும் மனம் மேன்மேலும் களிக்கப்பெற்று என்னெதிரில் வந்து நின்று என்னைக் கண்ணெடுத்துக் கூசாமல் பார்த்துக்கொண்டிருக்கின்றனன். மிகுந்த வேகத்துடன் திரிகின்ற இவனுடைய பராக்ரமம் தேவாஸுரர்களுடைய மனங்களையும் நடுங்கச் செய்யும். இவனை இப்பொழுது கொல்லாமல் உபேக்ஷித்தோ

மாயின், பிறகு நம்மைப் பரிபவப்படுத்தாமல் விடான். ஏனெனில்—இவனது பராக்ரமம் யுத்தத்தில் மேன்மேலும் வளர்ந்து வருகின்றது. இன்னம் வெறுமனேயிருக்கில் " எவ்வளவு மேற்படுவானோ? ஆகையால் இப்பொழுதே இவனைக்கொல்லுவது எனக்கு யுக்தமாகத் தோற்றுகின்றது. மேன்மேலும் கொழுந்துவிட்டெரிகின்ற அக்னியை அணைக்காமல் உபேக்ஷிப்பது யுக்தமன்றல்லவா?' என்று ஆலோசித்தனன். வீர்யசாலியும் மஹாபலனுமாகிய அந்த ஹனுமான் இங்ஙனம் பகைவனது வேகத்தை ஆலோசித்துத் தான் யுத்தஞ் செய்யவேண்டிய க்ரமத்தையும் ஸங்கல்பித்துக்கொண்டு அம்மஹாகபி அவனைக் கொல்ல நினைவுற்று, அப்பொழுது தன் வேகத்தை வெளியிட ஆரம்பித்தனன் வீரனாகிய அவ்வாயுகுமாரன் மிகுந்த வேகமுடையவைகளும் எள்ளளவும் ஏமாறுதலின்றி இடவலங்களில் சித்ரகதிகள் செய்யும்பொழுது ரதபாரத்தைப் பொறுக்கவல்லவைகளுமான அவ்வக்ஷனது குதிரைகளெட்டையும் வாயுமார்க்கமாகிய ஆகாயத்தில் உள்ளங்கையால் அடித்துக் கீழே விழத் தள்ளினன். அனந்தரம் வானராதிபதியாகிய ஸுக்ரீவனது மந்த்ரிகளில் தலைமையுள்ள அந்த ஹனுமான் அறைந்த உள்ளங்கையறையைப் பொறுக்கமுடியாமல் அவ்வக்ஷ குமாரன் ஏறியிருந்த அம்மஹாரதம் சக்ரங்கள் முறிந்து நுகத்தடி ஒடிந்து குதிரைகள் மடிந்து ஆகாயத்தினின்று தரையில் வீழ்ந்தது. அவ்வக்ஷன் பயங்கரமான வீர்யமுடைய மஹாரதனாகையால் அந்த ரதத்தை விட்டு வில்லையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு, ரிஷி தவப்பெருக்கினால் தேஹத்தை விட்டு தேவலோகத்திற்குப் போவது போல், ஆகாயத்திற் கிளம்பினன். அனந்தரம் அவ்வக்ஷகுமாரன் கருடனும் வாயுதேவனும் ஸித்தர்களும் திரியும் மார்க்கமாகிய ஆகாயத்தில் உலாவக்கண்டு, வாயுதேவனைப்போல் மஹாவேகமும் மஹாபராக்ரமும் உடைய அவ்வானரஸ்ரேஷ்டன் ஹனுமான் அவனுடன்

கூடவே சென்று க்ரமமாக அவன் கால்களைக் கெட்டி யாகப் பிடித்துக்கொண்டனன். வானரர் தலைவனாகிய ஹனுமான் தன் தந்தை வாயுதேவனைப்போல் மிகுந்த வேகமும் பராக்ரமமும் உடையவனாகையால் கருத்மான் மஹா ஸர்ப்பத்தைப் பிடித்துக்கொள்வதுபோல் யுத்தத்தில் அவ்வக்ஷகுமாரனைப் பிடித்துக் கொண்டு அனேகந்தடவை கிருகிருவென்று சுழற்றி வேகமாகத் தரையின்மேல் அடித்தனன். இங்ஙனம் ஹனுமானால் அடிக்கப்பட்ட அவ்வக்ஷன் கைகளும் துடைகளும் இடையும் கழுத்தும் முறிந்து, தேஹமெல்லாம் ரக்தம் ஆறாகப் பெருகப்பெற்று, எலும்புகளும் கண்களும் சிதைந்து, ஸந்திபந்தங்களும் முறிந்து [1] கக்ஷையை முதலிய கட்டுக்களெல்லாந் தளர்ந்து தரையில் விழுந்த னன். அம்மஹாகபி இங்ஙனம் அக்ஷனைத் தரையில் அடித்துப் பிண்டமாகச் செய்து ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனுக்கு மஹாபயத்தை விளைவித்தனன். இங்ஙனம் அக்ஷகுமாரன் ஹதனாகையில் [2] ஜ்யோதிஸ் ஸக்ரமாகிய ஆகாசமார்க்கத்தில் திரியும் மஹா வ்ரதர்க ளான மஹர்ஷிகளும் பூதங்களும் யக்ஷர்களும் பன்ன கர்களும் தேவதைகளும் தேவேந்த்ரனும் ஒன்றுகூடி மிகுதியும் ஆஸ்சர்யமுற்று அந்த ஹனுமானைக் கண்டனர். வீரனாகிய அந்த ஹனுமான் தேவேந்த்ர குமாரன்போல் காந்தி வெள்ளத்துடன் விளங்குபவ னும் குருதிபோல் சிவந்த கண்களையுடையவனுமாகிய அவ்வக்ஷகுமாரனைக்கொன்று ப்ரளயகாலத்தில் ப்ராணிகளை யெல்லாம் ஸம்ஹரித்த பின்பு வ்யாபார மற்றிருக்கிற யமனைப்போல் வ்யாபாரமற்று அசோக வனத்தின் வெளி வாசற்படிக்கே சென்றனன். நாற்பத் தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

1. கக்ஷையை—இடையில் கட்டிக்கொள்கிற கச்சுப்பட்டை.

2. ஜ்யோதிஸ்ஸக்ரம்—நக்ஷத்திர மண்டலம்.

### ராவணன் இந்த்ரஜித்தை அனுப்புதலும், இந்த்ரஜித்து ஹனுமானை ப்ரஹ்மாஸ்த்ரத்தால் கட்டிக்கொண்டு போதலும்.

அனந்தரம மஹானுபாவனாகிய அந்த ராக்ஷஸர் தலைவன் ராவணன் ஹனுமானால் அக்ஷகுமாரன் ஹதனானதைக் கேட்டு, துக்கத்தினால் மனம் கலங்கப் பெற்றும் தைர்யத்தை ஏற்றுக்கொண்டு ரோஷம் மிகப் பெற்று அப்பொழுது இந்த்ரனை நிகர்த்த இந்த்ரஜித்தைப் போக ஆஜ்ஞாபிப்பவனாகி 'நீ ப்ரஹ்மாஸ்த்ரம் அறிந்தவன்; சஸ்த்ரவித்யையை அறிந்தவர் அனைவரினும் சிறந்தவன்; தேவதைகளுக்கும் அஸுரர்களுக்குங்கூடச் சோகத்தை விளைவிப்பவன்; தேவதைகள் தேவேந்த்ரனோடு கூடி எதிர்த்து வரும்பொழுதுங்கூட நீ நிறைவேற்றின பராக்ரமகார்யங்களை உலகமெல்லாம் பார்த்தேயிருக்கின்றது. ப்ரஹ்மதேவனை ஆராதித்து நீ திவ்யாஸ்த்ரங்களையெல்லாம் பெற்றவன். உனது அஸத்ர பலத்தில் பட்டு அஸுரர்களும் நசித்துப்போவார்கள்; தேவக்கூட்டமும் பாழாய்விடும்; ஆயிரஞ்சொல்லி என்? இவர்களெல்லோரும் ஒருமித்து தேவேந்த்ரனுடன் கூடிவரினும் யுத்தத்தில் உன்னெதிரில் நிற்க வல்லரல்லர். மூன்று லோகங்களிலும் உன்னுடன் யுத்தஞ்செய்து ஶ்ரமப்பட்டு ஓடாதவன் எவனும் இல்லை. புஜவீர்யத்தினாலும் தபஸ்ஸினாலும் மிகுதியுங் பாதுகாக்கப்பட்டு அந்தந்த தேசங்களுடையவும் காலங்களுடையவும் பேதங்களை நன்குணர்ந்து மேலான மதியும் உண்டாகப்பெற்று விளங்குவோன் நீயொருவனே! உன்னைப்போன்றவன் மற்றொருவனும் இல்லை. யுத்தங்களில் புருஷகாரத்தினால் உனக்கு ஸாத்யப்படாதது ஒன்றுமே இல்லை. விவேகத்தை முன்னிட்டு நீ ஆலோசனை செய்கையில் உனக்கு முடியாத கார்யம் ஒன்றுமே இராது. மூன்று லோகங்களிலும் உனது அஸ்த்ரபலத்தையும் தேஹபலத்தையும் அறியாதவன் எவனும் இல்லை. உன் தபோபலமும் யுத்தங்களில்

நிறைவேற்றுகிற பராக்ரமமும் அஸ்த்ரபலமும் எனக்கு நிகரானவை. உனக்கு எப்பொழுதும் ஜயமே விளைவது நிச்சயம். ஆகையால் யுத்தஸங்கடங்கள் நேரும் பொழுது அப்படிப்பட்ட ஸித்தஜயசீலனாகிய உன்னை நினைத்துக்கொள்கையில் என் மனத்திற்கு வருத்தம் சிறிதும் உண்டாகாது. கிங்கரர்களனைவரும் அடிபட்டுப்போயினர். ராக்ஷஸர்களில் சிறந்த ஜம்புமாலியும் முடிந்தனன். மந்த்ரிகுமாரர்களும் வீரர்களுமான ஸேனாதிபதிகளனைவரும் மாண்டனர். மற்றும் ரதகஜ துரகங்கள் நிறைந்த அளவற்ற ஸைன்யங்களும் முடிக்கப்பட்டன. உனது அருமைத் தம்பியாகிய அக்ஷகுமாரனும் அடிக்கப்பட்டனன். நீ சத்ருக்களை உருமாய்க்க வல்லவன். எனக்கு உன்னிடத்தில், 'நீ எல்லாவற்றிலும் சிறந்தவன்' என்று எவ்வளவு நம்பிக்கை உளதோ, அவ்வளவு நம்பிக்கை அவர்களிடத்தில் சிறிதும் கிடையாது. கிங்கரர் முதலாக அக்ஷகுமாரன் வரையில் முடித்த இவ்வானரனுடைய அளவிறந்த சரீரபலத்தையும், நல்ல புத்தி ஸாமர்த்யத்தையும் மனவலியையும் பௌருஷத்தையும் கணிசித்துக்கொண்டு உன் ஸாரத்தையும் நிரூபித்துப் பார்த்து உன் பலத்திற்குத் தகுந்திருக்குமாறு வேகத்தைக் காட்டுவாயாக. நீ [1] அஸ்த்ர வேதிகளனைவரிலும் மேன்மையுடையவன்; மேலும் பகைவரெல்லோரையும் பறந்தோடச்செய்பவன். இப்படிப்பட்டவனாகையால் நீ இங்கிருந்து சென்று அவ்வானரனைக்கிட்டி அனந்தரம் உன் பலத்தையும் எதிரி பலத்தையும் பார்த்துக் கொண்டு நமது ஸேனைக்கு நாசம் உண்டாகாதிருக்குமாறு யுத்தத்திற்குத் தொடங்குவாயாக. வீரா! எவன் தானொருவனே சத்ருக் கூட்டங்களைக் கலக்கி வருந்தச் செய்கின்றானோ, அப்படிப்பட்ட இவ்வானரன் விஷயத்தில் ஸேனைகள் உனக்குக் காப்பாயிருக்க மாட்டா. இவன் விஷயத்தில் வஜ்ராயுதமும் ஸார

1. அஸ்த்ரவேதிகள்—அஸ்த்ரங்களை அறிந்தவர்.

மற்றதே. ஆகையால் அதை எடுத்துக்கொண்டு இவனிடம் போகவேண்டாம். இவனுக்குள்ள கமன வேகம் வாயுவுக்குங்கூட இராது. மேலும் அக்னியைப் போன்றவனாகையால் இவனை முஷ்டி முதலியவற்றால் அடிக்கவும் ஸாத்தியமில்லை. நான் இங்ஙனம் சொன்ன அவ்விஷயத்தை நன்கு விசாரித்து இந்தக் கார்யம் நிறைவேறுமாறு மனஊக்கமுற்று தனுஸ்ஸைப்பற்றின திவ்ய அஸ்த்ரபலத்தை நினைத்துக்கொண்டு போவாயாக. அஸ்த்ரபலந் தவிர மற்றொன்று அவனை அடக்க நேராதாகையால் அஸ்த்ரமந்த்ரத்தை நினைத்துக் கொண்டே நடப்பாயாக. கார்யம் கெடாதிருக்கும்படி ப்ரயத்னஞ் செய்யவேண்டும். நான் உன்னை யுத்தத்திற்கு அனுப்ப நினைப்பது அவ்வளவாகச் சிறந்ததன்று. ஆனால் இப்புத்தி ராஜநீதி தர்மங்களுக்கும் அந்த தர்மங்களை அனுஷ்டிக்கிற க்ஷத்ரியனுக்கும் யுக்தமானதே. ஆகையால் உன்னை அனுப்புகின்றனன். சத்ருக்களை அழிப்பவனே! யுத்தத்தில் நானாவித ஆயுதங்களைக்கொண்டு யுத்தஞ் செய்யும் வல்லமையை அவஶ்யம் நீ நினைக்கவேண்டும். யுத்தத்தில் ஜயத்தை அவஶ்யம் விரும்பவேண்டும் அதற்காக அஸ்த்ரங்களை யெல்லாம் நினைவு மூட்டிக்கொள்ளவேண்டும்' என்றனன். அனந்தரம் தக்ஷஸுதர்களான தேவதைகளின் ப்ரபாவம்போன்ற ப்ரபாவமுடைய மஹாபலனும் வீரனுமாகிய அவ்விந்த்ரஜித்து தந்தை மொழிந்த வசனத்தைக் கேட்டு யுத்தத்திற்குப்போக நினைவு கொண்டு தந்தைக்கு ப்ரதக்ஷிணஞ் செய்தனன். அனந்தரம் இந்த்ரஜித்து தனக்கு ப்ரியர்களான அங்குள்ள தன் கூட்டத்தவர்களால் பூஜிக்கப்பட்டு யுத்தத்தில் கொழுப்புற்று மிகுந்த உத்ஸாஹத்தை ஏற்றுக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டனன். தாமரையிதழ் போன்ற கண்களுடையவனும் மஹா தேஜஸ்ஸுடன் ப்ரகாசிப்பவனும் மிகுந்த செல்வப் பெருக்குடையவனுமாகிய அந்த ராவணபுத்ரன் பர்வ காலத்து ஸமுத்ரம்போல் வளர்ந்து யுத்தத்திற்குப்

புறப்பட்டன. இந்த்ரனைப்போன்ற அவ்விந்த்ரஜித்து வேகத்தில் கருடனுக் கொப்பானவைகளும் ஒன்றுக் கொன்று பின்வாங்காமல் ஸமமான வேகமுடையவைகளும் வெளுத்த கூரான கோரைப்பற்களை யுடையவைகளுமாகிய நான்கு ஸிம்ஹங்கள் பூட்டப்பெற்றதும் தடையின்றி மஹாவேகத்துடன் போவதுமாகிய ரதத்தில் ஏறிக்கொண்டனன். ரதத்தில் நின்று சண்டை செய்பவர்களில் சிறந்தவனும் பெரிய வில்லாளியும் ஆயுதவித்யைகளில் கைதேர்ந்து அஸ்த்ரவேதிகளனைவரிலும் மேன்மையுற்றவனுமாகிய அவ்விந்த்ரஜித்து ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு சீக்ரமாக ஹநுமானிருக்குமிடஞ் சென்றனன். வீரனாகிய அந்த ஹநுமான் அவ்விந்த்ரஜித்தினுடைய ரத கோஷத்தையும் தநுஸ்ஸினுடைய நாண் சப்தத்தையும் கேட்டு மீளவும் யுத்தஞ்செய்ய நேர்ந்ததேயென்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனன். யுத்தத்தில் பேராற்றலுடைய இந்த்ரஜித்து மிகுதியும் பெரிய தநுஸ்ஸையும் கூரான ஆணிகளையுடைய பாணங்களையும் எடுத்துக் கொண்டு ஹநுமானைக் குறித்துப் போயினன். அனந்தரம் அவ்விந்த்ரஜித்து யுத்தத்தில் ஸந்தோஷம் உண்டாகப்பெற்று பாணங்களைக் கையில் கொண்டு யுத்தத்திற்குப் புறப்படுகையில், திசைகளெல்லாம் கலக்கமுற்றன; கொடிய ம்ருகங்களும் பலவாறாகக் கூச்சலிட்டன. அப்பொழுது அந்த யுத்தத்தைக் காணும்பொருட்டு அவ்விடத்திற்கு நாகர்களும் யக்ஷர்களும் மஹர்ஷிகளும் கூட்டங்கூடித் திரிகிற ஸித்தர்களும் வந்தனர். பக்ஷிகள் குவியல்கூடி ஆகாயத்தை மறைத்து மிகுந்த ஸந்தோஷத்துடன் உரக்கக் கூவின. வேகவானாகிய அந்த ஹநுமான் ரதத்திலேறி விரைந்து வருகின்ற இந்த்ரஜித்தைக் கண்டு பெருந்த்வனி உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்து சரீரத்தை வளர்த்திக்கொண்டனன். இந்த்ரஜித்து திவ்யமான ரதத்தின்மேலிருந்து விசித்ரமான தநுஸ்ஸைக்கொண்டு இடி இடித்தாற்போல் பயங்கரமான

சப்தம் உண்டாகும்படி ஒலிப்பித்தனன். அனந்தரம் மிகுதியும் க்ரூரமான வேகமுடையவர்களும் மஹாபல சாலிகளும் யுத்தத்தில் சிறிதும் பயப்படாதவருமாகிய அந்த ஹனுமானும் ராக்ஷஸகுமாரனாகிய இந்த்ர ஜித்தும், தேவேந்த்ரனும் அஸுரேந்த்ரனும் போல் ஒருவர்க்கொருவர் நிலைநின்ற வைரமுடையவர்களாகிச் சண்டை செய்யத் தலைப்பட்டனர். வீரனும் மஹாரதனும் நல்ல வில்லாளியும் யுத்தத்தில் மிகவும் புகழ் பெற்றவனுமாகிய அவ்விந்த்ரஜித்து பாணங்களைத் தொடுத்து வேகமாக ப்ரயோகிக்கையில், ஹனுமான் தேஹத்தைப் பெருகச்செய்துகொண்டு அந்த பாணங்களைத் தன்மேல் படவொட்டாமல் தடுத்து அவற்றின் வேகத்தை வீணாக்கி அளவிடக்கூடாததும் தன் தந்தை வாயுதேவன் ஸஞ்சரிக்கும் மார்க்கமுமாகிய ஆகாயத்தில் திரிந்தனன். அனந்தரம் வீரர்களான பகைவரையும் முடிக்கவல்ல வீரனாகிய அவ்விந்த்ர ஜித்து நீண்ட கூரான ஆணிகளுடையவைகளும் அழகிய இரகுகள் கட்டப்பெற்றவைகளும் விசித்ரமான பொற்பிடி யிடப்பெற்றவைகளும் நுனி மிகுதியும் வளையப்பெற்று வஜ்ராயுதத்தின் வேகம்போன்ற வேகமுடையவைகளுமாகிய பாணங்களை ஹனுமான்மேல் ப்ரயோகித்தனன். பிறகு அந்த ஹனுமான் அவ்விந்த்ர ஜித்தினுடைய ரதத்வனியையும் மத்தளம் துந்துபி தப்பட்டை முதலிய வாத்யங்களின் கோஷங்களையும் இழுக்கப்படுகிற தனுஸ்ஸினுடைய சப்தத்தையும் கேட்டு மீளவும் ஆகாயத்தில் கிளம்பினன். இந்த்ர ஜித்து லக்ஷ்யம் வைத்தடிப்பதில் ப்ரஸித்தனாயினும் ஹனுமான் மஹாகபியாகையால் அவன் வைத்தகுறி வீணாகும்படி அதிசீக்ரமாக அவனது பாணங்களின் இடையில் ஸஞ்சரித்தனன். வாயுகுமாரனாகிய ஹனுமான் அவ்விந்த்ரஜித்து ப்ரயோகிக்கும் பாணங்களுக்கு எதிரேநின்று அவன் ப்ரயோகித்தவுடனே திடீரென்று கைகளை விரித்து மீளவும் ஆகாயத்திற் கிளம்பினன். அவ்விருவரும் மிகுந்த வேகமுடையவர்;

யுத்தஞ் செய்வதில் கைதேர்ந்தவர். ஆகையால் ஸமஸ்த பூதங்களின் மனத்தையும் இழுக்கும்படி உத்தமமான யுத்தஞ் செய்தனர். ஹனுமானிடத்தில் அந்த இந்த்ர ஜித்துக்குச் சிறிது [1] ரந்த்ரமும் புலப்படவில்லை. ஹனுமானுக்கும் மஹானுபாவனாகிய அந்த இந்த்ர ஜித்தினிடத்தில் சிறிது ரந்த்ரமும் புலப்படவில்லை. அங்ஙனம் முயற்சிகொண்டு தேவதைகளைப்போல் மிகுதியும் பராக்ரமசாலிகளான அவ்விருவர்க்கும் ஒரு வரை ஒருவர் பொறுப்பது கஷ்டமாயிருந்தது. இந்த்ர ஜித்தோ குறிவைத்து பாணப்ரயோகஞ் செய்வதில் சிறிதும் மனவூக்கந்தவறமாட்டான்; எய்த பாணங்க ளும் அமோகமாயிருப்பவை; இங்ஙனம் அம்மஹானு பாவன் ஹனுமானைக் குறிவைத்து அப்படிப்பட்ட பாணங்கள் பலவற்றை ப்ரயோகித்துக்கொண்டிருப்பி னும் அவற்றினின்று அவன் தப்புவித்துக்கொள்வத னால் பாணங்கள் வீணாய் விழுவதைக் கண்டு மிகுதியுஞ் சிந்தையுற்றனன். அனந்தரம் ராக்ஷஸ ராஜனாகிய ராவணனது குமாரன் அவ்விந்த்ரஜித்து மஹாவீர னாகிய அந்தக் கபிவரனைக் கொல்லமுடியாதென்று தெரிந்துகொண்டு பிடித்துக்கொள்வதற்காவது அவன் எங்ஙனம் பிடிபடுவானென்று ஆலோத்து ஒரு பாயமூஹித்தனன். அப்பால் அஸ்த்ரங்களை அறிந்தவ ரனைவரிலும் சிறந்தவனும் மிகுந்த தேஜஸ்ஸுடைய வனுமாகிய அவ்வீரன் அந்த ஹனுமான்மேல் ப்ரஹ்மா ஸ்த்ரத்தைத் தொடுத்தனன். மஹாபாஹுவாகிய அவ்விந்த்ரஜித்து 'இவனைக் கொல்லமுடியாது' என்று தெரிந்துகொண்டு, பிறகு அந்தந்த அஸ்த்ரங்களின் ஸ்வரூபங்களை உணர்ந்தவனாகையால் அப்பொழு தைக்குத் தகுந்தது ப்ரஹ்மாஸ்த்ரமென்று அறிந்து அவ்வஸ்த்ரத்தை ப்ரயோகித்து வாயுபுத்ரனாகிய ஹனு மானைப் பந்தித்தனன் (கட்டினன்.) அனந்தரம் அந்த ஹனுமான் அவ்வரக்கன் ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்

---

1. ரந்த்ரம்—சந்து, அதாவது ஏமாறின ஸமயம்.



2322. ஹனுமான் ப்ரஹ்மாஸ்த்ரத்தால் கட்டுண்டது.

ரத்தால் கட்டுண்டு சேஷ்டையற்றவனாகித் தரை யில் வீழ்ந்தனன். பிறகு கபிவீரனாகிய அந்த ஹனு மான் தான் ப்ரஹ்மாஸ்த்ரத்தால் கட்டுண்டதை அறிந்து ப்ரபுவாகிய ப்ரஹ்மதேவனது ப்ரபாவத்தால் தன்வேகம் குறையப்பெற்று, பூர்வத்தில் தனக்கு ப்ரஹ்மதேவன் அனுக்ரஹித்த வரத்தை நினைத்துக் கொண்டனன். அதன் பிறகு ஹனுமான் தன்மேல் ஸ்வாயம்புவமந்த்ரங்களை அபிமந்த்ரித்து ப்ரஹ்மாஸ்த் ரம் ப்ரயோகித்தானென்று தெரிந்துகொண்டு ப்ரஹ்மதேவன் தனக்குப் பூர்வத்தில் வரங்கொடுத்த தையுஞ் சிந்தித்து 'லோககுருவாகிய ப்ரஹ்மதேவனது ப்ரபாவத்தினால் பாஹ்மாஸ்த்ர பந்தத்தை எனக்கு விடுவித்துக்கொள்ள சக்தியில்லையென்று நினைத்தே இங்ஙனம் என்னை ப்ரஹ்மாஸ்த்ரத்தால் கட்டினன். எது எப்படியாயினும் என் மர்யாதைக்கு நான் ப்ரஹ்ம தேவனது அஸ்த்ரபந்தத்தைச் சிறிது அனுஸரித் திருக்க வேண்டியதே என்று நிச்சயித்தனன். ஹனு மான் அங்ஙனம் ப்ரஹ்மாஸ்த்ரத்தின் வீர்யத்தை விசாரித்துத் தனக்கு முன்பு ப்ரஹ்மதேவன் முஹூர்த்த காலம் கடந்தவுடன் அவ்வஸ்த்ர பந்தம் விட்டுப்போகும்படி அனுக்ரஹித்திருந்த சக்தியையும் நன்காராய்ந்து ப்ரஹ்மதேவனது ஆஜ்ஞையை அனு ஸரித்துக் கட்டுண்டிருந்தனன். நான் ஸூர்யனை விழுங்கப் போனதுமுதல் என்னை ப்ரஹ்மதேவனும் தேவேந்த்ரனும் வாயுதேவனும் ரக்ஷித்துக்கொண் டிருப்பவராகையால் இவ்வஸ்த்ரத்தால் கட்டப்படினும் எனக்கு பயம் யாதும் உண்டாகாது. ஒரு கால் ராக்ஷ ஸர்கள் என்னைப் பிடித்துக்கொள்ளினும் எனக்கு அது பெரிய குணத்தில் வந்து முடியும். அது யாதெனில் எனக்கு ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணனோடு ஸம்பாஷிக்க நேரும். ஆகையால் என்னைப் பகைவர் பிடித்துக்கொள்ளினும் பிடித்துக்கொள்வார்களாக' என்று இங்ஙனம் சத்ரு வீரர்களை முடிக்கும் திறமை யுள்ள அவ்வானரவீரன் மனத்தில் கார்யத்தை நிச்ச

யித்துக்கொண்டு விசாரித்துச் செய்பவனுகையால் சேஷ்டைகள் அடங்கப்பெற்றுப் பகைவராகிய ராக்ஷஸர்கள் தன்னைப் பிடித்துக்கொண்டு பயத்தினுல் பலாத்காரமாக எதிரே வந்து அவரவர் பலவாறு விரட்டிக்கொண்டிருக்கையில் மிகுதியும் உரக்கக் கூச்சலிட்டனன். அனந்தரம் ராக்ஷஸர்கள், பகைவரை அடக்குந்திறமையுள்ள அந்த ஹனுமான் சேஷ்டைகள் குறையப்பெற்றிருப்பது கண்டு சணற்புரிகளையும் மரவுரிகளையும் சேர்த்துக் கயிருகத் திரித்து அவற்ருல் அவ்வானரனைக் கட்டினர். அவனும் 'ராக்ஷஸேந்த்ரனுகிய ராவணன் பெருங் குதூஹலத்தினுலாவது என்னைப் பார்க்க முயலாதிருக்கமாட்டான்' என்று நிச்சயித்துக்கொண்டு. வீரர்களான அந்தப் பகைவர் தன்னைக்கட்டுவதற்கும் பலாத்காரமாகப் பிடித்துக் கொள்வதற்கும் ஸம்மதித்திருந்தனன். ராக்ஷஸர்கள் அங்ஙனம் அவ்வீரனை நார்க்கயிறுகளால் கட்டுகையில் ப்ரஹ்மாஸ்த்ரம் அவனை விட்டுவிட்டது. ஏனெனில்— அந்த ப்ரஹ்மாஸ்த்ரபந்தம் மற்றென்ருல் கட்டுவதைப் பொறுக்காதல்லவா? ஆகையால் கயிறுகளால் கட்டப் பட்ட அவ்வானரன் அந்த ப்ரஹ்மாஸ்த்ரத்தினின்று விடுபட்டனன். அனந்தரம் வீரனுகிய இந்த்ரஜித்து வானரோத்தமனுகிய ஹனுமான் நார்க்கயிறுகளால் கட்டப்பட்டவுடனே ப்ரஹ்மாஸ்த்ரத்தினின்று விடு பட்டானென்று தெரிந்துகொண்டு 'மற்றென்ருல் கட்டப்பட்டவனிடம் ப்ரஹ்மாஸ்த்ரம் நிற்காதே; ஐயோ! பெரிய கார்யஞ் செய்தும் அது வீணுய் விட்டதே; மூர்க்கர்களான இவ்வரக்கர்கள் ப்ரஹ்மாஸ்த்ர மந்த்ரத்தின் பத்ததியை விசாரித்தவரல்லர். ப்ரஹ்மாஸ்த்ரம் அடிபட்ட பின்பு மற்றொரு அஸ்த்ரம் கார்யஞ்செய்ய வல்லதன்று. மீளவும் அந்த ப்ரஹ்மாஸ்த்ரத்தையே ப்ரயோகிப்பினும் உபயோகப்படாது. ஆகையால் நம்மெல்லோர்க்கும் பிழைப்பில் ஸந்தேஹம் உண்டாய் விட்டது' என்று சிந்தித்தனன். ஹனுமான் ப்ரஹ்மாஸ்த்ரத்தினுல் விடுபட்டபோதிலும் தன்னை

ராக்ஷஸர்கள் அந்தக் கயிறுகளால் கட்டிப் பிடித்து இழுத்துக்கொண்டு போகையில் அது தனக்கு ஸம்மதமாகையால் தான் அஸ்த்ரத்தினின்று விடுபட்டதைப் பாராட்டவில்லை. அப்பால் க்ரூரர்களான ராக்ஷஸர்கள் அந்தக் கபிவரனை மண் கட்டிகளால் அடிப்பதும் முட்டிகளால் குத்துவதுமாகி ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணனது ஸமீபத்திற்கு இழுத்துக்கொண்டு போயினர். அனந்தரம் இந்த்ரஜித்து மஹாபலனாகிய அவ்வானர மஹாவீரன் அஸ்த்ரக்கட்டினின்று விடுபட்டும் நார்க்கயிறுகளால் கண்டுண்டிருப்பதைக்கண்டு அவனை அந்த ராஜஸபையில் ராவணனுக்கும் அவனது ஸபையிலுள்ளவர்களுக்கும் இவனே அவ்வானரன் என்று காண்பித்தனன். ராக்ஷஸர்கள் மத்த யானை போல் கட்டுண்டிருக்கிற அந்த ஹநுமானைக் கொண்டு போய் ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணனுக்குக் காண்பித்தனர். அந்த ஸபையிலுள்ள ராக்ஷஸ வீரர்கள் “எவன் இவன்? யாருடையவன்? எவ்விடத்தவன்? இங்கு இவனுக்கு என்ன கார்யம்? யாரைப்பற்றி வந்தான்?” என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக் கொண்டனர். அப்பால் அங்குச் சில ராக்ஷஸர் மிகுதியும் கோபித்து ‘இவனைக் கொல்லுங்கள்; கொளுத்துங்கள்; பிடித்துத் தின்னுங்கள்’ என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டனர். அனந்தரம் மஹானுபாவனாகிய அந்த ஹநுமான் வேகமாக மார்க்கத்தைக் கடந்து ராக்ஷஸாதிபதியாகிய ராவணனது பாத மூலத்திலிருக்கிற மந்த்ரிவ்ருத்தர்களையும் உயர்ந்த ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸபாக்ருஹத்தையும் கண்டனன். மஹாதேஜஸ்வியாகிய அந்த ராவணன் விகாரமான உருவமுடைய ராக்ஷஸர்களால் இங்கும் அங்கும் இழுக்கப்பட்டு வருகின்ற வானரோத்தமனாகிய ஹநுமானைக் கண்டனன். அவ்வானரோத்தமனும், தேஜஸ்ஸும் பலமும் மிகுந்திருக்கப்பெற்று ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்ற ராக்ஷஸர் தலைவனான ராவணனைக் கண்டனன். அனந்தரம் அந்த ராவணன்

கோபத்தினால் சிவந்த கண்களைச் சுழற்றிக்கொண்டு அந்த ஹநுமானைக்கண்டு, அவன் ஸங்கதியை விசாரிக்கும்பொருட்டு அங்குக் குலசீலங்களால் முதிர்ந்து உட்கார்ந்திருக்கிற மந்த்ரி ஸத்தமர்களுக்குக் கட்டளையிட்டனன். அதன்மேல் அவர்களும் ஹநுமானைப் பார்த்து, செய்யவந்த கார்யம் என்னென்றும் அதற்காக அனுப்பினவர் எவரென்றும் க்ரமமாக வினவுகையில், அவ்வானரன், 'நான் வானரேச்வரனாகிய ஸுக்ரீவனுடைய தூதன். அவனால் அனுப்பப்பட்டு வந்தவன்' என்று தெரிவித்தனன். நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹநுமான் ராவணனைப் பார்த்து அவனது தேஜோவிசேஷத்திற்கு ஆச்சர்யப்படுதல்.

அனந்தரம் பயங்கர பராக்ரமனாகிய அந்த ஹநுமான் 'ராவணன் தனது ஸிம்ஹாஸனத்தினின்று அசையாமலேயிருந்து என்னை இவ்விடத்திற்குக் கட்டுவித்துக்கொண்டு வந்தானே' என்று அவனது கார்யத்திற்கு ஆச்சர்யப்பட்டுக் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று அந்த ராக்ஷஸாதிபதியைக் கண்டனன். அந்த ராவணன் பற்பல முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட மிகுதியும் விலையுயர்ந்த பொற்கிரீடந் தரித்து மிகவும் காந்தி விளங்கப்பெற்றிருந்தனன். அவன், வஜ்ர மணிகள் இழைக்கப்பெற்று மிகுதியும் விலை உயர்ந்த ரத்னங்கள் நிறைந்து ஸ்வர்ணத்தினால் செய்யப்பட்டு மனத்தினால் நிர்மிக்கப்பட்டவைபோல் மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்ற ஆபரணங்களால் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். மிகுந்த விலையுள்ள பட்டுவஸ்த்ரம் தரித்துச் சிவந்த சந்தனம் பூசிக்

கொண்டிருந்தனன். அன்றியும் அவன் விசித்ரங்களும் நானாவிதங்களுமான கஸ்தூரி முதலியவற்றின் ரசனைகள் வரிசை வரிசையாயிருக்கும்படி பூசிக்கொண்டிருந்தனன். அவ்வீரன், சிறிது திறந்தவாயுடையவைகளும் பார்க்க அழகாயிருப்பவைகளும் சிவந்த கண்களுடன் கூடிப் பயங்கரங்களுமாகிப் பெரிய கூரான கோரைப்பற்கள் பளபளவென்று விளங்கவும் உதடுகள் தொங்கவும்பெற்ற பத்துத்தலைகளோடு கூடிப் பலவகைக் கொடிய ம்ருகங்கள் நிறைந்த சிகரங்களோடு கூடின மந்த்ரபர்வதம் போன்று மிகுதியும் ஒளி விளங்கப்பெற்றிருந்தனன். பிளக்கப்பட்ட மைக்குவியல் போன்று மார்பில் பூர்ண சந்த்ரன்போல் துலங்குகின்ற நாயகரத்னமும் அதைச் சுற்றி முத்துக்களும் அமைக்கப்பெற்ற ஹாரத்துடன் ப்ரகாசிக்கின்ற அவ்வரக்கன் கொக்குகளோடுகூடின மேகம்போல் புலப்பட்டுக்கொண்டிருந்தனன். அவனது புஜங்கள் தோள்வளைகளோடும் கூடி மேலான சந்தனத்தினால் நிரம்பவும் பூசப்பட்டுக் கைவளைகளும் விளங்கப்பெற்றுப் பெருத்து ஐந்துதலைப் பாம்புகள்போல் ப்ரகாசித்தன. அவன், விசித்ரமாயிருப்பதும் ரத்னங்கள் இழைக்கப்பெற்றிருக்கையால் அழகியதும் மேலான கம்பளம் பரப்பப்பெற்றதும் பெரியதுமான மேலான ஸ்படிகமணி பீடத்தில் மிடுக்குடன் உட்கார்ந்திருந்தனன். மிகுதியும் நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு விளங்குகிற பெண்மணிகள் சாமரங்களைக் கைகளில் ஏந்தி அவனருகில் சுற்றிலும் சூழ்ந்து வீசிக்கொண்டிருந்தனர். மந்த்ராலோசனையின் உண்மையை நன்கறிந்தவர்களும் சிறந்த மந்த்ராலோசனை செய்பவர்களும் பலத்தினால் கொழுத்த ராக்ஷஸர்களுமாகிய துர்த்தரன் ப்ரஹஸ்தன் மஹாபார்ஶ்வன் நிகும்பன் என்னும் நான்கு மந்த்ரிகள் சூழப்பெற்று நான்கு ஸமுத்ரங்களால் சூழப்பட்ட அகண்ட பூமண்டலம் போன்று அவர்களோடு ஸுகஸல்லாபஞ் செய்துகொண்டு உட்கார்ந்திருந்தனன். மற்றும் அவன்,

மந்த்ராலோசனையை நன்கறிந்து நல்லபுத்தி ஸாமர்த்யம் பொருந்தி விளங்குவோர்களுமாகிய வேறு மந்த்ரிகள் பலரும் சூழப்பெற்று, தேவதைகளால் சூழப்பட்ட தேவேந்த்ரன்போல் புலப்பட்டனன். இங்ஙனம் கறுத்த தேஹத்துடன்கூடிப் பொற்சிங்காசனத்தில் உட்கார்ந்து மேரு சிகரத்தில் நீருடன்கூடின புதியமேகம் போல் மிகுந்த ஒளியுடன் ப்ரகாசிக்கின்ற ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணனை ஹநுமான் கண்டனன். அந்த ஹநுமான் பயங்கரமான பராக்ரமமுடைய ராக்ஷஸர்கள் தன்னை மிகுதியும் பிடித்துக்கொண்டிருப்பினும் அதைப் பொருள்செய்யாமல் ராக்ஷஸாதிபதியான ராவணனது அற்புதமான உருவத்தைக் கண்டு மிகுதியும் ஆச்சர்யம் அடைந்து அவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தனன். ஹநுமான் அங்ஙனம் பளபளவென்று ஜ்வலிக்கின்ற ராவணனைக் கண்டு அவனுடைய தேஜோவிசேஷத்திற்கு மனமயக்கமுற்று அனந்தரம் தனக்குள் 'ஆ! என்ன உருவம்! என்ன தைர்யம்! என்ன பலம்! என்ன காந்தி! ஆ! ஆ! இந்த ராக்ஷஸராஜனுக்கு ஸமஸ்த லக்ஷணங்களும் அமைந்திருக்கின்றன. அதர்மம் ப்ரபலமாயிராதாயின், இவன் ராக்ஷஸர்களுக்கு அதிபதியாகை மாத்ரமேயன்றி, தேவேந்த்ரனோடு கூடின தேவஸமூஹத்திற்கும் ரக்ஷகனாயிருப்பானே! இவன் பயங்கரமும் பிறர்க்கு த்ரோஹத்தை விளைவிப்பதும் லோகநிந்தைக்கிடமுமான துஷ்கர்மங்கள் பலவற்றைச் செய்திருக்கின்றனன்; அதுபற்றியே இவனைப் பார்த்து, தேவதைகள் தானவர் முதலிய ஸமஸ்த லோகத்தவர்களும் பயப்படுகின்றனர். இல்லையாயின் எல்லா லோகத்திலுள்ளவர்களும் இவனையே சூழ்ந்துகொண்டிருப்பார்கள். இவன் கோபமுறுவானாயின், ஜகத்தையெல்லாம் ஏகார்ணவமாக (ஒரே ஸமுத்ரமாகச்) செய்ய வல்லவன்' என்று சிந்தித்தனன். புத்தியிற்சிறந்த அந்த ஹநுமான் மஹாதேஜஸ்வியாகிய அந்த ராக்ஷஸராஜனது ப்ரபாவத்தைக் கண்டு இங்ஙனம் பலவாறு

சிந்தித்தனன். நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்

ஹநுமான் ராவணனோடு ஸம்பாஷித்தல்.

மஹாபாஹுவும் ஸமஸ்த லோகங்களையும் அழப் படுத்துபவனுமாகிய ராவணன் மிகுதியும் கோபம் மேலெழப்பெற்றுத் தன்னெதிரில் பொன்னிறமான கண்களுடையவனும் மிகுந்த ஒளிப்பெருக்குடன் விளங்குபவனுமாகிய வானரோத்தமனான ஹநு மானைக் கண்டு, தன் மனத்தில் சங்கை உண்டாகப் பெற்று 'முன்பு நான் கைலாஸ பர்வதத்தைப் பிடித்து அசைக்கும்பொழுது என்னைச் சபித்த பகவானாகிய அந்த நந்தியே நேரில் இவ்விடம் இவ்வுருவத்துடன் வந்தானோ என்ன? அல்லது, ஒருகால் மஹாஸுரனாகிய பாணனே இங்ஙனம் வானர உருவந் தரித்து வந்தானோ என்ன?' என்று சிந்தித்தனன். அனந்தரம் அந்த ராக்ஷஸ ராஜன் ராவணன் ரோஷத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று மந்த்ரி ஸ்ரேஷ்டனாகிய ப்ரஹஸ்தனைப் பார்த்து அக்காலத்திற்குத் தகுந்தபடி மிகுதியும் பொருளடங்கின வாக்யத்துடன் 'எங்கிருந்து வந்தனை? உன்னை என் பட்டணத்திற்கு அனுப்பினவன் எவன்? உனக்கு அசோகவனத்தை முறிக்கவேண்டிய கார்யம் என்? ராக்ஷஸ ஸ்த்ரீகளை ஏன் விரட்டினை?' என்று இந்த துர்புத்தியை வினவுவாயாக. 'எப்படிப்பட்ட வர்க்கும் புகக்கூடாத என் பட்டணம் வந்ததற்கு ப்ரயோஜனம் என்ன? எதுக்காக யுத்தஞ் செய்தனன்? இந்த துர்புத்தியை வினவுவாயாக' என்று மொழிந்த னன். ப்ரஹஸ்தன் ராவணன் மொழிந்த வார்த்தை யைக் கேட்டு ஹநுமானைப் பார்த்து 'வானரா! மனங் குதிரப்பெறுவாயாக. உனக்குச் சுபம் உண்டாகும். நீ

பயப்படவேண்டாம். இந்த ராவணாலயத்திற்கு உன்னை இந்த்ரன் அனுப்பினானா? உள்ளதை உள்ளபடியே சொல்வாயாக. பயப்படவேண்டாம். உன்னை விட்டு விடுகிறோம். குபேரனுக்கோ, அல்லது யமனுக்கோ, வருணனுக்கோ, சாரபுருஷனாகி இவ்வுருவந் தரித்து எமது பட்டணத்தில் புகுந்திருப்பாயாயின் உண்மையைச் சொல்வாயாக. விஷ்ணுதேவன் ராவணனை ஜயிக்க விரும்பி உன்னை இவ்விடம் தூதனுப்பினானா? எவர் அனுப்பியிருந்தாலும் ஒன்றுஞ் செய்கிறதில்லை. பயப்படாதே. நடந்ததை நடந்தபடியே மொழிவாயாக. உன்னுருவம் மாத்ரம் வானர உருவமேயன்றி உன் தேஜஸ்ஸோ வானரர்களுக்கு நேரக்கூடியதன்று. உள்ளபடி மொழிவாயாக. அதன் பிறகு உன்னை விட்டு விடுகிறோம். நீ அபத்தம் மொழிவாயாயின், உன் ப்ராணன்கள் தக்குவது அரிது. அங்ஙனம் எவரும் அனுப்பாமல் நீயே வந்திருப்பாயாயின், ராவணாலயமான இவ்விடத்திற்கு ஏன் வந்தனையோ, அதையாயினும் சொல்வாயாக' என்று வினவினன். இங்ஙனம் ப்ரஹஸ்தன் வினவுகையில், வானரோத்தமனாகிய அந்த ஹனுமான் அம்மந்த்ரியைப் பாராட்டாமல் ராக்ஷஸகணாதிபதியான ராவணனையே நோக்கி மொழிந்தனன்:- நான் தேவேந்த்ரனுக்காவது யமனுக்காவது வருணனுக்காவது சார புருஷனாகி வரவில்லை. எனக்குக் குபேரனோடு சிறிதும் ஸ்நேஹம் இல்லை. என்னை விஷ்ணுதேவனும் இவ்விடத்திற்கு அனுப்பவில்லை. நான் இங்ஙனம் வானரனாயிருக்கை எனக்கு இயற்கையான ஜாதியே. நான் வாஸ்தவமான வானரனாகவே இவ்விடம் வந்தேனன்றி வானர வேஷம் பூண்டு வந்தவனல்லேன். ராக்ஷஸேந்த்ரனாகிய உன் தர்சனம் துர்லபமாயிருப்பதைக்கண்டு ராக்ஷஸ ராஜனைப் பார்க்க விரும்பி இவ்வசோகவனிகையை நாசஞ் செய்தேன். அனந்தரம் பலிஷ்டர்களான ராக்ஷஸர்கள் என்னோடு யுத்தஞ் செய்யவிரும்பி என்னை எதிர்த்து வந்தனர். நான் என் தேஹத்தை ரக்ஷித்துக்கொள்ளும்

பொருட்டே அவர்களை எதிர்த்துப்போராடினேனன்றி மற்றொன்றும் இல்லை. என்னை தேவாஸுரர்களுக்குங் கூட எவ்வகை அஸ்த்ரத்தினாலும் எவ்வகைப் பாசத்தினாலும் பந்தனஞ் செய்யமுடியாது. உனக்குப்போல் எனக்கும் இவ்வரம் ப்ரஹ்மதேவனிடத்தினின்றே கிடைத்தது. ராக்ஷஸனாகிய உன்னைக் காணவேண்டுமென்னும் விருப்பத்தினாலேயே நான் இவ்வஸ்த்ரத்திற்குக் கட்டுண்டிருந்தேனன்றி வேறில்லை. இவ்வரக்கர் கட்டினவுடனே, ப்ரஹ்மாஸ்த்ரம் மற்றொரு பந்தத்தைப் பொறுக்காததாகையால் என்னை விட்டுவிட்டது. எனக்கு ஒரு ராஜகார்யம் உண்டு; அதற்காக உன்னிடத்தில் வந்தேன். மஹா தேஜஸ்வியாகிய ராமனுடைய தூதனென்று என்னை அறிவாயாக. ப்ரபூ! நான் உனக்கு ஹிதமான இவ்வார்த்தையைச் சொல்லுகிறேன்; இதை ஊக்கத்துடன் கேட்பாயாக' என்றனன். ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.



ஹநுமான் ராவணனுக்கு ஹிதோபதேசஞ்செய்தல்.

பலவானாகிய அவ்வானர ஸத்தமன் ஹநுமான் மஹாபலனாகிய அந்த ராவணனைப் பார்த்து மனவூக்கத்துடன் மிகுதியும் பொருளடங்கின வாக்யத்தை இங்ஙனம் மொழிந்தனன் :—'ஸுக்ரீவன் சில விஷயங்களைச் சொல்லி என்னை அநுப்புகையால் நான் நீ இருக்கிற இவ்விடத்திற்கு வந்தேன். ராக்ஷஸேச்வரா! உன் ப்ராதாவாகிய (ப்ராதாவைப்போல் ஹிதத்தை விரும்புபவனாகிய) வானராதிபதி ஸுக்ரீவன் உன் க்ஷேமத்தை வினவுகின்றனன். மஹாநுபாவனாகிய உனது உடன் பிறந்தவன் ஸுக்ரீவன், தர்மார்த்தங்கள் நிறைந்ததும் இஹபரங்களில் நன்மையை விளைப்பதுமாகிய இந்த

ஸமாசாரத்தை உனக்குச் சொல்லி அனுப்பினன்; இதைக் கேட்பாயாக. ரதகஜதுரகங்களோடு மிகுதியும் விளக்கமுற்ற தசரதனென்னும் மன்னவன் இருந்தனன். அவன் உலகங்கட்குத் தந்தைபோல் பந்துவாயிருப்பவன்; காந்தியில் தேவேந்த்ரனுக்கொப்பானவன். அவனுக்கு ப்ரியஞ்செய்யும் பெரியகுமாரனும் மஹாபுஜனும் ஸமர்த்தனும் மஹாதேஜஸ்வியுமாகிய ராமனென்பவன் தந்தையின் கட்டளைப்படி பட்டணத்தினின்று புறப்பட்டு, தர்மமார்க்கத்தை அவலம்பித்துத் தம்பியாகிய லக்ஷ்மணனோடும் பார்யையாகிய ஸீதையோடுங் கூடி, தண்டகாரண்யம் புகுந்தனன். வைதேஹனென்று ப்ரஸித்திபெற்ற மஹானுபாவனாகிய ஜனகராஜன் புதல்வியும் பதிவ்ரதையும் அந்த ராமனது பத்னியுமாகிய ஸீதை வனத்தில் காணாது போயினள். ராஜகுமாரனாகிய அந்த ராமன் தம்பியும் தானுமாக அந்த ஸீதாதேவியைத் தேடிக்கொண்டு ருஶ்யமூக பர்வதத்திற்கு வந்து ஸுக்ரீவனோடு சேர்ந்தனன். அந்த ஸுக்ரீவன் ராமனுக்கு ஸீதையைத் தேடிக் கொடுப்பதாக ப்ரதிஜ்ஞை செய்தனன். ராமனும் அதற்குப் பதிலாக ஸுக்ரீவனுக்கு வானர ராஜ்யத்தில் பட்டங்கட்டுவிக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்தனன். அனந்தரம் அந்த ராஜகுமாரன் ராமன் யுத்தத்தில் வாலியைக் கொன்று ஸுக்ரீவனை வானர [1] பல்லூகாதிபதியாக அந்த ராஜ்யத்தில் ஸ்தாபித்தனன். வானரோத்தமனாகிய வாலி எப்படிப்பட்டவனோ அது உனக்கு முன்னமே தெரிந்திருக்கிறதல்லவா? அப்படிப்பட்ட வாலியை ராமன் யுத்தத்தில் ஒரேபாணத்தினால் கொன்றனன். வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் ப்ரதிஜ்ஞை தவறாதவனாகையால் ஸீதையைத் தேடுவதிலேயே மனவிருப்பமுற்று, எல்லாத் திசைகளுக்கும் வானரர்களை அனுப்பினன். வானரர்கள் பற்பல ஆயிரம் நூறு பதினாயிரம் கணக்காகப் போய் எல்லாத்திசைகளி

1. பல்லூகம்—காடு.

லும் பாதாளத்திலும் பூமியிலும் ஆகாயத்திலும் அவளைத் தேடுகின்றனர். அவர்களில் சில மஹாபல சாலிகளான வானரவீரர்கள் தடையின்றி வெகுவேக மாகப் பூமியைத் தொடாமலே கமனஞ்செய்ய வல்லவ ராகையால் கருடனை நிகர்த்திருப்பர்; மற்றுஞ் சிலர் வாயுவுக் கொப்பாயிருப்பர். நான் வாயுதேவனுக்கு ஔரஸபுத்ரன். நான் ஹனுமானென்னும் பேருடைய வன். நான் ஸீதை நிமித்தமாகவே நூறுயோஜனை விஸ்தாரமுடைய ஸமுத்ரத்தைத் தாண்டி அவளைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்துடன் இவ்விடத் திற்கு வந்தனன். நான் ஜனகராஜன் புதல்வியாகிய அந்த ஸீதையை இங்குத் தேடிக்கொண்டு திரிகையில் அவள் எனக்கு உன் க்ருஹத்தில் புலப்பட்டனள். அங்ஙனம் விஷயம் இருக்கின்றது. நீயோ சாஸ்த்ரங் களைப் பார்த்து நன்கு தர்மார்த்த ஸ்வரூபங்களை உணர்ந்திருப்பவன்; தவத்தில் முயற்சி செய்தவன்; தவமே உன்னைக் கைப்பற்றியதெனத்தகுந்தவன்; மிகுதியும் ப்ராஜ்ஞன். இப்படிப்பட்ட நீ பரஸ்த்ரீகளை இங்ஙனம் சிறைவைப்பது எள்ளளவும் யுக்தமன்று. பரதாரங்களை அபஹரிக்கும் கார்யங்கள் மிகுதியும் தர்மவிருத்தமாயிருப்பவை. 'தர்ம விருத்தங்களாயி னும் ஸுகத்தை விளைக்குமாயின் போதும்' என்கி றுயோ? ஸுகத்தை விளைக்காமல் பல அபாயங்களையே விளைவிக்கும். 'அபாயங்களுக்குப் பரிஹாரஞ் செய்து கொள்ளலாம்' என்கிறுயோ? வேரோடு நாசஞ்செய்கிற இப்படிப்பட்ட கார்யங்களை உன்னைப்போன்ற புத்தி சாலிகள் செய்ய முயற்சிகொள்ளார்களல்லவா? 'எல்லா வற்றையும் வேரோடு நாசஞ்செய்கிற என்னையும் வேரோடு நாசஞ்செய்பவன் எவன்' என்கிறுயோ? ராமன் கோபித்துக்கொள்கையில் அது கண்டு லக்ஷ்மணன் தானும் கோபமுற்று ப்ரயோகிக்கும் பாணங்களின் முன்பு நிற்க வல்லவன் தேவர்களிலாவது அஸுரர்களிலாவது எவன் இருக்கின்றனன்? ராக்ஷஸ ராஜனே! ராமனுக்கு அப்ரியஞ்செய்து ஸுகம் பெற

விரும்புமவன் மூன்று லோகங்களில் ஒருவனும் அகப் படான். இங்ஙனம் நீ செய்தகார்யம் மிகுதியும் அதர்மமா யிருக்கையால் ஸுக்ரீவன் உனக்கு இவ்வார்த்தை யைச் சொல்லியனுப்பினன். இதன்படி நடப்பாயாயின், உனக்கு இது ஸீதையைச் சிறைவைத்த பூர்வபாராதத் தையும் தொலைத்து இப்பொழுது ஐஶ்வர்யத்தையும் நிலைநிறுத்தி இனிமேலும் ஸுகத்தைக் கொடுக்கு மாகையால் உனக்கு வருங்காலம் நிகழ்காலம் கழிகால மாகிய மூன்று காலங்களிலும் மேன்மையை விளைவிப்ப தாகும்; தர்மத்திற்கு அநுகுணமாயிருப்பதும், புரு ஷார்த்தங்களைக் கொடுக்கவல்லதும்; என்று நினைப்பா யாக. அங்ஙனம் நினைத்து ராமனுக்கு ஸீதையைக் கொடுப்பாயாக. 'ஸீதையை நான் அபஹரித்துக் கொண்டு வந்தேனென்று எப்படி சொல்லவல்லனுவாய்' என்கிறுயோ? நான் இந்த ஸீதாதேவியை என் கண்ணுரக் கண்டனன். ஸீதையைத் தேடவந்த வான ரர்களனைவர்க்கும் துர்லபமாயிருந்த ஸீதையின் தர்ச னம் எனக்கு இவ்விடத்தில் கிடைத்தது. 'அப்படியா யின், அவளைக் கொண்டுபோகலாகாதா' என்கிறுயோ? இனி மிகுந்திருக்கிற மேற்பட்ட கார்யத்திற்கு ராமனே ப்ரமாணம். அதை எனக்கு ஆஜ்ஞாபிக்கவில்லை. 'நீ ஸீதையைக் கண்டாயாயினும், என் வசத்திலிருக்கிற ஸீதையை ராமன் எப்படி கொண்டுபோவான்' என்கி றுயோ? ஸீதை இவ்வளவவ்வளவென்ன முடியாத துக்கத்திலாழ்ந்திருக்கின்றனள்; நான் இவளைக் கண்டனன். நீ ஸீதையைக் கொண்டுவந்து உன் வசத் தில் வைத்துக்கொண்டிருப்பதாக நினைத்துக்கொண் டிருக்கிறுய். இவ்வளவேயன்றி உன் ப்ராணன்களைத் தின்னும்படியான ஐந்து தலைப்பாம்பைக்கொண்டு வந்ததாக அறியாதிருக்கின்றனை. மிகுதியும் விஷங் கலந்த அன்னத்தை எவ்வளவு ஜாடராக்னி தீபனத்தி னுலும் ஜரிப்பித்துக்கொள்ள முடியாததுபோல், இந்த ஸீதையைத் தேவதைகளாயினும் அஸுரர்களாயி னும் எவ்வளவு ப்ரதாபத்தினுலும் ஜரிப்பித்துக்

கொள்ள வல்லரல்லர். நீ எவ்வளவோ கஷ்டப்பட்டுத் தவஞ்செய்து ஸம்பாதித்த தர்மங்களுக்கெல்லாம் பலமாக இங்ஙனம் தீர்க்காயுஸ்ஸைப் பெற்றிருக்கின்றனை, நீ இதை நாசஞ்செய்துகொள்வது ந்யாயமன்று. 'நான் பிறரால் வதிக்கமுடியாதவனல்லவா! என்னுயுஸுக்கு நாசம் எப்படி?' என்கிருயோ! நீ பல தவங்களைச்செய்து தேவதைகளாலாவது, அஸுரர்களாலாவது வதிக்கக்கூடாதவனுயிருக்கிறேமென்று எண்ணுகின்றனை. நீ அங்ஙனம் [1] அவத்யனுயிருப்பினும் உன்னை வதிப்பதற்குப் பரிஹரிக்க முடியாத பெரிய காரணமொன்றிருக்கின்றது. அந்தக் காரணம் மற்றொன்றும் அன்று; ஸுக்ரீவனே. இவன் தேவதையுமல்லன்; அஸுரனுமல்லன்; ராக்ஷஸனுமல்லன்; தானவனுமல்லன். இங்ஙனம் எவரெவரால் மரணம் நேராதிருக்கும்படி வரம் பெற்றனையோ, அவர்களில் [2] எவனுமல்லன். ஆகையால் ராக்ஷஸராஜனே! அந்த ஸுக்ரீவன் கையால் சாகாமல் நீ ப்ராணன்களை எங்ஙனம் மிகுத்திக்கொள்ளப்போகின்றனை? [3] இவ்வுபதேசங்கள் எதுக்காக? நான் பாபங்களைச் செய்தனன். அவற்றிற்குப் பலன்கள் உண்டாகாமற் போகா. அவற்றை நான் அனுபவித்தே தீரவேண்டும். ஆதலின், இனி, தர்மசிந்தையால் எனக்கு என்ன உபயோகம்? இனி நான்

---

1. அவத்யன்—வதிக்கக்கூடாதவன்.

2. ராவணன் தேவாஸுரயக்ஷ பன்னகாதிகளால் சாவில்லாதிருக்கும்படி ப்ரஹ்மாவிடம் வரம் பெற்றுனன்றி மனுஷ்யாதிகள் மிகுதியும் ஹீனர்களாகையால் அவர்களால் சாவில்லாமையை வேண்டவில்லை. ஸுக்ரீவன், எவரால் ராவணன் சாவில்லாமையை வேண்டவில்லையோ அப்படிப்பட்ட மனுஷ்யாதிகளிற் சேர்ந்தவனுகையால் ராவணனை வதிக்கக்கூடுமென்று சொல்வதாகத் தெரிகிறது.

1. இங்கு 'நது யர்மோபஸம்ஹாரமயர்மஃலஸம்ஹிதம்। தஷேவ ஃலமந்வேதி யர்மஶ்சாயர்மநாஶநঃ॥ ப்ராப்தம் யர்மஃலம்

தர்மம் செய்யினும் அதையும் முன்பு செய்த அதர்மம் பாழ்செய்து தலையெடுக்குமல்லவா' என்கிறாயோ? தர்ம பலன் எப்பொழுதும் அதர்மபலத்தினால் கழியாது.

தாவந்ந ஹவதா நாத்ர ஸம்ஶய:। ஃபலமஸ்யாப்ய யர்மஸ்ய க்ஷிப்ரமேவ ப்ரபத்ஸ்யஸே' என்று மூலம். இதற்கு மற்றொருபொருள்—முன்பு நான் ஸம்பாதித்திருக்கும் பெரிய தர்மம் என்னைப் பாதுகாக் காதா? ரோகமும் ராஜ்யமும் ஒன்றாக நேருவதுபோல தர்மபல னும் அதர்மபலனும் ஒன்றாகக் கலந்து அனுபவத்திற்கு வருவ துண்டாகையால் அதர்ம பலத்தினால் ஆத்மநாசம் உண்டாயினும் கலந்துவரும் தர்மத்தினால் ஆத்ம ரக்ஷணமும் உண்டாகக்கூடும். அல்லது—அதர்மத்தை அழித்து, தர்மபலனே அனுபவத்திற்கு வரக்கூடும்—என்னும் இரண்டு விகல்பங்களை எடுத்து அவற்றில் முதல் விகல்பம் ஸம்பவிக்காதென்கிறான். (ந து யர்மோபஸம்ஹார மயர்மஃபலஸம்ஹிதம்) தர்மபலனாகிய ஸுகம் அதர்ம பலத் துடன் கலந்து வராது. அதர்மபலத்துடன் கலந்து ஒரே காலத் தில் அனுபவத்திற்கு வராதென்கை. உன்னுடைய கொடுந்தவ மாகிய தர்மத்திற்கும் நீ செய்த பரதாராபஹாரணமாகிற அதர்மத் திற்கும் பலன்களாகிய வத்யத்வ அவத்யத்வங்களாகிற சாவும் சாவின்மையும் ஒன்றாகக் கலந்து வருவது விருத்தமாகையால் ரோகமும் ராஜ்யமும்போல் ஒன்றாகக் கலந்து அனுபவத்திற்கு வரமாட்டா. அதர்மத்தினால் ஆத்மநாசம் உண்டாயினும் அத் தோடு தர்மமும் கலந்துவருகையால் ஆத்ம ரக்ஷணமும் ஸம்பவிக்கு மென்று சங்கிக்கவேண்டாமென்றுகருத்து. இரண்டாவது விகல்ப மும் நேராதென்கிறான்—(ததேவ ஃபலமந்வேதி யர்மோநாயர்ம நாஶந:) தர்மம் தர்மபலத்தையே பின்செல்லுமன்றி அதர் மத்தை நாசஞ்செய்யாது. தர்மபலன் தர்மத்தோடு கூடவே இருக்குமன்றி அதர்மத்தைக் கெடுத்துத் தான் அனுபவத்திற்கு வராதென்று கருத்து. அல்லது—எவரால் நான் சாவில்லாமையை வேண்டவில்லையோ, அவரிடத்தினின்று நான் ஸம்பாதித்தபுண்ய ஸமூஹம் என்னை ரக்ஷிக்காதாவென்று ராவணன் சங்கிக்க, அப்படி யாயின் அதே ந்யாயத்தினால் நீ செய்த பாபஸமூஹமும் உன்னை நசிக்கச் செய்யுமென்கிறான். . . (ந து யர்மோபஸம்ஹாரம் ...

அது தர்ம பலத்தையே பின் செல்லும்.¶ ஆயினும் செய்த அதர்மம் இருக்கையில், அதன் பலன் அனுபவி யாமல் கழிவதெப்படி?' என்கிருயோ? தர்மம் அதர்மத் தையும் நாசஞ் செய்யுமாகையால் அது நிற்காது. 'அதர்மமும் அப்படியே தர்மத்தை நாசஞ் செய்யாதா? என்கிருயோ? தர்மமே அதர்மத்தை நாசஞ் செய்யு மன்றி அதர்மம் தர்மத்தை நாசஞ்செய்யாது; ஆகை யால் தர்மத்தையே ஆசரிப்பாயாயின், உன் பாபகர் மங்களெல்லாம் நசித்துப்போம். 'முதல் செய்த தர்மமே இப்பொழுது அதர்மத்தையெல்லாம் தொலைக்காதா' என்னவேண்டாம். நீ செய்த தர்மத்தின் பலனையெல் லாம் அனுபவித்தாய் விட்டது; ஆகையால் உன் தர்ம மெல்லாம் மிகுதியில்லாமல் தீர்ந்துபோயிற்று. இதற்கு ஸந்தேஹமில்லை. ஆகையால் ஸீதையை அபஹரித்த அதர்மத்தைத் தொலைக்கவல்ல தர்மம் உன்னிடத்தில் இல்லை. ஆகையால் இந்த அதர்மத்திற்குத் தகுந்த பலத்தையுங்கூட இனிச் சீக்ரத்திலேயே அனுபவிக்கப் போகின்றனை. தர்மத்தை விரும்பாதிருப்பின் இருப்பா யாக; ஸமீபித்திருக்கும் கார்யத்தைக் காண்பாயாக. ராமன் கேவல மனுஷ்யனென்று நினைக்கவேண்டாம்.

---

¶ (தர்மஸ்சா தர்மநாஸந:) தர்மபலமாகிய ஸுகம் அதர்மபலமாகிய துக்கத்தோடு கலப்பதன்று. அது ஸுகத்தையே தொடரும். அப்படியே அதர்மபலமாகிய துக்கமும் தர்மபலத்துடன் கூடாது. துக்கத்தையே தொடரும். தர்மம் அதர்மத்தை நாசஞ்செய்யாதா? என்னில்—அதில்லை யென்கிறுன். (தர்மஸ்சாதர்மநாஸந:) முன் செய்த தர்மம் இப்பொழுதுள்ள அதர்மத்தை நாசஞ்செய்யாது. அங்ஙனமே அதர்மமும் தர்மத்தை நாசஞ் செய்யாது. தர்மா தர்மங்கள் அனுபவித்தே நசிக்கவேண்டியவை. ஆயினும் பெரிய புண்ய பலன் அனுபவித்துத் தீர்ந்தபின்பு அதர்மபலன் அனுபவத் திற்கு வருமாக—என்ன (ப்ராப்தம்—ப்ராப்ஸ்யஸே) என்கிறுன். தர்மபலனெல்லாம் பூர்ணமாக அனுபவித்தாய் விட்டது. இனி ஸீதையை அபஹரித்த அதர்மத்தின் பலனையே த்வரையில் அனுபவிக்கப்போகிருய்! என்று மஹேஸ்வரதீர்த்தர்.

ராமனொருவனே ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களை யெல்லாம் கொன்றதையும், ஒரு பாணத்தினாலேயே வாலியைக் கொன்றதையும், ராமனும் ஸுக்ரீவனும் ஸ்னேஹஞ் செய்து கொண்டதையும் விசாரித்து உனக்கு எது ஹிதமோ, அதைத் தெரிந்துகொள்வாயாக. நானொருவனே குதிரைகளும் தேர்களும் யானைகளும் நிறைந்திருக்கிற இவ்விலங்கை முழுவதையும் நாசஞ்செய்ய வல்லவன். ஆனால், இது ராமனுக்கு ஸம்மதமன்று. ஸீதையை இங்ஙனம் திரஸ்கரித்த பகைவரையெல்லாம் தானே வதிப்பதாக, ராமன் வானரர்களும் பல்லூகர்களும் நிறைந்த கூட்டத்தின் முன்னிலையில் ப்ரதிஜ்ஞை செய்திருக்கின்றனன். ஒன்றுமன இந்த்ரனுங்கூட ராமனுக்கு அபராதஞ் செய்து சிறிதும் ஸுகத்தைப் பெறவல்லனல்லன்; இனி உன்னைப்போன்றவன் ஸங்கதியைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? நீ எவளை ஸீதையென்றிவ்வளவுமாத்ரம் நினைத்திருக்கிறாயோ, எவள் இதோ உன்வசத்தில் இருக்கின்றாளோ, அவள் இவ்விலங்கை யெல்லாவற்றையும் நாசஞ்செய்யவல்ல காளராத்ரி யென்றுணர்வாயாக. அப்படியிருக்கையால், ஸீதையென்னு முருவத்துடனிருக்கிற இந்தக் காலபாசத்தை நீயே கழுத்தில் போகட்டுக்கொண்டது போதும்; இனி உனக்கு ஹிதம் எதுவோ அதை ஆலோசிப்பாயாக. இப்பட்டணம் இவ்வளவிலேயே ஸீதையின் தேஜஸ்ஸினால் தஹிக்கப்பட்டிருக்கின்றது; இனி ராமனது கோபமும் பிடித்து நலுக்குகையில், அட்டங்களோடும், (கடைத்தெருக்களோடும்) மற்றை வீதிகளோடுங்கூடி நீறாகப்போகின்றது; காண்பாய். உனது நண்பர்களையும் மந்த்ரிகளையும் தாயாதிகளையும் உடன்பிறந்தவர்களையும் புதல்வர்களையும் ஹிதமுரைப்பவர்களையும் போகங்களையும் பார்யைகளையும் லங்கையையும் நாசஞ்செய்யாதிருப்பாயாக. ராக்ஷஸ ராஜேந்த்ரனே! நான் ராமனுக்குத் தாஸனாகையால் ராமனது ப்ரபாவத்தை நன்றாக அறிவேன். ராஜதூதனாகையால்

உனக்கு ஹிதத்தை நான் அவஶ்யம்
அதிலும் நான் ராக்ஷஸனுமல்லேன்; மனுஷ்யனுமல்லேன். வானரனுகையால் மத்யஸ்தனுயிருப்பதுபற்றிப் பக்ஷபாதமில்லாமல் சொல்வேன். ஆகையால் என் வார்த்தையை விசேஷித்துக் கேட்பாயாக. நான் சொல்வது தப்பாது. மஹாயசஸ்வியாகிய அந்த ராமன் பஞ்ச மஹா பூதங்களோடும் ஜங்கமஸ்தாவரங்களோடுங்கூட ஸமஸ்த லோகங்களையும் (ப்ரளய காலத்தில் ருத்ரன்மூலமாகத் தானே) ஸம்ஹரித்து மீளவும் (கல்பாதியில்) அவற்றை யதாப்ரகாரம் ஸ்ருஷ்டிக்கவல்லவன். ராமன் விஷ்ணுதேவனுக்கொப்பான பராக்ரமஶீலனுகையால் அவனோடு யுத்தஞ் செய்யவல்லவன் தேவதைகளிலும் அஸுரர்களிலும் நரேந்த்ரர்களிலும் யக்ஷர்களிலும் ராக்ஷஸக்கூட்டங்களிலும் ஸமஸ்தமான வித்யாதரர்களிலும் கந்தர்வர்களிலும், உரகர்களிலும் ஸித்தர்களிலும் கின்னரஶ்ரேஷ்டர்களிலும் எல்லாப் பக்ஷிகளிலும் எந்த ப்ராணிகளிலும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் அகப்படான். ஸமஸ்த லோகாதிபதியும் ராஜஸிம்ஹனுமாகிய ராமனுக்கு இவ்வளவு பெரிய அப்ரியத்தைச் செய்தனை; இனி உனக்கு ப்ராணன்கள் தக்குவது அரிது. ராக்ஷஸேந்த்ரனே! தேவதைகளும் தைத்யர்களும் கந்தர்வர்களும் வித்யாதரர்களும் நாகர்களும், யக்ஷர்களும் ஆகிய அனைவரும் யுத்தங்களில், மூன்று லோகங்களுக்கும் நாயகனுகிய ராமனுக்கு எதிரில் நிற்கவல்லரல்லர். ஸாமான்ய தேவதைகளே அன்று, [1]'சிறந்த ஐஶ்வர்யத்தினுல் த்ரிலோகாதி

---

1. இங்கு 'ப்ரஹ்மா ஸ்வயம்பூஶ் சதுராநநோ வா ருத்ரஸ் த்ரிநேத்ரஸ் த்ரிபுராந்தகோ வா। இந்த்ரோ மஹேந்த்ரஸ் ஸுரநாயகோ வா த்ராதும் ந ஶக்தா யுதி ராமவத்யம்' என்று மூலம். அந்தந்த தேவதைகளின் தாரதம்யங்களை அனுஸரித்து இங்கு யோஜனை கொள்ளவேண்டுமாகையால் முதலில் இந்த்ரனை எடுத்துக்கொள்ளவேண்டும். (இந்த்ர:) 'இதி பரமைஶ்வர்யே'

பதியாகி வ்ருத்ராஸுரனைக் கொன்றமையால்

என்னும் தாதுவினர்த்தத்தைப்பற்றி மிகுந்த ஐஶ்வர்யமுடையவ னென்று பொருள். த்ரிலோகாதிபதியா யிருப்பவனென்கை. அவனும் ரக்ஷிக்க வல்லவனல்லன். த்ரிலோகாதிபதியாயினும் பிறரை வெல்லும் வல்லமை இல்லாதிருக்கக்கூடுமாகையால் அசக்தனுகக்கூடாதோ என்னில்—(மஹேந்த்ர:) 'யோவஜ்ர மவஷீத் தந்மஹேந்த்ரஸ்ய மஹேந்த்ரத்வம்' என்கிறபடியே வ்ருத்ராஸுரனைக் கொன்றதனுல் மஹேந்த்ரனென்று பேர் பெற்றவன். வ்ருத்ராஸுரனை ஸம்ஹாரஞ் செய்தமையால் ப்ரஸித்தமான ஸாமர்த்யமுடையவன். தான் ஸமர்த்தனுயினும் ஸஹாய ஸம்பத்தில்லாமையால் அசக்தனுகலாமென்னில்—(ஸுரநாயக:) தன்னேடொத்த முப்பத்து முக்கோடி தேவதை களும் ஸஹாயமாயிருக்கப்பெற்றும் வல்லவனுகமாட்டான். இந்த்ரன் அல்பனுகையால் வல்லமை யற்றிருக்கட்டும்; ஸர்வ ஸம்ஹாரகனுன ருத்ரன் வல்லனுகமாட்டானே? என்ன (ருத்ர:) ஸம்ஹாரகாலத்தில் ப்ரஜைகளை அழப்படுத்துமவனுகையால் ருத்ரன். அந்தக் காலவிசேஷம் வந்தபொழுதே ஸம்ஹரிப்பா னன்றி இப்பொழுது அந்தக் காலம் நேராமையால் அசக்தனே பாவானென்ன (த்ரிநேத்ர:) நெற்றிக்கண் நெருப்பினுல் மன் மதனை உருமாய்த்தவன். காகதாளீயமாக மன்மதனைக் கொன் றிருக்கலாமாகையால் இவ்வளவிலே வல்லவனுகக்கூடுமோ என்ன —(த்ரிபுராந்தக:) மிகுதியும் ப்ரபலர்களான மஹாஸுரர்களை ஸம்ஹரித்தவன். அப்படிப்பட்ட ருத்ரனும் சக்தனுகமாட்டான். சிவனுக்குச் சக்தி யில்லாமற்போனுல் போகட்டும் 'ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய' என்கிறபடியே சிவனுக்குத் தந்தையாகிப் ப்ரஹ்மாவாயினும் சக்தனுகமாட்டானு என்ன (ப்ரஹ்மா) ருத்ரனுக்குத் தந்தையாயினும் கர்மவஶ்யனுகையால் எப்படி வல்லவனுவானென்னில் — (ஸ்வயம்பூ:) கர்மவஶ்ய னுயினும் மற்றவரைப்போல் பிறந்தவனல்லன்; தானுகவே பிறந்தவன். இப்படிப்பட்டவனுயினும் ஸஹாயஸம்பத்தி யில்லாமையால் எப்படி வல்லவனுவானென்னில் — (சதுரானந:) ஒரே ஸமயத்தில் நான்கு வேதங்களையும்

எங்கும் ப்ரஸித்தமான ஸாமர்த்ய முடையவனும் மஹேந்த்ரனென்னும் பேர்பெற்று ஸகல தேவ கணங்களும் ஸஹாயமாயிருக்கப்பெற்றவனுமாகிய இந்த்ரனையினும், ஸம்ஹாரகாலத்தில் ப்ரஜைகளை அழுவூட்டுகையால் ருத்ரனென்னும் பேர்பெற்று மூன்றாவதான நெற்றிக்கண்ணால் மன்மதனைக் கொளுத்தி த்ரிபுர ஸம்ஹாரஞ் செய்த சிவனையினும், சிவனுக்குத் தந்தையும் மற்றவரைப்போல் பிறக்கையின்றித் தானே பிறந்த ஸ்வதந்த்ரனும் ஒரே காலத்தில் நான்கு வேதங்களையும் உச்சரிக்கின்ற நான்கு முகங்களால் மிகுதியும்

---

உச்சரிக்கையால் வந்த பெருமை யுடையவன். மற்றை ஸஹாயமில்லாமற்போயினும் இங்ஙனம் வேதாத்யனமாகிய பெரிய தர்மத்தினால் எல்லாவற்றையும் அனாயாஸமாக நிறைவேற்ற வல்லவன். இப்படிப்பட்டவனும் ஸமர்த்தனாகமாட்டான். இந்த்ராதிகள் தனித்தனியே வல்லராகாமற்போயினும், எல்லோரும் ஒன்று சேர்ந்து ரக்ஷிக்க வல்லராகமாட்டார்களோ? என்ன. (நஸக்தா:) வல்லராகமாட்டார்கள். (ராமவத்யம்) ராமனுக்கு வதிக்கத்தகுந்தவனை. (த்ராதும் நஸக்தா:) ரக்ஷிக்கவல்லராகமாட்டார்கள். (யுதி) யுத்தத்தில் ரக்ஷிக்கவல்லரல்லரேயன்றி ராமனைச்சரணம் புகுவார்களாயின் ரக்ஷிக்கவல்லவரே யென்று கருத்து. இதில் 'ஹிரண்யகர்ப்ப ஸமவர்த்ததாக்ரே' (முன்பு ஹிரண்யகர்ப்பன் உண்டானான்) 'நஸந்நசாஸச்சிவ ஏவ கேவல:' (சிவனொருவனைத்தவிர இல்லதுமுள்ளதுமாகிய மற்றபதார்த்தங்களொன்றுமேயில்லை) 'இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே' (அளவிடமுடியாத ஸ்வரூபமுடைய இந்த்ரன் மாயையால் அடையப்படுகிறான்) என்ற ஸ்ருதி வாக்யங்களில் பரதேவதை யென்கிற சங்கைக்கிடமான பிரமன் சிவன் இந்த்ரன் ஆகிய மூவரைக்காட்டிலும் மேற்பட்டவனென்று சொல்லப்பட்டது. (ராம) என்கையால் வேதாந்தங்களில் ஆங்காங்கு (ஸத்-ப்ரஹ்ம-ஆத்ம) முதலிய ஸாமான்ய ஸப்தங்களாலும் (ஹிரண்யகர்ப-ஸிவ-இந்த்ர) முதலிய விசேஷ ஸப்தங்களாலும் சொல்லப்படுகிற வஸ்து ராமனே என்றமை தோற்றுவிக்கப்பட்டது.

பெருமை பெற்றவனுமாகிய ப்ரஹ்மதேவனுயினும் இவர்களெல்லோரும் ஒன்றுகூடியாயினும் யுத்தத்தில் ராமனுல் வத்யனுயிருப்பவனை எள்ளளவும் பாதுகாக்க வல்லரல்லர்' என்றனன். நிகரற்றவனுகிய அந்த ராவணன், ஹனுமான் தைன்யமில்லாமல் மிடுக்குடன் பேசுந் தன்மையனுகையால் சிறிதும் பிசகின்றி ஸௌஷ்டவத்துடன் மொழிந்த அம்மொழி, தனக்கு அப்ரியமா யிருந்தமையால் கோபாவேசமுற்றுக் கண்கள் சுழலப்பெற்று அம்மஹாகபியைக் கொல்லும் படி ஆஜ்ஞாபித்தனன். ஐம்பத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

## விபீஷணன் தூதனைக் கொல்லலாகா தென்று ராவணனுக்குக் கூறுதல்.

மஹானுபாவனுகிய அந்த ஹனுமான் மொழிந்த அவ்வார்த்தையைக் கேட்டு, ராவணன் கோபத்தினுல் உடம்பு தெரியாமல் அவ்வானரனை வதிக்கும்படி ஆஜ்ஞாபித்தனன். துர்ப்புத்தியாகிய ராவணன் அந்த ஹனுமானை அங்ஙனம் வதிக்கும்படி ஆஜ்ஞாபித்ததைக்கேட்டு, விபீஷணன், தூதன் தனக்குச் சொல்லியனுப்பின ப்ரகாரம் தவறுமல் ஸமாசாரத்தை அறிவிப்பவனேயன்றித் தானே மொழிந்தவனன்றுகையால் அவனைக்கொல்ல ஸம்மதிக்கவில்லை. விபீஷணன் கார்யங்களை நன்கு ஆலோசித்து நிச்சயிப்பவனுகையால் ராக்ஷஸப்ரபுவான ராவணன் அங்ஙனம் கோபித்திருப்பதையும் ஹனுமானுக்கு அங்ஙனம் வதம் நேர்ந்திருப்பதையும் அறிந்து மேல் செய்யவேண்டிய கார்யத்தை ஆலோசித்தனன். அனந்தரம் அவ்விபீஷணன் செய்யவேண்டிய கார்யத்தை நிச்சயித்துக்கொண்டு சத்ருக்களை அழிக்குந் திறமையுடைய தமையனை நல்வார்த்தை



2342. ராவணன் ஹனுமானை வதிக்க ஆஜ்ஞாபித்தல்.

யால் மேன்மைப்படுத்தி, பேசவல்லவனுகையால் அவனுக்கு மிகவும் ஹிதமான வசனத்தை மொழிந்த னன் :—'ராக்ஷஸேந்த்ரனே! பொறுப்பாயாக. கோபத்தைத் விடுவாயாக; மனத்தெளிவு பெற்று அருள் புரிவாயாக. நான் சொல்லுகிற இவ்வார்த்தையைக் கேட்பாயாக. நன்மை தீமைகளை அறிந்த ஸத்புருஷர்க ளான ராஜஶ்ரேஷ்டர்கள் தூதனைக் கொல்லமாட்டார் கள். வீரனே! தூதனுகிய இந்த வானரனைக் கொல்லு வது ராஜ தர்மத்திற்குச் சேராது; லோகவ்யவஹாரத் தைப்பற்றிப் பார்க்கிலும் இது நிந்தைக்கிடமானதே; உனக்கும் தகுந்ததன்று. ஸமஸ்த ப்ராணிகளிலும் நீயே தர்மந் தெரிந்தவன்; செய்த நன்றியை மறவாத வன்; ராஜ தர்மங்களில் பண்டிதன்; நன்மை தீமைகளை அறிந்தவன்; பரமார்த்தங்கள் தெரிந்தவன். உன்னைப் போன்ற அறிஞர்களும் இப்படி தகாத இடத்தில் கோபத்திற்காளாவார்களாயின், சாஸ்த்ரங்களை யெல் லாம் படித்துப் பலவகை ஜ்ஞானங்களைப் பெறுவ தெல்லாம் வீண்ஶ்ரமமே ஆகுமல்லவா? நீ ராக்ஷஸர் களுக்கெல்லாம் ப்ரபு; பகைவரைப் பறந்தோடச் செய்ப வன்; எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாதவன். நான் சொன்ன இந்தக் காரணத்தைப்பற்றி இப்படிப் பட்ட நீ, கோபத்தைத் துறந்து அருள்புரிவாயாக. 'இது தகும், இது தகாது' என்று நிச்சயித்து, தூதனுக்குத் தகுந்த தண்டனை விதிப்பாயாக' என்ற னன். ராக்ஷஸர் தலைவனுகிய ராவணன், விபீஷணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மிகுதியும் கோபம் மேலெழப்பெற்று அவனைப் பார்த்து, 'சத்ருக்களை யழிப்பவனே! பாபஸ்வபாவர்களைக் கொல்வதனுல் எள்ளளவும் பாபம் உண்டாகாது; ஆகையால் பாபத்தையே செய்யுந் தன்மையனுகிய இந்த வானர னைக் கொன்றுவிடுகிறேன்' என்று மறுமொழி கூறினன். புத்திமான்கள் அனைவரிலும் மேன்மையுற்ற விபீஷணன் மிகுதியும் கோபாவேசமுற்றதும் அதர்மத் திற்கு மூலகாரணமும் அயோக்யர்க்கு மாத்ரமே அனு

னான ராவணன் வசனத்தைக்கேட்டு, பரமார்த்தமான கார்யஸ்வரூபத்தை அறிவிக்கிற வசனத்தை இங்ஙனம் மொழிந்தனன்:—'லங்கேச்வரா! ராக்ஷஸபதீ! கலக்கத்தைவிட்டுத் தெளிவு பெறுவாயாக. தர்மாதர்மங்க ளிரண்டையுங் குறித்து ஒரு வார்த்தை சொல்லுகிறேன், கேட்பாயாக. ராஜனே! 'எல்லாக்காலங்களிலும் எல்லா விடங்களிலும் தூதனைக் கொல்லலாகாது' என்று பெரியோர்கள் சொல்வார்கள். ஆகையால் தூதனாகிய வானரனைக் கொல்லுவது தர்மமன்று. 'கேவலம் தூதனல்லவே. சத்ருவுமல்லவா' என்கிறாயோ? இவன் அக்ஷகுமாராதிகளைக் கொன்று இவ்வளவு அவ்வளவென்னமுடியாத அப்ரியத்தைச் செய்திருப்பவனாகையால் தூதன்மாத்ரமல்லன்; மிகுதியும் பெரிய பகைவனேயாவான்; இதில் ஸந்தேஹமில்லை; ஆயினும் பெரியோர்கள் தூதனைக் கொல்லலாகாதென்று சொல்வார்கள். மற்றும் தூதனுக்குப் பலவகைச் சிக்ஷைகள் சொல்லப்பட்டிருக்கின்றனவல்லவா? அங்கங்களுக்கு விகாரத்தை ஏற்படுத்துதலும், சாட்டையால் அடித்தலும், தலையை மொட்டையடித்தலும் (தூதனுக்குத்தகுந்த) முத்திரையிடுதலும் ஆகிய இவை தூதனுக்குத் தகுந்த சிக்ஷைகளென்று பெரியோர் மொழிவார்கள். தூதனைக்கொல்வதை மாத்ரம் நாம் எப்பொழுதும் கேட்டதுங்கூட இல்லை. தர்மாதர்மங்களில் புத்தி நன்றாக ஊன்றப்பெற்று 'இவ்விஷயத்தில் இது நன்று; இது தீது' என்று விவேகத்துடன் கார்யத்தை நிச்சயிக்குந் திறமையுடைய உன்னைப்போன்றவன் கோபத்திற்கு எப்படி ஆளாவான்? மன உறுதியுடையவர் கோபத்தை அடக்குவார்களல்லவா? வீரனே! தர்மசாஸ்த்ரத்திலும் லௌகிகாசாரத்திலும் சாஸ்த்ரங்களை அறிந்து அவற்றை மறவாதிருத்தலிலும் உனக்கு நிகரானவன் ஒருவனும் இல்லை. ஸமஸ்த தேவதைகளிலும் ஸமஸ்த அஸுரர்களிலும் நீயே சிறந்தவன். இந்த வானரனைக் கொல்வது சாஸ்த்ர விரோதமாத்ரமேயன்று. இதனால்

நமக்கு யாதொரு குணமும் தோற்றவில்லை. எவர் இவ்வானரனை இவ்விடத்திற்கு அனுப்பினரோ, அவரிடத்தில் உன் தண்டனையை ப்ரயோகிப்பாயாக, இவன் நல்லவனாயாவது கெட்டவனாயாவது இருக்கட்டும். பிறரால் அனுப்பப்பட்டு வந்தவன். பராதீனனாகையால் அந்தப் பிறர் சொல்லியனுப்பின வார்த்தையைச் சொல்லினன். இது இந்த தூதனுடைய பிசகன்று. ஆகையால் இவன் வதத்திற்குத் தகுந்தவனல்லன். ராஜனே! மற்றொன்று கேட்பாயாக. [1] இவனைக் கொன்றபின்பு மஹாஸமுத்ரத்தைத்தாண்டி இந்த நம் வாஸஸ்தானமாகிய இக்கரைக்கு வருந்திறமையுடைய ஆகாச சாரியான மற்றொருவன் இருப்பதாக எனக்குத் தோற்றவில்லை. நீ சத்ரு பட்டணங்களை வெல்லுந் திறமையுடையவன். இங்ஙனம் மற்றொருவன் புலப்படாதகாரணத்தினால் நீ இவனைக்கொல்ல ப்ரயத்னஞ் செய்வது யுக்தமன்று. தேவேந்த்ரனோடுங்கூட தேவதைகள் அனைவரும் படையெடுத்துவரும்பொழுது நீ அவர்களை இங்ஙனம் கொல்ல ப்ரயத்னஞ் செய்யத் தகுந்தவனேயன்றி, தூதனாகிய ஒரு வானரனிடத்தில் இப்படிப்பட்ட ப்ரயத்னஞ் செய்யத்தகாது. நீயோ யுத்தத்தில் மிகுதியும் விருப்பமுடையவன். இவன் உன்னால் வதிக்கப்பட்டு முடிந்துபோவானாயின், பின்பு வெகு தூரமாகையால் இங்கு வரமுடியாமல் தடைபட்டிருக்குந் துர்விநீதர்களாகிய ராமலக்ஷ்மணர்களை இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டுவந்து உன்னோடு யுத்தத்திற்கு மூட்டுவிக்குந்திறமையுடைய தூதன்

---

1. இவனைக் கொன்றோமானால் இங்கு நடந்த வ்ருத்தாந்தத்தை அங்குக் கொண்டுபோய்ச் சொல்பவன் மற்றொருவன் இல்லையாகையால், ராமலக்ஷ்மணர்கள் இங்கு வரமாட்டார்களாகையால் அந்தச் சத்ருக்களைக் கொல்வது உனக்த ஸம்பவிக்காது. இவனைக் கொல்லாமல் விடுவோமாயின் இவன்போய் அவர்களை அழைத்துக்கொண்டு வருவானாகையால் உனக்கு யத்னமில்லாமலே சத்ருநாசம் ஸித்திக்குமென்று கருத்து.

மற்றொருவன் இருப்பானென்பதாக எனக்குத் தோற்றுவில்லை. ராக்ஷஸர்களது மனத்தை ஸந்தோஷப்படுத்துந் தன்மையனே! பராக்ரமமும் உத்ஸாஹமும் தைர்யமும் அமைந்த தேவாஸுரர்களும் உன்னை ஜயிக்கமுடியாது. இப்படிப்பட்ட நீ யுத்தம் நேருவதாயிருக்கையில், அதைப் போக்கடித்துக்கொள்வது யுக்தமன்று. உனக்கு ஹிதஞ் செய்பவர்களும் சூரர்களும் தானமானங்களால் உனக்கு வசப்பட்டவர்களும் மஹாகுணமுடைய வம்சத்தில் ஜனித்தவர்களும் தீரர்களும் ஆயுதம் பிடித்தவர்களில் தலைமையுடையவர்களும் நல்ல வேலைக்காரர்களுமாகிய போர்வீரர்கள் கோடிகோடியாயிருக்கின்றனர். ஆகையால் உனது ஆஜ்ஞையைக் கைப்பற்றிச் சில சூரர்கள் உன் ஸைன்யங்களில் சிறிதுபாகத்தை முன்னிட்டுக்கொண்டு மூடர்களான அந்த ராஜகுமாரர்களை ராமலக்ஷ்மணர்களை நிக்ரஹித்துப் பகைவர்க்கு உன் ப்ரபாவத்தை வெளிப்படுத்த முயன்று செல்வார்களாக' என்றனன். ராக்ஷஸர்தலைவனும் தேவகணங்களுக்குச் சத்ருவும் மஹாபலிஷ்டனுமாகிய ராக்ஷஸராஜமுக்யன் ராவணன் தன தம்பியாகிய விபீஷணன் தன் மனத்திற்கு இனிதாக மொழிந்த உத்தம வசனத்தைப் புத்தியிற் கொண்டு ஆலோசித்து அங்கீகரித்தனன். ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

ராக்ஷஸர்கள் ஹனுமானுடைய வாலில்
நெருப்பிடுதலும், ஸீதை இதை அறிந்து
அக்னியை ப்ரார்த்திக்க அவன்
ஹனுமானுக்குக் குளிர்ந்திருத்தலும்,
ஹனுமான் ராக்ஷஸர்களை த்வம்ஸஞ்
செய்தலும்.

மஹாபலனாகிய ராவணன், தன் தம்பி விபீஷணன் தேசகாலங்களுக்குத் தகுந்திருக்குமாறு மொழிந்த

வார்த்தையைக் கேட்டு, 'நீ சொன்னது நன்றாயிருக்கின்றது. தூதனைக் கொல்வது நிந்தைக்கிடமானதே. இவனுக்கு எப்படியாயினும் வதம் தவிர மற்றொரு சிக்ஷை விதிக்கவேண்டும். குரங்குகளுக்கு வால் ப்ரியமான அலங்காரமன்றோ? ஆகையால் இவன் வாலைக் கொளுத்திவிடுவீர்களாக. இவன் எரிந்தவாலுடன் தன் ப்ரபுவினிடம் போவானாக. இனி இவனது மித்ரர்களும் தாயாதிகளும் பந்துக்களும் ஆப்தர்களும் ஆகிய அனைவரும் அங்க விகாரமுற்றுப் பரிதபிக்கின்ற இவனைக் காண்பார்களாக' என்றுரைத்தனன். ராக்ஷஸேம்வரனாகிய ராவணன் இங்ஙனம் விபீஷணனுக்கு மொழிந்து வேலைக்காரர்களைப் பார்த்து 'இவனைக் கொளுத்தினவாலுடனே பட்டணத்து நாற்சந்தி வீதிகளிலும் மற்றுமுள்ள இடங்களெல்லாவற்றிலும் திருப்பிக்கொண்டு வருவீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். ராக்ஷஸர்கள் ராவணன் அங்ஙனம் ஆஜ்ஞாபித்ததைக் கேட்டு மிகுதியும் கோபாவேசமுற்றுக் கிழிந்த பஞ்சுத் துணிகளை ஹனுமானுடைய வாலில் சுற்றினர். அங்ஙனம் அவர்கள் தன்வாலுக்குத் துணிக்கந்தைகளைச் சுற்றுகையில், வானரம்ரேஷ்டனான ஹனுமான் அரண்யத்தில் உலர்ந்த கட்டைகளில் பற்றின அக்னிபோல் வ்ருத்தி அடைந்தனன். அனந்தரம் அந்த ராக்ஷஸர்கள் துணிக்கந்தைகளால் சுற்றப்பட்ட வாலை எண்ணெயில் நனைத்து அதில் நெருப்பு வைத்தனர். அந்த ஹனுமான் கோபமும் பொறாமையும் மனத்தில் ஜ்வலிக்க முகம் சிவந்து பால ஸூர்யன்போல் புலப்பட, எரிகிற வாலைக், கிருகிருவென்று சுழற்றி அந்த ராக்ஷஸர்களெல்லோரையும் கீழேவிழத்தள்ளினன். அனந்தரம் இலங்கையிலுள்ள ராக்ஷஸர் ஹனுமானுடைய வாலுக்கு நெருப்பிட்டதைக் கேட்டு ஸந்தோஷமுற்று ஸ்த்ரீகளும் பாலர்களும் வ்ருத்தர்களுங்கூடி அதைப் பார்க்க வந்தனர். க்ரூரர்களான ராக்ஷஸர்கள் மேன்மேலும் வந்து ஒன்றுகூடி மீளவும் தன்னைக் கட்டுகையில் வீரனாகிய

அவ்வானரோத்தமன் அப்பொழுதைக்குத் தகுந்த ஆலோசனை செய்தனன்:—'நான் கட்டுண்டிருப்பினும் ராக்ஷஸர்கள் என் பலத்திற்கு எள்ளளவும் எதிர் நிற்க மாட்டார்கள்; வாஸ்தவமே. இந்தப் பாசங்களை அறுத்துக்கொண்டு கிளம்பி இந்த ராக்ஷஸர்களெல்லோரையும் மீளவும் கொன்றுவிடுகிறேன். துர்புத்திகளான இந்த ராக்ஷஸர்கள் ப்ரபுவான ராமனது ஹிதத்தின்பொருட்டு இங்குத் திரிகின்ற என்னைத் தமது ஸ்வாமியாகிய ராவணனது ஆஜ்ஞையால் பந்தனஞ் செய்வார்களாயின், இதனால் எனக்கு எள்ளளவும் கெடுதி செய்ததாகாது; இது எனக்கு ஒரு பொருளன்று. ஏனெனில், நான் யுத்தத்தில் ராக்ஷஸர்களனைவர்க்கும் ஒருவனே போதுமானவன். ஆயினும் ராமன் தானே ராவணனைக் கொல்வதாகச் சொன்ன ப்ரதிஜ்ஞையைத் தீர்த்து ஸந்தோஷிக்கவேண்டுமென்றும், இவர்கள் என்னை லங்கை முழுவதும் திருப்புவார்களாகையால் மீளவும் லங்கை முழுவதையும் பார்க்கவேண்டி வருமென்றும் நான் இப்படிப்பட்ட அவமானத்தைப் பொறுத்திருக்கிறேனன்றி மற்றொன்றுமில்லை. நான் ராத்ரியில் இவ்விலங்கையைக் கண்டனன். பத்ரத்திற்காக ஏற்படுத்தியிருக்கிற துர்க்கங்களையும் பத்ததிகளையும் நன்றாகப் பார்க்கவில்லை. ஆகையால் விடியற்காலத்தில் அவற்றையெல்லாம் பார்க்கவேண்டும். இதற்கே இந்த ராக்ஷஸர்கள் என்னைப் பந்தனஞ்செய்திருக்கிறார்களல்லவா? இன்னமும் இஷ்டப்படி என் வாலில் நெருப்பையிட்டு என்னைப் பிடிப்பார்களாக. இதனால் என் மனத்திற்குச் சிறிதும் வருத்தம் இல்லை' என்று நினைத்துக்கொண்டனன். அனந்தரம் அந்த ராக்ஷஸர், கபிகுல திலகனும் புத்தியில் மிகுதியும் பெருமையுடையவனும் பலிஷ்டனுமாகிய அவ்வானரோத்தமனை, தன் உருவத்தை மறைத்துக்கொண்டிருக்கையால் இப்படிப்பட்டவனென்று முழுமையும் தெரிந்துகொள்ளாமல் ஸந்துஷ்டி அடைந்து பிடித்து இழுத்துக்கொண்டு போயினர்.

க்ரூரகாமாககளாகிய அந்த ராக்ஷஸர் சங்கங்களை ஊதிக்கொண்டு பேரிவாத்யங்களைக் கொட்டுவதும் இறைச்சலிடுவதும் தோள் தட்டுவதுமாகப் பல செயல் களைச் செய்து கோஷமிட்டுக்கொண்டு அந்தப் பட்ட ணம் முழுவதும் அவ்வானரனைத் திருப்பினர். பகை வரை அடக்குந் திறமையுடைய அந்த ஹநுமான் ராக்ஷஸர்கள் தன்னைத் தொடர்ந்துவருகையில், ஸுகமாகச் சென்று ராக்ஷஸ மஹாபட்டணமாகிய அவ் விலங்கை முழுவதும் பரிசோதித்தனன். அனந்தரம் அம்மஹாகபி, நாநாவித விமானங்களையும் மறைக்கப் பட்டிருக்கிற பூமிபாகங்களையும் நன்கு ஏற்படுத்தப் பட்டிருக்கிற வீடுகளின் முற்றங்களையும் கண்டனன். வாயுகுமாரனாகிய அந்த ஹநுமான், வீடுகள் நிறைந்த வீதிகளையும் நானாவீதிகளும் கலக்கும் ப்ரதேசங்களை யும் (நாற்சந்தி வீதிகளையும்) பெரிய வீதிகளையும் சிறிய வீதிகளையும் சிறிய க்ருஹங்களையும் இடைக்கட்டு வாசற்படிகளையும் மேகம்போன்ற மஹா க்ருஹங்களை யும் கண்டனன். ஆங்காங்கு முற்றங்களிலும் நாற்கால் மண்டபங்களிலும் ராஜமார்க்கங்களிலும் ராக்ஷஸர்க ளெல்லோரும் ஹநுமானைச் 'சாரபுருஷன்' என்று கோஷித்தனர். ஆங்காங்கு ஸ்த்ரீகளும் பாலர்களும் வ்ருத்தர்களும் எறிகிற வாலுடன் கூடின ஹநு மானைப் பார்க்க விருப்பமுற்றுக் குதூஹலத்துடன் வீடுகளினின்று வெளிப்பட்டனர். அனந்தரம் ஹநுமா னுடைய வாலின் நுனி நெருப்பிடப்பெற்று எரிகையில் விகாரமான கண்களையுடைய அந்த ராக்ஷஸ ஸ்திரீகள் அந்த அப்ரிய ஸமாசாரத்தை ஸீதாதேவிக்கு மொழிந் தனர்:—'ஸீதே! இதற்கு முன்பு உன்னோடு எவனோ பேசிப்போனானே, சிவந்த முகமுடைய அவ்வானரனை வாலில் நெருப்பை மூட்டி இதோ ஊர்முழுவதும் திருப்புகின்றார்கள்' என்றனர். ஸீதை க்ரூரமான அவ் வார்த்தையைக் கேட்டுத் தன் ப்ராணன்களையே அபஹரித்தாற்போல் மிகுதியும் சோகத்தினால் பரிதாப முற்று அக்னிதேவனை உபாஸித்தனள். அப்பொழுது

அவள் அம்மஹாகபிக்கு மங்கலஞ்செய்வதில் முடையவளாயினள். அகன்ற கண்களையுடைய அம் மடந்தையர்மணி சுத்தியுடன் அக்னிதேவனை உபா ஸிக்கத் தொடங்கி 'நான் பதிசுஶ்ரூஷை செய்தவளா யிருப்பேனாயின், தவம் புரிந்திருப்பேனாயின், எனக்குப் பாதிவ்ரத்யம் உளதாயின், ஹனுமானுக்கு நீ குளிர்ந் திருப்பாயாக. புத்தியிற் சிறந்தவனாகிய அந்த ராம னுக்கு என்னிடத்தில் ஏதேனும் சிறிது தயை உளதா யின், எனக்கு இனிமேல் கிறிது பாக்யம் அனுபவிக்க மிகுந்திருக்குமாயின், நீ ஹனுமானுக்குக் குளிர்ந் திருப்பாயாக. நான் பாதிவ்ரத்ய முடையவளென்றும், ராமனைப்பெறவேண்டுமென்றே விரைந்துகொண்டிருப் பவளென்றும் தர்மஸ்வபாவனாகிய அந்த ஹனுமான் (அல்லது ராமன்) அறிவானாயின், நீ ஹனுமானுக்குக் குளிர்ந்திருப்பாயாக. பூஜிக்கத்தகுந்தவனும் ஸத்ய ப்ரதிஜ்ஞனுமாகிய ஸுக்ரீவன் எனக்கு இப்பொழுது நேர்ந்திருக்கிற துக்கமாகிற ஸமுத்ரத்தினின்று என்னைக் கடைத்தேற்றுவானாயின், நீ ஹனுமானுக்குக் குளிர்ந்திருப்பாயாக' என்று ப்ரார்த்தித்தனள். அந்த ஹனுமானுடைய வாலில் பற்றின அக்னி, மானின் கண்கள்போன்ற கண்களையுடைய ஸீதைக்கு 'ஹனுமா னுக்கு பயமில்லை. மங்களமே' என்று தெரிவிப்பது போல் ப்ரதக்ஷிணமான ஜ்வாலைகளோடு கூடி மிகுதி யுங் கூரான ஒளிகள் கிளம்பப்பெற்று மழுங்கலின்றி ஜ்வலித்தது. ஹனுமானுடைய வாலில் பற்றின அக்னி யோடு கூடின அவன் தகப்பனாகிய வாயுதேவனும் ஸீதைக்கு மனம் குதிரும்படி பனிக்காற்றுப்போல் குளிர்ந்து வீசினன். அங்ஙனம் தன் வால் எரிந்து கொண்டிருக்கையில் ஹனுமான் தன் மனத்தில் சிந்தித்தனன்:—'என் வாலில் இதோ அக்னி மிகுதியும் ஜ்வலிக்கின்றதே; இது சிறிதும் தஹியாதிருக்கின்றதே; இதெப்படி? இவ்வக்னியோ பெரிய ஜ்வாலைகளோடுகூட புலப்படுகின்றது. ஆயினும் எனக்குச் சிறிதும் பீடையை விளைக்காதிருக்கின்றது. இவ்வக்னி என்வால்

நுனியில் குளிர்ந்த சந்தனம் வெட்டிவேர் முதலிய வற்றைக் கலந்து பூசினுற்போல் குளிர்ந்திருக்கின்றது. இதற்குக் காரணம் இதுவாயிருக்கலாம். ஸந்தேஹமே இல்லை. நான் ஸமுத்ரந்தாண்டும்பொழுது ஸமுத்ரத்தில் பர்வத ரூபமாக ஓர் ஆச்சர்யம் கண்டேனல்லவா? நடுவில் பர்வதம் புலப்படுவது ராமப்ரபாவத்தினுலேயே. அப்படியே அக்னி குளிர்ந்திருப்பதும் அவனது ப்ரபாவத்தினுலேயேயா யிருக்கவேண்டும். இது நிச்சயம். ஸமுத்ரனும் புத்தியிற் சிறந்த மைனுகனும் ராமனுக்கு நன்மையைச் செய்ய அப்படி விரைந்துவருகையில், இனி அக்னிமாத்ரம் ஏன் அவ்வளவு செய்ய விரைய மாட்டான்? ஸீதா தேவியின் தயையினுலும் ராமனது ப்ரபாவத்தினுலும், என் தந்தையாகிய வாயுதேவனே டுள்ள ஸ்னேஹத்தினுலும் இவ்வக்னிதேவன் என்னைக் கொளுத்தாதிருக்கிருன்' என்று சிந்தித்தனன். வானர திலகனுகிய அந்த ஹனுமான் மீளவும் அதற்குமேல் செய்யவேண்டிய கார்யத்தைக் குறித்துச் சிறிதுநேரம் ஆலோசித்தனன். அனந்தரம் அம்மஹாகபி வேகமாக மேற்கிளம்பி ஸிம்ஹநாதஞ் செய்தனன். அப்பால் ஸ்ரீமானுகிய அந்த ஹனுமான், பர்வதசிகரம்போல் உயர்ந்திருப்பதும் ராக்ஷஸர்களின் ஸஞ்சாரம் ஓயப் பெற்றதுமாகிய நகரத்வாரத்தைச் சேர்ந்தனன். பர்வதம்போலிருக்கிற அவ்வீரன் நொடிப்பொழுதில் மிகுதியும் குள்ளனுகி அந்தக்கட்டுக்களை யெல்லாம் உதறிவிட்டனன். ஸ்ரீமானுகிய அவ்வானரன் அந்தக் கட்டுக்களையெல்லாம் உதறினவுடனே மீளவும் பர்வதம் போன்ற உருவமுடையவனுகி நான்கு திசைகளையும் பார்த்துத் தோரணவாசற்படியில் வைத்திருக்கிற ஓர் இரும்புத்தடியைக் கண்டனன். மஹாபாஹுவும் வாயு குமாரனுமாகிய அந்த ஹனுமான் காலாயஸ மென்னும் சிறந்த இரும்பினுல் அலங்காரஞ்செய்யப்பட்ட அவ் விரும்புத்தடியைக் கையில் எடுத்துக்கொண்டு தனக்குக் காவலிருக்கிற ராக்ஷஸர்களையெல்லாம் உரு மாய்த்தனன். யுத்தத்தில் ப்ரசண்ட பராக்ரமத்துடன்

ப்ரகாசிக்கின்ற அந்த ஹநுமான் அவ்வரக்கர்களைக் கொன்று லங்கையைப் பார்த்துக்கொண்டு வாலில் பற்றின அக்னிஜ்வாலைகள் தன்னைச் சுற்றிலும் ஜ்வலிக்கப்பெற்றுக் கிரணஸமூஹங்களால் சூழப்பட்டுத் தேஜோராசியாய் விளங்குகிற ஸூர்யன்போல் ப்ரகா ர. ஐம்பத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹநுமான் தன் வாலிலிருக்கிற அக்னியால் விபீஷணக்ருஹந் தவிர மற்ற ராவணுதி க்ருஹங்களையெல்லாம் ல்.

அனந்தரம் ஹநுமான் அங்ஙனம் தன் விருப் பத்தை ஈடேற்றிக்கொண்டு லங்கையைப் பார்த்து மேன்மேலும் உத்ஸாஹம் வளரப்பெற்று, இனிச் செய்ய வேண்டிய கார்யம் என்னென்று தனக்குள் ஆலோசிக் கத்தொடங்கி 'இப்பொழுது இங்கு இந்த ராக்ஷஸர்க்கு மீளவும் மிகுதியும் மனஸ்தாபதத்தை விளைக்கவல்ல கார்யம் நான் செய்யாமல் மிகுந்திருப்பது இனி ஏதே னும் இருக்கிறதா? முன்னம் அசோகவனிகையை முறித்தேன். மேலான சில ராக்ஷஸர்களையுங் கொன் றேன். ஸேனையில் சில பாகத்தையும் உருமாய்த்தேன். இனி இந்தப்பட்டணத்தின் துர்க்கத்தை (கோட் டையை) நாசஞ்செய்யவேண்டிய தொன்றே மிகுந் திருக்கிறது. நான் இந்தக் கோட்டையையுங்கூட நாசஞ் செய்வேனுயின், நான் ஸமுத்ரந்தாண்டினது முதலிய கார்யங்களில் பட்ட ஶ்ரமமெல்லாம் ஸபலமாகும். இந்தக் கோட்டையை அழிக்கச் சிறிது ப்ரயத்னந் தான் செய்யவேண்டி யிருக்கிறது. இதையுஞ் செய்து முடிப்பேனுயின் என் ஶ்ரமமெல்லாம் ஸபலமாகும். என் வாலில் ஜ்வலிக்கின்ற இவ்வக்னி மிகுதியும் குளிர்ந்து

எனக்கு மஹோபகாரஞ் செய்தனனே; இவ்வக்னிபகவா னுக்கு இம்மேலான க்ருஹங்களை ஆஹுதியாகக் கொடுத்து த்ருப்தி செய்வது யுக்தமாயிருக்கின்றது' என்று சிந்தித்தனன். அனந்தரம், அம்மஹாகபி எரிகிற வாலுடன் மின்னலோடு கூடின மேகம்போல் புலப் பட்டுக்கொண்டு லங்காபுரத்திலுள்ள வீடுகளின்மேல் திரிந்தனன். அவ்வானரன் சிறிதும் பயமின்றி ஒரு க்ருஹத்தினின்று மற்றொரு க்ருஹத்திற்குச் சென்று ஆங்காங்கு ராக்ஷஸர்களின் உத்யானங்களையும் உப்பரிகைகளையும் பார்த்துக்கொண்டு திரிந்தனன். அந்த ஹநுமான் வேகமுடையவனும் வாயுவைப் போன்றவனும் பலசாலியும் வீர்யம் மிகுந்தவனு மாகை யால் ப்ரஹஸ்தனது வீட்டின்மேல் கிளம்பி அங்கு அக்னியைப் பற்றவிட்டு அதற்கடுத்த மஹாபார்ஸ்வ னது வீட்டிற்குக் கிளம்பினன். ஹநுமான் பிறகு மஹாபார்ஸ்வனது க்ருஹத்தில் காலாக்னிபோன்ற அக்னியைப் பற்றவிட்டு எரியச்செய்தனன். அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய அவ்வானரஸ்ரேஷ்டன் வஜ்ர தம்ஷ்ட்ரனுடையவீட்டிற்கும் சுகனுடைய க்ருஹத்திற் கும் புத்திமானுகிய ஸாரணனது க்ருஹத்திற்கும் கிளம்பிச் சென்று, அவையெல்லாவற்றிலும் நெருப்பை மூட்டினன். அங்ஙனமே வானரயூதநாதனுகிய ஹநு மான் இந்த்ரஜித்தினுடைய க்ருஹத்தைக் கொளுத்தி னன். அனந்தரம் அவன், ஜம்புமாலி க்ருஹத்தையும் ஸுமாலி க்ருஹத்தையும் தஹித்தனன். மஹா தேஜஸ்வியாகிய அவ்வானரோத்தமன் அங்ஙனம் க்ரமமாக வீடுகள் தோறும் திரிந்துசென்று விபீஷண க்ருஹத்னைமாத்ரம் விட்டு, ரஸ்மிகேது ஸூர்யசத்ரு ஹ்ரஸ்வகர்ணன் தம்ஷ்ட்ரன் ரோமசன் யுத்தோன் மத்தன் மத்தன் த்வஜக்ரீவன் பயங்கரனுகிய வித்யுஜ் ஜிஹ்வன் ஹஸ்திமுகன் கராலன் பிசாசன் சோணி தாக்ஷன் கும்பகர்ணன் மகராக்ஷன் யஜ்ஞசத்ரு ப்ரஹ்ம சத்ரு நராந்தகன் கும்பன் துர்ப்புத்தியாகிய நிகும்பன் ஆகிய இவர்களின் க்ருஹங்களையும் கொளுத்தினன்.

மிகுந்த புகழுடைய அவ்வானரோத்தமன் மிகுதியும் சிறந்த அந்தந்த க்ருஹங்களில் மஹத்தான ஐச்வர்ய முடைய ராக்ஷஸர்கள் ஸம்பாதித்து ரக்ஷித்துக் கொண்டு வருகிற ரத்னம் முத்து பவழம் முதலிய ஸம்பத்துகளின் ஸம்ருத்திகளையெல்லாம் கொளுத்தினன். அம்மஹா வீரன் எல்லா ராக்ஷஸர்களுடைய க்ருஹங்களிலும் நெருப்பை மூட்டிக் கடந்து சென்று அனந்தரம் ராக்ஷஸேச்வரனாகிய ராவணனது க்ருஹத்திற்குப் போயினன். அந்த க்ருஹம் நாநாவித ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டு மேரு மந்தர பர்வதங்கள்போல் உயர்த்தியும் விஸ்தாரமும் அமைந்து ஸமஸ்த மங்கள த்ரவ்யங்களும் நிறைந்து க்ருஹங்களெல்லாவற்றிலும் சிறப்புற்று விளங்கிக்கொண்டிருந்தது. வீரனாகிய ஹனுமான் அந்த க்ருஹத்தில் தன் வால்நுனியில் நிலை நின்று எரிந்துகொண்டிருக்கிற நெருப்பை மூட்டி ப்ரளய காலமேகம்போல் உரக்க இரைச்சலிட்டனன். அப்பொழுது வாயுவும் கூடுகையில் அக்னிதேவன் மிகுந்த வேகத்தையும் மஹா பலத்தையும் அடைந்து ப்ரளய காலாக்னிபோல் மேன்மேலும் வளர்ந்தனன். வாயுதேவன் எரிகிற அக்னியை அந்த வீடுகளின்மேல் பரவச்செய்தனன். வாயு ஸஹாயமாகையில் அக்னி மஹாவேகத்துடன் லங்கை முழுதும் வ்யாபித்தனன். பொற்சாளரங்கள் பொருந்தி முத்துக்களும் ரத்னங்களும் இழைக்கப்பெற்று விளங்குகிற சிறந்த வஸ்துக்கள் பலவும் நிறைந்த பெருப்பெரிய மாளிகைகள் எரிந்து தரையில் வீழ்ந்தன. அங்ஙனம் உப்பரிகைகள் முறியப் பெற்ற அம்மாளிகைகள், புண்யம் கழிந்தபின்பு ஸித்தர்களின் விமானங்கள் ஆகாயத்தினின்று விழுவதுபோல் தரையில் விழுந்தன. அனந்தரம் ராக்ஷஸர்களெல்லோரும் தமது க்ருஹங்களைக் காப்பாற்றிக் கொள்ள உத்ஸாஹங் குறைந்து நிலைநின்ற செல்வமெல்லாம் பாழாகப்பெற்று மனக்களிப்பின்றி ஓடத் தொடங்கி 'ஐயோ! இவன் ஒன்றான அக்னிதேவனே வானர உருவத்துடன் இவ்விடத்திற்கு வந்தனன். இது

நிச்சயம்' என்று முறையிடுகையில் அந்தச் சப்தம் இன்னது இனியதென்றில்லாமல் பேரொலியாகச் செவிப்பட்டது. குழந்தைகளை எடுத்துக் கொண்டிருக்கிற ஸ்த்ரீகள் சிலர் சுற்றிலும் நெருப்பு சூழ்ந்தெரியப்பெற்ற உப்பரிகைகளினின்று ரோதனஞ் செய்துகொண்டு தலைமயிர்கள் அவிழ்ந்து அலையத் திடீலென்று கீழே விழுந்தனர். அப்பொழுது அங்ஙனம் உயர்ந்த உப்பரிகைகளினின்று விழுகின்ற அந்த மாதர்கள் மேகத்தினின்று விழுகிற மின்னல்கள்போல் விளங்கினர். அந்த ஹனுமான் வஜ்ரங்களும் பவழங்களும் வைடூர்யங்களும் முத்துக்களும் வெள்ளிகளும் நிறைந்திருக்கையால் நானாவிதமாய் விளங்குகிற க்ருஹங்களினின்று பொன் வெள்ளி முதலான லோஹங்கள் அக்னியின் தீயினால் உருகிப் பெருகிவரக் கண்டனன். கட்டைகளையும் புதர்களையும் எவ்வளவு கொளுத்தினும் அவற்றால் அக்னிக்கு த்ருப்தி உண்டாகிறதில்லை; அங்ஙனமே ராக்ஷஸக்ருஹங்களில் நெருப்பை எவ்வளவு மூட்டியும் ஹனுமான் த்ருப்தி அடையவில்லை; அவ்வண்ணமே ராக்ஷஸர் மாண்டு எவ்வளவு பிணங்கள் வீழ்ந்தாலும் பூமியும் த்ருப்தி அடையவில்லை. அப்பொழுது அக்னிஜ்வாலைகள் தாம் கொளுத்துகிற அந்தந்த வஸ்துக்களின் குணவிசேஷங்களுக்குத் தகுந்தபடி சில இடத்தில் பலாச புஷ்பங்கள் போலவும் சில இடத்தில் இலவின் புஷ்பங்கள் போலவும் சில இடத்தில் குங்குமப்பூப்போலவும் ப்ரகாசித்தன. மஹாவேகமுடையவனும் மஹானுபாவனுமாகிய ஹனுமான் ருத்ரன் த்ரிபுரதஹனஞ் செய்தாற்போல், லங்காபுரத்தைத் தஹனஞ் செய்தனன். அனந்தரம் அதிவேகத்துடன் ஹனுமான் க்ருஹங்களில் மூட்டிவிட்ட அவ்வக்னி அநேகமாயிரம் ஜ்வாலைகளைப் பரப்பிக்கொண்டு மேன்மேலும் வளர்ந்து பயங்கரமான வெப்பத்துடன் கூடித் தகதகவென்று எரிந்துகொண்டு லங்காபுரத்திற்காதாரமாகிய த்ரிகூட பர்வதத்தின் சிகரத்தில் கிளம்பிற்று. அதன்பிறகு

அவ்வக்னி காற்றுடன்கூடி ப்ரளயகாலாக்னிபோல் மஹாவேகமுற்று ஆகாயத்தில் முழுவதும் நிரம்பிப் புகையில்லாத ஜ்வாலைகளோடுகூடி வீடுகளெல்லாவற்றிலும் சூழ்ந்து ராக்ஷஸர்களின் தேஹங்களாகிற நெய்களால் ஜ்வாலைகள் கொழுந்துவிட்டெரியப்பெற்று வளர்ந்து வந்தது. அம்மஹாக்னி கோடி ஸூர்யர்களை நிகர்த்து மிகுதியும் ஒளி விளங்கப்பெற்று லங்கைமுழுவதும் குறைவறச் சுற்றிலுஞ் சூழ்ந்து இடிபோன்ற பற்பல மஹா சப்தங்களால் ப்ரஹ்மாண்டமெல்லாம் பிளவுபடும்படி மிகுதியும் பயங்கரமாக எரிந்தது. அங்கு அவ்வக்னி கொடிய ஒளியுடையதாகிப் பலாச புஷ்பங்கள்போன்ற ஜ்வாலைகளுடன் ஆகாயம் வரையில் வளர்ந்து நிறைந்தது. முதலில் பற்றி எரிந்த வீடுகள் அணையும்பொழுது மேல்கிளம்புகிற புகைகள் தமது வரிசைகளில் வந்து சூழ்கையால் அங்குள்ள மேகங்கள் கருநெய்தலின் காந்தியுடையனவாகி விளங்கின. அங்கு ஜ்ஞாதிகர்களான ராக்ஷஸர்கள் அனைவரும் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து ப்ராணிஸமூஹங்களோடும் வீடுகளோடும் வ்ருக்ஷங்களோடும் கூடிய அந்த லங்காபுரம் முழுவதும் திடீரென்று ஒரு நொடிப்பொழுதில் எரிந்து போனதைக்கண்டு, 'இவன் வஜ்ராயுதத்தை ஏந்தி வ்ருத்ராஸுரனைக்கொன்ற தேவநாதனாகிய இந்த்ரனோ அல்லது ஒன்றான யமனோ! வருணனோ! வாயுவோ! ருத்ரனோ! அக்னியோ! ஸூர்யனோ! குபேரனோ! சந்த்ரனோ! தெரியவில்லை. கேவல வானரன் மாத்ர மன்று. [1]காலன் தானேயாயிருக்கலாம். ஸமஸ்த லோகங்களுக்கும் பாட்டனும் ஸமஸ்தத்தையும் போஷிப்பவனும் நான்குமுகமுடையவனுமாகிய ப்ரஹ்ம தேவன் ராக்ஷஸர்களெல்லோரையும் அழிக்கவேண்டு

---

1. காலனென்றால் யமன். யமனை முன்னமே சொல்லிற்று; ஆயினும் யமனுக்கு அனேக மூர்த்திகள் உண்டாகையால் இங்குக் காலனென்னும் யமனைச் சொல்லுகிறதாகையால் புனருக்தி (சொன்னதைச் சொல்லுகை) யென்னும் தோஷம் இல்லை.

மென்று முயற்சி செய்கையில், அவனது கோபமே இங்ஙனம் வானர உருவந்தரித்து இங்கு வந்ததா என்ன? அல்லது — அளவிறந்ததும் கண் முதலிய இந்த்ரியங்களுக்குப் புலப்படாததும் மனத்தினாலுங் கூட இப்படி அப்படியென்று சிந்திக்க முடியாததும் இணையற்றதும் பூஜிக்கத்தகுந்ததும் மேன்மையுடையதுமாகிய மஹாவிஷ்ணுவின் தேஜஸ்ஸே இங்ஙனம் ராக்ஷஸர்களை நாசஞ்செய்யும்பொருட்டுத் தனக்கு அஸாதாரணமான ஆச்சர்ய சக்தியால் வானர உருவந் தரித்து இப்பொழுது இவ்விடம் வந்ததோ?' என்று சொல்லிக்கொண்டனர். அனந்தரம், ராக்ஷஸர்களும் குதிரைகளும் தேர்களும் யானைகளும் பக்ஷிஸமூஹங்களும் ம்ருகங்களும் வ்ருக்ஷங்களும் நிறைந்த லங்கை முழுவதும் திடீலென்று அக்னியால் கொளுத்தப்பட்டு மன இரக்கத்திற்கிடமாகி அந்தந்த ப்ராணிகளின் துக்க சப்தங்களால் துமுலமாகக் கதறலிட்டது. ராக்ஷஸர்கள் எரிந்து விழும்பொழுது 'ஐயோ! தந்தையே! ஆ! அருமைக்குமாரனே! ஐயோ! ஆசை நாயகனே! ஆ! நண்பனே! ஐயோ! ஸகல ஸுகங்களும் நிறைந்து, நோற்றப் பெரிய ஸுக்ருதங்களுக்கெல்லாம் பலனாய் விளைந்த ஜீவனமே!' என்று தந்தை முதலானவர்களின் பேரைச்சொல்லிப் பலவாறாகக் கூச்சலிடுகையில், அந்த த்வனி மிகுதியும் கொடிதாகிக் கேட்க மிகவும் பயங்கரமாயிருந்தது. ஹனுமானுடைய கோபத்தின் மிகுதியால் அவ்விலங்கை முழுவதும் அக்னிஜ்வாலைகளால் சூழப்பட்டு மேலான வீரர்கள் மரணம் அடையவும் படர்கள் அனைவரும் திரும்பி ஓடிப்போகவும் பெற்று, இங்ஙனம் கெடுதியுற்றிருப்பது பற்றிச் சாபத்தினால் பாழடைந்ததுபோல் புலப்பட்டது. தழதழத்துத் திகிலடைந்து துக்கத்தினால் வருந்தின ராக்ஷஸர்களுடையதும் மென்மேலும் ஜ்வாலைகள் கிளம்பப்பெற்று எரிகின்ற அக்னியால் சூழப்பட்டதுமாகிய லங்கை ப்ரஹ்மதேவனுடைய கோபத்தினால் ப்ரளயகாலத்தில் பாழ்செய்யப்பட்டு எரிகின்ற பூமண்ட

லம்போல் மஹா தைர்யசாலியாகிய ஹநுமானுக்குப் புலப்பட்டது. வாயு குமாரனாகிய ஹநுமான் மேலான வ்ருக்ஷங்களோடு கூடின அசோகவனத்தை யெல்லாம் முறித்து யுத்தத்தில் மேலான ராக்ஷஸர்களைக் கொன்று சிறந்த மாளிகைகள் வரிசைவரிசையா யிருக்கப்பெற்ற அந்த லங்காபுரத்தையுங் கொளுத்தி விட்டு மௌனமாயிருந்தனன். விசித்ரமான த்ரிகூட பர்வதத்தினுடைய சிகரத்தின் நுனியில் நிலையுற்ற அவ்வானர ராஜஸிம்ஹன் வாலில் தகதகவென்று எரிகின்ற அக்னிஜ்வாலைகளின் ஸமூஹங்கள் கிரண ஸமூஹம்போல் விளங்கப்பெற்றுக் கிரணஸமூஹத் தோடுகூடின ஸூர்யன்போல் ப்ரகாசித்துக்கொண் டிருந்தனன். மஹானுபாவனாகிய அந்த ஹநுமான் அங்குள்ள பல ராக்ஷஸர்களைக் கொன்று பல வ்ருக்ஷங் களையுடைய அவ்வசோக வனிகையை முறித்து ராக்ஷஸ க்ருஹங்களில் நெருப்பையும் மூட்டி, உடனே மனத்தில் ராமனிடம்போக விருப்பமுற்றனன். அனந்தரம் வானர வீரர்களனைவர்க்கும் தலைவனாகி மஹா பலனும் வாயு தேவனைப்போல் மிகுந்த வேக முடையவனும் புத்தியிற் சிறந்தவனும் பலிஷ்டர்களனைவரிலும் மேலாயிருப்பவ னும் வாயு குமாரனுமாகிய அந்த ஹநுமானை, தேவதைகளெல்லோரும் கூட்டங்கூடிப் புகழ்ந்தனர். மஹா தேஜஸ்வியாகிய அக்கபிராஜன் அசோக வனத்தை முறித்து யுத்தத்தில் ராக்ஷஸர்களைக் கொன்று ரமணீயமான லங்காபட்டணத்தையெல்லாங் கொளுத்தி விளக்கமுற்றிருந்தனன். அப்பொழுது தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷி களும் அந்த லங்காபுரம் முழுவதும் மிகுதியின்றிக் கொளுத்தப்பட்டது கண்டு, மிகவும் ஆச்சர்யம் அடைந்தனர். பூமண்டலமெல்லாம் மஹாகபியாகிய அந்த ஹநுமானைக் கண்டு ப்ரளயகாலாக்னியென்று நினைத்துப் பயப்பட்டது. ஸகல தேவதைகளும் முனி ஸ்ரேஷ்டர்களும் கந்தர்வர்களும் வித்யாதரர்களும் நாகர்களும் யக்ஷர்களும் பெருமையுள்ள ஸமஸ்த



2359. ஹனுமான் தன் வால்நெருப்பை ஸமுத்ரத்தில் அணைத்தல்.

ப்ராணிகளும் லங்கா பட்டணம் அங்ஙனம் கொளுத்தப் பட்டது கண்டு மிகுதியும் நிகரில்லாத ஸந்தோஷத்தை அடைந்தன. ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.



ஹனுமான் ஸீதையை மீளவும் நேரில் கண்டு ப்ரயாணமாய்ப் புறப்படுதல்.

மஹாபலிஷ்டனாகிய அவ்வானரஶ்ரேஷ்டன் ஹனுமான் லங்கை முழுவதையும் கொளுத்தி, அனந்தரம் ஸமுத்ரத்தில் வாலை நனைத்து அதிலுள்ள அக்னியை அணைத்தனன். பிறகு ஹனுமான் மிகுதியும் நெருப்புப் பட்டு எரிவதும் பாழடைந்ததும் ராக்ஷஸர்கள் கூட்டங் கூட்டமாக பயந்தோடப்பெற்றதுமாகிய லங்காபுரத்தைக் கண்டு உடனே தனக்குள் இங்ஙனம் சிந்தித்தனன். அவனுக்கு மனத்தில் மிகுதியும் பயம் உண்டாயிற்று. அவன் தன்னைத் தானே நிந்திக்கவும் நிந்தித்துக்கொண்டனன். அதன் பிறகு அவன் தனக்குள் 'நான் இவ்விலங்கையைக் கொளுத்திவிட்டேனே! என்ன கார்யம் செய்தேன்? கெடுதியேயல்லவா! எவர் கோபம் மேலெழும்பொழுது எரிகிற அக்னியை ஜலத்தினால் அணைப்பதுபோல் அந்தக் கோபத்தைப் புத்தியால் அடக்கிக்கொள்வரோ, மஹானுபாவர்களான அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களே புண்யவான்கள். கோபமுற்றவன் எவன் பாபஞ்செய்யாதிருப்பான்? கோபமுற்றவன் குருக்களையுங்கூடக் கொன்றுவிடுவான். கோபமுற்ற மனிதன் பருஷவாக்யங்களால் ஸத்புருஷர்களையும் திரஸ்கரிப்பான். கோபமுற்றவனுக்கு எப்பொழுதும் 'இவ்வார்த்தை சொல்லத்தகும், இவ் வார்த்தை சொல்லத்தகாது' என்பது தெரியாது. எவ்விடத்திலாயினும் கோபமுற்றவனுக்குச் செய்யக்

கூடாத கார்யமும் சொல்லக்கூடாத வார்த்தையும் எதுவுமே இராது. எவன், பாம்பு முதிர்ந்த தோலை உரிப்பதுபோல், தனக்கு உண்டான கோபத்தைப் பொறுமையால் துறப்பானே, அவனே புருஷனெனப் படுவான். நான் அந்த ஸீதை இருக்கிறுளென்பதை நினையாமல் லங்கையில் நெருப்பை வைத்தேனே! ஆகையால் ஸ்வாமிக்குக் கெடுதியைச் செய்பவனும் மிகவும் துர்ப்புத்தியும் வெட்கமில்லாதவனும் மிகுந்த பாபிஷ்டனுமாயிருக்கின்றனன். சீ! என் பிழைப்புப் பாழாய்விடுமாக. இந்த லங்கை என்னவோ கொளுத்தப்பட்டது; பூஜைக்கிடமான ஸீதையும் இதிலிருக்கையால் கொளுத்தப்பட்டிருப்பாள். இது நிச்சயம். ஆகையால் நான் தெளிவற்று ப்ரபுவின் கார்யத்தைப் பாழ்செய்தவனுனேன். எதற்காக இவ்வளவு ப்ரயத்னமெல்லாஞ் செய்யப்பட்டதோ, அக்கார்யத்தைப் பாழாக்கிவிட்டேனே. ஏனெனில், நான் லங்கையைக் கொளுத்தும்பொழுது ஸீதையைப் பாதுகாக்காமற் போனேனே. ஸமுத்ரத்தைத் தாண்டி ஸீதை இருக்குமிடங் கண்டுபிடித்து ராமனுக்குத் தெரிவிக்கும்படியான இந்தப் பெரிய கார்யத்திற்கு முயன்று அதில் வேண்டியமட்டும் ஸாதித்தாய்விட்டது. இனி ராமனிடம் போய்த் தெரிவிக்கவேண்டியது சிறிதே இதில் மிகுந்திருக்கின்றது. ஆகையால் இதை முழுவதும் செய்து முடித்தாற்போலவே. இதற்கு ஸந்தேஹமே இல்லை. ஆனல் என்னெனில், நான் கோபத்திற்கு உட்பட்டு மெய்ம்மறந்து இந்தக் கார்யத்தை அடியோடு நாசஞ் செய்துவிட்டேனே. ஸீதை நிச்சயமாக நாசமடைந்தே இருப்பாள். ஏனெனில், இவ்விலங்கையில் ஒரு ப்ரதேசமாயினும் கொளுத்தப் படாதது புலப்படவில்லை. பட்டணமெல்லாம் நீறாய் விட்டது. என் விவேகக்குறையினுல், ஸீதை நசித்து நான் முயன்ற கார்யமெல்லாம் பாழாயிருக்குமாயின், நானும் இப்பொழுது இங்கேயே ப்ராணன்களை விடுவது எனக்கு யுக்தமாகத்தோற்றுகின்றது. என்ன

செய்யலாம்! இப்பொழுது அக்னியில் குதிக்கலாமா? அல்லது படபாக்னியில் விழலாமா? அல்லது ஸமுத்ரத்தில் வீழ்ந்து அதிலுள்ள ஜலஜந்துக்களுக்கு என் தேஹத்தை ஆஹாரமாகக் கொடுக்கலாமா? நான் இங்ஙனம் கார்யத்தை யெல்லாம் கெடுத்துக்கொண்டு இனி ப்ராணன்களை வைத்துக்கொண்டு வானரேச்வரனான ஸுக்ரீவனை எங்ஙனம் காண்பேன்? புருஷச்ரேஷ்டர்களான அந்த ராமலக்ஷ்மணர்களையாவது எங்ஙனம் பார்க்க முடியும்? இப்பொழுது நான் கோபங்கொண்ட தோஷத்தினால் இலங்கையைக் கொளுத்தி, வெறுமனே இராமல் தோன்றினதை யெல்லாஞ் செய்வதாக மூன்று லோகங்களிலும் ப்ரஸித்திபெற்ற அந்தக் குரங்குத்தனத்தையே இதோ எல்லோருக்கும் தெரியும்படி வெளிப்படுத்திக்கொண்டனன். நான் பாதுகாக்க வல்லவனாயிருந்தும் ஆக்ரஹத்தினால் ஸீதையைப் பாதுகாத்துக்கொள்ளாது போயினன். ஆகையால் தடுப்பாற்று மிகுதியும் ஸ்வதந்த்ரமாயிருப்பதும் வெறுமனே இராமல் எதேனுமொன்றைச் செய்விக்குந் தன்மையதுமாகிய என் ராஜஸ ஸ்வபாவம் சீ! சீ! ருகுமாக. ஸீதை மரணம் அடைந்தவுடனே அதை அறிந்து அந்த ராமலக்ஷ்மணர்கள் இருவரும் நசித்துப் போவார்கள். அவ்விருவரும் நாசமடைகையில், ஸுக்ரீவன் ஸமஸ்த பந்துக்களொடும் நாசம் அடைவான். பரதனோ, அண்ணன் தம்பிகளிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனாகையால் அந்த தர்மஸ்வபாவன் இந்த ஸங்கதியைக் கேட்டவுடனே தானும் சத்ருக்னனுமாக எங்ஙனம் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பான்? இங்ஙனம் மிகுதியும் தர்மஸ்வபாவமுடைய இக்ஷ்வாகு வம்சமெல்லாம் நாசம் அடைந்தவுடனே, ப்ரஜைகளெல்லோரும் துக்கத்தினாலுண்டான பரிதாபத்தினால் பீடிக்கப்பட்டவராவார். இதற்கு ஸந்தேஹம் இல்லை. ஆகையால் நான் பாக்யமற்றவனும் தர்மார்த்தங்களிரண்டையும் கைப்பற்றாதவனும் ரோஷதோஷத்தினால் நிறைந்தவனும் உலகத்தையெல்லாம் பாழ்செய்

பவனுமாகின்றனன். இவ்விஷயத்தில் ஸந்தேஹமே இல்லை' என்று சிந்தித்தனன். இங்ஙனம் ஹனுமான் சிந்தித்துக்கொண்டிருக்கையில் இதுவரையில் அவனுக்குச் சிறிது தோற்றியிருந்த சுபசகுனங்களை நன்கு தெளிவாகும்படி மீளவும் புலப்பட்டன. அனந்தரம் அவ்வானரன் மீளவும் தனக்குள் சிந்தித்தனன் :—'இல்லையாயின், ஸர்வாங்க ஸுந்தரியும் மங்கள ஸ்வரூபையுமாகிய அந்த ஸீதை தன் தேஜஸ்ஸே தன்னைப் பாதுகாத்துவரப்பெற்று எள்ளளவும் நாசம் அடைந்திருக்கமாட்டாள். அக்னி அக்னியைக் கொளுத்தாது. அப்பெண்மணியோ, தர்ம ஸ்வபாவனும் அபார தேஜஸ்வியுமாகிய ராமனுடைய பார்யை; மற்றும் தன் பாதிவ்ரத்யத்தினலேயே நன்கு பாதுகாக்கப்பட்டிருப்பவள். அப்படிப்பட்ட ஸீதையை அக்னிதேவன் ஸ்பர்சிக்கவும் வல்லனல்லன். இனி கொளுத்த முடியாதென்பது சொல்லவேண்டுமோ? அக்னிக்குக் கொளுத்துவதே ஸ்வபாவம்; இப்படியிருப்பினும் இவ்வக்னி என்னைக் கொளுத்தாதிருக்கின்றதே! இது ராமப்ரபாவத்தினலும் ஸீதாதேவியின் புண்யத்தினலும் விளைந்ததேயன்றி வேறன்று. இப்படியிருக்க, உடன்பிறந்தவர்களாகிய பரதன் முதலிய மூவர்க்கும் தேவதைபோல் உபாஸிக்கத் தகுந்தவளும் ராமனது மனத்திற்கு மிக இனியளுமாகிய அப்பெண்மணி எங்ஙனம் நாசமுறுவாள்? அப்படியில்லையாயின் கொளுத்துவதே தொழிலாகி எவ்விடத்திலும் தன் சக்திக்குத் தடையின்றி, என்றும் நாசமடையாமலுமிருக்கிற இவ்வக்னிதேவன் என்னுடைய வாலையே கொளுத்தவில்லையே! இனி பூஜைக்கிடமான ஸீதையை எங்ஙனம் தஹிப்பான்' என்று சிந்தித்தனன். ஹனுமான் அவ்விஷயத்தில் ஆச்சர்யம் அடைந்து, மீளவும் அப்பொழுது ஸமுத்ரஜல மத்யத்தில் தனக்கு மைனுகபர்வதம் தோற்றினதை நினைத்தனன். அன்றியும் அவன் தனக்குள் 'ஸீதை தனது தவமஹிமையாலும் ஸத்யத்தையே மொழியுங்

தன்மையினாலும் கணவனைத்தவிர மற்றொன்றையும் நினையாமையாகிற பாதிவ்ரத்யத்தின் பெருக்கினாலும் அக்னியையுங்கூட தஹித்துவிடுவாளே! அப்படிப் பட்ட அவளை அக்னிதேவன் எள்ளளவும் தஹிக்க வல்லனல்லன்' என்று சிந்தித்தனன். அந்த ஹனுமான் அங்ஙனம் ஸீதையின் தர்மப்ரபாவத்தை அவ்விடத்தில் சிந்தித்துக்கொண்டிருக்கையில் மஹானுபாவர்களான சாரணர்கள் சொல்லுகிற வார்த்தைகளைச் செவியுற்ற னன். அவர்கள் 'அஹோ! ஹனுமான் ராக்ஷஸக்ருஹங்க ளில் பயங்கரமான அக்னியை நிரம்பவும் மூட்டி எவர்க்கும் செய்யமுடியாத கார்யத்தைச் செய்தனன். என்ன ஆச்சர்யம்! ராக்ஷஸர்களும் ராக்ஷஸஸ்த்ரீகளும் இளைஞர்களும் வ்ருத்தர்களும் பயந்து பறந்தோடப் பெற்று ஜனங்களின் கோலாஹல த்வனிகளால் நிறைந்த இவ்விலங்கை முழுவதும் பர்வத குஹையில் அழுவது போலிருக்கின்றது. இந்தப் பட்டணமெல்லாம் கடைத்தெருக்களோடும் கோட்டைகளோடும் தோரண வாசற்படிகளோடுங் கொளுத்தப்பட்டது. ஸீதை மாத்ரம் கொளுத்தப்படவில்லை. இப்படிப்பட்ட ஆச்சர்யம் இதுவரையில் என்றும் நாம் பார்த்ததே இல்லை' என்று சொல்லிக்கொண்டனர். அந்த ஹனுமான் இதுவரையில் பலதடவைகளில் பயன் பட்டவைகளான கண் துடிப்பது முதலிய சகுனங்க ளாலும் ஸீதையின் பாதிவ்ரத்யம் ராமப்ரபாவம் முதலிய மிகுந்த குணமுடைய காரணங்களாலும் சாரணர்கள் சொல்லிக்கொள்ளுகிற வார்த்தைக ளாலும் 'ஸீதைக்குக் கெடுதி உண்டாகவில்லை' யென்று மனத்தில் ஸந்தோஷமுற்றனன். அனந்தரம் ஹனு மான், விரும்பிவந்தகார்யம் நிறைவேறி ராஜகுமாரத்தி யான ஸீதை நாசமடையாதிருத்தலையும் அறிந்து மீளவும் அந்த ஸீதையை நேரில் கண்டு ராமனிடம் திரும்பிப்போக மனத்தில் நினைவுற்றனன். ஐம்பத் தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஹனுமான் ஸீதையிடம் விடைபெற்றுக் கொண்டு ப்ரயாணமாய்ப் போதல்.

அனந்தரம் ஹனுமான் சிம்சுபாவ்ருக்ஷத்தினடியில் இருக்கிற ஸீதையிடம் போய் அவளுக்கு நமஸ்காரஞ்செய்து 'என் அத்ருஷ்டத்தினால் நீ யாதொரு அபாயமும் அடையாதிருக்கக் காண்கின்றேன்' என்றனன். அனந்தரம் ப்ரயாணமாய்ப் புறப்பட முயன்றிருக்கிற அந்த ஹனுமானை ஸீதை அடிக்கடி பார்த்துக்கொண்டு பர்த்தாவினிடத்திலுள்ள ஸ்னேஹமெல்லாந் திகழும்படியான உரைகளுடன் இங்ஙனம் மொழிந்தனள்.—'சத்ருவீரர்களை அடக்கும் வீரனே! இந்த ராக்ஷஸர்களெல்லோரையும் உருமாய்த்து என்னை ராமனுடன் சேர்ப்பிக்கையாகிற இக்கார்யத்தை நிறைவேற்றுவதற்கு நீ யொருவனே வல்லவன். நீ இங்ஙனம் வெளிப்படுத்துகிற உன் பலத்தின் மிகுதி உனக்கு மிகுதியும் புகழ்ச்சியை விளைப்பதேயன்றி ராமனுக்கன்று. சத்ரு ஸைன்யங்களை அடக்குந் திறமையுடைய அந்த ராமனே இவ்விடம் வந்து பாணங்களால் இவ்விலங்கை முழுவதையும் பாழ்செய்து என்னைக் கொண்டுபோவானாயின், அது ககுத்ஸ்த குலாலங்காரனான அம்மஹானுபாவனுக்குத் தகுந்திருக்கும். ஆனதுபற்றி யுத்தத்தில் மஹாசூரனாகிய அம்மானுபாவன் தனக்குத் தகுந்த ரீதியில் பராக்ரமத்தை நிறைவேற்றும்படி நீயே நடப்பிக்கவேண்டும்' என்றனள். அங்ஙனம் ஸீதை மிகுந்த பொருளடக்கமுடையதும் வணக்கம் பொருந்தியதும் காரணம் அமைந்ததுமாக மொழிந்த மொழியைக் கேட்டு, ஹனுமான் மறுமொழி கூறத்தொடங்கி 'யுத்தத்தில் சத்ருக்களையெல்லாம் வென்று உன் துக்கங்களைப் போக்கவல்ல அந்த ராமன் வானரஸ்ரேஷ்டர்களோடும் மேலான [1] பல்லூகர்களோடும் கூடிச் சீக்கிரத்தில் வரப்போகின்றனன்' என்றுரைத்தனன். வாயு

1. பல்லூகம்—கரடி.

குமாரஞன ஹநுமான் இங்ஙனம் ஸீதைக்கு ஸமாதா
னஞ் சொல்லி உடனே ராமனிடம் போக நினைத்து
அவளுக்கு நமஸ்காரஞ் செய்தனன். அனந்தரம் பகை
வரை அடக்குந் திறமையுடைய அவ்வானர ஸிம்ஹன்
தன் ப்ரபுவான ராமனைக் காணவேண்டுமென்று மிகுதி
யும் விருப்பமுற்றுப் பர்வதங்களில் சிறந்த அரிஷ்ட
மென்கிற பர்வதத்தின்மேல் ஆரோஹித்தனன். அப்
பர்வதம் தாமரையிதழ் வர்ணமுடைய உயர்ந்த பல
வ்ருக்ஷங்களோடுகூடின கறுத்த வனராசிகள் சுற்றி
லும் விளங்கப்பெற்றுச் சித்ரங்களெழுதின கறுத்த
வஸ்த்ரந் தரித்ததுபோலிருந்தது. மற்றும் சிகரங்களி
னிடையில் தொங்குகின்ற மேகங்களால் அப்பர்வதம்
உத்தரீயந் தரித்ததுபோல் புலப்பட்டது. பாலஸூர்
யன் தன் கிரணங்களாகிற ஹஸ்தங்களால் ப்ரீதியுடன்
அப்பர்வதத்தை எழுப்புவதுபோலிருந்தனன். அதில்
பெருகிவருகின்ற கைரிகதாதுக்களைக் காண்கையில்,
அப்பர்வதம் ஸூர்யன் அங்ஙனம் எழுப்புகையில்
தூக்கம் விழித்துக் கண்களைத் திறந்து பார்ப்பதுபோ
லிருந்தது. அதிலுள்ள மலையாறுகள் சலசலவென்று
பெருகுங் கம்பீர த்வனிகளால் அது உரக்க வேதாத்ய
யனஞ் செய்வது போலவும், மிகுதியும் ஸ்பஷ்டமான
நானாவித அருவிகளின் சப்தங்களால் நன்கு கானஞ்
செய்வதுபோலவும் புலப்பட்டது. மற்றும் அதில்
மிகுதியும் உயரமாக வளர்ந்திருக்குந் தேவதாரு
வ்ருக்ஷங்களால் அது கைகளை உயரத்தூக்கிக்கொண்டு
தவஞ்செய்வதுபோலவும், தாழ்வரைகளினின்று
பெருகும் ஜலப்ரவாஹங்களின் உரத்த கோஷங்களால்
முழுவதும் முறையிடுவதுபோலவும் தோற்றியது.
சரத்காலத்தில் புஷ்பிக்கிற ஏழிலைப்பாலை முதலிய
கருத்துச்செழித்த வ்ருக்ஷங்கள் நிரம்பவும் புஷ்பித்துக்
காற்றினால் அசைந்துகொண்டிருப்பதுபற்றிக் கிழத்
தனத்தினால் நடுக்கமுற்றிருப்பதுபோலவும், காற்றால்
அசைக்கப்பட்ட கீசகமென்னும் மூங்கில்கள் சப்திக்கை
யால் இன்னது இனியதென்று தெரியாமல் கூவுவது

போலவும் புலப்பட்டது. அதிலுள்ள பெரிய ஸர்ப்பங்கள் பெருமூச்செறிந்துகொண்டிருப்பது கண்டால், அப்பர்வதம் ஹநுமானிடத்தில் பொறுமையால் பெருமூச்சு விடுவதுபோலவும், பனிகளால் மூடப்பட்டு மிகுதியும் அகன்றாழ்ந்து நிஸ்ஸப்தமான குகைகளைக் கண்டால் இந்த்ரியங்களை அடக்கி த்யானஞ் செய்வது போலவும், படர்ந்து வருகின்ற மேகங்கள்போன்ற சிறிய குன்றுகளாகிற பாதங்களால் நடந்து செல்ல முயன்றதுபோலவும், மேகவரிசைகள் உறைகின்ற சிகரங்களால் ஆகாயத்தில் சோம்பல் முறிப்பது போலவும் தோற்றிக்கொண்டிருந்தது. பல குகைகளோடுகூடின அதன் சிகரங்கள் ஹநுமானுடைய வேகத்தைப் பொறுக்கமுடியாமல் பலவாறாகச் சிதறி அதற்கு ஓர் சோபையை விளைத்துக்கொண்டிருந்தன. மாவலிங்கைமரங்களும் பனைமரங்களும் ஆச்சா மரங்களும் பல மூங்கில் புதர்களும் அதைச் சுற்றிலும் சூழ்ந்திருந்தன. முழுவதும் படர்ந்திருப்பனவும் புஷ்பங்கள் நிறைந்து ரமணீயங்களுமான பல கொடிஸமூஹங்கள் பின்னிக்கொண்டு அதற்கு ஓர் அழகை விளைவித்துக் கொண்டிருந்தன. அதில் நாநாவித ம்ருக ஸமூஹங்கள் நிறைந்திருந்தன. கைரிகதாதுக்களின் பெருக்குகளால் அது மிகுதியும் அழகுற்றிருந்தது. மலையருவிகள் பலவும் அதில் பெருகிக்கொண்டிருந்தன. பெரும்பெரிய கற்களின் கூட்டங்களால் அது நெருக்கமுற்றிருக்கும். மஹர்ஷிகளும் யக்ஷர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் உரகர்களும் அதில் வந்து உலாவிக்கொண்டிருப்பார். கொடிகளும் செடிகளும் அதில் கூட்டங்கூட்டமாயிருக்கும். அதன் குகைகளில் ஸிம்ஹங்கள் வஸித்துக் கொண்டிருக்கும். புலிக்கூட்டங்கள் நாற்புறத்திலும் நிறைந்திருக்கும். அதில் ருசியுள்ள வேர்களும் பழங்களுமுடைய வ்ருக்ஷங்கள் விளக்கமுற்றிருக்கும். இங்ஙனம் திகழ்கின்ற அந்த அரிஷ்ட பர்வதத்தில் வாயு குமாரனான ஹநுமான், ராமனைப் பார்க்கவேண்டுமென்னும் த்வரையுடன் கூடின மிகுந்த ஸந்தோஷத்தி

ளுல் தூண்டப்பட்டு ஆரோஹித்தனன். அனந்தரம் அவன் அழகான அம்மலைச்சாரல்களிலுள்ள கற்களில் பாதங்களை ஊன்றி நடக்கையில், அவை கோஷத்துடன் தூள் தூளாகிச் சிதறின. அனந்தரம் அவ்வானர வீரன் அந்தச் சிறந்த பர்வதத்தின்மேல் ஏறி, அனந்தரம் ஸமுத்ரத்தின் தென்கரையினின்று வடகரைக்குப் போக விரும்பி மேனியைப் பெருக்கச் செய்தனன். வீரனும் வாயுகுமாரனுமாகிய ஹனுமான் அந்தப் பர்வதத்தின்மேல் ஏறி மீன்களுக்கும் ஸர்ப்பங்களுக்கும் இருப்பிடமாகிப் பயங்கரமாயிருக்கின்ற ஸமுத்ரத்தைக் கண்டனன். வானர ஸ்ரேஷ்டனாகிய அவ்வாயுகுமாரன் ஸமுத்ரத்தின் தென்கரையினின்று வடகரைக்குப் போய்ச் சேரும்பொருட்டு வாயுதேவனைப் போல் ஆகாயத்தில் கிளம்பினன். அப்பொழுது அம் மேலான பர்வதம் ஹனுமானால் பீடிக்கப்பட்டுச் சிகரங்கள் கிடுகிடுவென்று நடுங்கவும் வ்ருக்ஷங்கள் வேர் அறுந்து விழவும் பெற்றுத் தன்னிடத்திலுள்ள ஜந்துக்களோடு பெருங்கோஷமிட்டது. அன்றியும் பூமியில் அழுங்கிவிட்டது. சிகரங்கள் நடுங்கின; வ்ருக்ஷங்கள் வேர் அறுந்து விழுந்தன. புஷ்பித்திருக்கிற அதிலுள்ள வ்ருக்ஷங்கள் அந்த ஹனுமானுடைய துடைவேகத்தினால், வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்டவைபோல் முறிந்து தரையில் வீழ்ந்தன. அதன் குகைகளிலுள்ள மஹாபராக்ரமசாலிகளான ஸிம்ஹங்கள் ஹனுமான் அதில் காலூன்றுகையால் பீடிக்கப்பட்டுப் பயங்கரமாகக் கர்ஜிக்கையில், அந்த த்வனி ஆகாயத்தைப் பிளப்பதுபோல் உரக்கச் செவிப்பட்டது. அப்பொழுது அம்மலையில் உலாவிக்கொண்டிருந்த வித்யாதர ஸுந்தரிகள் வஸ்த்ரங்கள் நழுவித் தாறுமாறாகவும் பூஷணங்கள் கலைந்து சிதறவும் பெற்றுத் திடீலென்று அந்தப் பர்வதத்தினின்று ஆகாயத்தில் கிளம்பினர். அளவும் பலமும் மிகுந்திருக்கப்பெற்றவைகளும் பளபளவென்று ஜ்வலிக்கின்ற நாக்குடையவைகளும் மஹாவிஷமுடையவைகளுமாகிய பெரிய ஸர்ப்

பங்கள் உடைந்து விழுகிற பெரிய கற்களால் தலையும் கழுத்தும் முறியப்பெற்றுத் துடித்துச் சுழன்று பரிதபித்தன. அப்பொழுது கின்னரர்களும் உரகர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் வித்யாதரர்களும் ஹனுமானால் பிடிக்கப்பட்ட அம்மேலான பர்வதத்தைவிட்டு ஆகாயத்தில் கிளம்பினர். வ்ருக்ஷங்கள் நிறைந்த சிகரங்களோடு கூடியிருக்கையால் மிகுதியும் உயர்ந்து சிறந்து விளங்குகின்ற அப்பர்வதம் பலிஷ்டனாகிய அந்த ஹனுமான் பாதங்களை ஊன்றிப் பிடிக்கையால் பாதாளத்தில் ஆழ்ந்து நிலத்திற்கு ஸமமாயிருந்தது. பத்துயோஜனை விஸ்தீர்ணமும் முப்பதுயோஜனை உயரமும் உடைய அந்த அரிஷ்டபர்வதம் பாதாளத்தில் அழுந்தி நிலத்தோடு நிலமாயிருந்தது, இங்ஙனம் ஹனுமான், கரையோரத்தில் பேரலைகள் வந்து மோதப்பெற்றுப் பயங்கரமாயிருக்கின்ற அந்த லவண ஸமுத்ரத்தை அவலீலையாகவே தாண்ட விரும்பி ஆகாயத்திற் கிளம்பினன். ஐம்பத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் மீளவும் ஸமுத்ரத்தைத்
தாண்டி அக்கரை சேருதலும், போய்
வந்த வ்ருத்தாந்தத்தை ஜாம்பவான்
முதலியவர் வினவுதலும்.

சந்த்ரன் வெண் நெய்தலாகவும் ஸூர்யன் நீர்க்காகமாகவும் புஷ்யச்ரவண நக்ஷத்ரங்கள் கலஹம்ஸமாகவும் மேகங்கள் வேலம்பாசியாகவும் பசும்புற்களடர்ந்த நிலமாகவும் புனர்வஸு நக்ஷத்ரம் பெரிய மீனாகவும் அங்காரகன் பெருமுதலையாகவும் ஐராவதம் பெரிய தீவாகவும் ஸ்வாதீநக்ஷத்ரம் ஹம்ஸமாகவும் பெற்று ரமணீயமாயிருப்பதும், ஓயாது வீசுகின்ற காற்றுக்கூட்டங்களை மேற்கிளம்பின அலைகளாகவும்

சந்த்ர கிரணங்களே குளிர்ந்த ஜலமாகவும் அந்தந்த வர்ணங்களோடு விளங்குகின்ற உரகர்களும் யக்ஷர்களும் கந்தர்வர்களும் மலர்ந்த தாமரைகளும் நெய்தல்களுமாகவும் பெற்று அழகாயிருப்பதும், கரையில்லாததுமான ஆகாயமாகிற மஹாஸமுத்ரத்தை வாயுவை நிகர்த்த வேகமுடைய ஹனுமான் சிறிதும் சோம்பலின்றிப் பெரிய ஓடம் ஸமுத்ரத்தைத் தாண்டுவதுபோல் இளைப்பின்றித் தாண்டினன். வாயுகுமாரனும் தைர்ய வீர்யாதி லக்ஷ்மீ விலாஸமுடையவனும் வானரஶ்ரேஷ்டனுமாகிய ஹனுமான் ஆகாயத்தை விழுங்குவான் போலும் சந்த்ரன்மேல் உறைபவன்போலும் நக்ஷத்ரங்களோடும் ஸூர்ய மண்டலத்தோடுங் கூடின ஆகாயத்தையும் மேக ஸமூஹங்களையும் இழுத்துக்கொண்டு போகிறவன்போலும் ஆகாயத்தில் பறந்து சென்றனன். மஹாமேகங்கள் தேஜஸ்வியாகிய ஹனுமானுடைய ஒளி வெள்ளம் தம்மேல் படுகையால் ஸூர்ய கிரணங்கள் படும்பொழுது நிறம்மாறி நானாவர்ணங்களாய் விளங்குவதுபோல், வெளுத்தும் சிவந்தும் கறுத்தும் மஞ்சிஷ்டையின் வர்ணமுடையவைகளாகவும் பச்சையாகவும் கருப்பும் சிவப்பும் கலந்த வர்ணமுடையவைகளாகவும் ப்ரகாசித்தன. அவன் அடிக்கடி மேக ஸமூஹங்களில் புகுவதும் அடிக்கடி வெளிப்படுவதுமாகி மேகங்களில் மறைவதும் தோற்றுவதுமா யிருக்குஞ் சந்த்ரன்போல் புலப்பட்டனன். அப்பொழுது வெளுத்த வஸ்த்ரந் தரித்திருக்கிற வீரனாகிய ஹனுமான் நானாவிதங்கான மேகஸமூஹங்களில் வழி பண்ணிக்கொண்டு போகின்றமையால் ஆகாயத்தில் தன் சரீரம் சிறிதுநேரம் புலப்படவும் சிறிதுநேரம் புலப்படாமல் மறையவும் பெற்றுச் சந்த்ரன்போல் ப்ரகாசித்தனன். வாயுகுமாரனாகிய ஹனுமான் அடிக்கடி மேக ஸமூஹங்களைப் பிளந்து வழி பண்ணிக்கொண்டு அவைகளில் மறைவதும் அடிக்கடி வெளிப்படுவதும், இடிபோன்ற பெரிய கண்டத்வனி யுடையவனாகையால் கம்பீரமான ஸிம்ஹ

நாதஞ் செய்வதுமாகி ஆகாயத்தில் கருடன்போல் ப்ரகாசித்தனன். மஹா தேஜஸ்வியாகிய ஹனுமான், மேலான ராக்ஷஸர்களைக் கொன்று, தன் பேரை எல்லோர் செவிகளிலும் படும்படி உரக்கச் சொல்லிப் பட்டணத்தை யெல்லாம் வ்யாகுலப்படுத்தி, ராவணனுக்குப் பெருந்துக்கத்தை மூட்டி, பயங்கரமான அவனது ஸைன்யத்தையும் வருத்தி, ஸீதாதேவிக்கு நமஸ்கரித்து, மீளவும் ஸமுத்ரத்தின் வழியாகத் திரும்பி வந்தனன். அம்மஹா வீரன் பர்வதஶ்ரேஷ்டமாகிய மைனாகபர்வதத்தைத் தடவிக் கொடுத்து விடைபெற்றுக்கொண்டு நாணினின்று விடப்பட்ட நாராசபாணம்போல் மிக்க வேகத்துடன் போயினன். அவ்வானர ஸத்தமன் மைனாக பர்வதத்தைத் தாண்டிக் கொஞ்சதூரம் போய் மேகம் போன்ற மஹேந்த்ர பர்வதத்தைக் கண்டு ஸந்தோஷத்தினால் ஸிம்ஹநாதஞ் செய்தனன். மேக கர்ஜனம்போன்ற மஹா த்வனியுடைய ஹனுமான் அங்ஙனம் பெருந்த்வனி உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்து அதனால் திசைகளெல்லாம் நிறைந்திருக்கும் படி செய்தனன். அனந்தரம் அவ்வானர ஸிம்ஹன் அங்கதாதிகள் இருக்குமிடத்திற்கு ஸமீபமான ப்ரதேசத்தை அடைந்து நண்பர்களைப் பார்க்கவேண்டு மென்னுங் குதூஹலத்தினால் ஸிம்ஹநாதஞ் செய்து வாலையும் உதறினன். கருடன் ஸஞ்சரிப்பதான ஆகாச மார்க்கத்தில் அடிக்கடி ஸிம்ஹநாதஞ் செய்கின்ற அந்த ஹனுமானுடைய கண்ட கோஷத்தினால் ஸூர்ய மண்டலத்துடன் கூடின ஆகாயமெல்லாம் பலவாறு சிதறுவதுபோலிருந்தது. அங்கு ஸமுத்ரத்தின் வடகரையில் ஹனுமானைப் பார்க்கவேண்டுமென்று மிகுதியும் விருப்பமுற்றவரும் முன்னமேபிடித்து எதிர்பார்த்துக்கொண்டிருப்பவரும் மஹாபலிஷ்டர்களும் சூரர்களுமான அங்கதாதிகள் வாயுவினால் தூண்டப்பட்ட மஹாமேகம் கர்ஜிப்பதுபோன்ற அந்த ஹனுமானுடைய ஸிம்ஹநாதத்தையும் துடைவேகத்

தையும் செவியுற்றனர். என்ன ஸங்கதியைக்கேட்க நேருமோவென்று மனத்தில் வருத்தமுற்றிருக்கின்ற அங்கதன் முதலிய அவ்வானரர்கள் அனைவரும் மேக கர்ஜனம்போன்ற ஹனுமானுடைய ஸிம்ஹநாதத்தைச் செவியுற்றனர். அவ்வானரர்களெல்லோரும் அங்ஙனம் ஸிம்ஹநாதஞ்செய்கின்ற ஹனுமானுடைய கண்டத்வனி யைக் கேட்டுத் தமது நண்பனைப் பார்க்கவிரும்பி விரை வுற்றிருந்தனர். வானரஶ்ரேஷ்டனாகிய அந்த ஜாம்ப வான் அப்பொழுது மனத்தில் பரமஸந்தோஷம் அடைந்து வானரர்களெல்லோரையும் அழைத்து அவருடன் 'இந்த ஹனுமான் எல்லாவிதத்திலும் கார்யம் ஈடேறப்பெற்றே வருகின்றனன். இதற்கு ஸந்தேஹம் இல்லை. இவன் கார்யம் கைகூடப்பெறு திருப்பானாயின் இவனுடைய கண்டத்வனி இவ்விதமா யிராது' என்றனன். வானரர்கள் மஹானுபாவனாகிய அந்த ஹனுமானுடைய பாஹுவேகத்தையும் துடை களின் வேகத்தையும் கண்டும் ஸிம்ஹநாதத்தைக் கேட்டும் ஸந்தோஷம் அடைந்து ஆங்காங்கு மேற் கிளம்பிப் பாயத்தொடங்கினர். அவ்வானரர்கள் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து ஹனுமானைப் பார்க் கும்பொருட்டுச் செடிகளினின்று செடிகளுக்கும் சிகரத்தினின்று சிகரத்திற்கும் கிளம்பிவந்து ஒன்றாகக் கூட்டங்கூடினர். அவ்வானரர்கள் ஸந்தோஷத்தினால் வ்ருக்ஷங்களின் நுனிக்கிளைகளைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து தூரத்தில் நண்பர்கள் வரும்பொழுது அவர்களைச் சீக்ரமாக வரும்படி தம் வஸ்த்ரங்களை உயரத்தூக்கி அசைக்கிக்காட்டுவதுபோல், ' ஹனுமா னைச் சீக்ரமாக வரச் சொல்லும்பொருட்டு அந்த நுனிக்கிளைகளை அசைக்கிக்காட்டினர். வாயு பர்வத குஹைகளில் புகுந்து கர்ஜிப்பதுபோல், வாயுபுத்ரனும் பலிஷ்டனுமாகிய ஹனுமான் கர்ஜித்தனன். அவ்வான ரர்களெல்லோரும் அப்பொழுது மேக ஸமூஹம்போல் வருகின்ற அவ்வானரஶ்ரேஷ்டனைக் கண்டு கைகளைக் குவித்து நின்றிருந்தனர். அனந்தரம் மிகுந்த வேகமும்

பர்வதம்போன்ற உருவமும் உடைய ஹநுமான் வ்ருக்ஷங்கள் நிறைந்த அம்மஹேந்த்ர பர்வதத்தின் சிகரத்தில் இறங்கினன். அந்த ஹநுமான் நண்பர்களைப் பார்த்த ஸந்தோஷம் மனத்தில் நிறைந்திருக்கப் பெற்று அந்தப் பர்வதத்தில் ரமணீயமான ஒரு மலையருவியின் ஸமீபத்தில் சிறைகள் அறுக்கப்பெற்ற பர்வதம் போல் ஆகாசத்தினின்று இறங்கினான். அனந்தரம் அந்த வானர ஶ்ரேஷ்டர்களெல்லோரும் மனத்தில் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து மஹானுபாவனாகிய ஹநுமானைச் சுற்றிச் சூழ்ந்து நின்றனர். அவர்களெல்லோரும் அங்ஙனம் அவனைச்சுற்றிக்கொண்டு பரமஸந்தோஷமுற்றிருந்தனர். அவ்வானரர்களெல்லோரும் அங்ஙனம் ஒரு கெடுதியுமின்றி க்ஷேமமாக வந்திருக்கின்ற வானரஶ்ரேஷ்டனும் வாயுபுத்ரனுமாகிய ஹநுமானைப் பார்த்து முகத்தில் ஸந்தோஷம் வழியப் பெற்று வேர்களையும் பழங்களையும் கொண்டு வந்து உபஹாரமாக ஸமர்ப்பித்து அவனைப் பூஜித்தனர். மஹாகபியாகிய அந்த ஹநுமானும் ஜாம்பவான் முதலிய வயது முதிர்ந்த பெரியோர்களுக்கும் யுவராஜனாகையால் குமாரனாகிய அங்கதனுக்கும் வந்தனஞ் செய்தனன். பூஜைக்கிடமான அம்மஹா பராக்ரமன் ஜாம்பவானும் அங்கதனும் பூஜிக்கையில் கபிகளும் தன்னைப் பணிந்து அருள்புரியச் செய்கையில் 'கண்டேன் ஸீதையை' என்று ஸந்தேஹமின்றித் தெரியும்படி சுருக்கமாகச் சொல்லினன். மற்றும் அவன் வாலிகுமாரனாகிய அங்கதனைக் கையில் பிடித்துக் கொண்டு அப்பொழுது மஹேந்த்ரபர்வதத்தில் ரமணீயமான ஒரு வனப்ரதேசத்தில் உட்கார்ந்தனன். அப்பொழுது ஹநுமான் ஸந்தோஷத்துடன் வானரஶ்ரேஷ்டர்களான அங்காதாதிகளை நோக்கி 'அசோகவனிகையில் மிகுதியும் பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸஸ்த்ரீகள் காத்திருக்கப்பெற்ற அநிந்திதையான (நிந்தைக்கிடமாகாத) அந்த ஜனகராஜன் புதல்வியைக் கண்டனன். அப்பெண்மணி தலைமயிர்களை

ஒரு பின்னலாகப் பின்னிக்கொண்டு ராமனைப் பார்க்க மிகுதியும் குதூஹலமுற்று உபவாஸங்களால் வருந்தி இளைத்து ஜடைகளைத் தரித்து அங்கம் முழுவதும் தூள்படியப் பெற்றிருக்கின்றனள்' என்றனன். அனந்தரம் 'கண்டேன்' என்று பெரிய பொருளடக்கமுடையதும் அம்ருதம்போன்றதுமாகிய உரையை ஹநுமானிடங்கேட்டு வானரர்களெல்லோரும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர். அவர்களில் சிலர் ஸந்தோஷத்தினால் ஸிம்ஹநாதஞ்செய்தனர். சிலர் இன்னது இனியது என்று தெரியாமல் அவ்யக்தமான த்வனிகளைச் செய்தனர். சிலர் காளைகள்போல் கர்ஜித்தனர். மற்றுஞ் சிலர் தமது ஜாதிக்கிணங்குமாறு கிலகிலவென்ற சப்தங்களைச் செய்தனர். மற்றுஞ் சிலர் மற்றவர் கர்ஜிக்கையில் அதற்கு ப்ரதியாகக் கர்ஜித்தனர். சில வானரஶ்ரேஷ்டர்கள் வால்களை மேல் தூக்கிக்கொண்டு ஸந்தோஷம் மிகுதியும் மேலெழப்பெற்றுப் பருத்து அழகான தமது நீண்ட வால்களைத் தரையில் அடித்தனர். மற்றுஞ் சில வானரர்கள் ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் பர்வதசிகரங்களினின்று கிளம்பிக் குதித்து யானைபோலிருக்கின்ற ஹநுமானை ஸ்பர்சித்தனர். ஹநுமான் அங்ஙனம் ஸீதையைக் கண்டதாக மொழிகையில் அங்கதன் ஸமஸ்த வானரவீரர்களின் இடையில் அவனைக்குறித்து உத்தமமான வசனத்தை இங்ஙனம் மொழிந்தனன்:—'ஹநுமானே! மிகுதியும் விஸ்தீர்ணமான ஸமுத்ரத்தைத் தாண்டிப்போய் மீளவும் திரும்பி வந்தனை. ஆகையால் பலத்திலாவது பராக்ரமத்திலாவது உனக்கு நிகரானவன் எவனுமே இல்லை. உனக்குள்ள ஸ்வாமிபக்தியை என்னென்று சொல்லுவேன்! ஆ! அப்பா! உன் வீர்யமே வீர்யம்! ஆ! உன் தைர்யமே தைர்யம்! எமது பாக்யத்தினால் நீ புகழுடையவளும் ராமபத்னியுமாகிய ஸீதாதேவியைக் கண்டு வந்தனை. எமது பாக்யத்தினால் இனி ககுத்ஸ்தகுலதிலகனாகிய ராமன் ஸீதாவிரஹத்தினு லுண்டான துக்கத்தைத் துறந்து ஸுகமாயிருப்பான்' என்றனன்.

அனந்தரம் வானரர்களெல்லோரும் மிகுந்த ஸந்தோஷத்துடன் அங்கதன் ஹநுமான் ஜாம்பவான் ஆகிய இவர்களைச் சுற்றிக்கொண்டு அகன்றிருக்கிற கற்களின் மேல் உட்கார்ந்தனர். அவ்வானரோத்தமர்களனைவரும் ஹநுமான் ஸமுத்ரந் தாண்டினதும் லங்கையைக் கண்டதும் ஸீதையைப் பார்த்ததும் ராவணனை நோக்கினதும் ஆகிய இந்த வ்ருத்தாந்தங்களைக் கேட்க விரும்பி ஹநுமானுடைய முகத்தையே பார்த்துக் கொண்டு கைகளைக் குவித்து நின்றிருந்தனர். அவர்களில் ஸ்ரீமானாகிய அங்கதன் பல வானரர்களால் சூழப்பட்டு ஸ்வர்க்கத்தில் தேவதைகளால் சூழப்பட்ட தேவேந்த்ரன்போல் ப்ரகாசித்தனன். அப்பொழுது மிகுந்த புகழுடைய ஹநுமானும் மஹாயசஸ்வியும் புஜங்களில் தோள்வளை விளங்கப்பெற்றவனுமாகிய அங்கதனும் பரமஸந்தோஷத்துடன் வீற்றிருப்பது பற்றி மிக உயர்ந்ததும் மிகப்பெரிதுமாகிய அம்மஹேந்த்ர பர்வதத்தின் சிகரம் மிகுதியும் ஒளிப்பெருக்குடன் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ஹநுமான் தான் போய்வந்த வ்ருத்தாந்தத்தைக் கூறுதல். }

அனந்தரம் மஹா பலசாலிகளான ஹநுமான் முதலிய வானரர்கள் அம்மஹேந்த்ரபர்வத சிகரத்தில் கூடி மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர். அதன் பிறகு ஜாம்பவான் ஸந்தோஷத்தினால் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று ஸந்தோஷமுற்றவனும் மஹா கபியுமாகிய ஹநுமானைக் கண்டு ஸீதையைப் பார்த்து வந்த வ்ருத்தாந்தத்தை வினவினன்:— 'நீ ஸீதாதேவியை எங்ஙனம் கண்டனை? அங்கு அவள்



2374. ஜாம்பவான் ஹனுமானை வினவுதல்.

எப்படி இருக்கின்றனள்? மிகுதியுங் கொடுஞ்செயலனாகிய ராவணன் அப்பெண்மணியின் விஷயத்தில் எவ்வண்ணம் நடக்கின்றனன்? மஹா கபீ! இந்த வ்ருத்தாந்தமெல்லாம் எமக்கு உள்ளபடி மொழிவாயாக. ஸங்கதியெல்லாம் கேட்டு அதற்குமேல் செய்ய வேண்டிய கார்யத்தை யெல்லாம் நிச்சயித்துக்கொள்வோம். நாம் ராமனிடம் போகும்பொழுது அங்கு எந்த ஸங்கதியைச் சொல்லவேண்டுமோ, எதை மறைக்கவேண்டுமோ, அதையெல்லாம் நீ புத்தியிற் சிறந்தவனாகையால் ஸ்பஷ்டமாக எமக்குச் சொல்வாயாக' என்று வினவினன். அங்ஙனம் ஜாம்பவான் சொல்லும்படி தூண்டுகையில், ஹனுமான் அதன் பிறகு உடம்பெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்று ஸீதாதேவிக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து மேல் வ்ருத்தாந்தஞ் சொல்லத் தொடங்கினன்:— 'நான் மனவூக்கந் தவறுதலின்றி ஸமுத்ரத்தின் தென்கரை சேர விரும்பி மஹேந்த்ர பர்வதத்தினின்று ஆகாயத்தில் கிளம்பினன். இதை நீங்கள் பார்த்துக் கொண்டிருந்தீர்களாகையால் நான் சொல்லவேண்டிய அவஶ்யமில்லை. நான் போய்க்கொண்டிருக்கையில், மிகவும் மனோஹரமாயிருப்பதும் திவ்யமுமாகிய ஒரு ஸ்வர்ண சிகரம் புலப்பட்டது; அது பயங்கரமான விக்னம்போல் இருந்ததேயன்றிக் கடைசியில் அது அப்படியில்லை. அந்தப் பர்வதம் வழியைத் தடுத்துக் கொண்டிருந்ததாகையால், நான், அதை விக்னஞ் செய்யவந்ததாக நினைத்தனன். திவ்யமும் ஸ்வர்ண மயமுமாகிய அச்சிறந்த பர்வதத்தைக் கிட்டி 'இதை உடைக்கவேண்டும்' என்று மனத்தில் எண்ணங் கொண்டனன். அனந்தரம் ஸூர்யன்போல் பளபளவென்று விளங்குகின்ற அம்மஹா பர்வதத்தின் சிகரத்தை வாலால் அடிக்கையில், அது ஆயிரஞ் சுக்கலாகப் பிளந்தது. அம்மஹாபர்வதம் நான் தன்னைப் பிளக்கமுயன்றேனென்று தெரிந்துகொண்டு என்னைப் பார்த்து 'பிள்ளாய்!' என்று இனிய உரையால்

அழைத்து என் மனத்தைக் களிப்புறச்செய்து கொண்டு 'நான் உன் தந்தை வாயுதேவனுக்கு நண்பன். ஆகையால் உனக்கு நான் சிறப்பனுகிறேன்; நான் மைநாகனென்று ப்ரஸித்தி பெற்றவன். நான் ஸமுத்ரத்தில் வாஸஞ்செய்கிறவனென்றுணர்வாயாக. குழந்தாய்! முன்பு மேலான பர்வதங்கள் சிறையுடையவைகளாயிருந்தன. அப்பொழுது அவை மனம்போனபடி பூமண்டலத்தையெல்லாம் பிடித்துக்கொண்டு நாற்புறமும் திரிந்துவந்தன. அனந்தரம் பாகாஸுரனைக் கொன்ற மஹானுபாவனுகிய தேவேந்த்ரன் பர்வதங்கள் செய்கிற கடத்தைதையைக் கேட்டு அவற்றின் சிறைகளையெல்லாம் வஜ்ராயுதத்தினுல் ஆயிரமாயிரமாகத் துண்டித்தனன். குழந்தாய்! அப்பொழுது மஹானுபாவனுகிய உன் தந்தை வாயுதேவன் என்னை மாத்ரம் இம்மஹா ஸமுத்ரத்தில் விழத்தள்ளி, தேவேந்த்ரனிடத்தினின்று தப்புவித்தனன். சத்ருக்களை அழிப்பவனே! இதனுல் நான் வாயுதேவனிடத்தில் உபகாரம் பெற்றதற்கு ப்ரதியாக அவனது குமாரனுகிய உனக்கு ஸஹாயஞ் செய்யவேண்டுமல்லவா! உனக்கே அன்று; ராமன் தார்மிகர்களெல்லோரினும் சிறப்புற்றவன்; பராக்ரமத்தில் தேவேந்த்ரனுக்கொப்பானவன். ஆகையால் ராமனுக்கு நான் ஸஹாயஞ்செய்யவேண்டியவனே ஆகின்றனன். நீ அவனுடைய தூதனைதுபற்றியும் வாயு குமாரனைதுபற்றியும் இவ்விரண்டு ஸம்பந்தத்தினுல் உனக்கு நான் அவஶ்யம் ஸஹாயஞ் செய்யவேண்டும்' என்றனன். மஹானுபாவனுகிய அம்மைநாகன் இங்ஙனம் மொழிந்தவுடனே, வந்த கார்யத்தை அப்பர்வத ராஜனுக்கு அறிவித்து அதற்கு மேற்போக என் மனம் முயற்சிகொண்டது. மஹானுபாவனான அம்மைநாகனும் எனக்குப் போக அனுமதி கொடுத்தனன். அனந்தரம் அம்மஹாபர்வதம் என்னேடு பேசும்பொருட்டுத் தரித்த அவயவங்களெல்லாம் புஷ்கலமான மானிட உருவத்தை மறைத்துக் கேவலம்

[1] பர்வத உருவத்துடன் மஹாஸமுத்ரத்தின்மேல் இருந்தது. அதன்பிறகு நான் மஹாவேகத்தை ஏற்றுக் கொண்டு மேல் போகவேண்டிய மார்க்கத்தைப்பற்றி அப்பால் அதைக் கடந்து செல்லும்பொருட்டு வேகத்துடன் வெகுநேரம் மார்க்கத்தில் போய்க்கொண்டிருந்தனன். அனந்தரம் நான் ஸர்ப்பங்களுக்கு மாதாவாகிய ஸுரஸாதேவியைக் கண்டனன். அந்த ஸுரஸாதேவி ஸமுத்ரத்தினிடையில் என்னைப் பார்த்து, 'வானரோத்தமா! தேவதைகள் உன்னை எனக்கு ஆஹாரமாக ஏற்படுத்தினர். ஆகையால் உன்னைப் பக்ஷிக்கப்போகிறேன். நீ எனக்கு வெகு காலம் கழித்து அகப்பட்டனை' என்றனள். இங்ஙனம் ஸுரஸை மொழிகையில், நான் கைகூப்பி வணங்கி நின்றுகொண்டு ஒளிமாறின முகமுடையவனாகி அவளைப் பார்த்து, 'பகைவரை அடக்குந்திறமையுடையவனும் செல்வப்பெருக்கினனுமாகிய தசரதராஜ குமாரன், ராமன், தம்பி லக்ஷ்மணனோடும் ஸீதையோடும் தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்தனன். ராமனுடைய பார்யையாகிய ஸீதையை, துர்ப்புத்தியான ராவணன் அபஹரித்துக்கொண்டு போயினன். நான் இப்பொழுது ராமனது ஆஜ்ஞையால் அந்த ஸீதையிடம் போகின்றனன். நீ ராமனது ராஜ்யத்தில் வஸிப்பவளாகையால் ராமனுக்கு ஸஹாயஞ் செய்யவேண்டியவளாயிருக்

---

1 முதல் ஸர்க்கத்தில் இந்த்ரனுடைய வரத்தினால் மைநாகன் ஜலத்தில் மூழ்காமல் ஸமுத்ரத்தின்மேல் அப்படியே இருந்ததாகச் சொல்லப்பட்டது. ஹனுமான் திரும்பி ஸமுத்ரத்தைத் தாண்டி வரும்பொழுது, 'பர்வதேந்த்ரம் ஸுநாபஞ்ச ஸமுபஸ்ப்ருஸ்ய' என்று மைநாக பர்வதத்தைத் தடவிக்கொடுத்ததாகச் சொல்லப்பட்டது. ராமன் ஸீதையோடு அயோத்யைக்குப் போகும்பொழுது 'ஹிரண்யநாபம் சைலேந்த்ரம் பஸ்ய மைதிலி' என்று ஸமுத்ரத்தின் மேலிருக்கும் மைநாகத்தை ஸீதைக்குக் காண்பித்தனன். இவைகளைப்பற்றி மைநாகபர்வதம் ஸமுத்ரத்தின்மேலேயே இருந்ததென்பது ஸித்தம்.

கின்றனே. அப்படி நீ ராமனுக்கு ஸஹாயஞ்செய்ய உட்படாயாயின், நான்போய் ஸீதையைக் கண்டு அவள் ஸங்கதியை, எப்படிப்பட்ட கார்யத்தையும் நன்கு நிறை வேற்றுந் தன்மையுள்ள ராமனுக்குச் சொல்லி உடனே திரும்பிவந்து உன் வாயில் புகுகிறேன். இங்ஙனம் ஸத்ய மாக ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன்' என்றனன். நான் இங்ஙனம் மொழிகையில், காமரூபிணியாகிய அந்த ஸுரஸை அதற்கு ஸம்மதிக்காமல் 'என் கையில் அகப் பட்டவன் எவனும் என்னைக் கடந்துபோக வல்ல னல்லன். இங்ஙனம் எனக்கு ஒரு வரம் ஏற்பட்டிருக் கின்றது' என்றனள். அப்பொழுது பத்துயோஜனை விஸ்தாரமுடைய நான், ஸுரஸை அவ்வார்த்தை மொழிந்தவுடனே ஒரு நொடிப்பொழுதில் இன்னங் கொஞ்சம் அதிக விஸ்தாரமுடையவனாயினன். அந்த ஸுரஸையும் என் தேஹப்ரமாணத்திற்குத் தகுந் திருக்கும்படி வாயை அகலத் திறந்தனள். அங்ஙனம் வாயைத்திறப்பதுகண்டு நான் அந்த க்ஷணத்திலேயே என் தேஹத்தை மிகுதியும் சிறியதாகச் செய்து கொண்டு [1] அங்குஷ்டத்தின் அளவுடையவனாயினன். அனந்தரம் நான் அதிசீக்ரமாக அந்த ஸுரஸையின் வாயில் புகுந்து க்ஷணத்தில் மீளவும் வெளிவந்தனன். அனந்தரம் ஸுரஸாதேவி, தன் ஸ்வாபாவிக ரூபத் தைத் தரித்து என்னைத் திரும்பிப் பார்த்து 'வானர திலகனே! நல்லியற்கையுடையவனே! நீ ஸுகமாகக் கார்யஸித்தியின் பொருட்டுப் போவாயாக. ஸீதையை மஹானுபாவனாகிய ராமனுடன் சேர்ப்பாயாக. மஹா பாஹுவே! நீ ஸுகமாயிருப்பாயாக. எனக்கு உன்னிடத் தில் பக்தி உண்டாயிற்று என்றனள். அனந்தரம் ஸமஸ்த பூதங்களும் என்னைப் பார்த்து 'நல்லது நல்லது' என்று கொண்டாடின. அப்பால் மீளவும் நான் கருடன்போல் விஸ்தீர்ணமான ஆகாயத்திற் கிளம்பினன். பிறகு நான் போய்க்கொண்டிருக்கையில் என்தேஹ நிழலை எதுவோ பிடித்துக்கொண்டது.

1. அங்குஷ்டம்—கட்டைவிரல்.

எதுவும் எனக்குப் புலப்படவில்லை. நான் வேக மெல்லாந் தொலைந்து திசைகள் பத்தையும் உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறேனன்றி, என் போக்கு எதனால் தடுக்கப்பட்டதோ அது எதுவும் எனக்குப் புலப்படவில்லை. அப்பால் என் மனத்தில் 'ஆகாயத்தில் எனக்கு இங்ஙனம் உருவமே தோற்றாதபடி அற்புத மான விக்னம் விளைந்ததே! இது என்ன?' என்று ஆலோசனை உண்டாயிற்று. அதன் பிறகு நான் சோகித்துக்கொண்டே கீழ் ஜலத்தில் குனிந்து பார்த்த னன் அனந்தரம் அங்கு ஜலத்திலிருக்கின்ற பயங்கராா காரமுடைய ஒரு ராக்ஷஸியைக் கண்டனன். பிறகு பயங்கரையான அந்த ராக்ஷஸி என்னைப் பார்த்து உரக்கப்பெருங்கோஷத்துடன் அட்டஹாஸஞ்செய்து எள்ளளவும் தழுதழுப்பற்றதும் அதி கம்பீரமாயிருப் பதுமான அனிஷ்டவசனத்தைச் சொல்லத் தொடங்கி 'ஓ! பெருந்தேஹமுடையவனே! நீ எங்கு போகின்றனை? பசித்திருக்கிற எனக்கு நீ மிகவும் ப்ரியமான பக்ஷணமா யிருக்கின்றனை; ஆகையால் நெடுநாள் ஆஹாரமற் றிருக்கிற என் தேஹத்திற்கு த்ருப்தியைவிளைப்பாயாக. நான் உன்னைப் புசிக்க விரும்புகிறேன்' என்றனள். நான் 'நல்லது; அப்படியே ஆகட்டும்' என்று அவ்வசனத்தை ஒப்புக்கொண்டு அனந்தரம் அவள் வாயைக்காட்டிலும் பேரளவாக என் தேஹத்தை வளர்த்திக்கொண்டனன். பெரியதும் பயங்கரமுமான அந்த ராக்ஷஸியின் வாய் என்னைப் பக்ஷிப்பதற்காக மேன்மேலும் வளர்ந்தது. அவள் நான் காமரூபியென்றாவது நான் செய்யுங் கபடத்தையாவது நன்றாகத் தெரிந்துகொள்ளவில்லை. பிறகு நான் ஒரு நிமிஷத்திற்குள் என் பெரிய உருவத் தைச் சிறுக்கிக்கொண்டு அவளது வாய்வழியாக வயிற்றுள் புகுந்து ஹ்ருதயத்தைப் பிடுங்கிக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பினன். நான் ஹ்ருதயத்தைப் பிடுங்கினவுடனே பர்வதம்போன்ற உருவமுடையவ ளும் பயங்கரையுமாகிய அவ்வரக்கி ஸந்திபந்தங்கள் தளர்ந்த புஜங்களுடையவளாகிக் கைகளை விரித்துக்

கொண்டு ஸமுத்ரத்தில் விழுந்தனள். ஆகாயத்திலுள்ள ஸித்தர்களும் சாரணர்களும் 'ஹநுமான் அதிவேகத்துடன் பயங்கரையான ஸிம்ஹிகையென்னும் ராக்ஷஸியைக் கொன்றனன்' என்று சொல்லக் கேட்டனன். அங்ஙனம் நான் ஸிம்ஹிகையைக் கொன்று, அவ்வண்ணம் நடத்தின ப்ராணாந்தகரமான கார்யத்தையே நினைத்துக்கொண்டு வெகுதூரம்போய் அந்த லங்காபுரத்திற் கிருப்பிடமும் நானாவித வ்ருக்ஷங்களால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய ஸமுத்ரத்தின் தென்கரையைக் கண்டனன். ஸூர்யன் அஸ்தமிக்கையில் நான் பயங்கர பராக்ரமர்களான ராக்ஷஸர்களுக்குத் தெரியாதபடி ராக்ஷஸ நிலயமான லங்காபுரத்தில் ப்ரவேசித்தனன். அங்கு ப்ரவேசிக்கும்பொழுது என் முன்னிலையில் ப்ரளயகால மேகம்போல் புலப்படுகின்ற ஒரு பெண்பிள்ளை அட்டஹாஸஞ் செய்துகொண்டு கிளம்பி நின்றனள். அனந்தரம் எரிகின்ற அக்னியைப் போன்ற தலைமயிர்கள் ஜ்வலிக்க மிகுதியும் பயங்கரையாகி என்னைக் கொல்ல விரும்புகின்ற அவ்வரக்கியை நான் இடக்கை முட்டியால் புடைத்து ஜயித்து ஸாயங்காலத்தில் இலங்கையுள் ப்ரவேசித்தனன். அந்த ராக்ஷஸி அதன் பிறகு பயந்து என்னைப் பார்த்து 'வீரனே! நான் லங்காநகரமே. நீ என்னைப் பராக்ரமத்தினால் வென்றனை யாகையால் இனி லங்கையிலுள்ள ஸகல ராக்ஷஸர்களையும் [1] நிஶ்ஶேஷமாக ஜயிப்பாய்' என்றனள். அங்கு நான் அவ்விரவெல்லாம் ஸீதையைத் தேடினேன். ராவணனது அந்தப்புரத்திற்குள் ப்ரவேசித்து நான் தேடினேன்; ஆயினும் அழகிய இடையுடைய அப்பெண்மணி எனக்கு அகப்படவில்லை. அனந்தரம் நான் ராவண க்ருஹத்தில் ஸீதையைக் காணாமல் சோகஸாகரத்தில் மூழ்கி அதற்கு முடிவுகாணாதிருந்தனன். நான் அங்ஙனம் துக்கித்துக்கொண்டிருக்கையில் மிகுதியும் நீண்ட ஸ்வர்ணமயமான ப்ராகாரத்தினால் சுற்றிலும் சூழப்

1 குறையில்லாமல்.

பட்ட மேலான உத்யானவனம் எனக்குப் புலப்பட்டது. அனந்தரம் நான் பலவ்ருக்ஷங்களின் அளவு உயர்ந்திருக்கிற அந்த ப்ராகாரத்தை (மதிள் சுவரைத்) தாண்டி அவ்வுத்யானவனத்தைக் கண்டனன். அதுவே அசோகவனம். அவ்வசோகவனத்தின் நடுவில் ஒரு பெரிய சிம்சுபாவ்ருக்ஷம் உளது. நான் அதன்மேல் ஏறி ஸ்வர்ணமயமான வாழைத் தோப்பைக் கண்டனன். அந்தச் சிம்சுபா வ்ருக்ஷத்திற்கு ஸமீபத்தில் சிறந்த பெண்மணியைக் கண்டனன். அவள் நடு யௌவனமுடையவளா யிருந்தனள். மற்றும் அவள் தாமரையிதழ்போன்ற கண்களுடையவளும் உபவாஸத்தினால் இளைத்த முகமுடையவளும் முன்பு ராவணன் எடுத்துக்கொண்டு போயினவன்று உடுத்தின வஸ்த்ரத்தையே உடுத்துக்கொண்டு தலைமயிர்களில் தூள் படியப்பெற்றுச் சோகத்தினால் பரிதபித்துக்கொண்டிருக்கையால் அங்கங்களெல்லாம் வாடி மனக்களிப்பற்றிருந்தனள். பர்த்தாவின் ஹிதத்தையே சிந்தித்துக்கொண்டிருக்கிற அம்மாதரசியே ஸீதை. விகாரமான உருவமுடையவர்களும் கொடுஞ் செயலினர்களும் மாம்ஸ ரக்தங்களையே ஆஹாரமாக உடையவர்களுமாகிய ராக்ஷஸ ஸ்த்ரீகள் மான்பேடையைப் பெண் புலிகள் சுற்றிக்கொண்டிருப்பதுபோல், அப்பெண்மணியைச் சுற்றிக்கொண்டிருந்தனர். அம்மாதரசி அங்ஙனம் ராக்ஷஸ ஸ்த்ரீகளின் இடையில் அகப்பட்டு அவர்கள் அடிக்கடி விரட்டிக்கொண்டிருக்கவும் மயிர்கள் ஒரே ஜடையாகப் பின்னிக்கொள்ளவும் பெற்று, மனக்களிப்பற்று எப்பொழுதும் மனத்தில் பர்த்தாவையே நினைத்துக்கொண்டு பூமியே படுக்கையாகப் படுத்து அங்கங்களெல்லாம் நிறம் மாறப் பெற்றுப் பனிமழை பெய்கிற சிசிரருதுவில் அகப்பட்ட தாமரைக்குளம்போல் அழகு குலைந்திருக்கக் கண்டனன். அப்பெண்மணி ராவணனிடத்தில் பார்ப்பது பேசுவது முதலிய எந்த ப்ரயோஜனத்தையும் எதிர்பாராமல் சிறிதும் மனப்பற்றின்றி அவனுடைய

நிர்ப்பந்தங்களால் மரணம் அடையவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டிருந்தனள். மான்பேடுபோல் அகன்றழகிய கண்களையுடைய அப்பெண்மணியை நான் அதி ப்ரயாஸத்துடன் சென்று வேகமாகக் கண்டனன். அப்படிப்பட்ட அங்கனுமணியும் கீர்த்தி மதியும் ராமபத்னியுமாகிய அந்த ஸீதாதேவியைக் கண்டு, அங்ஙனம் பார்த்துக்கொண்டே அந்தச் சிம்சுபா வ்ருக்ஷத்தின் மேலேயே இருந்தனன். அனந்தரம் ராவண க்ருஹத்தில் அரைநாண்மாலைகளுடைய வும் தண்டைகளுடையவும் சப்தங்களோடு கூடி மிகுதி யும் கம்பீரமான ஹலஹலவென்ற சப்தமொன்று செவிப் பட்டது. அப்பால் நான் மிகுதியும் பயந்து என் உருவத்தை இன்னம் சிறியதாகச் செய்துகொண்டு சிம்சுபா வ்ருக்ஷத்தில் இலைக்கூட்டங்கள் நிறைந்திருக் கிற ஓரிடத்தில் பக்ஷிபோல் எவர்க்கும் தெரியாதபடி மறைந்திருந்தனன். அனந்தரம் ராவண பார்யைகளும் மஹாபலசாலியான ராவணனும் ஸீதாதேவி இருக்கிற இடத்திற்கு வந்தனர். அதன் பிறகு ஸீதை உத்தம வனிதையாகையால், மஹா பலிஷ்டனும் ராக்ஷஸர் தலைவனுமாகிய ராவணனைப் பார்த்து, துடைகளை மடக்கிக்கொண்டு பருத்திருக்கின்ற கொங்கைகளைக் கைகளால் அணைத்துமறைத்துக்கொண்டு அசையாம லிருந்தனள். அங்ஙனம் நிலைடைந்து மிகுதியும் பரபரப்புற்று இங்குமங்கும் திசைகளைப் பார்த்துக் கொண்டு, தன்னைக் காக்குங்கதி ஒன்றையுங் காணப் பெறாமல் நடுநடுக்கமுற்றுக் கண்போர்களுக்கு மிகுதியும் மனஇரக்கம் விளைப்பவளாகி 'மிரம்பவும் துக்கித்திருக்கிற அந்த ஸீதையை ராவணன் கண்டு தலை வணக்கி நமஸ்காரஞ் செய்து 'என்னை வெகுமதிப் பாயாக' என்று வேண்டி, 'ஸீதா! கர்வம் பிடித்தவளே! நீ என்னைக் கொழுப்பினால் வெகுமதியாதிருப்பாயா யின், இனி இரண்டு மாதங்களே கெடு; அதற்குமேல் உனது ரக்தத்தைப் பானஞ் செய்வேன்' என்றனன். துர்ப்புத்தியான ராவணன் மொழிந்த இவ்வசனத்

தைக் கேட்டு ஸீதை மிகுதியும் கோபமுற்றுச் சிறந்த மறுமொழி கூறினள் :—'ராக்ஷஸாதமா! நான் அளவிறந்த ப்ரதாபமுடையவனாகிய ராமனது பார்யை; இக்ஷ்வாகு வம்சாதிபதியான தசரத மஹாராஜனது மருமகள். இப்படிப்பட்ட என்னைச் சொல்லத்தகாத வார்த்தையைச் சொல்லுகின்றனையே! இப்படிப்பட்ட உன் நாக்கு ஏன் அறுந்து தரையில் விழாதிருக்கின்றதோ! பூஜைக்கிடமாகாதவனே! பாபி! என் பர்த்தாவான ராமன் அருகில் இல்லாத ஸமயத்தில் என்னை அபஹரித்து அம்மஹாநுபாவனது கண்களில் படாமல் திருடன்போல் கொண்டுவந்தனையே! உன் வீர்யம் மிகுதியும் அற்பமானது. நீ ராமனுக்கு நிகராக மாட்டாய். ஒவ்வாமைமாத்ரமே அன்று; அவனுக்கு நீ தாஸனாயிருக்கவும் தகுந்தவனல்லை. உனக்கு அந்த யோக்யதையும் இல்லை. ராமன் பல யாகங்களை நடத்துந் தன்மையன்; ஸத்யவாதி; யுத்தத்தைக் கொண்டாடுந் தன்மையன்' என்றனள். ஸீதையால் இங்ஙனம் பருஷமாகச் சொல்லப்பட்ட ராவணன் அந்தக்ஷணமே சிதையிலிருக்கிற அக்னிபோல் கோபத்தினால் பயங்கரனாக ஜ்வலித்தனன். அப்பொழுது அவன் க்ரூரங்களான தன் கண்களை மலர விழித்து இடக்கை விரல்களை மடக்கிப் பிடிபிடித்துக்கொண்டு ஸீதையைக் கொல்ல முயன்றனன். அதைக் கண்டு அங்குள்ள மடந்தையர் ஹாஹாகாரஞ் செய்தனர். துர்ப்புத்தியான அந்த ராவணனது பார்யைகளிற் சிறந்த மந்தோதரி யென்பவள் ஸ்த்ரீகளின் இடையினின்று கிளம்பி ராவணனிடம் *ஓடி வந்தனள்; அவள் வேண்டாமென்று அவனைத் தடுத்தனள். அவள் காமவிகாரத்தினால் பீடிக்கப்பட்டிருக்கின்ற அந்த ராவணனைக் குறித்து மஹேந்த்ரனோடொத்த பராக்ரம முடையவனே! இப்படிப்பட்ட உனக்கு ஸீதையால் என்ன ப்ரயோஜனம்? ப்ரபூ! தேவ கன்யகைகளோடும் கந்தர்வ கன்யகைகளோடும் யக்ஷ கன்யகைகளோடுங்கூடி இஷ்டப்படி இங்கு விளையாடலுற்றிருப்பாயாக.

எதுக்கும் உபயோகப்படாத இந்த ஸீதையைக் கொண்டு நீ என்ன செய்யப்போகின்றனை?' என்று இனிய மொழி மொழிந்தனள். அனந்தரம், அந்த ஸ்த்ரீகளெல்லோரும் சேர்ந்து மஹாபலனுகிய அந்த ராக்ஷஸராஜனை அருள்புரியச்செய்து விரைவாக அவன் க்ருஹத்திற்கு அழைத்துக்கொண்டு போயினர். அந்த ராவணன் போனபின்பு விகார முகமுடைய ராக்ஷஸ ஸ்த்ரீகள் பருஷமும் பயம் விளைப்பதுமான வாக்யங்களால் ஸீதையை விரட்டினர். ஸீதை அவரது வார்த்தைகளை த்ருணமாக நினைத்துப் பொருள் செய்யாதிருந்தனள். அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் எவ்வளவு கர்ஜனை செய்யினும் அவையெல்லாம் ஸீதையிடத்தில் வீணேயாயின. மாம்ஸாஹாரர்களாக அந்த ராக்ஷஸஸ்த்ரீகள் தமது கர்ஜனைகளெல்லாம் வீணுனது கண்டு சேஷ்டையற்று ராவணனிடம் போய் ஸீதையின் மஹத்தான மனவுறுதியை மொழிந்தனர். அனந்தரம் அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் எல்லோருங்கூடி ஆசையற்றவராகி ஸீதையை வசப்படுத்தும் ப்ரயத்னத்தை விட்டு (ராவணன் எதுவுஞ் செய்யாமல் வெறுமனே காத்துக் கொண்டிருங்களென்றதனுல்) ஸீதாதேவியைச் சுற்றிக் கொண்டிருந்து பிறகு சிறிது நேரத்திற்குள் நித்ரைக்கு உட்பட்டனர். அந்த ஸ்த்ரீகள் நன்கு நித்ரைபோன பின்பு பர்த்தாவின் ஹிதத்தையே எப்பொழுதும் விரும்புகின்ற அந்த ஸீதாதேவி மிகுதியும் துக்கித்து முகவொளி மழுங்கி மன இரக்க முண்டாகும்படி புலம்பிச் சோகித்துக்கொண்டிருந்தனள். அந்த ராக்ஷஸிகளினிடையினின்று த்ரிஜடையென்பவள் நித்ரை தெளிந்து எழுந்து அவர்களைப் பார்த்து 'ஸீதையைப் பக்ஷிக்க முடியாது; உங்களையே நீங்கள் பக்ஷிப்பீர்களாக. ஜனகராஜன் புதல்வியும் தசரத ராஜன் மருமகளும் மஹா பதிவ்ரதையுமாகிய ஸீதை எள்ளளவும் நசிக்கப்போகிறதில்லை. அது அப்படி தான்; ஏனென்றால், ராக்ஷஸர்களுக்கெல்லாம் விநாசத்தையும் இவள் பர்த்தாவாகிய ராமனுக்கு ஜயத்தையும்

தெரிவிப்பதும் பயங்கரமாகி மயிர்க்கூச்சலை விளை விப்பதுமாகிய ஸ்வப்னம் ஒன்று இப்பொழுது நான் கண்டனன். ஸீதை நமது ராக்ஷஸ ஸ்த்ரீ ஸமூஹத்தை யெல்லாம், இந்த ராமன்கையால் சாகாதிருக்குமாறு காக்கவல்லவள்; ஆகையால் நாம் ஸீதையை வேண்டிக் கொள்வோம். இதுவே இப்பொழுதைக்குத் தகுந்த தென்று எனக்குத் தோற்றுகின்றது. எவள் துக்கித் திருக்கும்பொழுது இப்படிப்பட்ட ஸ்வப்னம் உண்டா குமோ, அவள் பலவகைப்பட்ட துக்கங்களை யெல்லாம் துறந்து நிகரில்லாத உத்தம ஸுகத்தைப் பெறுவாள். ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை, எவ்வளவு அபராதங்கள் செய்திருப்பினும் வணங்கி வேண்டிக் கொள்ளில் அருள்புரியுந் தன்மையள்; ஆகையால் நாம் வணங்கி வேண்டிக்கொள்வோமாயின் அருள்புரிவாள்; இது நிச்சயம்' என்றனள். அனந்தரம் ஸீதை தன் பர்த்தாவுக்கு ஜயம் விளையுமென்ற வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷித்து பாலையாகையால் சிறிது வெட்க முற்று அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளைப் பார்த்து 'த்ரிஜடை சொன்னது ஸத்யமாயிருக்குமாயின் நான் உங்களுக்குச் சரணமாயிருந்து ரக்ஷிப்பேன்; இது நிச்சயம்' என்ற னள். பராக்ரமமுடைய நான் ஸீதைக்கு இப்படியப்படி யென்ன முடியாமல் தாருணமாயிருக்கிற அந்த துர்த் தசையைப் பார்த்து வருத்தமுற்றுச் சிந்திக்கத் தொடங்கினன். எவ்வளவு சிந்தித்தும் என் மனத்தில் எள்ளளவும் ஸமாதானம் உண்டாகவில்லை. நான் ஸீதையோடு ஸம்பாஷிக்கும்பொருட்டு ஓர் உபா யத்தை •ஆலோசித்தனன். முதலில் இக்ஷ்வாகு வம்சத்தை முன்னிட்டுக்கொண்டு ராம வ்ருத்தாந் தத்தை வர்ணிக்கத்தொடங்கினன். நான் ராஜரிஷி ஸமூஹங்களும் புகழும்படியான ஸம்ஸ்க்ருத வார்த்தை களைச் சொல்லுகையில் ஸீதை செவியுற்றுக் கண்களில் நீர் ததும்ப என்னைப் பார்த்து 'வானரோத்தமா! நீ யாவன்? எதற்காக இவ்விடம் வந்தனை! எப்படி வந்தனை? உனக்கு ராமனோடு ஸ்னேஹம் எவ்வாறு

விளைந்தது? இதையெல்லாம் எனக்கு ஸவிஸ்தரமாகச் சொல்லவேண்டும்' என்றனள். ஸீதை மொழிந்த அவ் வார்த்தைகளைக் கேட்டு நான் அவளை நோக்கி, 'தேவி! உன் பர்த்தாவான ராமனுக்கு ஸஹாயனும் பயங்கர பராக்ரமமுடையவனும் மஹாபலனுமாகிய ஸுக்ரீவ னென்னும் ஒரு வானராதிபதி உளன். இவ்விடம் வந்த நான் அந்த ஸுக்ரீவனுடைய ப்ருத்யனென்றும் (வேலைக்காரனென்றும்) என் பேர் ஹனுமானென்றும் அறிவாயாக. எப்படிப்பட்ட கார்யத்தையும் அனாயாஸ மாகச் செய்யுந் திறமையுடைய உன் பர்த்தாவாகிய ராமன் என்னை உனக்காக இவ்விடம் அனுப்பினன். புகழுடையவளே! புருஷஸிம்ஹனும் செல்வப்பெருக் கினனுமாகிய ராமன் தானே உனக்கு அடையாளமாக இவ்வங்குலீயகத்தை (இம்மோதிரத்தை)க் கொடுத்த னன். தேவீ! ஆகையால் உனது ஆஜ்ஞையை விரும்பு கிறேன். நான் என்ன செய்யவேண்டும்? உன்னை ராம லக்ஷ்மணர்களிடம் கொண்டுபோகிறேன். இதற்கு என்ன சொல்லுகிறாய்' என்று வினவினன். ஜனக ராஜன் புதல்வியாகிய ஸீதை நான் வினவின இவ்வார்த்தையைக் கேட்டு ஆலோசித்து 'ராமனே ராவணனைக் கொன்று என்னை அழைத்துக்கொண்டு போவானாக' என்றனள். அனந்தரம் நான் தோஷ மொன்றுமில்லாத பூஜ்யையாகிய அந்த ஸீதா தேவியைத் தலையால் வணங்கி ராமனது மனத்திற்கு இனிப்பை விளைவிப்பதான ஓர் அடையாளங்கொடுக்கும் படி வேண்டினன். அதன்மேல் ஸீதை என்னைப் பார்த்து 'உத்தமமான இம்மணியை வாங்கிக்கொள்வா யாக. இதைப் பார்த்து மஹாபாஹுவாகிய ராமன் உன்னை வெகுமதிப்பான்' என்றனள். அவ்வுத்தம வனிதை மிகுதியும் துக்கத்தினால் பரிதபித்துக் கொண்டு அற்புதமான ஒளியுடன் புலப்படுகின்ற அந்த உத்தம ரத்னத்தைக் கொடுத்து மீளவும் தனக்கும் ராமனுக்குமே தெரியத்தகுந்த சில வ்ருத்தாந்த ரூபமானி அடையாளத்தையும் என்னிடம் சொல்லி

யனுப்பினள். அனந்தரம் நான் மனவூக்கம் மிகப் பெற்று இங்கு விரைந்து வரவேண்டுமென்று மனம் கிளம்பப்பெற்று அந்த ராஜகுமாரத்தியாகிய ஸீதைக்கு நமஸ்கரித்து ப்ரதக்ஷிணஞ் செய்தனன். மீளவும் அப்பெண்மணி மனத்தில் கெட்டியாக ஆலோசித்து என்னைப் பார்த்து 'ஹநுமானே! என் வ்ருத்தாந்தத்தை யெல்லாம் ராமனுக்குச் சொல்ல வேண்டும். என் வ்ருத்தாந்தத்தைக் கேட்டவுடனே வீரர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் இருவரும் ஸுக்ரீவனுடன் சீக்ரமாக இவ்விடம் வரும்படி நீ செய்யவேண்டும். அங்ஙனம் அவர்கள் வாராதிருப்பார்களாயின், இனி இரண்டு மாதங்களே எனக்குப் பிழைத்திருக்குங் கெடு. அதன் பிறகு நான் அநாதைபோல் மரணம் அடைவேன். அனந்தரம் ராமன் வந்து என்னைப் பார்க்கமுடியாது. அவன் வந்தும் கார்யமில்லை' என்றனள். மன இரக்கம் விளைக்கின்ற அந்த வசனத்தைக் கேட்டவுடனே எனக்குக் கோபம் உண்டாயிற்று. அனந்தரம் நான் அதன்மேல் செய்ய வேண்டிய மிகுந்த கார்யத்தை ஆலோசித்து நிச்சயித்தனன். அதன் பிறகு அந்த நிச்சயத்தின்படி என் தேஹம் பர்வதாகாரமாக வளர்ந்தது. நான் யுத்தஞ் செய்ய விரும்பி ராவணனுக்குக் கோபத்தைக் கிளப்பும் பொருட்டு அவ்வசோகவனத்தை யெல்லாம் பாழ் செய்யத் தொடங்கினன். விகாரமான முகமுடைய அங்குள்ள ராக்ஷஸ ஸ்த்ரீகள் அவ்வசோகவனிகையின் வ்ருக்ஷஸமூஹங்கள் முறியும் சப்தத்திற்கு விழித்துக் கொண்டு அவ்வனமெல்லாம் முறிந்து அங்குள்ள ம்ருகங்களும் பக்ஷிகளும் பயந்து பறந்துகொண்டிருக்கக் கண்டனர். அந்த ஸ்த்ரீகள் அவ்வனத்தில் என்னையும் கண்டு நானே அவ்வனத்தை முறித்தேனென்று தெரிந்துகொண்டு எல்லோரும் அவ்வவ்விடங்களினின்று எழுந்துவந்து ஒன்றுகூடிச் சீக்ரமாக ராவணனிடஞ் சென்று அவனுடன் 'ராஜனே! மஹாபலனே! துர்ப்புத்தியான ஒரு வானரன் உன் பராக்ரமத்தை

அறியாதவனாகையால் ப்ரவேசிக்க முடியாத இவ்வசோக வனத்தை முறித்தனன். ராஜேந்த்ரா! துர்ப்புத்தியாகி உனக்கு அனிஷ்டத்தைச் செய்த அவ்வானரன் பாழாகும்படி சீக்ரத்தில் அவனைக் கொல்ல ஆஜ்ஞை செய்வாயாக' என்றனர். அவ்வார்த்தையைக் கேட்டு ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் மிகுதியும் ஜயிக்கமுடியாதவர்களாகித் தன் மனத்திற்கு அனுகூலர்களாயிருக்கிற கிங்கரர்களென்னும் ராக்ஷஸர்களை அனுப்பினன். பிறகு நான் சூலம் இரும்புத்தடி இவைகளைக் கையிலேந்தின அந்தக் கிங்கரர்களென்கிற எண்பதினாயிரம் பேர்களையும் அவ்வசோகவனிகையின் அருகிலிருந்த ஒரு உழல் தடியைக் கொண்டு உருமாய்த்தனன். அந்தக் கிங்கரர்களில் அடிபட்டுமிகுந்த சில ராக்ஷஸர்கள் விரைந்து நடந்து ராவணனிடஞ் சென்று அந்தப் பெரும் ஸைன்யமெல்லாம் அவ்வானரனால் அடிக்கப்பட்டதென்று மொழிந்தனர். அனந்தரம் எனக்கு ஒரு புத்தி உண்டாயிற்று. நான் அங்கிருக்கிற [1] சைத்யப்ராஸாதத்தின்மேல் கிளம்பினன். நான் அங்குள்ள ஒரு ஸ்தம்பத்தைப் பிடுங்கிக்கொண்டு அங்கிருந்த ராக்ஷஸர்கள் நூறு பேர்களையும் கொன்று லங்கா பட்டணத்திற்கெல்லாம் அலங்காரமாயிருந்த அந்தச் சைத்யப்ராஸாதத்தையும் த்வம்ஸஞ் செய்தனன். அனந்தரம் அந்த ராவணன் ப்ரஹஸ்தனுடைய புத்ரனாகிய ஜம்புமாலியென்பவனை, பயங்கரமான உருவமுடையவர்களும் கொடுஞ் செயலினர்களுமாகிய பல ராக்ஷஸர்களுடன் கூட்டி என்னை எதிர்க்கும்படி ஆஜ்ஞாபித்தனன். மஹாபலம் அமைந்தவனும் யுத்தத்தில் கைதேர்ந்தவனுமாகிய அந்த ராக்ஷஸனையும் அவனுடன் வந்த ஸைன்யத்தையும் அதி பயங்கரமான அந்த உழல் தடியினாலேயே உருமாய்த்தனன். அந்த ஸங்கதியை ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் கேட்டு மஹாபலிஷ்டர்களான மந்த்ரி புத்ரர்களைக்

---

1. இது ஒரு தேவாலயம், பௌத்தாலயமென்றுஞ் சிலர் கூறுவர்.

காலாட்களோடுகூடின மஹா ஸைன்யத்தைக் கூட்டி என்னை எதிர்க்கும்படி அனுப்பினன். நான் அந்தப் பரிகத்தினாலேயே அவர்களெல்லோரையும் யமன் வீட்டிற்கு அனுப்பினன். யுத்தத்தில் அதிலாகவத்துடன் பராக்ரமத்தை நிறைவேற்றுபவராகிய அம்மந்த்ரி புத்ரர்கள் அடிபட்டதைக் கேட்டு ராவணன் சூரர்களான ஸேனாபதிகள் ஐவரை அனுப்பினன். நான் அவர்களெல்லோரையும் அவருடைய ஸேனைகளோடு கூட ஒருத்தனையும் விடாமல் கொன்றுவிட்டனன். அனந்தரம் பத்துத்தலையனாகிய ராவணன் மஹா பலனும் தன் குமாரனுமாகிய அக்ஷனென்பவனைப் பல ராக்ஷஸர்களோடு கூட்டி என்மேல் எதிர்க்க அனுப்பினன். அவன் மந்தோதரியின் புதல்வன்; யுத்தத்தில் மிகுதியும் கைதேர்ந்த வீரன். அக்குமாரன் திடீலென்று ஆகாயத்தில் கிளம்பும்பொழுதே நான் அவன் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டனன். அங்ஙனம் கேடயத்தையும் கத்தியையும் கொண்டு ஆகாயத்திற் கிளம்பின அவ்வக்ஷகுமாரனது கால்களைப் பிடித்துக்கொண்டு நூறு தடவைகள் கிருகிருவென்று சுழற்றித் தரையில் அடித்துக் கால் கைகள் காணப் பெருதபடி வெறுமுண்டமாகச்செய்தனன். அனந்தரம் அவ்வக்ஷகுமாரன் என்னை எதிர்த்துச் செத்ததைக் கேட்டுத் தசமுகனாகிய ராவணன் மிகுதியுங் கோபமுற்று மீளவும் மிகுந்த பலமுடையவனும் யுத்தத்தில் கொழுத்தவனுமாகிய இந்த்ரஜித்தென்னும் மற்றொரு புதல்வனை அனுப்பினன். நான் அவனுடன் வந்த ஸைன்யத்தையெல்லாங் கொன்று ராக்ஷஸ ஶ்ரேஷ்டனாகிய அவ்விந்த்ரஜித்தினுடைய தேஜஸ்ஸை யுத்தத்தில் பறக்கடித்து மிகுதியும் ஸந்தோஷமுற்றனன். மஹாபாஹுவாகிய இந்த்ரஜித்து பலிஷ்டனாகையால் தப்பாமல் வானரனைக் கொல்வானென்னும் பெரிய நம்பிக்கையுடன் அவனை மிகுதியும் மதித்த பல ராக்ஷஸ வீரர்களோடு கூட்டி ராவணன் என்மேல் அனுப்பினன். அவ்விந்த்ரஜித்து என் பராக்ரமத்தைப்

பொறுத்துக்கொண்டு என்னை வெல்லுவது கஷ்ட மென்பதையும் தன் பலம் பாழுடைந்ததையும் அறிந்து மஹாவேகம் விளங்க ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்து என்னைப் பந்தித்தனன். அப்பொழுது ராக்ஷஸர்கள் கயிறுகளால் என் தேஹம் முழுவதும் சுற்றிக் கட்டினர். அதன்பிறகு அவர்கள் என்னைப் பிடித்துக் கொண்டு ராவணனிடம் கொண்டுபோயினர். துர்ப்புத்தியாகிய ராவணன் என்னைப் பார்த்து என்னுடன் ஸம்பாஷித்தனன். அனந்தரம் நான் லங்கைக்கு வந்ததற்குக் காரணத்தையும் ராக்ஷஸர்களை அங்ஙனம் கொல்வது ஏனென்பதையும் வினவினன். அப்பொழுது நான் அதெல்லாம் ஸீதாதேவியின் பொருட்டுச் செய்தேனென்று மொழிந்தனன். மற்றும் நான் அவனைப் பார்த்து 'ராக்ஷஸ ப்ரபூ! நான் இவளைப் பார்க்க வேண்டியே உன் வீட்டிற்கு வந்தனன். நான் வாயுதேவனுக்கு ஔரஸ புத்ரன், வானர ஜாதியிற் பிறந்தவன். என்பேர் ஹனுமான். நான் ஸுக்ரீவனுடைய மந்த்ரியென்றும் ராமனுடைய தூதனென்றும் அறிவாயாக. நான் ராமன் ஸமாசாரம் சொல்லி யனுப்புகையில் அதை அறிவிக்கும்பொருட்டு இங்கு உன் ஸமீபத்திற்கு வந்தனன். மஹா தேஜஸ்வியாகிய ஸுக்ரீவன் உன்னை க்ஷேமம் விசாரிக்கச் சொல்லினன். மற்றும் தர்மம் அமைந்ததும் ஆனதுபற்றியே பரலோக விஷயத்தில் உபகரிப்பதும் லோகஹிதமாயிருப்பதும் அர்த்த காமங்களைத் தழுவியிருக்கையால் பத்யமும் இஹலோகத்தில் உபகரிப்பதுமாய் விளங்குகிற இவ்வாக்யத்தை உனக்குச் சொல்லும்படி உரைத்தனன். பல வ்ருக்ஷங்களையுடைய ருஶ்யமூக பர்வதத்தில் நான் வஸித்திருக்கையால், யுத்தத்தில் பராக்ரமத்தை நிறைவேற்றுந் தன்மையுள்ள ராமன் எனக்கு நண்பனாயினன். அப்பொழுது ராமன் என்னோடு 'என் பார்யையை ஒரு ராக்ஷஸன் அபஹரித்துக்கொண்டு போயினன். அவனைக் கொன்று என் பார்யையைக் கொண்டுவருவதற்கு நீ எல்லா விதத்திலும் எனக்கு ஸஹாயஞ் செய்ய

வேண்டும்' என்று வேண்டினன். அனந்தரம் நானும் அந்த ராமனுக்கு, எனக்கும் வாலிக்கும் உள்ள விரோதத்தைச் சொல்லி, வாலியைக் கொல்லுகிற விஷயத்தில் நீ எனக்கு ஸஹாயஞ் செய்யும்படி ப்ரதிஜ்ஞை செய்யவேண்டுமென்று வேண்டினன். அதனபிறகு மஹாப்ரபுவாகிய ராமன் லக்ஷ்மணனும் தானுமாக, வாலியால் ராஜ்யத்தை அபஹரித்துக்கொண்டு துரத்தப்பட்ட ஸுக்ரீவனாகிய என்னுடன் அக்னி ஸாக்ஷிகமாக ஸ்னேஹஞ் செய்துகொண்டனன். அந்த ராமன் யுத்தத்தில் வாலியை ஒரு பாணத்தினால் கொன்று வானரஸ்ரேஷ்டனாகிய என்னை வானரர்களுக்கு மஹா ராஜனாகச் செய்தனன். இவ்விஷயத்தில் நாங்கள் அந்த ராமனுக்கு எல்லாவிதத்திலும் தப்பாமல் ஸஹாயஞ்செய்யவேண்டும். ஆகையால் தர்மத்தின்படி உன்னிடம் இந்தத் தூதனை அனுப்பினன். வீரர்களான வானரர்கள் உன் பட்டணத்தின்மேல் எதிர்த்து வந்து உன் ஸைன்யத்தைப் பாழ்செய்வதற்கு முன்னமே நீ சீக்ரமாக ஸீதையைக் கொண்டு வந்து ராமனுக்குக் கொடுப்பாயாக. ஸஹாயத்தின் பொருட்டு அழைக்கையில் தேவதைகளிடத்திற்கும் போய் ஸஹாயமாயிருந்து ஜயத்தை விளைவிக்கிற வானரர்களின் ப்ரபாவத்தை முன்பு அறியாதவன் எவன்? அது உனக்கும் தெரிந்திருக்குமே' என்று உன்னோடு சொல்லும்படி வானர ராஜனாகிய ஸுக்ரீவன் மொழிந்தனன்' என்று நான் ராவணனுக்குச் சொல்லினன். அனந்தரம் அந்த ராவணன் கோபித்துக் கண்கள் சிவக்கப்பெற்று என்னைத் தஹிப்பவன் போல்சொரசொரவென்று பார்த்தனன். பயங்கரமான செயலுடையவனும் துர்ப்புத்தியுமாகிய அந்த ராவணன் அதன் பிறகு என் ப்ரபாவத்தை அறியாமல் என்னைக் கொல்லும்படி ஆஜ்ஞாபித்தனன். அங்கு ராவணனுடைய தம்பியும் மிகுதியும் புத்திசாலியுமான விபீஷணனென்பவன் ஒருவன் உளன். அவன் என் நிமித்தமாக ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனைப்பார்த்

த்துக்கொண்டு 'ராக்ஷஸர் தலைவனே! இப்படி எள்ளளவும் செய்யலாகாது. இந்த நிச்சயத்தைத் துறப்பாயாக. நீ இப்பொழுது முயன்ற பத்ததி ராஜதர்மசாஸ்த்ரத்திற்குப் பொருந்தாது. ஆகையால் இங்ஙனம் செய்யலாகாது. ராக்ஷஸோத்தமா! ராஜதர்ம சாஸ்த்ரங்களில் எங்காயினும் தூதனைக் கொல்லலாமென்று புலப்படவில்லை. ஹிதஞ் சொல்பவனாகிய தூதன் தன் ப்ரபு சொல்லியனுப்பின வார்த்தைகளை யதார்த்தமாகத் தவறாமல் சொல்லவேண்டும். நிகரில்லாத பராக்ரமமுடைய ராஜனே! தூதன் எவ்வளவு பெரிய அபராதம் செய்யினும், அவனது அங்கத்தை விரூபமாகச் செய்யலாமன்றிக் கொல்லலாகாதென்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது' என்றனன். விபீஷணன் இங்ஙனம் சொல்லுகையில், ராவணன் 'இவனுக்குள்ள இந்த வாலையே கொளுத்திவிடுவீர்கள்' என்று அந்த ராக்ஷஸர்களுக்கு ஆஜ்ஞாபித்தனன். அனந்தரம் அவனது வார்த்தையைக் கேட்டு ராக்ஷஸர்கள் சணற்கயிறுகளையும் கந்தல் துணிகளையும் கொண்டுவந்து என் வால் முழுவதும் சுற்றினர். அப்பால் பயமுறுத்தும்படியான பராக்ரமமுடைய அந்த ராக்ஷர்கள் ஸித்தஸங்நாஹர்களாகிப் பல கயிறுகளால் கட்டுண்டு பல ரா்க்ஷஸர்களால் பிடியுண்டிருக்கிற என்னைத் தடிகளால் அடிப்பதும் முட்டிகளால் குத்துவதும் குழுக்குவதுமாகி என் வாலில் நெருப்பை மூட்டினர். அனந்தரம் சூரர்களான அந்த ராக்ஷஸர்கள் என்னைப் பிடித்துக்கொண்டு பட்டண வாசற்படிக்குவந்து அங்கு ராஜமார்க்கத்தில் என்னைக் கட்டினதையும் என் வாலில் நெருப்புவைத்ததையும் எல்லோர்க்கும் தெரியுமாறு கெட்டியாகக் கூச்சலிட்டுச் சொல்லினர். பிறகு நான் என் பேருருவத்தை மிகுதியும் சிறிதாகச்செய்து அந்தக் கட்டுகளையெல்லாம் உதறி மீளவும் எப்பொழுதும்போல் என் ஸ்வபாவஸ்திதியைப் பெற்று, (பர்வதாகாரனாகி) அங்குள்ள ஓர் இரும்புத்தடியை எடுத்துக்கொண்டு அந்த ராக்ஷஸர்களெல்லோரையும் கொன்று

விட்டனன். அனந்தரம் நான் வேகமாக அந்தப் பட்டண வாசற்படிமேல் கிளம்பிக் குதித்தனன். பிறகு ப்ரளய காலாக்னி ப்ரஜைகளைத் தஹிப்பதுபோல், நான் பரபரப்பின்றி எரிகின்ற என் வால் நெருப்பினால் அந்த லங்கா பட்டணத்தை அதன் கடைத்தெருக்களோடும் உப்பரிகைகளோடும் தோரண வாசற்படியோடும் தஹித்தனன். அதற்குள் நான் ஸீதையை நினைத்துக் கொண்டு 'ஐயோ! ஸீதா தேவி அக்னியில் அகப்பட்டு நாசமடைந்தனள். இது நிச்சயம். ஏனெனில், லங்கையில் ஓரிடமாயினும் கொளுத்தப்படாததில்லையே. பட்டணமெல்லாம் நீறாய் விட்டதே. (ஸீதை என்னாயினளோ!) நான் லங்கையைக் கொளுத்தினதில் ஸீதையையும் கொளுத்திவிட்டிருப்பேன். இதில் ஸந்தேஹம் இல்லை. ராமனுடைய இந்தப் பெருங்கார்யத்தையெல்லாம் கடைசியில் கெடுத்துவிட்டேனே' என்று துக்கமுள்ளவனாகிச் சிந்தையிலாழ்ந்தனன். அதன்பிறகு நான் ஆகாயத்தில் சாரணர்கள் 'பட்டண மெல்லாம் கொளுத்தப்பட்டது; ஆயினும் ஸீதை கொளுத்தப்படவில்லை' என்று, ஊரெல்லாம் எரிந்தும் அவள் கொளுத்தப்படாதிருப்பதற்கு ஆச்சர்யமடைந்து சொல்லிக் கொள்ளுகிற மங்களகரமான அக்ஷரங்கள் அமைந்த வார்த்தையைக் கேட்டனன். ஆச்சர்யத்துடன் கூடின அந்தச் சாரணர்களின் வார்த்தையைக் கேட்ட பின்பு எனக்கு ஸீதை நாசமடையவில்லை யென்று புத்தி உண்டாயிற்று. சுபசகுனங்களாலும் ஸீதை கொளுத்தப்படவில்லை யென்று நிச்சயித்துக்கொண்டனன். 'என் வால் எரிந்துகொண்டிருப்பினும், அக்னி என்னை எள்ளளவும் தஹியாதிருக்கின்றது. மற்றும் என் மனமும் ஸந்துஷ்டமாயிருக்கின்றது. காற்றுக்களும் நன்மணத்துடன் வீசுகின்றன. பலதடவைகளில் பயன் பட்டவைகளாக அனுபவத்திற்கு வந்த அந்தச் சுப சகுனங்களாலும் மற்றும் பெருங்குணங்கள் பொருந்தின ராமப்ரபாவம் முதலிய காரணங்களாலும் உண்மையான சாரண வாக்யங்களாலும் ஸீதை நாச

மடையவில்லை யென்று தெரிந்து சோகத்தைத் துறந்து ஸந்தோஷம் அடைந்தனன். அனந்தரம் நான் மீளவும் ஸீதையைப் பார்த்து அவளிடம் அனுமதி பெற்றுக்கொண்டனன். பிறகு நான் அவ்விலங்கையிலுள்ள அரிஷ்ட பர்வதத்தின்மேலேறி உங்களைப் பார்க்க விரும்பி மீளவும் ஸமுத்ரத்தைத் தாண்டினன். அனந்தரம் வாயுவும் சந்த்ர ஸூர்யர்களும் ஸித்தர்களும் கந்தர்வர்களும் உலாவும்படியான ஆகாசமார்க்கத்தை கடந்து வந்து இங்கிருக்கிற உங்களைப் பார்க்கப்பெற்றனன். ஸ்ரீராமன் ப்ரபாவத்தினாலும் உங்கள் அனுக்ரஹ பலத்தினாலும் நான் ஸுக்ரீவனது கார்யத்தையெல்லாம் செய்தனன். அங்கு இந்தக் கார்யத்தையெல்லாம் நான் தகுந்தபடி செய்து முடித்தனன். இனி இதில் யாது செய்யப்படாமல் குறையாயிருக்கிறதோ அதையெல்லாம் செய்யவேண்டுமென்று விரும்புகிறேன்' என்றனன். ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் மீளவும் தான்போய்வந்த வ்ருத்தாந்தத்தைச் சுருக்கமாகச் சொல்லித் தன் பலாதிகளைக் கூறுதல்.

வாயுகுமாரனாகிய ஹனுமான் தான் ஸீதையைப பார்த்துவந்த அந்த வ்ருத்தாந்தத்தையெல்லாம் இங்ஙனம் சொல்லி மீளவும் அதன் மேல் ஸமாசாரத்தைச் சொல்லத்தொடங்கினன்; ஸீதை மிகுந்த சீலமுடையவள்; பதிவ்ரதாமணி; ஆகையால் ராமனது ப்ரயத்னமும் ஸுக்ரீவனுடைய உத்ஸாஹமும் பயன் பெற்றவையேயாகும். என் மனமும் அவளிடத்தில் மிகுதியும் பக்தியுடையதாயிருக்கின்றது. ராக்ஷஸேஸ்

வரனுகிய ராவணன் தவமஹிமையால் ஸமஸ்தலோகங்களையும் நிர்வஹிக்கவல்லவன். அவன் கோபமுறுவானுயின் ஸமஸ்த லோகங்களையும் தஹிக்கவும் வல்லவன். ராக்ஷஸாதிபதியான இந்த ராவணன் எல்லாவிதத்திலும் மிகுதியும் மேலானவன். அந்த ராவணன் மஹா பதிவ்ரதையான ஸீதையை ஸ்பர்சிக்கினும் மிகுந்த தவமுடையவனுகையால் அவன் தேஹம் பாழுடையாதிருக்கின்றது. ஜனகராஜன் புதல்வியும் பதிவ்ரதையுமான ஸீதாதேவியைக் கையினுல் ஸ்பர்சித்தமாத்ரத்தில் அவள் கோபத்தினுல் மனக்கலக்கமுற்று தஹிப்பது போல் அக்னி ஜ்வாலையுங்கூட தஹிக்கவல்லதன்று. அவள் தன் பர்த்தாவைக்கொண்டே ராவணனைக் கொல்விக்கவேண்டுமென்னும் வீ ; பத்னீ தர்மத்தை அவலம்பித்து ராவணன்மேல் கோபஞ்செய்யாதிருப்பது பற்றியே ராவணன் ஜீவித்திருக்கின்றனன், அன்றி வேறன்று. உங்களெல்லோர்க்குஞ் சொன்ன இந்தக் கார்யத்தின் ஸ்திதி இப்படிப்பட்டதாகையால் ஜாம்பவான் முதலிய வானரோத்தமர்களையும் உங்களையும் ஓப்பச்செய்து ப்ருத்யனுடைய (வேலைக்காரனுடைய) ஜயம் ஸ்வாமிஜயமேயாகையால் உங்களுடைய அனுமதியின்மேல் ஸீதாராமர்களின் ஸ்ரீபாதங்களை அவலம்பித்து அவ்விடஞ்சென்று ஸீதாதேவியை எடுத்துக் கொண்டு வந்து அவளோடுகூடவே ராஜபுத்ரர்களான ராமலக்ஷ்மணர்களைப் பார்ப்பது யுக்தமென்று என்னபிப்ராயம் நான் ஒருவனேயாயினும் லங்கையிலுள் ராக்ஷஸர்களெல்லோரையும் மஹாபலனுகிய ராவணனையும் வேகத்துடன் கொல்லவல்லவன். இனி பராக்ரமத்தில் மிகுந்தவரும் பலிஷ்டர்களும் புத்திசாலிகளும் அஸ்த்ரங்களில் கைதேர்ந்தவர்களும் சூரர்களும் விஜயத்தை விரும்புவோர்களுமாகிய உங்களுடன் கூடியிருக்கையில் நான் லங்கையிலுள்ள ராக்ஷஸர்களையும் ராவணனையுங் கொல்லுவேனென்பது சொல்ல வேண்டுமோ? நானொருவனே யுத்தத்தில் ராவணனையும் அவனுடைய ஸைன்யங்களையும் அனுசரர்களையும்

(பின்றொடர்வோர்களையும்) புத்ரர்களையும் உடன் பிறந்தவர்களையும் எல்லோரையும் கொன்று விடுவேன். இந்த்ரஜித்து யுத்தத்தில் கண்ணெடுத்துப்பார்க்க முடியாத அப்படிப்பட்ட ப்ரஹ்மாஸ்த்ரத்தையாவது ஐந்த்ராஸ்த்ரத்தையாவது ரௌத்ராஸ்த்ரத்தையாவது வாயவ்யாஸ்த்ரத்தையாவது வாருணாஸ்த்ரத்தையாவது ப்ரயோகிப்பானாயின் நான் அவற்றையெல்லாம் அடித்துப் போகட்டு ராக்ஷஸர்களெல்லோரையும் உருமாய்த்துவிடுவேன். நீங்கள் அனுமதி கொடுப்பீர்களாயின், பராக்ரமத்தினால் அந்த ராவணனையும் கொன்றுவிடுவேன். யுத்தத்தில் நான் இடைவீடின்றிப் பெய்கிற கல்மழை நிகரற்றதாகி அம்ருதபானஞ்செய்து சாவில்லாத தேவதைகளையும் கொன்றுவிடுமே; இனி அந்த ராக்ஷஸர்களைக் கொல்லுமென்பது சொல்ல வேண்டுமோ? ஒரு கால் ஸமுத்ரம் கரையை மீறினும் மீறும்; மந்தர பர்வதம் அசையினும் அசையும்; எப்படிப்பட்ட சத்ருஸைன்யமாயினும் ஜாம்பவானை எள்ளளவும் அசைக்கமுடியாது. ஸகல ராக்ஷஸக் கூட்டங்களையும் அவர்களில் தலைவராயிருப்பவரெல் லோரையும் நாசஞ் செய்ய, வீரனும் வாலிகுமாரனு மாகிய அங்கதனொருவனே போதுமானவன். மஹானு பாவர்களான பனஸ நீலர்களின் துடைவேகத்தினால் மந்தர பர்வதமும் சிதறிப்போய்விடும்; இனி யுத்தத் தில் இந்த ராக்ஷஸர்கள் பறந்தோடுவார்களென்பது சொல்லவேண்டுமோ? தேவதைகளிலும் அஸுரர்களி லும் யக்ஷர்களிலும் கந்தர்வர்களிலும் ஸர்ப்பங்களிலும் பக்ஷிகளிலும் மைந்தனோடாவது த்விவிதனோடாவது எதிர்த்துப் போராடுபவன் எவன்? சொல்வீர்களாக. இவ்வானரோத்தமர்கள் அச்விதேவதைகளுக்குப் பிறந்தவர்; மஹாபாக்யமுடையவர்; யுத்தத்தின் தலையில் இவ்விருவரோடும் போராடுபவன் எவனும் எனக்குப் புலப்படவில்லை. இவ்விருவரும் ப்ரஹ்மதேவனது வர மஹிமையால் மிகுதியும் கர்வமுற்றவர், மற்றும் அம்ரு தத்தையும் பருகினவர்; ஸமஸ்த வானரர்களிலும்

ஶ்ரேஷ்டர்கள். ஸர்வலோகங்களுக்கும் பிதாமஹனுகிய (பாட்டனுகிய) ப்ரஹ்மதேவன் முன்பு இவ்விருவருடைய தந்தைகளான அஶ்விதேவதைகளைக் கௌரவிக்கும் பொருட்டு இவர்க்கு எவராலும் மரணம் உண்டாகா திருக்குமாறு நிகரில்லாத வரத்தைக் கொடுத்தனன். ஆகையால் வீரர்களான இவ்வானரர்கள் அங்ஙனம் வரம்பெற்ற மஹிமையால் மதித்துத் தேவதைகளின் பெரிய ஸைன்யத்தையும் கலக்கிப் பறந்தோட்டச்செய்து அம்ருதத்தைப் பருகினர். மற்றவரெல்லோரும் அப்படி இருப்பார்களாக; இவ்விருவருமே மிகுதியும் கோப முற்று லங்கையையும் அதிலுள்ள ரத கஜ துரகங்களை யும் (தேர் யானை குதிரைகளையும்) மற்றுமுள்ள எல்லா வற்றையும் நாசஞ்செய்யவல்லவர். நான் ஒருவனே லங்கையையெல்லாம் வதித்துக்கொளுத்தி நீறுசெய்து விட்டனன். ராஜமார்க்கங்களெல்லாவற்றிலும் என் பெயரை எல்லோர்க்கும் தெரியுமாறு கோஷித்துக் கேட்பித்தனன். 'மஹாபலனுகிய ராமன் எல்லோர்க்கும் மேலாயிருக்கின்றனன். மஹா பலனுகிய லக்ஷ்மணனும் எல்லோரிலும் மேலாயிருக்கின்றனன். வானரர் தலைவ னுன ஸுக்ரீவ மஹாராஜனும் ராமனுல் பாதுகாக்கப் பட்டு மேன்மையுற்றிருக்கின்றனன். நான் கோஸல தேசராஜனுகிய ராமனுக்குத் தாஸன்; வாயுதேவனுக் குப் பிறந்தவன்; ஹனுமானென்னும் பேருடையவன்' என்று லங்கை முழுவதும் என் பேரைக் கேட்பித்த னன். பதிவ்ரதாமணியான ஸீதாதேவி, துர்ப்புத்தி யாகிய ராவணனுடைய அசோகவனத்தில் ஶிம்ஶுபா வ்ருக்ஷத்தினடியில் ராக்ஷஸ ஸ்த்ரீகளால் சூழப்பட்டுச் சோகத்தினுல் பரிதபித்து இளைத்து மேகஸமூஹங்க ளால் மறைக்கப்பட்ட சந்த்ரலேகைபோல் ஒளிமழுங்கி, பலத்தினுல் கொழுத்திருக்கின்ற ராவணனை மனத்தி லும் நினையாமல் ராமனை த்யானித்துக் கொண் டிருக்கிற நிலையைக் கண்டால், மிகுதியும் மன இரக்கம் உண்டாகின்றது. அந்த ஜனக ராஜன் புதல்வி அழகிய நிதம்பங்களையுடையவள்; ஆகையால் ராவணன் ஆசைப்

பட்டுச் சிறையில் வைப்பினும், பதிவ்ரதையாகையால் மங்களஸ்வபாவையாகிய அம்மஹாநுபாவை மனத்தை யெல்லாம் ராமனிடத்திலேயே சேர்த்து மற்றொன்றை யும் நினையாமல் அவனிடத்திலேயே அநுராகமுடைய வளாயிருக்கின்றனள். மற்றும், நஹுஷன் எவ்வளவு நிர்ப்பந்திக்கிலும் சசீதேவி அவனிடத்தில் மனஞ் செல்லப்பெறாமல் இந்த்ரனிடத்திலேயே பற்றியிருந் தாற்போல், ராவணன் எவ்வளவு நிர்ப்பந்திக்கிலும் ஸீதை அவனிடத்தில் சிறிதும் மனம் செலுத்தாமல் ராமனிடத்திலேயே மனப்பற்றுடையவளாயிருக்கின்ற னள். ஸீதை அப்பொழுது உடுத்தின வஸ்த்ரத்தையே இப்பொழுதும் விடாமல் உடுத்திக்கொண்டு தேஹமெல் லாம் தூள் படியப்பெற்றுச் சோகத்தினாலுண்டாகும் பரிதாபத்தினால் அவயவங்களெல்லாம் நிறம் மாறி, பர்த்தாவின் ஹிதத்தையே விரும்பிக்கொண்டிருக் கின்றனள். அவள் ராவணனது அந்தப்புரத்தைச் சேர்ந்த உத்யானமாகிய அசோக வனத்தில் ராக்ஷஸ ஸ்த்ரீகளின் நடுவில் அகப்பட்டு விகார உருவமுடைய அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளால் அடிக்கடி விரட்டப்பட்டு வருத்தமுற்றிருக்கக் கண்டனன். தலைமயிர்களெல்லாம் ஒரே ஜடையாகப் பின்னிக்கொள்ள மிகுதியும் மனக் களிப்பற்றுத் தீனையாகிக் கணவனையே எப்பொழுதும் விடாமல் சிந்திப்பவளாகித் தரையில் படுத்து ஹேமந்த ருதுவில் அகப்பட்ட தாமரையோடைபோல் அவயவங்க ளெல்லாம் நிறம் மாறப்பெற்று வருந்துகின்றனள். ராவணன் அவளை ஸ்வாதீனப்படுத்தும்பொருட்டு எத்தனையோ ஆசை மூட்டும்படியான வார்த்தைகளைப் பேசினானன்றி அவையெல்லாம் அவளிடத்தில் சிறிதும் பயன்படவில்லை. அவள் அந்த ராவணனிடத்தில் எந்த ப்ரயோஜனத்தையும் எதிர்பாராமல் மரணம் அடைய வேண்டுமென்று நிச்சயஞ் செய்துகொண்டிருக்கின்ற னள். அப்படிப்பட்ட அவளை அழைத்துக்கொண்டு போகாமல் வெறுமனே ராமனிடம் எப்படி போகலாம்? இளமான் கண்போன்ற கண்களையுடைய அப்பெண்

மணிக்கு, எவ்வளவோ கஷ்டத்தின்மேல் நான் ராம தூதனென்று நம்பிக்கையை விளைவித்தனன். அனந்தரம் நான் அவளுடன் வார்த்தைசொல்லி ராமன் முயன்றிருப்பது முதலிய வ்ருத்தாந்தத்தை யெல்லாம் தெரிவித்தனன். அவள் ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஸ்னேஹம் விளைந்ததைக்கேட்டு ஸந்தோஷமுற்றனள். ஸீதையிடத்தில் ஸதாசாரம் வரம்பழியாதிருக்கின்றது; பர்த்தாவிடத்திலுள்ள பக்தியும் மிகுதியும் சிறப்புற்றது. இவ்வளவு மஹிமையுடைய ஸீதை ராவணனைத் தானே ஏன் கொல்லலாகாதென்கிறீர்களோ? அவன் அவ்வளவு அபராதஞ்செய்திருப்பினும் அவனை அவள் கொல்லாதிருப்பதற்குக் காரணம்—அவன் மஹானுபாவன். எப்படியெனில்—அவனுக்குச் சாபத்தினால் துர்மரணம் ஸம்பவிக்காது. ஆகையால் அவனைக் கொல்வதற்கு ராமனே நிமித்த மாத்ரமாயிருக்க வேண்டும். ப்ரதான காரணமோ ஸீதையே. அந்த ஸீதை இயற்கையாகவே மெல்லிய மேனி யுடையவள்; இப்பொழுது அந்த ராமனைப் பிரிந்திருக்கின்றமையால் மிகுதியும் இளைத்து ப்ரதமையினன்று வாசிக்குந் தன்மையனுடைய வித்யைபோல் மிகுதியும் இளைத்திருக்கின்றனள். மஹாபாக்யமுடைய ஸீதை இங்ஙனம் துக்கமே பரமகதியாயிருக்கின்றனள். இனி இதற்கு ப்ரதீகாரம் என்ன செய்யவேண்டுமோ அதை யெல்லாஞ் செய்வீர்களாக' என்றனன். ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

அங்கதனும் ஹநுமானுடைய மதத்
தையே அனுஸரித்துச் சொல்லுதலும்,
ஜாம்பவான் அது கூடாதென்று
கண்டித்தலும்.

ஹநுமான் மொழிந்த அவ்வார்த்தையைக் கேட்டு வாலிகுமாரனுகிய அங்கதன் 'வானரர்களே! நாம் ஸீதா தேவியைக் கண்டும் அவளைக் கொண்டுபோகாமல் மஹானுபாவனுகிய ராகவனிடம் போவது யுக்தமன்று. நீங்கள் பராக்ரமசாலிகளென்று புகழ்பெற்று 'இப்பொழுது ஸீதையைக் கண்டோமன்றி இங்கு அழைத்துக்கொண்டு வரவில்லை' என்று ராமன் ஸந்நிதியில் மொழிவது அயுக்தமென்று எனக்குத் தோற்றுகிறது. வானரோத்தமர்களே! தேவதைகளோடும் தைத்யர்களோடும் கூடின ஸமஸ்த லோகங்களிலும் ஆகாயத்திற் கிளம்பிப் போவதிலும் பராக்ரமத்திலும் நமக்கு நிகரானவன் எவனும் இல்லை. அங்ஙனம் ஹநுமான் அந்த ராக்ஷஸர்களில் வீரர்களாயிருப்பவர்களைக் கொன்ற பின்பு நமக்கு இனிச் செய்ய வேண்டியது என்னிருக்கின்றது? ஸீதாதேவியை அழைத்துக்கொண்டு போவோம்' என்றனன். வானர திலகனுகிய ஜாம்பவான் கார்யங்களை உணர்ந்தவனுகையால் அங்கதன் அங்ஙனம் நினைவுற்றிருப்பதற்கு மிகுதியும் ஸந்தோஷமுற்றுப் பொருளடங்கின வசனத்தை மொழிந்தனன் :—'ராஜகுமாரா! நீ ஆலோசித்தது நமக்கு அஸாத்யமான விஷயமன்று; ஸாத்யமே; ஆயினும் நாம் ராமனது ஆஜ்ஞையை அனுஸரித்தேயல்லவோ முயற்சி செய்யவேண்டியவராயிருக்கின்றனம். ஆகையால் அவன் புத்தி எப்படி போகுமோ அப்படியே இந்தக் கார்யத்தை நீ நிறைவேற்றப்பாராய்' என்றனன். அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## வானரர்கள் புறப்பட்டுச் சென்று வழியில் மதுவனத்தை அழித்தலும், ததிமுகன் தடுத்தலும்.

அனந்தரம் அங்கதன் முதலிய வானர வீரர்களும் மஹாகபியான ஹநுமானும் மற்றை வானரர்களும் ஜாம்பவான் மொழிந்த வார்த்தையை ஒப்புக்கொண்டனர். அனந்தரம் வ்ருஷபம்போன்ற மஹாபலிஷ்டர்களான அவ்வானர முதலிகள் அனைவரும் ஸந்தோஷத்துடன் வாயுகுமாரனாகிய ஹநுமானை முன்னிட்டுக் கொண்டு மஹேந்த்ர பர்வதத்தை விட்டு மேருமந்த்ர பர்வதங்கள்போலும் மதித்த மஹாகஜங்கள்போலும் பெருஞ்சரீரமுடையவராகையால் ஆகாயத்தை மறைப்பவர்போல் மேல்கிளம்பினர். அவர்கள் ஸகல பூதங்களாலும் பூஜிக்கப்பட்டவனும் மஹாதீரனும் பலிஷ்டனும் மிகுந்த வேகமுடையவனுமாகிய ஹநுமானை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கையால் தமது கண்களால் அவனைத் தூக்கிக்கொண்டு போகிறவர் போல் புலப்பட்டனர். மற்றும் அவர்கள் ராகவன் விஷயத்தில் முயன்ற கார்யத்தை நிறைவேற்றவேண்டுமென்றும் அதன் மூலமாக மிகுந்த புகழைத் தமக்கு விளைவித்துக்கொள்ளவேண்டுமென்றும் நிச்சயித்து வந்த கார்யத்தை ஈடேற்றிக்கொண்டு அங்ஙனம கைகூடிய கார்யஸித்திகளால் மேன்மையுற்றிருந்தனர். எல்லோரும் ராமனுக்கு இனிதாகிய ஸீதையைக் கண்ட வ்ருத்தாந்தத்தைச் சொல்லக் குதூஹலமுற்று எல்லோரும் யுத்தத்தை விரும்புபவராகி எல்லோரும் ராமனுக்கு ப்ரத்யுபகாரஞ் செய்ய நிச்சயித்து மன நிறைவுடன் அந்தப் பர்வதத்தை விட்டு ஆகாயத்தில் கிளம்பினர். அனந்தரம் அவ்வானரர்கள் அங்ஙனம் ஆகாசமார்க்கத்தில் செல்பவராகி இடையில் பலவகை வ்ருக்ஷங்களும் கொடிகளும் அமைந்து நந்தனவனம்போல் ப்ரகாசிக்கின்ற ஒரு வனத்தைக் கண்டனர். அவ்வனமே மதுவனமென்னும் பேருடை

யது. அது ஸுக்ரீவனுடையது; முழுவதும் பாது காக்கப்பட்டு ஸமஸ்த பூதங்களுக்கும் எதிர்த்துப் பார்க்க முடியாததும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் மனோஹரமுமாயிருக்கும். மஹாநுபாவனும் வானரர் தலைவனுமாகிய ஸுக்ரீவனுடைய மாமனும் மஹாவீரனுமாகிய ததிமுகனென்னும் வானரன் அதை எப்பொழுதும் பாதுகாத்துக்கொண்டிருப்பான். அங்ஙனம் வானராதிபதியான ஸுக்ரீவனது மனத்திற்கு இனியவை யனைத்திலும் மிகுதியும் மேலாயிருக்கின்ற அம் மஹாவனத்தை அவ்வானரர்கள் அடைந்து அதிலுள்ள மதுவைப் பானஞ் செய்ய மிகுதியும் விருப்பமுற்றவராயினர். அனந்தரம் மதுவைப்போல் பொன்வர்ணமுடைய அவ்வானரர்கள் அம்மஹாவனத்தைக் கண்டு ஸந்தோஷமுற்று யுவராஜனாகிய அங்கதனிடஞ் சென்று 'நாங்கள் மதுபானஞ் செய்யவேண்டும்' என்று ப்ரார்த்தித்தனர். அதன்பிறகு அங்கதன் வ்ருத்தர்களான ஜாம்பவான் முதலிய வானரர்களின் அனுமதியின்மேல் அவ்வானரர்களுக்கு மதுபானஞ்செய்ய உத்தரவுகொடுத்தனன். ஸீதையைக் கண்ட வ்ருத்தாந்தத்தைக் கேட்டது முதல் மிகுதியும் ஸந்தோஷமுற்றிருக்கிற அவ்வானரர்கள் அனைவரும் அங்கதன் மதுபானஞ் செய்ய அனுமதி கொடுத்தமைபற்றி மிகுதியும் மனக்களிப்புற்று அவ்வங்கதன் யதேஷ்டமாக மதுபானஞ் செய்ய மீளவும் தூண்டுகையில் ஸந்தோஷத்தைப் பொறுக்க முடியாமல் நர்த்தனஞ் செய்தனர். அந்த ஸந்தோஷத்தை அடக்க முடியாமல் சிலர் கானஞ் செய்தனர். சிலர் தலைகீழாக வீழ்ந்தனர். சிலர் கூத்தாடினர். சிலர் சிரித்தனர். சிலர் கால்களை மேல் கிளப்பிக்கொண்டு பின்புறம் தரையில் படும்படி கீழ்விழுந்தனர். சிலர் இங்குமங்கும் உலாவினர். சிலர் கிளம்பிக் குதித்தனர். சிலர் பிதற்றல்களைச் செய்தனர். சிலர் ஒருவரை யொருவர் தொடர்ந்தனர். சிலர் ஒருவரை யொருவர் பிடித்துக் கொண்டனர். சிலர் ஒருவரோடொருவர் கொசகொச

வென்று பேசிக்கொண்டனர். சிலர் ஒருவரோடொருவர் கலந்து விளையாடினர். சிலர் வ்ருக்ஷத்தினின்று வ்ருக்ஷத்திற்குப் பாய்ந்தனர். சிலர் வ்ருக்ஷங்களின் றுனியினின்று பூமியில் குதித்தனர். சிலர் மிகுந்த வேகத்துடன் பூமியினின்று கிளம்பிப் பெரிய வ்ருக்ஷங்களின் றுனிகளைத் தாவினர். ஒருவன் கானஞ் செய்துகொண்டிருக்கையில் மற்றொருவன் சிரித்துக் கொண்டு அவனைக் கிட்டினன். ஒருவன் சிரித்துக் கொண்டிருக்கையில் மற்றொருவன் வேடிக்கையாக ரோதனஞ் செய்துகொண்டு அவனைக் கிட்டினன். ஒருவன் ரோதனஞ்செய்ய, மற்றொருவன் அவனைத் தூண்டிக்கொண்டு அருகே சென்றனன். அங்ஙனம் ஒருவன் தூண்டிக்கொண்டிருக்கையில் மற்றொருவன் பிதற்றிக்கொண்டு அவன்மேல் விழுந்தனன். அவ்வானரக் கூட்டமெல்லாம் மிகுதியும் மதுபானஞ் செய்து மதித்து மனச்செயல் பலவாறாக மாறப்பெற்றுப் பலசேஷ்டைகளைச் செய்துகொண்டு தாறுமாறாயிருந் தது. அதில் ஒருவனாயினும் மதம் பிடிக்காதவனில்லை. ஒருவனாயினும் த்ருப்தி அடையாதவன் இல்லை. அனந் தரம் வனத்தைப் பாதுகாக்கிற ததிமுகனென்னும் வானரன் அவ்வனத்திலுள்ள தேன் முதலியவற்றை யெல்லாம் வானரர்கள் பக்ஷித்துக்கொண்டிருக்கை யால் அங்குள்ள வ்ருக்ஷங்களின் இலைகளும் புஷ்பங்க ளும் பாழடைவது கண்டு கோபித்து அவ்வானரர்களைத் தடுத்தனன். வனத்தைப் பாதுகாப்பவனும் வயது சென்றவனுமாகிய அவ்வானர வீரன் ததிமுகன் அவ் வானரர்கள் மதத்தினால் மிகுதியும் தலைக்கு மேலேறித் தன்னைப் பொருள்செய்யாமல் விரட்டுவதைக் கண்டு கொடும் பராக்ரமமுடையவனாகையால் அவ்வனம் வானரர்களால் பாழாகாதபடி பாதுகாக்கும்பொருட்டு மீளவும் முயற்சிகொண்டனன். அவன் சிலரைத் தைர்யத்துடன் பருஷவசனங்களைப்பேசினன். சிலரைப் பொருள்செய்யாமல் உள்ளங்கையால் அடித்தனன். ஸமீபத்திற்சென்று சிலரோடு கலஹஞ்செய்தனன்.

மற்றுஞ் சிலரிடஞ் சென்று நல்லவார்த்தை சொல்லி வேண்டாமென்றனன். அங்ஙனம் அவன் பலாத்காரமாக அவ்வானரர்களைத் தடுத்துக்கொண்டிருக்கையில் அவர்கள் பயத்தைத் துறந்து அனைவரும் ஒன்றுகூடி அவனைச் சுற்றிக்கொண்டு சங்கையின்றி வார்த்தைகளால் அவமதிக்கை மாத்ரமேயன்றி, அங்ஙனஞ் செய்வது தோஷமென்று பாராமல் பிடித்து இழுக்கவும் இழுத்தனர். வானரர்களெல்லோரும் மனத்தினால் கண்மண் பாராமல் அந்தத் ததிமுகன் நகங்களால் பீறுவது பற்களால் கடிப்பது கைகளாலும் கால்களாலும் குத்திக் குமித்துச் சாக முடிப்பது ஆகிய இச்செயல்களைச் செய்துகொண்டு அம்மஹா வனத்திலுள்ள தேன் பழம் முதலிய போக்ய பதார்த்தங்களையெல்லாம் தீர்த்து அவ்வனத்தைச் சூன்யமாகச் செய்தனர்.

அறுபத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

ததிமுகனால் தடுக்கப்பட்ட வானரர்களுக்கு ஹநுமானும் அங்கதனும் மீளவும் மதுபானஞ் செய்ய அனுமதி கொடுத்தலும், ததிமுகன் வானரர்களால் அவமதிக்கப்பட்டு ஸுக்ரீவனிடம் போதலும்.

வானரர்களுக்குள் வ்ருஷபம்போல் மிகவும் செருக்குற்றவனாகையால் வானரஶ்ரேஷ்டனாகிய ஹநுமான் ததிமுகனுடைய கலஹத்தினால் கலங்கின வானரர்களைப் பார்த்து 'வானரர்களே! நீங்கள் மனத்தில் கலக்கமின்றித் தேன்களைப் பானஞ் செய்வீர்களாக. உங்களைப் பானஞ் செய்யவொட்டாமல் தடுக்கிற விரோதிகளை நான் தடுக்கிறேன்' என்றனன். ஹநுமான் மொழிந்த வார்த்தையைக் கேட்டு வானரஶ்ரேஷ்டனாகிய அங்கதன் மனத்தெளிவுடன் 'வான

ரர்கள் யதேஷ்டமாகத் தேன்களைப் பானஞ் செய்வார்களாக. நாம் முயன்று வந்த கார்யத்தை ஹநுமான் ஸாதித்தனன். அப்படிப்பட்டவன் இப்பொழுது செய்யத்தகாததொரு கார்யத்தைச் செய்யச் சொல்லினும் என்னைப்போன்றவனுக்கு அதை அவஶ்யம் செய்யவேண்டியதே. இனி இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்யச் சொல்லுகையில் சொல்லவேண்டுமோ' என்று ஆஜ்ஞாபித்தனன். அந்த வானர திலகர்கள் அங்கதனது முகத்தினின்று வெளிவந்த அவ்வார்த்தையைக் கேட்டு மிகுதியும் ஸந்தோஷமுற்றவராகி அங்கதனை 'நல்லது நல்லது' என்று கொண்டாடினர். வானரர்களெல்லோரும் அங்ஙனம் வானரஶ்ரேஷ்டனாகிய அங்கதனைக் கொண்டாடி நதிப்ரவாஹங்கள் வேகத்துடன் பாய்வதுபோல் அம்மதுவனத்தைக் குறித்துப் பறந்தோடினர். தமக்குள்ள ஸஹஜ வீர்யத்தினாலும் அங்கதன் மதுவனத்தை மிகுதியும் மனம் போனபடி பானஞ் செய்ய அநுமதி கொடுத்தமையாலும் ஸீதையைத் தமது ஹநுமான் மூலமாகக் கண்டமை அவள் வ்ருத்தாந்தத்தைத் தாம் அவன் மூலமாகக் கேட்டமை இவைகளாலும் அவ்வானரர்கள் மிகுதியும் உத்ஸாஹம் பெற்று மதுவனத்தில் புகுந்து அங்குள்ள காவற்காரர்களைப் பலாத்காரமாகத் தடுத்து மதுவைப் பருகி மிகுந்த ருசியுடைய பழங்களையும் பக்ஷித்துவிட்டனர். அனந்தரம் மதுவனத்தைப் பாதுகாப்பதில் மிகுதியும் ஊக்கமுற்றுத் தம்மைத் தடுப்பதற்காக அப்பொழுது ஒன்று சேர்ந்து வந்த வனபாலர்களை அவ்வானரர்களெல்லோரும் கிளம்பி மேல் விழுந்து பலவாறு புடைத்தனர். அவர்களெல்லோரும் ஒன்றுகச் சேர்ந்து குறுணித்தேன் நிறைந்த தேன் கூடுகளைக் கைகளில் எடுத்துப் பருகிக் கொண்டிருந்தனர். சிலர் பருகிமிகுந்த தேன்கூடுகளை உடைத்துப்போகட்டனர். தேன்போல் வர்ணமுடைய சில வானரர்கள் தேன்களைப் பருகிக் கூடுகளை வீசியெறிந்தனர். சிலர் மதித்தவராகி அந்தத் தேன்கூடு

களை எடுத்துக்கொண்டு ஒருவரையொருவர் அடித்தனர். மற்றும் சிலர் மதுபான மதத்தினால் போக முடியாமல் அந்த வ்ருக்ஷங்களின் கீழ்ப்புறத்திலேயே அவற்றின் கிளைகளைப் பிடித்துக்கொண்டிருந்து அவ்வளவுக்கவ்வளவு மதம் மீறப்பெற்று இளைப்புற்று இலைகளைப் படுக்கையாகப் பரப்பிப் படுத்துக்கொண்டனர். வானரர்கள் மதுபானத்தினால் மதித்துப் பைத்யம் பிடித்தவர்போன்று, ஸந்தோஷம் மேலெழப்பெற்றுச் சிலர் ஒருவரையொருவர் விழத்தள்ளினர். சிலர் ஒருவரையொருவர் காலால் தூண்டினர். சிலர் நடக்க முடியாமயல் நடை தடுமாறப்பெற்றிருந்தனர். சிலர் தேன் பருகினதால் மதித்துப் பெருங் கர்வத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்தனர். சிலர் ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் பக்ஷிகளைப்போல் கூவினர். சிலர் தரையில் வீழ்ந்து நித்ரித்தனர். மற்றுஞ் சிலர் வாயால் சொல்லத்தகாத ஏதோவொரு கார்யத்தைச் செய்து சிரித்துக்கொண்டிருந்தனர். மற்றுஞ் சிலர் சொல்லத் தகாத மற்றொரு கார்யத்தைச் செய்தனர். மற்றுஞ் சிலர் அப்படிப்பட்ட கார்யத்தைச் செய்து அதைப் பிறர்க்குச் சொல்லிக்கொண்டனர். வேறு சிலர் மற்றொன்றைச் செய்ய நினைத்தனர். அவ்வனத்தில் ததிமுகனுடைய கட்டளைப்படி நடக்கிற மதுரக்ஷகர் (தேன் கூண்டுகளைக் காப்பவர்) அனைவரும் பயங்கரமான அவ்வானரர்களால் தடுக்கப்பட்டுத் திசைகளைப்பற்றி ஓடிப்போயினர். மற்றும் அவ்வானரர்கள் அவ்வனரக்ஷகர்களை முழந்தாள்களில் பிடித்திழுத்து அபான த்வாரத்தை முகத்திற்கருகில் கொண்டுவந்துகாட்டினர். இங்ஙனம் அவர்கள் பீடிக்கப்பட்டு மிகுதியும் துக்கமுற்றுத் ததிமுகனிடம் வந்து 'ஹநுமானிடம் வரம் பெற்று வானரர்கள் மதுவனத்தையெல்லாம் பலாத்காரமாகப் பாழ்செய்தனர். இவ்வளவேயன்றி எங்களை முழங்கால்களில் பிடித்துத் தூக்கி அபானத்வாரத்தை முகத்தருகில் கொண்டுவந்து பார்க்கும்படி செய்தார்கள்' என்றனர். அனந்தரம் மதுவனத்தைப் பாது

காக்கின்ற ததிமுகன் மதுவனமெல்லாம் பாழடைந்
தமை கேட்டுக் கோபமுற்றுத் தன் ப்ருத்யர்களான
அவ்வானரர்களை நல்வார்த்தைகளால் ஸமாதானப்
படுத்தி "நீங்கள் இங்கு வாருங்கள். நாமெல்லோரும்
போவோம்; போய், பலத்தினால் கொழுத்துத் தேன்
களை யெல்லாம் பானஞ்செய்கிற வானரர்களை விலி
வினால் தடுப்போம்' என்று மொழிந்தனர். ததிமுகன்
இங்ஙனம் சொன்னது கேட்டு வீரர்களும் வானர
ஶ்ரேஷ்டர்களுமான அவ்வனரக்ஷகர் அந்தத் ததிமுக
னோடுகூடவே வேகத்துடன் மதுவனத்திற்குள்
நுழைந்தனர். ததிமுகனும் பலத்தினால் ஒரு வ்ருக்ஷத்
தைப் பிடுங்கி எடுத்துக்கொண்டு அவ்வானரர்களின்
நடுவில் மிக்க வேகத்துடன் ஓடிப் போயினன்.
அவனுடைய வேலைக்காரர்களான அவ்வானரர்கள்
அனைவரும் அவனைப் பின்றொடர்ந்தோடினர். அவ்
வானரர்கள் கோபித்தவராகிக் கற்களையும் வ்ருக்ஷங்
களையும் பர்வதங்களையும் பிடுங்கி எடுத்துக்கொண்டு
வானரஶ்ரேஷ்டர்களான அங்கதாதிகள் இருக்கிற
இடத்திற்குப் பறந்தோடினர். அவ்வானரர்கள் கோப
முற்றுக் கற்களையும் மரங்களையும் மலைகளையும் எடுத்துக்
கொண்டு அங்கதன் முதலிய கபிகுஞ்ஜரர்கள்மேல்
எதிர்த்து வந்தனர். வீரர்களான அவ்வானரர்கள் தம்
ப்ரபுவாகிய ததிமுகனுடைய சாஸனத்தை மனத்திற்
படுத்திக்கொண்டு மராமரங்களையும் பனைமரங்களையும்
கற்களையும் ஆயுதங்களாகக்கொண்டு வேகமாக ஓடி
வந்தனர். அனந்தரம் வீரர்களான அந்த வனபாலர்கள்
அனேகமாயிரம் பேர் அவ்விடம் வந்து பலத்தினால்
கொழுத்திருப்பவர்களும் வ்ருக்ஷத்தின் மேலிருப்ப
வர்களும் கீழிருப்பவர்களுமான அவ்வானரர்களைத்
தடுக்கத் தொடங்கினர் அனந்தரம் ஹனுமான்
முதலிய வானரஶ்ரேஷ்டர்கள் ததிமுகன் கோபித்துக்
கொண்டு வருவதைக் கண்டு, அப்பொழுது மிக்க
வேகத்துடன் அவன்மேல் எதிர்த்தோடினர். அனந்
தரம் மஹாபாஹுவும் மஹாபலனும் பூஜிக்கத்தகுந்த

வனுமாகிய ததிமுகன் வ்ருக்ஷத்தைக் கையிலேந்தி வருவதைக்கண்டு அங்கதன் கோபமுற்று அவனை இருகைகளாலும் புடைத்தனன். அவ்வங்கதன் மதுபான மதத்தினால் கண்மண் தெரியாதிருக்கையால் 'இவன் எனக்குப் பூஜ்யன்' என்று தெரியப் பெறாதிருந்தனன். ஆகையால் அவனைச் சீக்ரமாக வேகத்துடன் தரையில் விழத்தள்ளி நன்றாகக் கசக்கி விட்டனன். வீரனும் கபிஸ்ரேஷ்டனுமாகிய அந்தத் ததிமுகன் பிறகு கைகளும் துடைகளும் புஜங்களும் முறியப்பெற்று விலவிலத்து ரக்தப்ரவாஹத்தில் நனைந்து, உடனே சிறிது நேரம் மூர்ச்சித்திருந்தனன். வானரர் தலைவனாகிய ஸுக்ரீவனது மாமனான அத்ததிமுகன் சீக்ரமாக மூர்ச்சை தெளிந்து மிகுதியும் கோபமுற்று மதுபானத்தினால் மெய்ம்மறந்திருக்கிற வானரர்களைத் தடியால் அடித்துத் தடுத்தனன். வானரஸ்ரேஷ்டனாகிய அத்ததிமுகன் அவ்வானரர்களால் மீளவும் புடைக்கப்பட்டு அவர்களிடத்தினின்று மிக வருத்தத்துடன் தப்பித்துக்கொண்டு ஏகாந்தமானதோரிடத்தில் சேர்ந்து அங்குப் பின்றொடர்ந்துவந்த தன் ப்ருத்யர்களைப் பார்த்து 'இவ்வங்கதாதிகள் இங்ஙனமே விழுந்திருப்பார்களாக. அகன்ற கழுத்தையுடையவனும் நம் ப்ரபுவுமாகிய ஸுக்ரீவனும் ராமனும் இருக்கிற இடத்திற்குப் போவோம். ராஜனிடஞ் சென்று தோஷத்தையெல்லாம் அவன் செவிப்பட அங்கதன்மேல் ஏறிட்டுச் சொல்லுகிறேன். அவனோ மிகுதியும் கோபமுடையவன்; இவ்வார்த்தையைக் கேட்டு வானரர்களெல்லோரையும் கொல்விப்பான். தந்தை பாட்டன் நாள் முதல் அழியாது வருவதும் திவ்யமாயிருப்பதும் தேவதைகளுக்கும் புகமுடியாததுமாகிய இம்மதுவனம் மஹானுபாவனாகிய ஸுக்ரீவனுக்கு மிகுதியும் ப்ரியமாயிருப்பதல்லவா? தேனில் பேராசையுடைய இந்த அல்பாயுஸ்ஸுக்களான வானரர்களெல்லோர்க்கும் இவருடைய நண்பர்களுக்கும் அந்த ஸுக்ரீவன் மரணதண்டனை விதிப்பான். துர்ப்

புத்திகளான இவர்கள் ராஜாஜ்ஞையை அவமதிக்கையால் வதிக்கத்தகுந்தவர்களேயல்லவா? ஆகையால் ஸுக்ரீவன் தப்பாமல் வதிப்பான். அப்பொழுது இவர்களுடைய செயல்களைப் பொறுக்கமுடியாமையால் நமக்கு உண்டான கோபம் ஸபலமாய்விடும்' என்றனன். மஹாபலனாகிய ததிமுகன் இங்ஙனம் வனபாலர்களுக்குச் சொல்லி அவர்களுடன் கூடி உடனே ஆகாயத்தில் கிளம்பி வேகமாகப் போயினன். அவன் புத்தியிற் சிறந்தவனும் ஸூர்யகுமாரனுமாகிய ஸுக்ரீவனிருக்குமிடத்திற்கு ஒரு நிமிஷ காலத்தில் போய்ச்சேர்ந்தனன். அவன் அங்ஙனஞ் சென்று ராமனையும் லக்ஷ்மணனையும் ஸுக்ரீவனையும் கண்டு ஆகாயத்தினின்று மேடுபள்ளமில்லாமல் ஸமமாயிருக்கின்ற பூமியில் இறங்கினன். மஹா வீர்யமுடையவனும் வனபாலர்களுக்கெல்லாம் தலைவனுமாகிய அத்ததிமுகன தன் ப்ருத்யர்களான அவ்வனபாலர்களால் சூழப்பட்டுச் சென்று முகத்தில் தைன்யம் வழியப்பெற்றுச் சிரஸ்ஸில் அஞ்சலி செய்து தன் தலையால் ஸுக்ரீவனது சுபமான பாதங்களை அழுத்திக்கொண்டு ப்ரணாமஞ் செய்தனன். அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ஸுக்ரீவன் மதுவனம் அழித்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு வானரர்களை உடனே வரச்சொல்லும்படி ததிமுகனைத் திருப்பி யனுப்புதல்.

அனந்தரம் வானரதிலகனாகிய ஸுக்ரீவன் அங்ஙனம் தனது பாதங்களில் தலை சாய்த்து வணங்கி வீழ்ந்திருக்கிற ததிமுகனைக் கண்டவுடனே, இவன் இப்படி ஏன் செய்கிறானோ என்று மிகுதியும் மனத்தில்

கலக்கமுற்று அவனைப் பார்த்து 'எழுந்திரு. எழுந்திரு. நீ என் பாதங்கள்மேல் ஏன் விழுந்தனை? உனக்கு அபயம் உண்டாகுக. வீரனே! எல்லாவற்றையும் சொல்வாயாக' என்று வினவினன். மஹானுபாவனாகிய ஸுக்ரீவன் அங்ஙனம் அபயம் கொடுத்து ஸமாதானப் படுத்துகையில் மஹாப்ராஜ்ஞனான அந்தத் ததிமுகன் விஸ்வாஸம் அடைந்து எழுந்து அவனை நோக்கி 'ராஜனே! உன் தந்தை ருக்ஷராஜஸ்ஸாவது உன் தமையன் வாலியாவது நீயாவது இதற்கு முன்பு என்றுயினும் மதுவனத்தை மனம்போனபடி அனுபவிக்கும்படி எவர்க்கும் காட்டிக்கொடுத்ததில்லை. அப்படிப்பட்ட வனத்தை இன்றையதினம் வானரர்கள் வந்து பக்ஷித்துவிட்டனர். இந்த வனபாலர்கள் போய் எவ்வளவு தடுத்தபோதிலும் அவ்வானரர்கள் இவர்களைப் பொருள்செய்யாமல் அதிலுள்ள பழங்களைத் தின்று தேன்களைக் குடிக்கின்றனர்; மிகுந்திருக்கிற தேன்கூடுகளைக் கீழே அடித்து த்வம்ஸஞ்செய்கின்றனர். சிலர் அவற்றைத் தின்கின்றனர். இவ்வனபாலர்கள் போய்த்தடுக்கையில், இவர்களெல்லோரையும் புருவத்தை நெரித்துக் காட்டி அவமதிக்கின்றனர். இந்த வனபாலர்கள் மிகுதியும் கோபாவேசமுற்றுத் தடுக்கையில், அங்கதன் முதலிய வானர ஸ்ரேஷ்டர்கள் கோபித்து இவர்களை மிகுதியும் விரட்டினர். வானர திலகனே! வீரர்களான அவ்வானரர்கள் பலர் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று 'இவர்களெல்லோரையும் துரத்தினர். அவ்வானரர்கள் சில வனபாலர்களைக் கைகளால் அடித்தனர்; சிலரை முழங்கால்களால் அடித்து மற்றும் தமது மனம் போனபடி இழுத்து மேல்தூக்கித் தலை கீழாக்கி அபானத்வாரத்தைப் பார்க்கும்படி செய்தனர். ப்ரபு! நீ பாதுகாத்துக் கொண்டிருக்கையில், அவ்வானரர்கள் இங்ஙனம் சூரர்களான இவ்வனபாலர்களை அடித்தனர். மதுவனத்திலுள்ள தேன் பழம் முதலியவற்றையெல்லாம் மனம் போனபடி பக்ஷித்துக் குடிக்கின்றனர்' என்றனன்.



2410. ததிமுகன் ஸுக்ரீவனுக்கு மதுவனம் ம
கூறுதல்.

இங்ஙனம அந்தத் ததிமுகன் வானரர தலைவனாகிய ஸுக்ரீவனிடம் விண்ணப்பஞ் செய்துகொண்டிருக்கையில், மஹாப்ராஜ்ஞனும் சத்ருவீரர்களை அழிப்பவனுமாகிய லக்ஷ்மணன் அந்தத் ததிமுகனைக் குறித்து ஸுக்ரீவனைப்பார்த்து 'வானரராஜனே! வனபாலனாகிய இவ்வானரன் இங்கு எதுக்காக வந்தனன்? மற்றும், எந்த விஷயத்தைக் குறித்து இங்ஙனம் துக்கித்து உன்னிடம் விண்ணப்பஞ்செய்தனன்' என்று வினாவினன். மஹானுபாவனாகிய லக்ஷ்மணன் இங்ஙனம் வினவுகையில், பேசுவதில் ஸமர்த்தனாகிய ஸுக்ரீவன் அவனைப் பார்த்து 'அப்பனே! லக்ஷ்மணா! வீரனாகிய இந்தத் ததிமுகன் தென்திசையில் போய்த் தேடித் திரும்பி வந்த வீரர்களான அங்கதன் முதலிய வானர புங்கவர் மதுவனத்திலுள்ள மதுவையெல்லாம் பானஞ் செய்தார்கள்' என்று மொழிகின்றனன். அவ்வங்கதாதிகள் வரும்பொழுதே மதுவனத்தில் புகுந்து அதை முழுவதும் ஆக்ரமித்து முறித்து அதிலுள்ள மதுவையெல்லாம் பானஞ்செய்துவிட்டனரே! இவர்கள் போன கார்யம் நிறைவேறாதிருக்கும்பக்ஷத்தில் வரும்பொழுதே இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்ய மாட்டார்கள். அவ்வானரர்கள் மதுவனத்தில் புகுந்த பொழுதே அவர்கள் கார்யத்தைச் சாதித்தே இருப்பார்களென்பது நிச்சயம். ஸீதாதேவியைப் பார்த்தாய் விட்டது. இவ்விஷயத்தில் ஸந்தேஹமே இல்லை. இங்ஙனம் பார்த்தவன் மற்றெவனுமல்லன்; ஹனுமானே பார்த்திருக்கவேண்டும். ஹனுமான் தவிர மற்றெவனும் இந்தக்* கார்யத்தைச் சாதிக்கவல்லனல்லன். கார்ய ஸாதன சக்தியும் புத்தியும் உத்ஸாஹமும் பராக்ரமமும் வித்யையும் வானர திலகனாகிய அந்த ஹனுமானிடத்தில்தான் நிலைகொண்டிருக்கின்றன. எந்தக் கார்யத்தில் ஜாம்பவானும் மஹாபலிஷ்டனான அங்கதனும் நாயகராயிருப்பார்களோ, மற்றும் ஹனுமான் முன்னின்று பாதுகாத்து வருபவனாயிருப்பானோ, அந்தக் கார்யம் தவறாமல் ஸித்திக்குமேயன்றி வேறு கதி

அடையாது. அங்கதன் முதலிய வானரவீரர்கள் வந்து மதுவனத்தையெல்லாம் பாழ்செய்தார்களாம். இப்பொழுது இவ்வனபாலர்களெல்லாரும் ஒன்றுகூடிச் சென்று அவர்களைத் தடுக்கையில் அவர்கள் இவர்களை முழங்கால்களால் அடித்தார்களாம். இனிதாகப் பேசுந்தன்மையனும் பராக்ரமத்தினால் புகழ்பெற்றவனும் ததிமுகனென்னும் பேருடையவனுமாகிய இவ் வானரன் இந்த ஸங்கதியைச் சொல்வதற்கே இவ்விடம் வந்தனன். மஹாபாஹுவே! லக்ஷ்மணா! ஸீதையைப் பார்த்திருப்பார்கள். நீயும் இவ்விஷயத்தை உள்ளபடி ஆலோசித்துப் பாராய். ஆனதுபற்றியே இவ்வானரர்களெல்லோரும் அங்ஙனம் நிர்ப்பயமாக மதுவனத்தில் புகுந்து மனம்போனபடி தேன்களைப் பானஞ்செய்கின்றனர். அவ்வானரர்கள் புத்தியிலும் பராக்ரமத்திலும் புகழ் பெற்றவரேயன்றி மூடரல்லர்; அப்படிப்பட்டவர் ஸீதையைக்காணுமலே வந்திருப்பார்களாயின் ப்ரஹ்மதேவனால் என் தந்தைக்கு வரமாகக் கொடுக்கப்பட்டதும் திவ்யமுமாகிய மதுவனத்தில் எள்ளளவும் தைர்யத்துடன் நுழையமாட்டார்கள்' என்றனன். அனந்தரம் தர்மிஷ்டனாகிய லக்ஷ்மணனும் ராமனும் மிகுதியும் ஸந்தோஷித்தனர். ஸுக்ரீவனது முகத்தினின்று செவிக்கினிதாகப்புறப்பட்ட அவ்வார்த்தையைக் கேட்டு ராமனும் மஹாபலனாகிய லக்ஷ்மணனும் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தனர். அழகிய கண்டத்தையுடைய அந்த ஸுக்ரீவன் ததிமுகன் சொன்ன இவ்வார்த்தையைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமுற்று வனபாலனைப் பார்த்து 'அந்த வானரர்கள் கார்யத்தை நிறைவேற்றி வந்தவராகையால் மதுவனத்திலுள்ள மதுவையெல்லாம் அனுபவித்ததற்கு நான் ஸந்தோஷித்தனன். அவர்கள் கார்யத்தை நிறைவேற்றி வந்தவராகையால் அவர்கள் செய்த செயல்களையெல்லாம் நான் பொறுக்கவேண்டியதே. ஸிம்ஹங்கள்போல் பலத்தினால் கொழுத்திருப்பவரும் கார்யம் கைகூடப் பெற்றவருமாகித் திரும்பிவந்த ஹனுமான் முதலிய

அவ்வானரர்களைச் சீக்ரத்தில் ராமலக்ஷ்மணர்களுடன் காணவும், அவர்கள் ஸீதையைப் பெறுதற்குச் செய்த ப்ரயத்னத்தைக் கேட்கவும் விரும்புகின்றேன்' என்றனன். 'கார்யம் நிறைவேறப் பெற்றோம்' என்ற ஸந்தோஷத்தினால் கண்கள் மலரவும் மேனியெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகவும் பெற்றிருக்கிற அந்த ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து வானர ராஜனாகிய ஸுக்ரீவனும் அவயவமெல்லாம் மயிர்க்கூச்சலடையப்பெற்றுக் கார்யஸித்தி கைமேலிருக்கலாயிற்றே என்று அளவிறந்த ஆநந்தமடைந்தனன். அறுபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ததிமுகன் அங்கதாதிகளை ஸுக்ரீவனிடம் போக அனுப்புதலும், ஹனுமான் ராமனிடத்தில் 'கண்டேன் ஸீதையை' என்றுரைத்தலும், ராமன் ஹனுமானைக் கௌரவத்துடன் காணுதலும். }

ஸுக்ரீவன் இங்ஙனம் மொழிகையில், ததிமுகன் ஸந்தோஷம் அடைந்து, ராம லக்ஷ்மண ஸுக்ரீவர்களுக்கு நமஸ்காரஞ் செய்தனன். அவன் அங்ஙனம் ஸுக்ரீவனுக்கும் மஹாபலர்களான ராம லக்ஷ்மணர்களுக்கும் நமஸ்காரஞ் செய்து, சூரர்களான வனபாலர்களுடன் ஆகாயத்தில் கிளம்பினன். அவன் வந்தாற்போலவே சீக்ரமாகச் சென்று அனந்தரம் ஆகாயத்தினின்று தரையில் இழிந்து அம்மதுவனத்திற்குள் ப்ரவேசித்தனன். அவன் அங்ஙனம் மதுவனத்தில் ப்ரவேசித்து அதிலுள்ள அவ்வானர யூதபதிகள் பருகின தேனும் அதற்கு அனுபானமாகக் குடித்த ஜலமும் ஜீர்ணிக்கையால் அவ்விரண்டையும் மூத்ர த்வாரத்தினால் வெளி விட்டு அதனால் எல்லோரும் மது

பானத்தினாலுண்டான மயக்கந்தெளிந்து எழுந்திருக்கக் கண்டனன். வீரனாகிய அந்தத் ததிமுகன் அவர்களிடஞ் சென்று இரு கைகளையும் குவித்து அஞ்சலிசெய்து அங்கதனைப் பார்த்து ஸந்தோஷத்துடன் இனிய வசனத்தை மொழிந்தனன்:— 'நல்லியற்கையுடையவனே! இவர்கள் உங்களைத்தடுத்தார்களென்று கோபஞ் செய்யவேண்டாம். வனபாலர்கள் தெரியாமையால் கோபித்துக்கொண்டு உங்களைத் தடுத்தனர். மஹாபலனே! நீ யுவராஜன்; ஆகையால் இம்மதுவனத்திற்கு ப்ரபுவாயினை. நாங்கள் அஜ்ஞானத்தினால் முன்பு அபராதஞ் செய்தனம். அதை நீ பொறுக்கவேண்டும். பாபமற்றவனே! நான் போய் உன் சிற்றப்பனிடம் இவ்வானரர்களெல்லோரும் இங்கு வந்திருக்கிறார்களென்று மொழிந்தனன். நீ இந்த வானரயூதபதிகளுடன் வந்திருப்பதைக் கேட்டவுடனே அவன் மிகுதியும் ஸந்தோஷமுற்று நீ மதுவனம் அழித்ததைக் கேட்டும் எள்ளளவும் கோபம் அடையவில்லை. வானராதிபதியான நம் ப்ரபு உன் சிற்றப்பன் அந்த ஸுக்ரீவன் அங்ஙனம் பரம ஸந்தோஷம் அடைந்து 'அவர்களெல்லோரையும் இங்குச் சீக்ரம் அனுப்புவாயாக' என்று எனக்கு ஆஜ்ஞாபித்தான்' என்றனன். ததிமுகன் இங்ஙனம் மொழிந்த மதுரவசனத்தைக் கேட்டு, பேசுவதில் ஸமர்த்தனும் வானரோத்தமனுமாகிய அங்கதன் அந்த வானரர்களைப் பார்த்து, 'சத்ருக்களையழிக்குந் திறமையுடைய வானரயூதபதிகளே! நாம் இவ்விடம் வந்திருக்கிற வ்ருத்தாந்தத்தை ராமன் செவியுற்றானென்று சங்கிக்கின்றனன். ஆகையால் கார்யத்தை நிறைவேற்றின பின்பு நாம் இங்கிருப்பது யுக்தமன்று. வானரர்களெல்லோரும் யதேஷ்டமாக மதுபானஞ் செய்து இளைப்பை ஆற்றிக்கொண்டனர். இனிச் செய்யவேண்டியதென்? என் சிற்றப்பனாகிய ஸுக்ரீவனிடம் போகவேண்டியதே! வானர பதிகளனைவ(
சேர்ந்து எப்படி எனக்கு அனுமதி

னரோ, அப்படியே நான் செய்யவேண்டியவன். ஏனென்றால்—செய்யவேண்டிய கார்யத்தில் எதிலாயி னும் உங்களுக்கு நான் பரதந்த்ரனேயன்றி ஸ்வதந்த்ர னல்லேன். 'யுவராஜனாயிற்றே நீ, அங்ஙனஞ் சொல்லக் கூடுமா' என்கிறீர்களோ? நான் யுவராஜனாயினும் இப்பொழுது உங்களை ஆஜ்ஞாபிக்க ஸ்வதந்த்ர னல்லேன். கார்யத்தை நிறைவேற்றி வந்த உபகாரகர்க ளான உங்களை நான் நிர்ப்பந்தமாகத் தூண்டுவேனா யின் அநுசிதத்தாற்போலாகுமாகையால், அது யுக்த மன்று' என்றனன். அங்கதன் இங்ஙனம் மனத்தி னின்று என்றும் மாறாதபடி மொழிந்த மேலான வார்த்தையைக் கேட்டு, மனத்தில் மிகுதியும் ஸந்தோஷமுற்று, வானரர்கள் அவனைப் பார்த்து 'ராஜனே! வானர திலகா! ப்ரபுவாயிருப்பவன் எவன் இங்ஙனம் மொழிவான்; எல்லோரும் ப்ரபுத்வமென்னும் அதிகாரத்தினால் மதங்கொண்டு மெய்ம்மறந்து அஹங்கரித்திருப்பார்களேயன்றி இங்ஙனம் வணக்க முற்றிருக்கமாட்டார்கள். இங்ஙனம் மொழிவது உனக்கே மிகுதியும் பொருந்துமன்றி மற்றெவனுக்கும் பொருந்தாது. உனக்குள்ள இவ்விநயமே உனக்குப் பெரியமங்களம் விளையப்போகிறதென்றும் அதற்கு நீ தகுந்தவனென்றும் சொல்லுகின்றது. நாங்களெல் லோரும் வானரவீரர்களுக்கதிபதியும் நீதிநெறி தவறா மல் நடப்பவனுமாகையால் அநீதி மூலமாய் வரும் அழிவுக ளொன்று மறியாதவனுமாகிய அந்த ஸுக்ரீவனிருக்கு மிடம் போக ஸித்தமாயிருக்கின்றனம். வானர ச்ரேஷ்டனே! நீ ஆஜ்ஞை செய்யாமல் வானரர்களுக்கு எங்காயினும் ஓர் அடியாயினும் எடுத்து வைத்துப் போக ஸாத்யமில்லை. இது உண்மையாக உனக்குச் சொல்லுகின்றனம்' என்றனர். அவர்கள் இங்ஙனம் மொழிகையில் அது கேட்டு அங்கதன் 'நல்லது போவோம்' என்றனன். இங்ஙனம் பேசிக்கொண்டு மஹாபலர்களான அவ்வானரர்கள் ஆகாயத்தில் கிளம் பினர். அங்கதன் ஆகாயத்தில் கிளம்பினவுடனே அந்த

வானரயூதபதிகளனைவரும் ஆகாயம் முழுவதும் அவகாசமில்லாதிருக்கும்படி மறைத்துக்கொண்டு யந்த்ரங்களாற் கிளப்பப்பெற்ற பர்வதங்கள்போல் அவன் பின்னேயே ஆகாயத்தில் கிளம்பினர். அவ்வானரர்கள் மிகுந்த வேகமுடையவராகையால் திடீலென்று ஆகாயத்தில் கிளம்பி வாயுவால் தூண்டப்பட்ட மேகங்கள்போல் பெருங்கோஷம் உண்டாகும்படி இறைச்சலிட்டுக்கொண்டு போயினர். அங்கதன் வருவதற்குச் சிறிது தாமதமாகையில் ராமன் அது கண்டு 'இன்னம் அங்கதன் வரவில்லையே. கார்யம் ஆயிற்றோ இல்லையோ தெரியவில்லையே' என்று வருத்தமுற்றனன். வானராதிபதியான ஸுக்ரீவன், தாமரை யிதழ்போன்ற கண்கள் விளங்கப்பெற்று வருந்துகின்ற ஸ்ரீ ராமனைப் பார்த்து 'நீ இனி ஸமாதான முறுவாயாக. உனக்கு மங்களம் உண்டாகுமாக. அவர்கள் ஸீதையின் பதவியைக் கண்டு வந்தனர். ஸந்தேஹமில்லை. அவர்கள் ஸீதையைக் காணாதிருப்பார்களாயின் நான் வைத்த கெடு கடந்த பின்பு இங்கு வரமாட்டார்கள். கார்யம் கைகூடாதிருக்குமாயின், மஹாபாஹுவும் வானரதிலகனும் யுவராஜனுமாகிய அங்கதன் என்னிடம் திரும்பிவரமாட்டான். ஒருகால் அவர்கள் கார்யம் கைகூடப்பெறாமலே வந்து இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்தார்களாயின், அப்பொழுது அவ்வங்கதன் முகம் வாடப்பெற்று மனங்குதிரப்பெறாமல் தடுமாற்றமுற்றிருப்பான். வானரேஶ்வரனாகிய அங்கதன் கார்யம் நிறைவேறப்பெறாமல் ஸந்தோஷமுற்றிரானாயின், தந்தை பாட்டன் நாள் முதல் அழியாதுவருவதும் எமது பூர்விகர்கள் அனைவராலும் மிக்க மனவூக்கத்துடன் பாதுகாக்கப்பட்டிருப்பதுமாகிய என் மதுவனத்தை எள்ளளவும் பாழ் செய்யமாட்டான். அழகிய விரதமுடையவனே! ஸீதையின் க்ஷேமம் தெரிந்தது. நீயும் க்ஷேமமேயாகையால் உன்னைப்பெற்ற கௌஸல்யையும் ஸுபுத்ரவதியேயாயினள். இனி மனஸ்ஸமாதான முறுவாயாக. ஸீதா

தேவியைக் கண்டாய்விட்டது. ஸந்தேஹமில்லை. கண்டவன் மற்றெவனுமல்லன். ஹனுமான்தான் கண்டு பிடித்திருப்பான். ஏனெனில், ஹனுமான் தவிர மற்றெவனும் இந்தக் கார்யத்தை ஸாதிக்க வல்லனல்லன். புத்தியிற் சிறந்தவனே! ஸூர்யனிடத்தில் தேஜஸ்ஸு இருப்பதுபோல், கார்யஸித்தியும் புத்தியும் உத்ஸாஹமும் பராக்ரமும் ஹனுமானிடத்தில் நிலைகொண்டிருக்கின்றன. எந்தக் கார்யத்தில் ஜாம்பவான் மந்த்ரியும் அங்கதன் ஸேனாதிபதியுமாயிருப்பார்களோ, மற்றும் ஹனுமான் மேல் நின்று பாது காப்பவனாயிருப்பானோ, அப்படிப்பட்ட கார்யம் தப்பாமல் ஸித்திக்குமன்றி வேறு கதி அடையாது. அளவிறந்த பராக்ரமமுடையவனே! நீ இப்பொழுது சிந்தையுற்றிருக்கவேண்டாம்' என்றனன். அனந்தரம் அந்த வானரர்கள் கிஷ்கிந்தையினருகில் வந்து ஹனுமான் ஸாதித்த கார்யத்தினால் கர்வித்திருப்பவராகையால் கார்யம் நிறைவேறிற்றென்று எல்லோர்க்கும் தெரியச்சொல்பவர்போல் கிலகிலவென்று சப்தித்து ஸிம்ஹநாதஞ் செய்கையில், அந்த த்வனி ஸமீபத்தில் ஆகாயத்தினின்று ஸுக்ரீவனுக்குச் செவிப்பட்டது. அனந்தரம் வானரோத்தமனாகிய ஸுக்ரீவன் அந்த வானரர்களின் ஸிம்ஹநாதத்தைக் கேட்டு மனத்தில் மிகுதியும் ஸந்தோஷமுற்றுத் தனது லாங்கூலத்தை நீட்டி மஹேந்த்ர பர்வத சிகரத்தளவும் உயரத்தூக்கி மடக்கிக்கொண்டிருந்தனன். அவ்வளவில் அவ் வானரர்களும் ராமனைப் பார்க்க விருப்பமுற்று அங்கதனையும் ஹனுமானையும் முன்னிட்டுக்கொண்டு வந்தனர். வீரர்களான அங்கதன் முதலிய வானரர்கள் மேனியெல்லாம் மயிர்க்கூச்சலடைய ஸந்தோஷம் அடைந்து, வானர ராஜனாகிய ஸுக்ரீவன் ராமன் இவர்களின் ஸமீபத்தில் இறங்கினர். அனந்தரம் மஹாபாஹுவாகிய ஹனுமான் தலை வணங்கி நமஸ்காரஞ் செய்து 'ஸீதா தேவி பதிவ்ரதைகளுக்குள்ள நியமத்துடன் யாதொரு கெடுதியுமின்றி க்ஷேமமாயிருக்

கின்றனள்' என்று ராமனுக்குச் சொல்லினன். அனந்தரம் வாயுகுமாரனாகிய அந்த ஹனுமான் தான் கார்யத்தைச் சாதித்திருப்பானென்று நிச்சயித்திருக்கிற ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஸந்தோஷம் அடைந்து கார்யஸித்தியால் ஸந்தோஷமுற்றிருக்கின்ற அந்த ஹனுமானை வெகுமான த்ருஷ்டியுடன் கண்டனர் அனந்தரம் வீரர்களான பகைவரை முடிக்க வல்லவனாகிய ராமன் மிகுந்த ஸந்தோஷ ஸாகரத்தில் மிதந்துகொண்டு மிகுதியும் கௌரவத்துடன் அந்த ஹனுமானைக் கண்டனன். அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் ராமஸந்நிதியில் ஸீதா வ்ருத்தாந்தத்தையெல்லாம் மொழிந்து சூடாமணியைக் கொடுத்தல்.

அனந்தரம் அவ்வானரர்கள் அற்புதமான அரண்யங்களோடுகூடின ப்ரஸ்ரவண பர்வதத்திற்குச் சென்று சிரஸு நிலத்தில் படும்படி ஸாஷ்டாங்கமாக ராமனுக்கும் மஹாபலனாகிய லக்ஷ்மணனுக்கும் நமஸ்காரஞ் செய்து ஸுக்ரீவனையும் வணங்கி யுவராஜனாகிய அங்கதனை முன்னிட்டுக்கொண்டு ஸீதா வ்ருத்தாந்தத்தைச் சொல்லத் தொடங்கினர். அந்த வானரர்களெல்லோரும் ஸீதா தேவி ராவணனது அந்தப்புரத்தில் சிறையிருப்பதையும் ராக்ஷஸ ஸ்த்ரீகள் அவளை விரட்டுவதையும் ராமனிடத்தில் அவளுக்குள்ள மிகுந்த அனுராகத்தையும் ராவணன் ஸீதைக்கு வைத்திருக்கிற கெடுவையும் ஆகிய இவற்றையெல்லாம் ராம ஸந்நிதியிற் சொல்லினர். ராமன் ஸீதா தேவி எந்தக் கெடுதியுமின்றி க்ஷேமமாயிருக்கிறாளென்பதைக் கேட்டு வானரர்களை நோக்கி 'வானரர்களே!

எங்கே இருக்கின்றனள்? என்மீது அம்மா தாசியின் மனம் எங்ஙனம் இருக்கின்றது? ஸீதையைக் குறித்து இந்த ஸங்கதியெல்லாம் நீங்கள் எனக்குச் சொல்லவேண்டும்' என்று வினவினன். ராமன் இங்ஙனம் சொன்னது கேட்டு, வானரர்கள் அவனது ஸந்நிதானத்தில் ஸீதையின் வ்ருத்தாந்தங்களனைத்தையும் நன்குணர்ந்த ஹனுமானை அந்த ஸமாசாரத்தையெல்லாஞ் சொல்லும்படி தூண்டினர். அவர்கள் அங்ஙனஞ் சொன்னது கேட்டு, வாயுகுமாரனாகிய ஹனுமான் ஸீதையிருக்குந் திசையை நோக்கி, அந்த ஸீதா தேவிக்குத் தலைவணங்கி நமஸ்காரஞ்செய்து, வாக்யங்களை உணர்தவனாகையால் (பேச வல்லவனாகையால்) ஸீதையைக் கண்ட விதமெல்லாஞ் சொல்லத் தொடங்கினன் :—'நான் நூறுயோஜனை விஸ்தாரமுடைய ஸமுத்ரத்தைத் தாண்டி, ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைக் காணவேண்டுமென்று விரும்பித் தேடிக்கொண்டு போயினன். அங்ஙனம் தாண்டிப் போகையில், தெற்கு ஸமுத்ரத்தின் தென் கரையில் துர்ப்புத்தியனாகிய ராவணனுடைய பட்டணம் லங்கையென்பதொன்றுளது. ராமா! அங்கு ராவணனந்தப் புரத்தில் பதிவ்ரதையும் ஸௌந்தரியுமாகிய ஸீதையைக் கண்டனன். அவள் தன் கருத்தையெல்லாம் உன்னிடத்திலேயே வைத்து உன்னிடத்திலுள்ள ஆசையைப் பற்றியே ப்ராணன்களோடிருக்கின்றனள். ஸீதை அங்கு அந்தப்புரத்தின் உத்யானவனமாகிய அசோக வனத்தில் ராக்ஷஸ ஸத்ரீகளினிடையில் அகப்பட்டு, விகார உருவமுடைய ராக்ஷஸ ஸ்த்ரீகளால் அடிக்கடி விரட்டப்பட்டிருக்க நான் கண்டனன். பதிவ்ரதையும் எள்ளளவும் துக்கத்திற்குத் தகாதவளுமாகிய அந்த மஹானுபாவை இங்ஙனம் வருத்தமுற்றிருக்கின்றனள். ராமா! அந்த ஸீதா தேவி, ராவணனந்தப்புரத்தில் சிறையிலகப்பட்டு ராக்ஷஸிகள் சுற்றிலும் காத்துக் கொண்டிருக்கப்பெற்றுத் தலைமயிர்களெல்லாம் ஒரே ஜடையாகப் பின்னிக்கொள்ள மிகுதியும் தீனையாகி

உன்னையே த்யானித்துக்கொண்டு தரையில் படுப்பவளாகிப் பனியில் வருந்தின தாமரையோடைபோல் அவயவங்களெல்லாம் நிறம் மாறியிருக்கின்றனள். ராவணன் எவ்வளவோ வருந்தி ஸ்வாதீனப்படுத்திக் கொள்ளப் பார்க்கினும் அவனுக்கு அவளிடத்தில் ப்ரயோஜனம் யாதும் உண்டாகவில்லை; அவள் அவனிடத்தில் எந்த ப்ரயோஜனத்தையும் எதிர்பாராமையால் அவனைப் பொருள்செய்யாமல் உன்னையே நினைத்துக்கொண்டு ப்ராணன்களை விடவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டிருந்தனள். காகுத்ஸ்தனே! உன்னிடத்திலேயே மனம் நிலைநிற்கப்பெற்ற அந்த ஸீதா தேவியை அப்படிப்பட்ட ஸமயத்தில் நான் எப்படியோ அதி ப்ரயாஸத்தினால் தேடிக் கண்டுபிடித்தனன். நிர்தோஷனே! நரஸிம்ஹனே! நான் மெதுவாக இக்ஷ்வாகு வம்சத்தின் ப்ரக்யாதியைக் கீர்த்தனஞ் செய்துகொண்டு அவளுக்கு என்னிடத்தில் நம்பிக்கையை விளைவித்தனன். அனந்தரம் நான் ஸீதா தேவியுடன் பேசி இங்கு நடந்த ஸமாசாரத்தையெல்லாந் தெரிவித்தனன். அவள் உனக்கும் ஸுக்ரீவனுக்கும் விளைந்த ஸ்னேஹத்தைக் கேட்டு ஸந்தோஷமுற்றனள். அவள் ஸதாசாரம் மிகுதியும் நிலைநிற்கப் பெற்றவள்; உன்னிடத்திலுள்ள பக்தியும் அப்படியே எள்ளளவும் மாறாமல் திடமாயிருக்கின்றது. புருஷதிலகனே! இங்ஙனம் நான் மஹானுபாவையாகிய ஸீதை உக்ரமான தவத்தை நடத்திக்கொண்டு உன்னிடத்தில் மிகுந்த பக்தியுடனிருக்கக் கண்டனன். மஹா ப்ராஜ்ஞனே! அவள் முன்பு சித்ரகூடத்தில் உன்னருகில் காகத்தைப்பற்றி நடந்த ஒரு வ்ருத்தாந்தத்தை நடந்தபடியே எனக்கு அடையாளமாகச் சொல்லினள். 'வாயுபுத்ரனே! நீ இங்குப் பார்த்ததையெல்லாம் புருஷதிலகனாகிய ராமனிடத்தில் விண்ணப்பஞ் செய்யவேண்டும்' என்று ஜனகராஜன் புதல்வி என்னைப் பார்த்து மொழிந்தனள். மீளவும் அவள் 'நீ ஸுக்ரீவன் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே இப்

பொழுது சொல்லப்போகிற வசனங்களைச் சொல்லி, இதுவரையில் மஹா ப்ரயத்னத்துடன் பத்ரமாகப் பாதுகாக்கப்பட்ட இந்தச் சூடாமணியை ராமனுக்குக் கொடுக்கவேண்டும். மிகுந்த சோபையுடைய இந்தச் சூடாமணியை நான் மஹாப்ரயத்னத்துடன் காப்பாற்றி வந்தனன். 'ஒருநாள் என் கபோலத்தில் திலகம் கலைந்துபோகையில் மனச்சிலையை எடுத்துக் குழைத் துப் பரிஹாஸத்திற்காக என் கபோலத்தில் திலக மிட்டனை. அதை நினைத்துக்கொள்ள வேண்டும். நிர்த் தோஷ ஸ்வபாவனே! ஸமுத்ரத்தில் பிறந்த இந்தச் சூடாமணியை உனக்காகக் கொடுத்தனுப்பினன். இந்த வ்யஸனத்தில் உன்னைப் பார்ப்பதுபோலவே இதைப் பார்த்து ஸந்தோஷம் அடைவேன். தசரத குமாரனே இனி ஒரு மாதம் வரையில்தான் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பேன். ராக்ஷஸர்வசம் அகப்பட் டிருக்கிற நான் இனி ஒரு மாதத்திற்குமேல் பிழைத் திருக்கப் போறேன்' என்று சொல்வாய்' என்றனள். அங்கங்களெல்லாம் இளைத்தும் பதிவ்ரதா தர்மத்தைச் சிறிதும் தவறுமல் அநுஷ்டித்துக்கொண்டு ராவணுந் தப்புரத்தில் சிறைபட்டிருக்கிற ஸீதை மான்பேடுபோல் பயந்து மலர்ந்த கண்களுடன் என்னைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனள். ராமா! ஸீதை என்னுடன் என்னென்ன எவ்வெப்படி மொழிந்தனளோ, அதை யெல்லாம் அப்படியே உனக்குச் சொல்லிவிட்டனன். எப்படியாயினும் ஸமுத்ரந் தாண்டுவதற்கு அணை கட்டியே ஆகவேண்டும்; அக்கார்யத்தை நிறைவேற்று வாயாக' என்றனன். இங்ஙனம் வாயு குமாரனுகிய ஹநுமான் ராஜகுமாரர்களான அந்த ராமலக்ஷ்மணர் கள் சிறிது ஸமாதானமுற்றிருப்பதை அறிந்து ஸீதை கொடுத்த சூடாமணியை ராமனிடம் கொடுத்து அவள் சொல்லியனுப்பின ஸமாசாரத்தையெல்லாம் ஒன்றும் தவறுமல் வாயால் க்ரமமாகச் சொல்லினன். அறுபத் தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

ராமன் சூடாமணியைப் பார்த்து வருத்த
முறுதலும், ஸீதையின் வ்ருத்தாந்
தத்தை ஸவிஸ்தாரமாகச் சொல்ல
ஹநுமானை வேண்டுதலும்.



இங்ஙனம் ஹநுமான் மொழிந்தவுடனே தசரத குமாரனாகிய ராமன் அச்சூடாமணியை மார்பின்மேல் வைத்துக்கொண்டு லக்ஷ்மணனோடும் கூடக் கண்ணீர் பெருக்கினன். மணிகளிற் சிறந்த அந்தச் சூடாமணியைக் கண்டவுடனே, ராமன் சோகத்தினால் பரிதாப முற்றுக் கண்களில் நீர் நிரம்பப்பெற்று, ஸுக்ரீவனைப் பார்த்துக் 'கன்றிடத்தில் ப்ரீதியுடைய பசு அக்கன்றிடத்தில் ப்ரீதியால் எப்படி உருகுமோ, அப்படியே இந்தச் சூடாமணியைப் பார்த்தவுடனே என் மனம் உருகுகின்றது. இந்தமணிரத்னத்தை (சிறந்தமணியை) என் மாமனாராகிய ஜனகர் ஸீதைக்குக் கொடுத்தனர். விவாஹகாலத்தில் ஸீதையின் சிரஸில் கட்டப்பட்டு மிகுந்த ஒளியுடன் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அதை நினைத்துக்கொண்டால் இப்பொழுது எதிரில் பார்க்கிறாப்போலிருக்கின்றது. இது ஜலத்தில் பிறந்தது; ஸஜ்ஜனங்களால் புகழப்பட்டது. முன்பு ஜனகர் ஒரு யாகஞ்செய்கையில் அதற்குப் புத்திமானாகிய இந்த்ரன் ஸந்தோஷித்து இந்த ரத்னத்தை அவருக்குக் கொடுத்தனன். நல்லியற்கையுடையவனே! இந்தச் சூடாமணியைக் கண்டதும், இப்பொழுது எனக்கு என் தந்தை தசரத மஹாராஜரையும் ஜனகமஹாராஜரையும் ஸீதையின் தாயையும் பார்த்தாற்போலிருக்கின்றது. இம்மணி என் ப்ராணநாயகியின் சிரஸில் அழகுற்றிருக்குமாகையால் இப்பொழுது இதைப் பார்த்தவுடன் என் ப்ராணநாயகியே வந்தாற்போல் நினைக்கின்றனன்' என்றுரைத்து, அனந்தரம் ஹநுமானைப் பார்த்து, 'ஸௌம்யனே! ஸீதை, தாஹமுடையவனை ஜலத்தினால் நினைப்பதுபோல், என்னைத் தன் வாக்யங்களாகிற ஜலங்களால் நினைப்பவளாகி மற்றும்



2422. ஹனுமான் ராமனுக்கு ஸீதா வ்ருத்தாந்தத்தை மொழிந்து சூடாமணியைக் கொடுத்தல்.

என்னென்ன மொழிந்தனள்? அதை அடிக்கடி மொழிவாயாக' என்று வினவி, லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மண! ஜலத்தில் பிறந்த இம்மணி ஸீதையை விட்டுத் தனியே வந்திருக்கக் காண்கின்றேனே! எனக்கு இதைக்காட்டிலும் அதிகமான துக்கம் என்னிருக்கின்றது? ஸீதை இனி ஒரு மாதம் வரைக்கும் எப்படியாயினும் பிழைத்திருப்பாளாயின், அவள் வெகுகாலம் பிழைத்திக்கிருளென்னலாம். ஸௌம்ய! கறுத்த கண்களையுடைய அம்மாதரார் மணியைப் பிரிந்து நான் இனி ஒரு நொடிப்பொழுதும் பிழைத்திருக்கப்போகிறேன்' என்றனன். அனந்தரம் அவன் ஹநுமானைப் பார்த்து 'நீ என் ப்ராணநாயகியை எவ்விடத்தில் கண்டனையோ அவ்விடத்திற்கு என்னையுங் கொண்டுபோவாயாக. அப்பெண்மணியின் வ்ருத்தாந்தம் தெரிந்த பின்பு, நான் க்ஷணமாயினும் இங்கிருக்கமாட்டேன். அழகிய இடையின் பின்புறமுடைய அவ்வங்கனைமணி மிகுதியும் பயப்படுந்தன்மையுடையவள்; அப்படிப்பட்டவள் கொடியர்களும் பயத்தை விளைவிப்பவர்களுமாகிய ராக்ஷஸர் நடுவில் எப்பொழுதும் எப்படி இருக்கின்றனள்? சரத்ருதுவில் இருட்டின்றி நிலவைப்பெய்கின்ற சந்த்ரன் மேகங்களால் மறைக்கப்பட்டிருப்பதுபோல், ஸீதையின் அழகிய முகம் ராக்ஷஸர்களால் சூழப்பட்டதாகிச் சிறிதும் விளக்கமுற்றிராது. இது நிச்சயம். 'ஹநுமானே! ஸீதை யாது மொழிந்தனள்? ஒன்றையும் மறைக்காமல் உள்ளதை உள்ளபடியே எனக்கு இப்பொழுது மொழிவாயாக. ஔஷதத்தினால் ரோகமுடையவன் ஜீவிப்பதுபோல், நான் ஸீதை சொல்லியனுப்பின வார்த்தைகளைக் கேட்டு ஜீவிப்பேன். ஹநுமானே! அந்த ஸுந்தரி, செவிக்கினிதாக மொழியுந்தன்மையுடைய அப்பெண்மணி, அழகிய இடையின் பின்புறமுடைய என் ப்ராணநாயகி, ஸீதை என்னைப் பிரிந்து வருந்தி உன்னிடம் யாது சொல்லியனுப்பினள்?

எனக்குச் சொல்வாயாக' என்று வினவினன். அறுபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் ஸீதை சொல்லியனுப்பினதை ஸவிஸ்தரமாகக் கூறுதல்.

மஹானுபாவனுகிய ராமன் இங்ஙனம் வினவுகையில் ஹனுமான், ஸீதை சொல்லியனுப்பினதையெல்லாம் ராமனுக்கு விண்ணப்பஞ் செய்தனன் :—
'புருஷஸலாமனே! ஜனகராஜன் புதல்வி முன் சித்ரகூட பர்வதத்தில் நடந்த வ்ருத்தாந்தத்தை நடந்தபடியே இங்ஙனம் எனக்கு அடையாளமாகச் சொல்லினள். ஸீதை அந்தச் சித்ரகூடத்தில் முதலில் உன் மடியில் படுத்து ஸுகமாக நித்ரித்துக்கொண்டிருந்து தூக்கம் தெளிந்து எழுந்தனள். அப்பொழுது காக்கையொன்று திடீலென்று வந்து அப்பெண்மணியின் ஸ்தனங்களினிடையில் குற்றியது. பரதனுக்குத் தமையனே! அந்த ஸீதை உன் மடியினின்று எழுந்தபின்பு முறைப்படி நீயும் அப்பெண்மணியின் மடியில் படுத்து நித்ரித்தனை. மீளவும் அக்காகம் தேவிக்கு ஹிம்ஸையை விளைவித்ததாம். அது அடிக்கடி வந்து அவளது ஸ்தனத்தில் ஆழ்ந்திருக்குமாறு குற்றிக்கொண்டிருந்ததாம். அனந்தரம் அப்பெண்மணியின் ஸ்தனத்தினின்று பெருகி வருகின்ற ரக்தத்தினுல் நனைந்து நீ அம்மாதரசியால் எழுப்பப்பட்டு எழுந்தனை. பரந்தபனே! அக்காகமே விடாமல் பாதித்துக்கொண்டிருக்கையில் ஸீதை பாதைபட முடியாமல் ஸுகமாக நித்ரித்துக்கொண்டிருக்கிற உன்னை எழுப்பினள். மஹாபாஹுே! நீ அந்த ஸீதையின் ஸ்தன மத்யத்தில் குற்றியிருப்பதைப் பார்த்தவுடனே மஹா ஸர்ப்பம் போல் கோபாவேசமுற்றுப் பெருமூச்செறிந்து

கொண்டு 'ஸீதே! பயப்படுந்தன்மையளே! எவன் நுனி நகங்களால் உன் ஸ்தனங்களினிடையில் பிறினன்? எவன் ரோஷமுற்றிருக்கிற ஐந்து தலைப்பாம்போடு விளையாடுகின்றனன்?' என்று வினவினை. அனந்தரம் நீ நாற்புறமும் பார்த்து, உடனே அக்காகம் ரக்தங்களால் நனைந்த கூறிய நகங்களுடன் அவளுக்கெதிரில் தானே இருக்கக்கண்டனை. பக்ஷிகளில் மேன்மையுற்ற அக்காகம் இந்த்ரனுடைய புதல்வனும். பூமியின் ப்ரதேசங்களில் திரிந்துகொண்டிருக்கும்; வேகமாகப் போவதில் வாயுவோடொத்திருக்கும். மஹாபாஹு! புத்திமான்களில் சிறந்தவனே! அனந்தரம் நீ மிகுந்த கோபாவேசத்தினால் கண்களை மலர விழித்து அந்தக் காகத்தைக் கொல்லவேண்டுமென்று கொடிய நினைவுற்றனை. அங்ஙனம் நினைத்து, நீ தர்ப்பாஸனத்தினின்று தர்ப்பத்தை யெடுத்து ப்ரஹ்மாஸ்த்ர மந்த்ரத்தினால் அபிமந்த்ரித்தனை; அந்தத் தர்ப்பம் அப்பறவையினெதிரில் ப்ரளயகாலாக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு நின்றது. அங்ஙனம் ஜ்வலிக்கின்ற அந்தத் தர்ப்பத்தை நீ காக்கையின்மேல் ப்ரயோகித்தனை. அது ஜ்வலித்துக்கொண்டு அந்தக் காக்கையைப் பின்றொடர்ந்தது. அங்ஙனம் துரத்தப்பட்டோடுகின்ற அக்காகத்தைத் தந்தையாகிய இந்த்ரனும் தாயும் கைவிட்டனர்; தேவதைகளும் மஹர்ஷிகளும் அங்ஙனமே துறந்துவிட்டனர். இங்ஙனம் அக்காகம் மூன்று லோகங்களையும் சுற்றித்திரிந்தும் தன்னைக் காப்பவன் எவனும் நேரப்பெறாதிருந்தது. சத்ருக்களை யழிப்பவனே! அது மிகுதியும் திகிலுற்று மீளவும் உன்னிடத்திற்கே வந்தது. காகுஸ்த்தனே! நீ சுருத்ஸ்த வம்சத்தில் பிறந்து எப்படிப்பட்டவர்க்கும் சரண் கொடுப்பவனாயிருக்கையால் உன்னெதிரில் தரையில் விழுந்திருக்கின்ற அக்காகத்தை அபராதியாகையால் வதிக்கத் தகுந்திருப்பினும் தயைசெய்து பாது காத்தனை. ராமா! க்ருபை செய்தும் ப்ரஹ்மாஸ்த்ரத்தை வீண்செய்ய முடியாதென்றே, நீ

ன் வலக்க ராமா!

அப்பொழுது நீ அந்தக்காகத்தை விடைகொடுத்தனுப்புகையில், அது உனக்கும் தசரத மஹாராஜனுக்கும் நமஸ்காரஞ் செய்து தன்னிருப்பிடம் போயிற்று. இங்ஙனம் பார்க்கையில், ராமன் அஸ்த்ரங்களை அறிந்தவரனைவரிலும் சிறந்தவனே; மிகுந்த பலமுடையவனே; சிறந்தசீலத்திற்கிடமாயிருப்பவனே; ஆயினும், அந்த ரகுகுலதீபகன் என்னை இங்ஙனம் சிறைவைத்திருக்கிற ராக்ஷஸர்மேல் அஸ்த்ரத்தை ஏன் ப்ரயோகஞ் செய்யாதிருக்கின்றனன்? ஸர்ப்பங்களாவது கந்தர்வர்களாவது அஸுரர்களாவது தேவக்கூட்டங்களாவது இவர்களெல்லோரும் ஒன்றுகூடியாவது யுத்தத்தில் ராமனை எதிர்த்து நிற்க வல்லரல்லர். மஹாவீர்யசாலியாகிய அந்த ராகவனுக்கு என் விஷயத்தில் சிறிதாயினும் பரபரப்பிருக்குமாயின், யுத்தத்தில் மிகுதியும் தீக்ஷ்ணமான பாணங்களை ப்ரயோகித்துச் சீக்ரத்தில் ராவணனைக் கொல்வானாக. லக்ஷ்மணன் புருஷர்களில் சிறந்தவன்; பகைவரைப் பரிதபிக்கச்செய்பவன்; ரகுகுலத்தை விளங்கச்செய்பவன். அப்படிப்பட்ட லக்ஷ்மணனாவது அண்ணனிடம் அனுமதிபெற்று வந்து என்னை ஏன் பாதுகாக்காதிருக்கின்றனன்? அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களிருவரும் ஸமர்த்தர்களே; தேஜஸ்ஸில் வாயுவையும் அக்னியையும் நிகர்த்திருப்பவர்; தேவதைகளுங்கூட அவர்களை எதிர்க்க வல்லரல்லர். இப்படிப்பட்டவராயினும் அவர்கள் என்னைப் பாதுகாக்காமல் ஏன் உபேக்ஷிக்கின்றனர்; ஸமர்த்தர்களாயினும் சத்ருக்களைப் பரிதபிக்கச் செய்பவராயினும் இருவரும் ஒன்றுசேர்ந்திருப்பவராயினும் அந்த ராமலக்ஷ்மணர்கள் என்னைப் பார்க்காதிருக்கின்றார்களே! அப்படி இருப்பார்களோ? [1] இதைப்பற்றி நான் ஏதோ பெரிய பாபஞ்செய்திருக்க

1. இங்கு 'மமைவ து॒ஷ்க்ருதங் ந் மஹதஸ்தி ந ஸம்ஶய:' என்பது மூலம். ராமலக்ஷ்மணர்கள் ஙிங்ஙனம் உபேக்ஷிப்ப

வேண்டுமென்று நினைக்கிறேன். இதற்கு ஸந்தேஹமில்லை' என்றனள். ஸீதை கண்கள் நிரம்ப நீர் பெருகப் பெற்று, மன இரக்கம் உண்டாகும்படி மொழிந்த

---

தற்குக் காரணம் அவர்களிடத்திலாவது என்னிடத்திலாவது ஏதோ ஒன்று இருக்கவேண்டும். அவர்களிடத்தில் ஸாமர்த்யம் சத்ருக்களை அடக்குந்திறமை முதலியவையெல்லாம் நிறைந்திருக்கையால் இதற்குக் காரணம் அவர்களிடத்தில் உண்டென்பதற்கு அவகாசமில்லை. ஆகையால் என்னுடைய பாபமே இதற்குக் காரணமாகவேண்டும். அவர்களுடைய பாபமோ என்னுடைய பாபமோ இதற்குக் காரணமென்று ஸந்தேஹித்து என்னுடைய பாபமே இதற்குக் காரணமென்று நிச்சயிக்கிறாள். அல்லது-(மமைவ) என்னுடையதே. 'த்விஷந்த: பாபக்ருத்யாம்' என்ற ஸ்ருதியின்படி அயலிடமிருந்து வந்ததன்று.' அதாவது- முமுக்ஷு சரீரஸம்பந்தமற்று பரமபதம் போகும்போது தன்னுடைய பாபத்தைச் சத்ருக்களிடத்திலும் புண்யத்தை ஸ்னேஹிதர்களிடத்திலும் ஏறிட்டுப் போம்—என்று ஸ்ருதி சொல்லுகிறது. அதை இங்குணர்க. (கிஞ்சித்) நாம் ஸர்வஜ்ஞர்களன்றே. நமக்குத் தெரியாததும் சிறிது இருக்கக்கூடுமே (மஹத்) 'ப்ராரப்தம் பரிஹார்ஜ்ய கர்மஸகலம்' என்கிறபடியே ப்ராரப்த கர்ம பலனைகயாலே அனுபவிக்காமல் பரிஹரிக்கமுடியாதது. (அஸ்தி) ஸந்தேஹமில்லை. கார்யம் இருப்பின் காரணத்தில் ஸந்தேஹமுண்டோ? அல்லது-(கிஞ்சித்) இப்படிப்பட்டதென்று சொல்லமுடியாதது. (மஹத் கர்வஷ்க்ருதமஸ்தி) 'கிம் த்வாமந்யத வைதேஹ:' என்று சொல்லப்பட்ட பகவதபசாரத்தைச் சொல்லுகிறது. 'கிம் த்வாமந்யத வைதேஹ:' என்றதின்பொருளை அயோத்யாகாண்டத்தில் முப்பதாவது ஸர்க்கத்தில் அடிக்குறிப்பில் காண்க. (கிஞ்சித்) என்பது 'கிம் த்வாமந்யத வைதேஹ:' என்ற பகவதபசாரத்தையும் (மஹத்) என்பது லக்ஷ்மணன் விஷயத்தில் பருஷமாகப் பேசின பாகவதாபசாரத்தையும் சொல்லுகிறதென்றும் நிர்வஹிப்பர். (லக்ஷ்மணன் விஷயத்தில் பருஷம்பேசினது ஆரண்யகாண்டத்தில் நாற்பத்தைந்தாவது ஸர்க்கத்தில் காண்க.)

வார்த்தையைக் கேட்டு நான் மறுபடியும் அம்மஹானுபாவையைப் பார்த்து, 'தேவீ! உன் விஷயமான சோகத்தினால் ராமன் மற்றைக் கார்யங்களெல்லாவற்றிலும் மனப்பற்றில்லாதிருக்கின்றனன். ராமன் துக்கத்தினால் வருத்தமுறும்பொழுதே லக்ஷ்மணனும் பரிதபிக்கின்றனன். அம்மே! மிகுதியும் ப்ரயாஸத்தினால் உன்னைப் பார்க்கப்பெற்றனன்; இது ஸந்தோஷிக்கவேண்டிய ஸமயமேயன்றித் துக்கிக்கவேண்டிய ஸமயமன்று. அழகிய கோபமுடையவளே! இம்முஹூர்த்தத்திற்குள்ளேயே துக்கங்களெல்லாம் தொலையக்காண்பாய். புருஷஸ்ரேஷ்டர்களும் நிந்தைக்கிடமாகாதவர்களுமாகிய ராஜபுத்ரர்களிருவரும் உன்னைப்பார்க்க உத்ஸாஹஞ் செய்துகொண்டேயிருக்கிறார்களாகையால், இனிச் சீக்ரத்திலேயே லங்கையைப் பஸ்மஞ் செய்வார்கள். மாதரார்மணியே! ராமன் பயங்கரனான ராவணனையும் அவனுடைய பந்துக்களையும் யுத்தத்தில் கொன்று உன்னைத் தன் பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டு போவான்; இது நிச்சயம். நிந்தைக்கிடமாகாதவளே! ராமனுக்குத் தெரிந்ததும் அவனுக்கு ஸந்தோஷம் விளைவிப்பதுமாகிய ஓர் அடையாளத்தை எனக்கு நீ இப்பொழுது கொடுக்கவேண்டும்' என்று மொழிந்தனன். மஹாபலனே! அவள் நாற்புறங்களிலும் எவர் இருக்கிறாரோ என்று பார்த்துத் தன் [1] தலைப் பின்னலில் தரிக்கத் தகுந்த இவ்வுத்தம சூடாமணியை வஸ்த்ரத்தின் தலைப்பினின்று அவிழ்த்து என் கையில் கொடுத்தனள். ராமா! நான் உனக்காக, அந்தத் திவ்ய ரத்னத்தை வாங்கிக்கொண்டு பூஜ்யையாகிய அந்த ஸீதாதேவிக்குத் தலை நிலத்தில் படும்படி ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து விரைவுடன் இவ்விடம் திரும்பத்

---

1. முன்பக்கத்திலேயே சில மயிர்களை எடுத்துப் பின்னி அதில் சேர்த்துத் தரிக்கவேண்டும்படியானதென்று கருத்தென்று கோவிந்தராஜர்.

தொடங்கினன். அவ்வரவர்ணினி ஜனகராஜன் புதல்வி ஸீதை, ப்ரயாணத்திற்காக முயன்று மேனியைப் பெருகுகின்ற என்னைப் பார்த்து முகம் முழுவதும் கண்ணீர் நிரம்பப்பெற்றுத் தீனையாகிக் கண்ணீர் கண்டத்தில் தடுக்கையால் வார்த்தைகள் தழுதழுக்கப் பெற்று இன்னது இனியது என்று நிச்சயிக்கமுடியா திருக்கும்படி, நான் கிளம்பிப்போகிறேனென்னும் பரபரப்புடன் துக்க வேகத்தினால் தடுமாற்றமுற்று என்னைப் பார்த்து 'ஹனுமானே! ஸிம்ஹங்கள்போன்ற ராம லக்ஷ்மணர்களிருவர்க்கும் ஸுக்ரீவனுக்கும் அவனது மந்திரிகளுக்கும் அனைவர்க்கும் ஆரோக்யம் சொல்வாயாக. மஹாபாஹுவாகிய அந்த ராமன் என்னை இந்தத் துக்கஸாகரத்தினின்று கடைத் தேற்றும்படி நீ ஏற்பாடு செய்யவேண்டும். வானர வீரனே! நீ ராமனிடம் போனவுடனே நான் படுகிற இந்தக் கொடுந்துக்கப் பெருக்கையும் இந்த ராக்ஷஸர்கள் என்னை விரட்டுவதையும் நீ ராமனுக்குச் சொல்லவேண்டும். உனக்கு வழி மங்களகரமாயிருக்கு மாக' என்றனள். ராஜாதிராஜ ஸிம்ஹனே! பூஜைக்கிட மான அந்த ஸீதா தேவி மிகுதியும் வருத்தமுற்று இவ்வார்த்தையை உனக்கு மொழியச்சொல்லினள். நான் சொன்ன அடையாளங்களைத் தெரிந்துகொண்டு, நான் சொன்னபடி ஸீதை எல்லாவிதத்திலும் க்ஷேமமா யிருக்கிறாளென்று நம்புவாயாக' என்றனன். அறுபத் தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஹனுமான் ஸீதைக்குத் தான் மொழிந்த
இன்னஞ் சில ஸமாதானங்களையும்
ராமனுக்குத் தெரிவித்து ஸீதையின்
க்ஷேமத்தைக் கூறுதல்.

புருஷோத்தமனே! ராமா! நான் ப்ரயாணமாய்ப் போக த்வரைப்படுவதைக் கண்டு ஸீதை, உனக்கு

யுள்ள ஸ்னேஹத்தைப்பற்றியும் நானும் நன்மனத்துடன் ஸஹாயஞ் செய்வேனென்கிற நம்பிக்கையைப்பற்றியும் என்னைக் கௌரவித்து மீளவும் என்னுடன் மேல்கார்யத்தைக் குறித்துச் சொல்லினள் 'இங்ஙனம் நீ தசரதகுமாரனாகிய ராமனுக்கு யுத்தத்தில் ராவணனைக்கொன்று என்னைச் சீக்ரத்தில் பெறும்படி பற்பலவாறு மொழியவேண்டும். வீரனே! சத்ருக்களை யழிப்பவனே! உனக்கு விருப்பம் உளதாயின், இங்கு ஒருநாள் இருப்பாயாக. எங்காயினும் ஓர் ஏகாந்த ப்ரதேசத்தில் இளைப்பாறியிருந்து நாளையதினம் போகலாம். வீர்யமுடையவனே! அங்ஙனம் நீ இங்கு ஒருநாள் இருப்பாயாயின், உன்னுடைய ஸந்நிதானத்தினால் மந்தபாக்யையாகிய எனக்குள்ள இம்மஹா சோகத்திற்கு ஒரு முஹூர்த்த காலமாயினும் விடுமுறை நேரும். பராக்ரமசாலியாகிய நீ திரும்பி வரும்பொருட்டு இப்பொழுது புறப்பட்டுப்போனவுடனே, என் ப்ராணன்கள் நிலைநின்றிருப்பதும் ஸந்தேஹமே. இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. முதலே ராமனைப்பிரிந்த மஹா துக்கத்தில் மூழ்கி மேன்மேலும் துக்கங்களால் வருந்தி இங்ஙனம் துர்த்தசை அடைந்திருக்கிற என்னை, நீ புறப்பட்டுப்போனவுடனே, உன்னைக் காணாமையாலுண்டான துக்கம் அதற்கு மேல் பரிதபிக்கச் செய்யும். வீரா! வானரேச்வரனே! நீ ஸமர்த்தனென்பதை நம்புகிறேனன்றி உன் ஸஹாயர்களான பல்லூகர்களையும் (கரடிகளையும்) வானரர்களையும் குறித்துப் பெரிய ஸந்தேஹம் இதோ என்னெதிரில் உருவத்துடன் நிற்கிறதுபோலிருக்கின்றது. அந்த ருக்ஷவானர ஸைன்யங்கள் தாண்ட முடியாத இம்மஹா ஸமுத்ரத்தை எங்ஙனம் தாண்டும்? ராஜகுமாரர்களான அந்த ராமலக்ஷ்மணர்களாவது எவ்வண்ணம் தாண்டப்போகிறார்கள்? கருடனுக்கும் வாயுதேவனுக்கும் உனக்கும் இம்மூவர்க்குமே இந்த ஸமுத்ரத்தைத்தாண்ட வல்லமை உளதன்றி மற்றெவர்க்கும் கிடையாது. நீ மஹாவீரன்; மற்றும் கார்

ரத்தை உணர்ந்தவர் அனைவரிலும் மேலாயிருப்பவன்; ஆகையால் இந்தக் கார்யகதி இங்ஙனம் நிர்வஹிக்க முடியாதிருக்கையால் இதை நிறைவேற்றுவதற்கு நீ என்ன உபாயம் ஆலோசித்திருக்கின்றனை? மொழிவா பாக. சத்ருவீரர்களைக் கொல்லும் வல்லமையுடைய வனே! இந்தக் கார்யத்தை நிறைவேற்ற நீயொருவனே போதுமானவன். இது வாஸ்தவமே. நீ அங்ஙனம் ஸாதித்துப் பலன் ஸித்திப்பது உனக்கு மாத்ரமே யசஸ்ஸை விளைவிக்குமன்றி ராமனுக்கு யசஸ்ஸை விளை விப்பதாகாது. ராமன் ஸமஸ்த ஸைன்யங்களோடுங் கூடி வந்து யுத்தத்தில் ராவணனைக் கொன்று வெற்றி பெற்று என்னைத் தன் பட்டணத்திற்கு அழைத்துக் கொண்டுபோவானாயின், அது எனக்கும் அவனுக்கும் யசஸ்கரமாயிருக்கும். (புகழை விளைவிப்பதாயிருக்கும்.) ராக்ஷஸனாகிய ராவணன் வீரத்தன்மை அமைந்த ராமனுடைய பார்யையாகிய என்னை வனத்தினின்று ராமனிடம் பயத்தினால் கபடமாக அபஹரித்துக் கொண்டு வந்தாற்போல், ராமனும் என்னை ரஹஸ்ய மாகக் கொண்டுபோவது எள்ளளவும் யுக்தமன்று; ரகு குலாலங்காரனாகிய ராமனுக்கு அங்ஙனஞ் செய்வது தகுதியன்று; சத்ரு ஸைன்யங்களை அழிக்குந் திறமை யுடைய ராமன், லங்கை முழுவதிலும் ஸைன்யத்தை நிறைத்து வ்யாகுலப்படுத்தி என்னைக் கொண்டுபோவா னாயின், அது அந்தக் ககுத்ஸ்தகுலாலங்காரனுக்குத் தகுந்திருக்கும். ஆகையால் மஹானுபாவனும் யுத்தங் களில் மஹாசூரனுமாகிய ராமன் தனக்கு அனுரூபமா யிருக்குமாறு பராக்ரமத்தை உபயோகப்படுத்தும் படி நீ நிறைவேற்றவேண்டும்' என்றனள். இங்ஙனம் அவ்வைதேஹி பொருளடக்கமும் வணக்கமும் அமைந் திருக்குமாறு ஸஹேதுகமாக மொழிந்த அவ்வார்த்தை யைக் கேட்டு அனந்தரம் கடைசியில் நான் சொல்ல வேண்டிய மறுமொழியைக் கூறினன்:—'தேவீ! ருக்ஷ வானர ஸைன்யங்களுக் கதிபதியும் வானரஸ்ரேஷ்ட னும் பலம் [illegible]மாகிய ஸுக்ரீவன் உன் கார்

யத்தை நிறைவேற்றுவதாக நிச்சயித்திருக்கின்றனன். பராக்ரமமும் சக்தியும் அமைந்தவர்களும் மிகுந்த பலமுடையவர்களும் மனநினைவோடொத்த வேகமுடையவர்களுமாயிருப்பவர் பலரும் அவன் கட்டளைப்படி நடக்கச் சித்தமாயிருக்கின்றனர். அவ்வானரர்கள் மேல் ஆகாயத்திலாவது கீழ் பாதாளத்திலாவது இவ்விரண்டிற்கு மிடையில் குறுக்கிலாவது யாதொரு தடையுமின்றித் திரியவல்லவர். மற்றும் எப்படிப்பட்ட பெரிய கார்யங்களிலும் அளவிறந்த தேஜஸ்ஸுடையவராகையால் வருத்தமுறாமல் முடித்துத் தீர்ப்பார்கள். மஹாபாக்யசாலிகளும் பலத்தினால் கொழுத்திருப்பவருமாகிய அவ்வானரர்கள் ஆகாச மார்க்கத்தில் ஸஞ்சரிப்பவராகிப் பூமண்டலம் முழுவதையும் பல தடவைகளில் ப்ரதக்ஷிணஞ் செய்திருக்கின்றனர். அங்கு ஸுக்ரீவனிடத்திலுள்ள வானரர்களில் சிலர் என்னைக்காட்டிலும் மேலானவர்களும், சிலர் என்னோடொத்தவர்களுமாயிருக்கின்றனர்; அன்றி ஒருவனாயினும் எனக்குக் குறைந்தவன் கிடைக்கமாட்டான். நானே இவ்விடத்திற்கு வந்தேனே! இனி மஹாபலிஷ்டர்களான அவ்வானரர்கள் வருவார்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? எங்காயினும் கார்யத்திற்கு அனுப்பவேண்டியதாயிருக்கும்பொழுது, மேலானவர்களை அனுப்பமாட்டார்கள்; கேவலமானவர்களையே அனுப்புவார்கள். தேவீ! ஆகையால், பரிதாபப்பட்டதுபோதும். ராமனிடத்தில் கோபத்தை மாற்றிக்கொள்வாயாக. வானரயூதபதிகள் ஒரே தாண்டில் இவ்விலங்கைக்கு வந்து சேருவார்கள். மஹாபாக்யமுடையவளே! புருஷஸிம்ஹர்களாகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் என் முதுகின்மேல் ஏறிக்கொண்டு உதயமான ஸூர்ய சந்த்ரர்கள்போல் உன்னிடம் வந்து சேருவார்கள். பகைவரை யழிப்பவனும் ஸிம்ஹம்போன்றவனுமாகிய ராமனும் லக்ஷ்மணனும் சீக்ரத்தில் தனுஸ்ஸைப் பிடித்து லங்காத்வாரத்தில் வந்திருக்கக் காண்பாய். நகங்களும் கோரைப்பற்களுமே ஆயுதமாயிருக்கப்

பெற்றவர்களும் வீரர்களும் ஸிம்ஹ சார்த்தூலங்கள் போல் (சிங்கம் புலிகளைப்போல்) பராக்ரமசாலிகளும் பெரிய நாகங்கள்போல் (யானைகள்போல்) கம்பீரமாக ப்ரகாசிப்பவர்களுமாகிய வானரர்கள் சீக்ரத்திலேயே லங்கையில் வந்து சேர்ந்திருக்கக் காண்பாய். இனிச் சீக்ரத்திலேயே லங்கையைச் சேர்ந்த மலய பர்வதத்தின் தாழ்வரைகளில் மேகம்போன்ற உருவமுடையவர்களும் பர்வதங்களை நிகர்த்திருப்பவர்களுமாகிய வானரோத்தமர்கள் ஸிம்ஹநாதஞ் செய்யும் த்வனிகள் உனக்குச் செவிப்படும். சீக்ரத்திலேயே, ராமன் வனவாஸ விரதத்தை நிறைவேற்றிச் சத்ருக்களையெல்லாம் அழித்து உன்னுடன் கூடி அயோத்யையில் பட்டாபிஷேகம் பெற்றிருக்கக் காண்பாய்' என்று மொழிந்தனன். அனந்தரம் உன்னைப்பிரிந்து ராக்ஷஸர்வசம் அகப்பட்டு வருந்துகின்ற ஸீதை நீ தன் விரஹத்தினால் படுந்துக்கங்களை என்மூலமாய்க் கேட்டு மிகுதியும் வருத்தமுறுகையில், நான், ஸந்தோஷத்தை விளைவிப்பதும் கம்பீரமும் இனியதுமான நல்வார்த்தைகளைச் சொல்லி மனந்தெளியச் செய்கையில் அம்மிதிலாதிபதியின் புதல்வியாகிய ஸீதா தேவி துக்கத்தைத் துறந்து மனஸ்ஸமாதனமுற்றனள். அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

[1] ஸுந்தரகாண்டமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண ஹனுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

---

1. ஸ்ரீமத் ஸுந்தரகாண்டத்தைப் படிப்பதற்கும் கேட்பதற்கும் உள்ள பலன் ப்ரஹ்மாண்டபுராணத்தில் நூற்றுநாற்பத்தேழாவது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கின்றது :—'காண்டஸ்ய ஸுந்தராக்யஸ்ய ஶ்ரவணாத்பఠநாதபி|மாம் ப்ராப்நுயாஜ்ஜந்து: யேநாத்ர ஸந்தேஹ இஷ்யதே' (ஸுந்தரகாண்டத்தைக் கேட்கிலும் படிக்கிலும் ஜகத்காரணனான என்னைப் பெறலாம். இவ்விஷயத்தில் ஸந்தேஹம் இல்லை) என்று.